


உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பிரமகீதை.



தத்துவராயசுவாமிகளருளிச்செய்தது.

இது

வித்தியாரணியசுவாமிகளருளிச்செய்த

வடநூல்வியாக்கியானத்துக்கியைய

திருநெல்வேலியைச்சார்ந்தகோடகநல்லூரில்எழுந்தருளிய

## ஸ்ரீசுந்தரசுவாமிகள்

அருளிச்செய்த உரையுடன்

## ஷ ஸ்ரீசுந்தரசுவாமிகள்

சிஷ்யர்களாகிய

## வையை - இராமசுவாமியையராலும்

அவர்களது கனிஷ்டராகிய

## மகாவைத்தியநாதையராலும்

நெல்லை - சொக்கலிங்கப்பிள்ளையாலும்

அரிமளம் - சிவராமச்செட்டியார் உதவியினால்

---

சென்னை

வியவஹாரதரங்கிணியச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

பிரஜோத்பத்தி௵ மார்கழி௴

௳

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

## வையை - இராமஸ்வாமி ஐயரியற்றியசெய்யுட்கள்.

சீர்வளருங்கயிலையினிற்சிவபிரான்றிருவருளாற்றிகழ்வன்றொண்ட
ரேர்வளருமுனைப்பாடிநாடுபுகழ்நீடவுதித்தின்றேன்மல்கு
மார்வளருந்தொண்டைச்சோழநாடோங்கவாரூரிலமர்ந்துபன்னாட்
கார்வளரும்பொழிற்சேரநாடுநலம்பெறப்பலநாட்களிப்பின்வைகி. (௧)

திகழ்பாண்டிநாடுமிசைபெறப்பல நாளமர்ந்தருளாச்செயலையெண்ணிப், புகழோங்கமீண்டுமவதரித்தாங்கந்நாடதனிற்பொருனைநீத்த, நிகழ்வோங்குமலைக்கையாற்றரளமணிநிரைகரையினிறைக்கக்கண்டோர், மகிழ்வோங்கவிளங்குதிருக் கோடகநல்லூர்செய்தமாதவத்தால். (௨)

சுருதிமுடிவின்பொருடான்பரமாத்துவிதமென்றேதுணிந்தெல்லாரு
கருதிமுடிவில்லாதபேரின்பநிலையடைந்துகளிக்கமேன்மை (ங்
தருதிருநீற்றின் மகிமையுலகெலாந் தழைந்தோங்கச்சாரஞ்ஞானம்
வருதிமிரங்கதிர்கண்டாங்கிரிந்தொழியவந்தணர்தமரபிற்றோன்றி (௩)

மான்காட்டிமான்பிடித்தன்மானவே நம்போலோர்வடிவந்தனைத், தான்காட்டிக்காண்பவெலாந் தனிற்பிறிதன்றெனவெவர்க்குந் தகவாற்காட்டி, யூன்காட்டுமுடல்பொய்யென்றுணர்விலேனுணரும் வகையுணர்த்தவந்து, தேன்காட்டுமொழிகாட்டுஞ்சுந்தரதேசிகனெனவத்திருப்பேர்தாங்கி. (௪)

களமருவுங்களமுடையான்புராண மோரீரைந்துட்காந்தந்தன்னில், வளமிகுசங்கிதையாறுட்சூதசங்கிதைதன்னின்மகிழ்ந்துமுன்ன, மளவறுமண்டர்கட்கயன்சொல்லியவாறே தத்துவராயப்பேர்பூண்டோன், கிளர்வுறுதண்டமிழ்ச்சொல்லால்விளங்கவுரைத்தருள்பிரமகிதைதன்னை. (௫)

அம்புயாதனனமரர்க்குரைக்கும்போதமல னெழுந்தருளிச்சென்றே, யும்பர்காளிப்பொருண்மெய்யெனத்திருவாய்மலர்ந்தந்நாளுரைத்ததேய்ப்ப, இம்பர்யாவருமெளிதினுணர்ந்தையந்தீர்ந்தின்பமெய்திவாழப், பம்புசீர்வடநாலுக்கியைந்திடவேயந்தவுரைபண்ணினனே. (௬)

IV



உ

சிவாயபரமகுரவேநம:

திருச்சிற்றம்பலம்.

## கணபதிதுதி.

அத்திமுகவனை - மத்தன்மதலையை
நித்தநினைபவர் - முத்திபெறுவரே. (க)

## சுப்பிரமணியர்துதி.

ஆறுமுகவனை - நாறுமலர்கொடு
கூறுமடியவர் - பேறுபெறுவரே. (உ)

## குருவணக்கம்.

வெண்பா.

அடியேனையாள வருண்மேனிசாத்திப்
படிமீதுவந்தபரனே - கொடியேனென்
றெண்ணுதிமைப்பளவி லிங்ஙனேவீடளித்த
கண்ணுகடைபோகக்கா. (ங)

வேறு.

இரவியுமதியும்வானும்வாயுவுமனலுமப்பு
முரவியமண்ணுமற்றையுணர்பவன்றானுமாகிப்
பரவிடுங்காரணம்பன்னுன்காயுமன்றியுநின்றே
யுரைமனமிறந்துளோங்குமொளியினைவணங்கல்செய்வாம். (ச)

பாயிரம்.

கண்முதற்புலன்களந்தக்கரணங்கள்விளங்குமெத்தாற்
றண்மதியருக்கனங்கிதாரகைவிளங்குமெத்தால்
விண்முதற்பூதமியாவும்விளங்கிடுமெத்தாலந்த
வுண்மையைச்சிவப்ரகாசவொளியினையுளத்துள்வைப்பாம். (௫)

முன்னைநற்சுருதியோதிமுடிவுறற்கரியதாக
வின்னமத்தேவர்மூவரெய்துதற்கிடரேமேவத்
தன்னையிப்படியேகாணத்தானளித்தெனக்கோர்வார்த்தை
சொன்னநற்சொருபானந்தச்சோதியைத்தொழுதல்செய்வாம். (௬)

வேறு.

நித்தனிற்குணனின்மலனீடொளிச்
சுத்தனேகன்சுருதித்தொடர்பிலா
னத்தனென்னையுமாண்டவருளினன்
றத்துவன்றிருத்தாளைவணங்குவாம். (எ

நூற்பெயர்.

மயலில்வானவர்கேட்பமயக்கற
வயன்முன்னாட்சொனவாரணத்துட்பொரு
ளியலுமாசொருபானந்தச்சித்தியென்
பெயரினற்றமிழாலிங்குப்பேசுவாம். (அ)

அவையடக்கம்.

வேறு.

தானாகாதியாவையுமாந்தன்மைத்தாயவொருபொருளை
யூனுமென்றன்வாக்கதனாலுண்மையறியவுரைத்திடுதன்
மாநாகந்தான்மலர்தலையில்வைபந்தரிப்பமற்றதுபோற்
பூநாகந்தான்பொறுப்பனெனும்புன்சொற்போலும்புகலுங்கால். (௯)

அத்தியாயமுறை.

வேறு.

மன்னியகமலத்தோன்முள்வானவர்வணங்கியெல்லாம்
பன்னருமறையருத்தம்பகரெனவினவுமாறு
முன்னதின்மொழிந்துபின்னர்முளரியந்தவிசின்மேலோ
னின்னியலிருக்கிலேதரேயமதியம்புமாறும். (௧௦)

வேறு.

வான்முன்முதலாமனைத்துலகும்வானோர்முதலாவருபிறப்பு
மீன்றுனெசுரிற்றைத்திரியமியம்பும்பரிசையிவையுடனே

VI

## பாயிரம்.

மூன்ருமோத்திலுரைத்தாதிமூலப்பிரமந்தனைத்தேடச்
சான்ருர்சொன்னநெறியைவருஞ்சதுர்த்தத்தாலேசாற்றியபின். (கக)

சந்தோகத்திற்சட்டந்தானுரைக்கும்பரிசைச்சதுர்முகத்தோ
னேந்தாமோத்திலுரைத்தாறிலேழுமெட்டுமொங்கறைந்தான்
மைந்தார்முண்டங்கைவலியமறையின்பொருளேவையமெலாந்
தந்தான்சத்தமத்தாலுமட்டமத்துஞ்சாற்றியபின். (கஉ)

வேறு.

அன்பினுலகிலலோகம்படைத்தவனமரர்தங்கட்
கின்பமார்ப்ரகதாரண்யத்திசைமயித்திரேயிதன்னை
யொன்பதாலுரைத்துப்பத்தாலுடத்தமுங்கார்க்கிதானும்
பின்பதாயந்தர்யாமிப்பிராமணவிடயம்பேசி. (கங)

வேறு.

தாதாவேகாதசந்தன்னிற்றக்கோர்சொல்லுங்கடவல்லி (ருய்த்
ச்வேதாச்வதரமெடுத்துரைத்துச்சொன்னதெல்லாந்தொகுத்தோன்
தூய்தாயருளிச்செய்தத்தினீராருேத்தாற்சொல்லின்பப்
போதாலயத்தோன்புகன்றபொருள்யானுந்தமிழாற்புகல்கின்றேன்.()

பாயிரமுற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

கணபதி துணை.

# பிரமகீதை.

மூலமுமுரையும்.

## முதலாவது.

-தேவர்கள்பிரமாவைத்தரிசித்துவேதார்த்தம்வினவுமத்தியாயம்.

### அவதாரிகை.

பூருவபாகத்திலுபநிடதத்தொன்றினாலேயேயுண்டான பிரமான்மவேகத்துவ விஞ்ஞானமே முத்திசாதனமெனக்கூறப்பட்டது. இந்தத்தாற்பரியம் எல்லாவேதங்களுக்குஞ் சம்மதமென்று தெரிவிக்கும்பொருட்டு ஐதரேயதைத்திரியமுதலிய வெல்லாவுபநிடதங்களின் பொருள்களைச் சொல்லாநின்ற பிரமகீதையைச்சொல்லவேண்டுமென்று முனிவர்கள் சூதமகாமுனிவனைக் கேட்கின்றார்கள்.

சூதனுமுனியைநோக்கித் தொல்லைமாமுனிவர்சொல்வார்
மாதவவினவிற்றெல்லாம்வகுத்து நீதொகுத்துச்சொன்னாய்
ஆதிநான்முகத்தோன் கீதையறியவாதரித்தோமின்றென்
றோதிமாமுனிவரெல்லாமீளவுமுரைக்கலுற்றார்.

இ-ள். சூதனுமுனியைநோக்கி - சூதனென்னும்பெயரையுடைய முனிவனைப்பார்த்து, தொல்லைமாமுனிவர்சொல்வார் - புராதனராகியபெரியமுனிவர்கள் சொல்லுவார்கள், மாதவ - பெருமைபொருந்திய தவமுடையவனே. வினவிற்றெல்லாம் - (சிறியேங்கள்) கேட்டவையனைத்தையும், நீ வகுத்து தொகுத்துச்சொன்னாய் - தேவர்விரித்துஞ்சுருக்கியுந் திருவாய்மலர்ந்தருளினீர், ஆதிநான்முகத்தோன்கீதை - முதன்மையாயுள்ள பிரமகீதையை, இன்று அறியவாதரித்தோம் என்றோதி - இன்றுதெரியவிருப்புற்றோமென்று விண்ணப்பித்து, மாமுனிவரெல்லாம் - உயர்ந்தமுனிவர்களனைவரும், மீளவுமுரைக்கலுற்றார் - திரும்பவுஞ்சொல்லத்தொடங்கினார்கள். எ-று. (க)

வேதநூறெரிந்தோனாலே விஞ்சையும்விளங்கப்பெற்றா
யாதலாலியாதுமுன்னாலறியலாகாததில்லை
மேதையான்மிக்காயெங்கண்மேலுனக்கன்புண்டாகி
லோதுவாய்போதோன்சொன்ன வுபநிடப்பொருளையென்றார்.

இ - ள். வேதநூறெரிந்தோனலே - வேதசாத்திரங்களையாராய்ந்துதெளிந்தவியாசமகாமுனிவராலே, விஞ்சையும்விளங்கப்பெற்றாய் - (மேலான) ஞானத்தையுஞ்செவ்வையாக அறியப்பெற்றாய், ஆதலால் - ஆனபடியினலே, உன்னலறியலாகாதது யாதும் இல்லை - தேவராலறியப்படாததொன்றுமில்லை, மேதையான்மிக்காய் - அறிவான்மிகுந்தவரே, எங்கண்மேல் -எங்கள்மீது, உனக்கன்புண்டாகில் - தேவருக்குக்கிருபையுண்டானல், போதோன்சொன்ன - பிரமன் (தேவர்களுக்கு) உபதேசித்த, உபநிடப்பொருளை - வேதாந்தார்த்தத்தை, ஓதுவாய் - அனுக்கிரகிப்பாய், என்றார் - என்றுமுனிவர்கள் சொன்னர்கள். எ - று. (உ)

வேறு.

இன்னபரிசேமுனிவரெல்லாமியம்பக் கேட்டங்கிமையவர்கண்
முன்னமொருநான்மறையோதிமுடிந்தபொருளோர்ந்துணராம
லன்னமிசையோன்றனைக்கேட்பவண்டத்தவர்கட்கவனருளாற்
சொன்னபரிசேகேளுமெனச்சூதன்சொல்லத்தொடங்கினனல்.

இ - ள். முனிவர் எல்லாம் இன்னபரிசே இயம்பக்கேட்டு - முனிவர்களெல்லாரும் இவ்வாறுவிண்ணப்பஞ்செய்தலைக்கேட்டு, அங்கிமையவர்கள் - விண்ணுலகவாசிகளாகியதேவர்கள், முன்னமொருநான்மறையோதி - ஆதியிலே ஒப்பற்றநான்குவேதங்களையும் ஓதி, முடிந்தபொருளோர்ந்துணராமல் -அவைகளின் முடிந்த பொருளையாராய்ந்தறியப்பெருமல், அன்னமிசையோன்றனைக்கேட்ப - அன்னத்தின்மேலெழுந்தருளும் பிரமதேவனைக்கேட்க, அவன் அருளால் அண்டத்தவர்கட்குச்சொன்னபரிசே - அப்பிரமதேவர் கருணையினலே தேவர்களுக்குபதேசித்தவண்ணமே (சொல்கின்றேன்), கேளுமென - கேண்மினென்று, சூதன்சொல்லத்தொடங்கினனல் - சூதமகாமுனிவர்சொல்லத்தொடங்கினர். எ-று. (ங)

வேறு.

பண்டொருகற்பந்தன்னிற்பழமறைப்பொருளையெல்லா
வண்டருங்கூடியாய்ந்தங்கறியலாகாமையாலே
யெண்டருமாதவத்தை யெய்தியேயிதனைக்கேட்பப்
புண்டரீகத்தில்வாழும் புனிதனைநோக்கிப்போனர்.

இ - ள். பண்டொருகற்பந்தன்னில் - முன்னெருகற்பாந்தரத்தில், பழமறைப்பொருளை - பழமையாகிய வெதார்த்தத்தை, எல்லாவண்டருங்கூடி ஆய்ந்து, எல்லாத்தேவர்களுங்கூடி (வெகுகாலம்) ஆராய்ந்து, அங்கறியலாகாமையாலே - அங்கு அவர்களாலறியக்கூடாமையினல், எண்டரும் - மதிக்கத்தக்க, மாதவத்தையெய்தி - அரிதானதவத்தைச்செய்து, இதனைக்கேட்ப - இவ்வருத்தத்தைக்கேட்டறிந்துகொள்ளும்பொருட்டு, புண்டரீகத்தில்வாழும் - பதுமாசனத்தில்வீற்றிராகின்ற, புனிதனை - பரிசுத்தராகியபிரமாவை, நோக்கிப்போனர் - கருதிப்போனர்கள். எ-று. (ச)

வேறு.

பாவவேரறுக்குந்தீர்த்தமென்றெண்ணப்பட்டனயாவையும்பர ப்பித், தேவரோடியக்கரரக்கர்கந்தருவர் சித்தர்சாத்தியர்களுஞ்செ றிந்து, நாவினுலறியுமறுவகைப்பட்ட விரதமுநலம்பெறவுடைத்தா, யோவிலாதொழுகு மருவிகளுடைத்தா யொருபொருளொழிவற வு டைத்தாய்.

இ-ள். பாவவேரறுக்குந்தீர்த்தமென்று - பாவத்திற்குக்காரணமான காமக்குரோதாதிகளைக்கெடுக்குந்தீர்த்தமாக, எண்ணப்பட்டனயாவையும் - கருதுகின்றபுண்ணியதீர்த்தங்களனைத்தையும், பரப்பி - பரப்பிக்கொண்டும், தேவரோடு - தேவர்களோடு, இயக்கர் - இயக்கர்களும், அரக்கர் - இராக்க தர்களும், கந்தருவர் - கந்தருவர்களும், சித்தர் - சித்தர்களும், சாத்தியர்- சாத்தியர்களும், செறிந்து - நெருங்கிச் (சேவிக்கப்பட்டதாயும்), நாவினுலறி யும் - நாவினுலறியப்படாநின்ற, அறுவகைப்பட்டவிரதமும் - (கைப்பு தித்தி ப்பு புளிப்பு உவர்ப்பு துவர்ப்பு கார்ப்பு என்னும்) அறுவகைப்பட்ட இரத பதார்த்தங்களையும், நலம்பெற - நன்மைபெற, உடைத்தாய் - உடையதாயும், ஓவிலாதொழுகும் - இடைவிடாதொழுகாநின்ற, அருவிகளுடைத்தாய் - பல அருவிகளுடையதாயும், ஒருபொருளொழிவறவுடைத்தாய் - ஒன்றொழியாம லனைத்தையுமுடையதாயும். எ-று. (௫)

வேறு.

சகலயோகிகளுமேவவினிதானதனிசேர்
குகைகள்கோடிபலகூடிபுளகோடிபலவாய்ச்
சிகரமேவுநவமாமணிகள் சிந்திபுளதாய்
நிகரிலாமனிகழ்மேருகிரி நீண்முடியின்மேல்.

இ-ள். சகலயோகிகளும் - சமஸ்தமானயோகிகளும், மேவ - பொரு ந்துவதற்கு, இனிதான - இன்பமாயுள்ள, தனிசேர்குகைகள்கோடி பலகூடி யுளகோடிபலவாய் - ஏகாந்தமாயிருக்கத்தக்க பலகோடிகுகைகள் நெருங்கி யுள்ள மூலைகளநேகமுளதாயும், சிகரமேவும் - கொடுமுடிகளிற்பொருந்தா நின்ற, நவமாமணிகள் - ஒன்பதுவகையிரத்தினங்கள், சிந்தியுளதாய் - சித றியிருக்கின்றதாயும், நிகரிலாமல் - ஒப்பில்லாமல், நிகழ் - பிரகாசிக்கின்ற தாயுமுள்ள, மேருகிரி - மஹாமேருபருப்பதத்தின், நீண்முடியின்மேல் - நீண் டசிகரத்தின்மேல். எ-று. (௬)

வேறு.

ஐம்பதிற்றிரட்டியோசனைநீண்டாங்கத்தொகையோசனையகன்று, கம்பநற்கரியைமுதல்வருமிருககணங்களாலாகுலங்கனத்துச், செம் பொருள்கொழிக்குந்தீர்த்திகையுடைத்தாய்த்திரண்டபுள்ளினங்களு முடைத்தாய்ப், பைம்பொழிற்செழுந்தேனருந்தியவறுகாற்பறவைவி னெலியினற்பரம்பி.

இ - ள். ஐம்பதிற்றிரட்டியோசனைநீண்டு - நூறுயோசனைநீளமுடைய தாயும், ஆங்கு அத்தொகையோசனை அகன்று - அதுபோல அந்தநூறுயோசனை அகலமுள்ளதாயும், கம்பநற்கரியைமுதல்வரு மிருககணங்களால் - நதிமிற்கட்டப்படும் நல்லயானை முதலாகவாராநின்ற விலங்கின் கூட்டங்களால், ஆகுலங்கனத்து - ஆரவாரமிகவுடையதாயும், செம்பொருள்கொழிக்கும் - செவ்வையான பொன்கொழிக்காநின்ற, தீர்த்திகையுடைத்தாய் - நதிகளையுடையதாயும், திரண்டபுள்ளினங்களுமுடைத்தாய் - நெருங்கியபக்ஷிசாலங்களுமுடையதாயும், பைம்பொழில் - பசுமை பொருந்திய சோலையிலுள்ள, செழுந்தேனருந்திய -செப்பமாகியதேனையுண்ட, அறுகாற்பறவையின்-வண்டுகளினுடைய, ஒலியினால் - ஓசையினாலும், பரம்பி- நிறையப்பெற்று. எ-று. ()

வேறு.

இந்துபானுவென்றிருவருநிலவினோடிளவெயில்பாரிப்பக்
கொந்துபாய்தருசோலையின்கிழங்குகாய்கொழுங்கனிவழங்கத்தண்
சந்தனாடவிபுகுந்துவண்டுலவுதண்டாமரைத்தடந்தோய்ந்து
மந்தமாருதந்திரிதருபிரமமாவனமுளததன்கண்ணே.

இ - ள். இந்துபானுவென்றிருவரும் - சந்திரன்சூரியனென்கிறவிருவர்களும், நிலவினோடு - சந்திரிகையோடு, இளவெயில் - இளவெய்யிலையும், பாரிப்ப - பரப்ப, கொந்து -புட்பக்கொத்துகளிலிருந்து, பாய்தரு - (தேன்) பாயாநின்ற, சோலை - சோலைகள், இன் கிழங்கு - இனியகிழங்குகளையும், காய்-காய்களையும், கொழுங்கனி - வளமையானகனிகளையும், வழங்க - கொடுக்க, தண் - குளிர்ச்சிபொருந்திய, சந்தனாடவிபுகுந்து - சந்தனச்சோலையுட்புகுந்து, வண்டுலவு - வண்டுகளுலவாநின்ற, தண் - குளிர்ச்சிபொருந்திய, தாமரைத்தடந்தோய்ந்து - தாமரைத்தடாகத்திற்படிந்து, மந்தமாருதம் - தென்றற்காற்றானது, திரிதரு - உலாவுகின்ற, மா பிரமவனம் - பெரியபிரமவனமென்னும் ஒருவனம், உளது - இருக்கின்றது, அதன்கண்ணே - அதனிடத்தில். எ - று. (அ)

வேறு.

வளமாமதிலொன்பதோடெண்பதுவாசலாகி
யிளநாயிறுபோலவிளங்கியிலங்குமொள்வாள்
வளைநேமிகொடுஞ்சிலைதண்டுமழுக்கள்வல்லோ
ரளவோதவிலாதவர்காப்புடைத்தாகியெங்கும்.

இ - ள். வளமாம் - வளம்பொருந்திய, மதிலொன்பதோடு - ஒன்பது மதிலோடு, எண்பதுவாசலாகி - எண்பதுவாசலுடையதாகி, இளநாயிறுபோல - பாலசூரியனைப்போல, விளங்கி - பிரகாசித்து, இலங்கும் - விளங்குகின்ற, ஒள் - அழகுபொருந்திய, வாள் - வாளாயுதம், வளை - சங்கு, நேமி-சக்கரம், கொடுஞ்சிலை - கொடியவில்லு, தண்டு - தண்டாயுதம், மழுக்கள் -

பரசு (முதலியஇவற்றில்), வில்லோர் - வல்லமையுடையவர்களில், அளவோத விலாதவர் - அளவுசொல்லக்கூடாதவர்களால், எங்கும் - எவ்விடத்தும் காப்புடைத்தாகி - காக்கப்பட்டதாகி. எ - று. (கூ)

வேறு.

பூரணகும்பமெங்கணுநிறைத்துப்பொன்றிகழ்நித்திலம்புணர்ந்த
தோரணமுயர்த்தித்தூய்மலர்துதைந்தசுகந்தமாலைகள்பலதூக்கி
யேரணிதீபமேற்றியெம்மருங்குமேழிசையாழிலெங்கெங்கும்
வாரணிகொங்கைமடந்தையர்பாடுமாடமாளிகைவரம்பிலதாய்.

இ-ள். எங்கணும் பூரணகும்பம் நிறைத்து-எவ்விடத்தும் பூரணகும்பங்கள்நிறைத்து, பொன்றிகழ்நித்திலம்புணர்ந்த - பொன்கம்பியிற்கோத்துவிளங்குகின்ற முத்துமாலைகள்தொங்கப்பெற்ற, தோரணமுயர்த்தி -தோரணங்கள் உயரக்கட்டி, தூய்மலர்துதைந்தசுகந்தமாலைகள்பலதூக்கி - பரிசுத்தமாகிய மலர்கள்நெருங்கிய நல்லவாசனையையுடைய பலமாலைகள்தூக்கி, ஏரணிதீப மேற்றியெம்மருங்கும்-அழகுபுனைந்தவிளக்குகளெவ்விடங்களினுமேற்றி, ஏழிசையாழிலெங்கெங்கும் -ஏழிசைகளோடுங்கூடியயாழைப்போல எம்மருங்கும், வாரணிகொங்கைமடந்தையர்பாடும் - கச்சுப்புனைந்தமுலைகளையுடைய மாதர்கள் கானஞ்செய்கின்ற, மாடமாளிகைவரம்பிலதாய் - மண்டபங்களோடு கூடியஅளவற்றமனைகளுள்ளதாகி. எ - று. (௧0)

சித்திரமமைத்தபித்திகோடிகளாற்சீர்பெறவிளங்கிமாணிக்க, வுத்திரம்வயிரப்போதிகைபவளவொளிமணித்தூணிரைபொதிந்து, நித்திலத்தாமமெங்கணுந்தூக்கி நித்திலவிதானமேயெங்கும், வித்தரித்தோங்கிவியனெடுங்கொடிகள்விண்ணளவெறிந்துமீண்டுளதாய்.

இ - ள். சித்திரமமைத்த - ஓவியமெழுதிய, பித்திகோடிகளால் - பல சுவர்களினாலே, சீர்பெறவிளங்கி - சிறப்புப்பெறவிளங்கி, மாணிக்கவுத்திரம் - மாணிக்கத்தாலியற்றியவுத்திரங்களும், வயிரப்போதிகை - வச்சிரத்தாற்செய்தபோதிகைகளும், பவளவொளி மணித்தூணிரை - பவளத்தாலியற்றியழகுவிளங்குந்தூண்வரிசைகளும், பொதிந்து - நெருங்கி, எங்கணும்- எவ்விடத்திலும், நித்திலத்தாமம் - முத்துமாலைகள், தூக்கி - தொங்கவிட்டு, எங்கும் - எங்கும், நித்திலவிதானமே - முத்தினாற்செய்தமேற்கட்டிகளே, வித்தரித்து - விரித்து, ஓங்கி - உயர்ந்து, வியன் - பெருமைபொருந்திய, நெடுங்கொடிகள் - நெடியகொடிகள், விண்ணளவெறிந்து - ஆகாய பரியந்தம்வீசி, மீண்டுளதாய் - திரும்புகின்றதாகி. எ - று. (௧௧)

வெடிபடவுச்சமந்தமத்திமமாய்விளங்குகாகளவொலியொருசாரிடிபடுமுரசமுழக்கொலியொருசாரியம்புவாச்சியவொலியொருசார்

வடிவுடைமகளிர்கூத்தொலிபொருசார் மறையவரோத்தொலியொரு சார், முடிவறுமிருதிபுராணவாகமங்கண்மொகுமொகென்றெழுமொலியொருசார்.

இ - ள். உச்சம் - உயர்வாயும், மந்தம் - மிருதுவாயும், மத்திமமாய்-மத்தியமமாயும், விளங்கு, விளங்காநின்ற - காகளவொலி - காகளவாத்தியங்களினொலியானது, ஒருசார் - ஒருபக்கத்தில், வெடிபட-முழங்கவும், இடிபடு - அடிக்கப்படுகின்ற, முரசமுழக்கொலி - முரசமுழங்குந்தொனியானது, ஒருசார் - ஒருபக்கத்திலும், இயம்பு - சொல்லாநின்ற, வாச்சியவொலி - வாத்தியங்களுடையதொனியானது, ஒருசார் - ஒருபக்கத்திலும், வடிவுடை-அழகுபொருந்திய, மகளிர் - மாதர்களுடைய, கூத்தொலி-நடன ஒலியானது, ஒருசார் - ஒருபக்கத்திலும், மறையவர்-பிராமணர்கள், ஓத்து - வேதத்தை (பாராயணஞ்செய்கினற), ஒலி - தொனியானது, ஒருசார் - ஒருபக்கத்திலும், முடிவறு - முடிவில்லாத, மிருதி - மிருதிகளும், புராணம்- புராணங்களும், ஆகமங்கள் -ஆகமங்களும், மொகுமொகென்று - மொகுமொகென்று, எழு மொலி - கிளம்பாநின்ற ஓசை, ஒருசார் - ஒருபக்கத்திலும். எ - று. (கஉ)

மேவியசகலாகமங்களின்பொருளும்விருப்புடனுய்பவரொருசார், காவியமென்னுங்கனியினைநுகர்ந்துகளித்திடுமுள்த்தவரொருசா, ரா வியோடாக்கையுறவறிவிருநாலங்கத்துயோகியரொருசா, ரோவியம் போலவிருந்துணர்விறந்தவுணர்வுகொண்டுறங்கினரொருசார்.

இ - ள். மேவிய - பொருந்திய, சகலாகமங்களின் - சகல ஆகமங்களினுடைய, பொருளும் - அருத்தங்களையும், விருப்புடன் - ஆசையுடன், ஆய்பவர்-ஆராயப்பட்டவர்கள், ஒருசார் - ஒருபக்கத்திலும், காவியமென்னும் - காவிய மென்றுசொல்லப்பட்ட, கனியினை - பழத்தை, நுகர்ந்து - புசித்து, களித்திடும் - ஆனந்தித்திடும், உளத்தவர் - உள்ளத்தையுடையவர், ஒருசார் - ஒருபக்கத்திலும், ஆவியோடு- உயிரோடு, ஆக்கை - சரீரமானது, உற (நித்தியமாய்) பொருந்தும்வகை, அறி - உணராநின்ற, இருநாலங்கத்து- இயம நியம ஆசன பிராணுயாம பிரத்தியாகார தியான தாரண சமாதி என்னும் அட்டாங்கத்தையுடைய, யோகியரொருசார் -யோகியர்கள் ஒருபக்கத்திலும், ஓவியம்போல-சித்திரம்போல, இருந்து-(அசைவற) இருந்து, உணர்விறந்த- விருத்திஞானமில்லாத, உணர்வுகொண்டு - சொருபஞானத்தையடைந்து, உறங்கினர் - காஷ்டசமாதி செய்கின்றவர்கள், ஒருசார் - ஒருபக்கத்திலும். எ - று. (கங)

மத்தநற்களிறும்வயிரநற்றேரும் வாசியும்வரம்பிலவாகி, யத்திரத்தாலுஞ்சத்திரத்தாலுமளவறுவீரர்காப்புடைத்தாய், மெய்த்தவர்க்கெளிதாயல்லவர்க்கரிதாய்வேண்டியபொருளெலாமீண்டி, யித்தகைத்தானவிடத்திலாயிரக்காலிலங்கியவிரத்னமண்டபத்தே.

இ - ள். மத்த - மதம்பொருந்திய, நற்களிறும் - நல்லயானைகளும், வயிர - வயிரத்தாலியற்றிய, நற்றேரும் - நல்ல இரதங்களும், வாசியும் - அச்சுவங்களும், வரம்பிலவாகி - அளவில்லாதனவாகி, அத்திரத்தாலும் - அத்திரங்களாலும், சத்திரத்தாலும் - கைவிடாப்படைகளாலும் (விளங்குகின்ற), அளவறு - அளவற்ற, வீரர்காப்புடைத்தாய் - வீரர்களாற்காக்கப்பட்டதாகி, மெய்த்தவர்க்கு - சத்தியதவத்தையுடையவர்களுக்கு, எளிதாய் - (சார) இலகுவாகி, அல்லவர்க்கு - அவத்தினையுடையவர்களுக்கு, அரிதாய் - அரியதாகி, வேண்டியபொருளெலாம்-இச்சித்தபதார்த்தங்களனைத்தும், ஈண்டி-நெருங்கி, இத்தகைத்தான - இவ்வளவுபெருமைபொருந்திய, இடத்தில்- அவ்விடத்தில், ஆயிரக்காலிலங்கிய - ஆயிரங்கால்கள்விளங்கிய, இரத்னமண்டபத்து - இரத்தினமண்டபத்தில். எ - று. (கச)

கற்பகதருவுமகரதோரணமுங்கவின்பெறவமைத்துளதாகி, யற்புதமானவரிமுகத்துறுகாலாசனத்தம்பஞ்சியணைமேற், சொற்பதவடிவாந்தோகையோடெல்லாப்பொருளுமாய்விளங்கியதோன்ற, லுற்பவமறுப்பானுகவீற்றிருந்தானும்பருங்கோயிலுட்புகுந்தார்.

இ - ள். கற்பகதருவும் - கற்பகவிருக்ஷங்களையும், மகரதோரணமும்- மகரதோரணங்களையும், கவின்பெற - அழகுபெற, அமைத்துளதாகி - அமைத்திருக்கின்றதாயும், அற்புதமான - அதிசயமான, அரிமுகத்து - சிங்கமுகத்தையும், உறுகால் - (அதற்கு) ப்பொருந்தியகால்களையுமுடைய, ஆசனத்து - ஆசனத்தில், அம்பஞ்சியணைமேல் - அழகியபஞ்சணையின்மேல், சொற்பதவடிவாம் - சொல்லும்பொருளுமே சொரூபமாகவுடைய, தோகையோடு - கலைமகளோடு, எல்லாப்பொருளுமாய் - (தானே) சருவஜகங்களுமாய், விளங்கிய- பிரகாசிக்கின்ற, தோன்றல்- பெருமையிற்சிறந்தவனுகிய (பிரமா), உற்பவம்- (தம்மைவந்தடைந்த ஆன்மாக்களது) செனனத்தை, அறுப்பானுக -துடைக்கும்பொருட்டாக, வீற்றிருந்தான் - எழுந்தருளியிருந்தான், உம்பரும் - (அச்சமயத்தில்) தேவர்களும், கோயிலுள் - அக்கோயிலுள்ளே, புகுந்தார் - சேர்ந்தார்கள். எ - று. (கரு)

(வேறு)

ஆரமணிகுண்டலமொடாழிகடகங்கே
யூரமபிடேகமுதலொப்பனைகளுஞ்செய்
தாரமகிலுவிபனிநீரொடளவுங்கற்
பூரமதுகொண்டுதிருமேனிநனிபூசி.

இ - ள். ஆரம் - முத்தாரமும், மணிகுண்டலமொடு - மணிகளிழைத்த குண்டலங்களோடு, ஆழி - மோதிரங்களும், கடகம் - கங்கணங்களும், கேயூரம் - தோளணிகளும், அபிடேகமுதல் - கிரீடமுதலாகிய, ஒப்பனைகளும் - அலங்காரங்களும், செய்து - புரிந்து, ஆரம்- சந்தனமும், அகில்-அகிற்சந்தனமும்,

நாவி-கத்தூரியும், பனிநீரொடு-பனிநீரோடு, அளவும் -கலந்த; கற்பூரமதுகொண்டு - பச்சைக்கற்பூரமுங்கொண்டு, திருமேனி-திருமேனியில், நனிபூசி - மிகவுமணிந்து. எ - று.

வேறு.

நித்தமானதன்னொளியினலனைத்தையுநிகழ்த்துநின்மலனுடை
வைத்தசெம்பொனிற்றிகழ்திருமேனியின்மாலிகைபலசாத்தி
யுத்தரீயம்வெள்ளெக்கியோபந்திகழுதரபந்தனத்தோடு
சுத்தமானவெண்கலிங்கமுஞ்சாத்திநற்சுராசுரர்தொழுதேத்த.

இ - ள். நித்தமான - நித்தியமான, தன்னொளியினல் - தனதுவிளக்கத்தால், அனைத்தையும் - எல்லாவற்றையும், நிகழ்த்தும் - விளக்குகின்ற, நின்மலன் - நின்மலரானவர், உடைவைத்தசெம்பொனிற்றிகழ் -உடைவைத்தசெம்பொன்போல்விளங்குகின்ற, திருமேனியில் - அழகானதேகத்தில், மாலிகை பலசாத்தி - அனேகமாலைகள் சாத்தி, உத்தரீயம் - மேல்வத்திரமும், வெள் - வெண்மையான, எக்கியோபம்-எக்கியோபவீதமும், திகழ்-பிரகாசியாநின்ற, உதரபந்தனத்தோடு-உதரபந்தனத்தோடு, சுத்தமான - பரிசுத்தமான, வெண்கலிங்கமும் - வெள்ளைவத்திரமும், சாத்தி -தரித்து, நல்-நலமான, சுராசுரர்- தேவர்களும் அசுரர்களும், தொழுதேத்த - பணிந்துதுதிசெய்ய. எ - று. ()

தமத்தையப்புறங்கடந்துநின்றறிவுறுசான்றதாய்மதனெல்லா
மமைத்தொருத்தராலமைத்திடப்படாதுளவமூலனுயிருப்பானை
யிமைத்திடப்படாவிழியினுலிமையவரியாவருங்கண்டிந்தச்
சுமைக்கிளைத்தனமென்பவர்போலவன்றுணையடிகளில்வீழ்ந்தார்.

இ - ள். தமத்தை-மாயையென்னுமிருளுக்கு, அப்புறங்கடந்து நின்று- அப்பாலேகடந்துநின்று, அறிவுறு - அறிகின்ற, சான்றதாய் - சாக்ஷியாகி, மதனெல்லாம் - அழகையெல்லாம், அமைத்து - சேர்த்து, ஒருத்தரால் - ஒருவராலும், அமைத்திடப்படாது -சிருட்டிக்கப்படாமல், உள - (சுயமா) யுள்ள, அமூலனுயிருப்பானை - தனக்கொருகாரணமுமில்லாதிருக்கின்ற பிரமாவை, இமைத்திடப்படாவிழியினுல் - இமையாநாட்டத்தால், இமையவரியாவரும் - சகலதேவர்களும், கண்டு - தரிசித்து, இந்தச்சுமைக்கு - இவ்வுடற்சுமையைத்தாங்குவதற்கு, இளைத்தனமென்பவர்போல் - இளைத்தேமென்று சொல்லுகின்றவர்கள்போல், அவன் - அப்பிரமதேவனுடைய, துணையடிகளில் - உபய பாததாமரைகளில், வீழ்ந்தார் - வணங்கினார்கள். எ - று. (கஅ)

கஞ்சநற்பதம்பணிந்தெழுந்தமலனைக்கண்டுகண்களிகூர்ந்து
மஞ்செனச்சொரிதரமயிர்ப்புளகிதம்வரமகிழ்ச்சியினேடு
நெஞ்சநெக்குறநிமலராயவாவெலாநீங்கிநீண்முடிமேலே
யஞ்சலித்தகையினர்களாயானந்தவாரியிற்படிந்தாடி.

இ - ள். நல் கஞ்சப்பதம் பணிந்தெழுந்து-நல்லதாமரைமலர்போன்ற திருவடிகளைப்பணிந்தெழுந்து, அமலனைக்கண்டு-நின்மலனாகிய பிரமதேவனைக்கண்டு, கண்களிகூர்ந்து - கண்களிப்படைந்து, மஞ்செனச்சொரிதர- (ஆனந்தக்கண்ணீரானது) மேகங்களைப்போலேசொரிய, மயிர்ப்புளகிதம்வர-உரோமஞ்சிலிர்ப்ப, மகிழ்ச்சியினோடு - உள்ளக்களிப்பினோடு, நெஞ்சநெக்குற- மனமானது உருக்கமடைய, நிமலராய் - நின்மலராய், அவாவெலாம் - ஆசைகளனைத்தும், நீங்கி - ஒழிந்து, நீண்முடிமேலே - உயர்ந்தகிரீடத்தின்மேல், அஞ்சலித்த - கூப்பிய, கையினர்களாய் - கைகளையுடையவர்களாய்- ஆனந்தவாரியில் - பேரானந்த சமுத்திரத்தில், படிந்தாடி -மூழ்கி ஆனந்தக்கூத்தாடி. எ - று. (௧௯)

வேறு.

அழுத்தமிக்கதிபத்தியாலவசத்தராயுளவண்டர்தங்
குழுப்புவிக்கண்விழுந்துமீளவெழுந்துதங்கள்குரற்களுந்
தழுத்தழுத்தெமதுற்பவங்கட்விர்க்கையேதகவென்றுதாம்
வழுத்தலுற்றனர்வல்லவாமறைசொன்னவாறுதம்வாய்மையால்.

இ - ள். அழுத்தமிக்க - திடமிகுந்த, அதிபத்தியால் - அதிகபத்தியினால், அவசத்தராய் - பரவசராய், உள -உள்ள, அண்டர்தம் - தேவர்களுடைய- குழு - கூட்டங்கள், புவிக்கண்விழுந்து - பூமியில்விழுந்து, மீள- திரும்பவும், எழுந்து - எழுந்திருந்து, தங்கள்- தங்களுடைய, குரற்களும் -மொழிகளும், தழுத்தழுத்து, தழுதழுத்து, எமது - எங்களுடைய, உற்பவங்கள்-செனனங்களை, தவிர்க்கையே-நீக்குகையே,தகவென்று - நீதியென்று, வல்லவர்- தம்மாலியன்றவளா, மறைசொன்னவாறு - வேதஞ்சொன்னபிரகாரம், தம்வாய்மையால் - தங்களுடையமெய்வசனத்தால், வழுத்தலுற்றனர் - தோத்திரஞ்செய்யத்தொடங்கினார்கள். எ - று. (௨0)

வேறு.

பரமஞானமாம்பாற்கடல்பண்ணியபரமனேயடிபோற்றி
கரதலாமலகத்தினேர்பரவொளிகாட்டிடுங்கழல்போற்றி
ஒருபராபரமன்றி நீ யொருவனுமாகியவொளிபோற்றி
பிரமநாரணசங்கரபோற்றியெம்பெருமநின்பதம்போற்றி.

இ - ள். பரமஞானமாம் - பிரமஞானமாகிய, பாற்கடல் - பாற்கடலை, பண்ணிய - செய்த, பரமனே-மேலானவனே, அடிபோற்றி-நின்திருவடிபோற்றி, கரதலாமலகத்தினேர் - உள்ளங்கைநெல்லிக்கனிபோல, பரவொளி- பரவத்துவை, காட்டிடும் - காட்டியருள்கின்ற, கழல்போற்றி - திருவடிபோற்றி, ஒருபராபரமன்றி - ஒருயர்வுதாழ்வுமின்றி, நீ - நீ, ஒருவனுமாகிய- ஏகனுமாகிய, ஒளிபோற்றி - சுடரேபோற்றி, பிரம-பிரமாவாயும், நாரண - விட்டுணுவாயும், சங்கர - சங்காராயும், (இருக்கின்றவனே) போற்றி - போ

ற்றி, எம்பெரும -எங்கள்பெருமானே, நின்பதம்போற்றி- உனது திருவடிபோ
ற்றி. எ - று. (உக)

அடையநீயறிந்தொருவராலுன்னையிங்கறிவரியாய்போற்றி
தொடையதாமுலகனைத்தையுந்தரித்தொருதுவக்கறுசுடர்போற்றி
முடிவுமாதியுங்கண்டு நீ முதன்முடிவின்றியமுதல்போற்றி
வடிவியாவையுமுடையையாயுனக்கொருவடிவிலாதாய்போற்றி.

இ - ள். அடையநீயறிந்து- அனைத்தையும் நீயறிந்து, இங்கு - இவ்விடத்தில், உன்னை - உன்னை, ஒருவரால் - எவராலும், அறிவரியாய்போற்றி - அறிதற்கரியவனேபோற்றி, தொடையதாம் - கோவையான, உலகனைத்தையும் - சருவசகத்தையும், தரித்து - தரித்தும், ஒருதுவக்கறு - ஒருபந்தமுமில்லாத, சுடர்போற்றி - சுடரேபோற்றி, நீ - நீ, முடிவும் - அந்தமும், ஆதியும்- முதலும், கண்டும் - கண்டும், முதல் - ஆதியும், முடிவு - அந்தமும், இன்றிய- இல்லாத, முதல் - முதலே, போற்றி - போற்றி, வடிவியாவையும் - சகலவடிவங்களையும், உடையையாய்-உடையவனாகி, உனக்கு - உனக்கு, ஒருவடிவிலாதாய் - யாதொருவடிவமுமில்லாதவனே, போற்றி - போற்றி. எ - று. (உஉ)

அகிலமாயகிலத்திறுக்கதிபனுயகிலமுமொன்றின்றி
நிகழுஞானமாநிமலனேபோற்றிநீநினைந்திடுமிடமெல்லா
முகமதாயொருமுகமுனக்கின்றியேயிருக்குநான்முகபோற்றி
திகழுமுன்னொளியாற்றிகழ்ந்திலங்கியசின்மயவொளிபோற்றி.

இ - ள். அகிலமாய் - உலகமாயும், அகிலத்திறுக்கதிபனுய் - உலகத்திற்கதிபதியாயும், அகிலமுமொன்றின்றி - ஒருசகமுமில்லாமல், நிகழும் - விளங்காநின்ற, ஞானமாம் - ஞானமாயும் (பொருந்தி), நிமலனே - நின்மலனே, போற்றி - போற்றி, நீ - நீ, நினைந்திடுமிடமெல்லாம் - நினைக்கப்பட்டவிடங்களனைத்தும், முகமதாய் - முகமாயும், ஒருமுகம் - ஒருமுகமும், உனக்கின்றியே-உனக்கில்லாமலே,இருக்கும் - இருக்கின்ற, நான்முகபோற்றி -நான்கு முகங்களையுடையவனேபோற்றி, திகழும் - பிரகாசியாநின்ற, உன்னொளியால் - உனதுபிரகாசத்தினுல், திகழ்ந்திலங்கிய - பிரகாசித்துவிளங்குகின்ற, சின்மயவொளி-ஞானப்பிரகாசனே, போற்றி - போற்றி. எ - று. (உங)

வேதமோதியவிமலனேபோற்றிவேதாந்தமெய்ப்பொருள்போற்றி
காதுமாபிறவிக்கடல்கடத்துநின்கழலிணைப்புணைபோற்றி
சாதலானதும்பிறப்புமற்றிருந்துளசம்புவேகழல்போற்றி
யேதுமாயினுய்போற்றியோரளவிலாவின்பமேகழல்போற்றி.

இ - ள். வேதமோதிய - வேதங்களைச்சொன்ன, விமலனேபோற்றி - நிமலனேபோற்றி, வேதாந்தமெய்ப்பொருள்போற்றி - உபநிடதத்தின்மெய்ப்

பொருளேபோற்றி, காதும் - வருத்தாநின்ற, மா - பெரிய, பிறவிக்கடல் - சனனசாகரத்தினின்றும், கடத்தும் - கரையேற்றுகின்ற, நின்கழலிணைப்புணை போற்றி - உனது இரண்டுதிருவடிகளாகிய தெப்பமானதுபோற்றி, சாதலான தும் - மரணமும், பிறப்பும் - ஜனனமும், அற்றிருந்தள - இல்லாமலிருக்கின்ற, சம்புவேகழல்போற்றி - சம்புவே (உனது) திருவடிபோற்றி, ஏதுமாயினுய்போற்றி - எல்லாந்தானுனவனேபோற்றி, ஓரளவிலாவின்பமேகழல்போற்றி- ஓரளவுமில்லாத ஆனந்தமே உனதுதிருவடிபோற்றி. எ-று. (உச)

தோத்திரஞ்செயப்படுபவனுகியத்தோத்திரந்தானுகி
ஏத்திநிற்பவனுகியேயிருந்துளவிறைவனேகழல்போற்றி
காத்திரந்தனையடாவகைமெய்யினைக்காணவேநினைவோர்க்கு
நேத்திரங்கொடுத்தருளியங்கவர்துயர்நீக்குநின்மலபோற்றி.

இ-ள். தோத்திரஞ்செயப்படுபவனுகி- துதிக்கப்படுகின்றவனும், அத்தோத்திரந்தானுகி - அத்தோத்திரமாயும், ஏத்தி - துதித்து, நிற்பவனுகி - நிற்கின்றவனும், இருந்துள - இருக்கின்ற, இறைவனேகழல்போற்றி - தேவனே (உனது) திருவடிபோற்றி, காத்திரந்தனை-இனி உடலை, அடாவகை-அடையாதபடிக்கு, மெய்யினை - உண்மைப்பொருளை, காண - (தானுக) த்தரிசிக்க, நினைவோர்க்கு - நினைக்கின்றவர்களுக்கு, நேத்திரங்கொடுத்தருளி - ஞானக்கண்கொடுத்தருளி, அங்கவர்துயர்நீக்கும் - அவ்விடத்திலவர்களுக்குற்றதுன்பத்தைக்கெடுக்கின்ற, நின்மலபோற்றி - நின்மலனேபோற்றி. எ-று. (உரு)

வேறு.

ஈசனுக்கன்பரானுர்க்கன்பனுமிறைவபோற்றி
நாசமற்றிருப்பாய்போற்றிநாரணர்க்கினியாய்போற்றி
யாசையற்றவர்க்குஞானமருளுவாய்போற்றியல்லற்
பாசமுற்றவரைவெய்யபவத்திடும்பகைவபோற்றி.

இ-ள். ஈசனுக்கு - சிவனுக்கு, அன்பரானுர்க்கு - தொண்டரானவர்களுக்கு, அன்பனுமிறைவபோற்றி - தொண்டனுகியதேவனேபோற்றி, நாசமற்றிருப்பாய்போற்றி - அழியாமல் (என்றும் ஏகசுபாவமா) யிருக்கின்றவனேபோற்றி, நாரணர்க்கினியாய்போற்றி - விட்டுணுவுக்கு அன்புடையவனேபோற்றி, ஆசையற்றவர்க்கு - நிர்ாசையுள்ளவர்களுக்கு, ஞானம் - ஞானத்தை, அருளுவாய்போற்றி, - கொடுப்பவனேபோற்றி, அல்லற்பாசமுற்றவரை- துன்பமாகியபாசம்பொருந்தினவர்களை, வெய்யபவத்திடும் பகைவபோற்றி - கொடியபவத்தில் தள்ளுஞ்சத்துருவேபோற்றி. எ-று. (உசு)

அண்டருக்கதிபராலுமறிந்திடற்கரியாய்போற்றி
பண்டுடைப்புவனமெல்லாம்படைத்திடும்பரனேபோற்றி
கண்டிடப்படாதேயெல்லாங்கண்டிருக்கின்றுய்போற்றி
புண்டரீகத்தில்வாழும்புனிதனேபோற்றிபோற்றி.

இ - ள். அண்டருக்கதிபராலும் - தேவர்கட்கிறைவர்களாலும், அறிந்திடற்கரியாய்போற்றி - உணர்தற்கரியவனேபோற்றி, பண்டுடைப்புவனமெல்லாம்-புராதனமாகிய வுலகங்களனைத்தையும். படைத்திடும்பரனேபோற்றி-சிருட்டிசெய்யுமுதல்வனேபோற்றி,கண்டிடப்படாதே-(உன்னை) யொன்றுனுங் காணக்கூடாமல், எல்லாங்கண்டிருக்கின்றுய்போற்றி - அனைத்தையுங்கண்டுகொண்டிருக்குஞ்சாக்ஷியானவனேபோற்றி, புண்டரீகத்தில்வாழும்-தாமரைமலரில்வாழ்கின்ற, புனிதனேபோற்றிபோற்றி - புண்ணியனேபோற்றிபோற்றி. எ - று. (உஎ)

பத்தியாலிமையோரிங்ஙன்பங்கயத்தவனைப்போற்றிச்
சுத்தவேதங்களோதித்துணிந்தமெய்ப்பொருளையெங்கட்
கத்தனேயருள்செய்யென்னவவர்களாதரத்தைக்கண்டே
புத்தியாற்போதோனுண்மைப்பொருளையேபுகலலுற்முன்.

இ-ள். பத்தியாலிமையோரிங்ஙன்பங்கயத்தவனைப்போற்றி, அன்பினுலண்டர்களிவ்வாறு கமலாசனனைத்துதித்து, சுத்தவேதங்களோதி - பரிசுத்தமாகிய வேதங்கள்சொல்லி, துணிந்தமெய்ப்பொருளை - நிச்சயித்தசத்தியப்பொருளை, எங்கட்கு - எங்களுக்கு, அத்தனேயருள்செய்யென்ன-ஐயனேமொழிந்தருளென்றுவினவலும், அவர்களாதரத்தைக்கண்டு - அத்தேவர்களன்பைநோக்கி, புத்தியால் - அறிவினுல், போதோன் - அயன், உண்மைப்பொருளையே - சத்தியப்பொருளையே, புகலலுற்முன் - சொல்லத்தொடங்கினுன். எ - று. (உஅ)

முதலாவதத்தியாய முற்றிற்று.

---

ஸ்ரீசிவாயபரமகுருவேநம.

## இரண்டாவது

## ஐதரேயவுபநிடததாற்பரியமுரைத்தவத்தியாயம்.

---

### அத்தியாய அவதாரிகை.

இருக்குவேதம் முந்திய தாதலாலவ்வுபநிடதத்தாற்கூறப்பட்டபொருளை, சொல்லவிச்சைநண்ணி, இஃது மார்க்கமென்றது முதலானஸகுணபாகமான சுருதி - சித்தைகாக்கிரியத்தை ஜனிப்பித்தல்கொண்டு நிற்குணபாகத்தின் சேடமாதலால், அனன்னிய சேடமாகச் சுதந்திரமாய்ப்பல முடையபிரமான் மைக்கிய விஞ்ஞானஜனகமானசிருட்டிக்குமுன் இப்பிரபஞ்சமவனுக்குப் பின்னமாயில்லாமலவனொருவனே பிரகாசித்திருந்தானென்றது முதலிய நிற்குணபாகச்சுருதியின் பொருளையே, நிரகித்துச்சொல்வாராயினர்.

அவதாரிகை.

சங்கரனைச் சகலவேதங்களின் பொருளாகச்சொல்லத்தொடங்குவார் அத்துவிதநிர்க்குணப்பிரமான்மசொரூபமான வேதார்த்தம் அபிதாவிருத்திக் குவிடயமாகாதெனக்கூறுகின்றார்.

மறைகளோதுபொருட்டன்னையெவ்வழியினலுமெக்கலையும்வல்
லரா, மறிஞராலுமறையப்படாதறியவாதரிக்குமிகுமன்பினீர், செறி
தலாலதனைநான்விளங்கவுரைசெய்வனென்றுபடுசிந்தையா, னெறிய
தாகவிதுகேண்மினென்றயனுநேர்மையானபொருளோதுவான்.

இ - ள். மறைகளோதுபொருட்டன்னை - நான்குவேதங்களாலுஞ்சொல்லாநின்றபொருளை, எவ்வழியினலும் - எவ்வாற்றானும், எக்கலையும் வல்லராம் அறிஞராலும் - எவ்வகைப்பட்ட கலைஞானங்களிலும் வல்லுநராகிய சத்துக்களினலும், அறையப்படாது - சொல்லத்தகாது, அறிய - (அப்பொருளைத்) தெரியவேண்டி, ஆதரிக்குமிகுமன்பினீர் - விரும்புகின்ற மிகுந்த அன்புடைய (தேவர்களாகிய) நீங்கள், செறிதலால் - (உபதேசிக்கவேண்டுமென்று) நெருங்குதலால், அதனை - அப்பொருளை, (சொல்லத்தகாததாயினும்) நான் விளங்கவுரைசெய்வன் - நான் தெரியவுபதேசிக்கின்றேன், ஒன்றுபடுசிந்தையால் - (சிரத்தைபொருந்திய) ஏகாக்கிரசித்தத்தோடும், நெறியதாக - கிரமமாக, இது - இவ்வுபதேசத்தை, கேண்மினென்று - கேளுங்களென்று, அயனும் - பிரமாவும், நேர்மையான பொருளோதுவான் - உள்ளபடியாயுள்ளபொருளைச்சொல்லுவான். எ - று.

ப - ம். கூறப்பட்டபிரமான்மலக்ஷணமுடைய இவ்வேதார்த்தமானது, அபிதாவிருத்திக்கு விடயமாகத்தகாது, என்னெனில் - நிற்குணமானதுகொண்டு, அதில் சத்தப்பிரவிருத்தி நிமித்தங்களான ஜாதிகுணகிரியைகளில்லாமையால் - சுருதியுமஃதுவாக்குக்கவிடயமெனக்கூறிற்றென்பார் - "அறையப்படாது" எனவும், அபிதாவிருத்திக் கவிடயமாயினும், இலக்கணவிருத்தியாலுபதேசிக்கின்றேனென்பார் - "அதனைநான் விளங்கவுரை செய்வன்" எனவுங்கூறினார். (க)

அவதாரிகை

ஜலவிகாரங்களானகுமிழிநுரைதிரை முதலியவைகள்-காரணமான ஜலசொரூபத்துக்கு வேறில்லாதவைகள்போல்-நாமரூப விகாரத்தன்மையுடைய காரியஜகமும், அத்துவிதபரமசிவத்துக்கு வேறில்லையெனச் சாதிக்கவேண்டி, சிவத்தினின்றுஞ்சிருட்டிகூறத்தொடங்குவார் சிருட்டிக்குமுன் உலகனைத்துங் காரணபரசிவன்மாத்திரமாகவிருந்ததென்று கூறுகின்றார்.

வேறு.

சின்மாத்திரமாயுள்ளவெறுஞ் சிவனேதிகழ்வானியாதுக்கு
முன்மாத்திரமும்வேறில்லை முற்றுமவனேமொழிவுற்ற
நன்மாத்திரமாயான்மாவென்றுரைக்குநாமத்தினையுடையான்
றன்மாத்திரமேயாகியவத்தன்மையானசங்கரன்றான்.

இ-ள். சின்மாத்திரமாயுள்ள - (சுத்த) சித்தாகவேயிருக்கின்ற, வெறுஞ்சிவனே திகழ்வான் - சிவன் ஒருவனே விளங்குவான், யாதுக்குமுன்மாத்திரமும் வேறில்லை- (எக்காலத்திலும் இரண்டாம்வஸ்துவை எதிரிடாத அச்சிவசொரூபத்தைத்தவிர இந்தப்பிரபஞ்சஞ் சிருட்டிக்கு) முன்னமே அன்னிய மாய்க்கொஞ்சங்கூடவில்லை, முற்றுமவனே - இவையெல்லாம் அவனேதான், மொழிவுற்ற - சொல்லப்பட்ட, சன்மாத்திரமாய் - சன்மாத்திரமாகி, ஆன்மாவென்றுரைக்குநாமத்தினையுடையான் - ஆன்மாவென்றுரைக்கும் பெயரையுடையவன், தன்மாத்திரமேயாகிய - சொரூபமாத்திரமேயாகிய, அத்தன்மையான சங்கரன்றான் - அத்தன்மையுடைய சங்கரனானவன். எ-று.

ப-ம். சுழுத்தியில், ஞானேந்திரிய கன்மேந்திரிய அந்தக்கரணமுதலிய வியாபாரங்களை நீங்கி, சீவன் அதிஷ்டானமாத்திரமாய் வாசனுசேஷிதனாக அடங்கியிருந்ததுபோல், சகல சீவர்களும், நாமரூபப்பிரதீதியற்று - வாசனுமாத்திர சேஷிதர்களாய் - சுத்தமாகிய ஆன்மாவென்ற அதிஷ்டான பரமசிவ சைதன்னியத்தில் அவ்வியாகிருதரூபமாயடங்கி யிருந்ததென்பார், "முன்மாத்திரமும் வேறில்லை" எனவும், சிவமென்றால் மங்களார்த்தத்தையுடையது, ஆனந்தமேமங்களமாதலால் எதுநாசமுடையதோ - அது அமங்களமானதுக்கமாகும் அத்தன்மையில்லாதது - ஆனந்தமெனப்படும் அவ்வானந்தமும் விளங்காவிடிற் சூனியமாய்விடும் விளங்குவது சித்தாதலால் அந்தச்சித்தும் - அழியுந்தன்மையில்லாததனுற் சத்தெனப்படும் அவ்விதசச்சிதானந்தமாகிய சிவம் நிர்மலமாதலால் - சுத்தமெனப்படும் சுத்தமென்றதனுல் சுழுத்தியானந்தம் - அஞ்ஞானமாகியமலமுடையதாதலால் அதை யநித்த ஜடதுக்கமென்றும், ஆன்மசுகம் அத்தன்மையில்லாததென்றும், அச்சுழுத்தியானந்தம் சிவானந்தத்தைத்தவிர வேறில்லாவிடினும் அஞ்ஞானத்தோடுங்கூடியதாக விளங்குதலால் அதையசுத்தமெனவும், அந்தச் சுழுத்தியானந்தத்தைத் தவிரச் சீவர்களுக்குத்துக்கநிவர்த்தியின்பொருட்டுப் பிரமானந்தம் வேறிருக்கின்றதெனவுங்கொள்க. அவ்விதசிவம் - சுத்தமாதலால் மலமில்லாத்தன்மையினுல் நிராவரணமாதலால் ஒன்றேதான் எப்படி ஒன்றாகுமென்னில், எக்காலத்திலுமிரண்டாவது வஸ்துவையுடையதெதுவோ அதுதுக்கமெனப்படும். எது துக்கரூபமோ அது அனித்தஜடமெனப்படும். அது சச்சிதானந்தமாகாது. ஆகையால்-புறமதங்களிற்சொல்லியசடங்களான பிரதானம் பரமாணு - இவைமுதலியவைகள் காரணமன்றென்பார், ஸஜாதிய விஜாதிய சுகதபேதரகிதமாகிய ஆன்மவஸ்துவை "சின்மாத்திரமாயுள்ளவெறுஞ் சிவனே" எனவும், எல்லாவற்றினுந் தன் சுபாவத்தால் வியாபித்துச் சகலங்களையுமில்லாமற்புசித்துத் தான் மாத்திரமாய் விளங்கியசைதன்னியத்தை "ஆன்மாவென்றுரைக்கு நாமத்தினையுடையான்" எனவுங் கூறினார்.

கருத்து. சிருட்டிக்குமுன் இச்சகமெல்லாம் சன்மாத்திரமான ஆன்மாவென்னும் பெயரையுடைய சிவன்மாத்திரமாயிருந்ததென்பதாம். இதனுல் அசத்தைக்காரணமென்ற வாதமுங்கண்டிக்கப்பட்டது. (உ)

அவதாரிகை

அசங்கவுதாசீனனுக்குத் தன்னிலேயுள்ளவனான அத்துவிதீய அசரீரவான் மவஸ்துவுக்கு, ஜகசிருட்டியையிட்டபரியாலோசனுருபமானபார்வை யெவ் விதமாகப்பவிக்குமெனச் சங்கைவர, அதிலாரோ பிதமாகச் சகலசத்தியுமு ண்டென்பதுபற்றி அவ்வீக்ஷணப்பிரகாரத்தைக்கூறுகின்றார்.

வேறு.

அந்தத்துளதன்சத்தியையடைவுற்றுளதாமிச்
செந்துக்கள்செய்கருமந்திகழ்காலம்பருவஞ்செய்
தெந்தப்பொருள்களுமாக்குவனெனவேயிறையுன்னுப்
பந்தப்படமுன்போற்பலவுலகங்கள்படைத்தான்.

இ - ள். அந்தத்துள - முடிவிலுள்ள, தன்சத்தியை - தனக்கபின்னமா யுள்ளசத்தியின்விளங்குதலே, அடைவுற்று-பொருந்தி, உளதாமிச்செந்துக்கள்- (விவகாரசித்தியின்பொருட்டு) தன்னிலுள்ளடங்கினவா(யொப்பிய) இச்சீவ ர்கள், செய்கருமம் - செய்யாநின்றகருமங்கள், திகழ்காலம் - பலத்தைமு ன்னிட்டுவிளங்குங்காலத்தில், பருவஞ்செய்து - பக்குவப்படுத்தி, எந்தப்பொ ருள்களும் ஆக்குவனெனவே- எவ்வகைப்பட்டபொருள்களையுஞ் சிருட்டிப்பே னென்று, இறையுன்னு -பரமசிவன்திருவுளத்தடைத்து, பந்தப்பட-சீவர்கள்ப ந்தமடையும்படி, முன்போல்- முன்கற்பத்திலுள்ளபடி, பலவுலகங்கள் - பல வுலகங்களையும், படைத்தான் - சிருட்டித்தான். எ - று.

ப - ம். முந்தியகற்பத்திற்சஞ்சிதங்களானபிராணிகருமங்கள், தங்கள் காரணமானமாயையோடுங்கூடச் சங்காரசமயத்தில் வாசனுஅவசேடங்களா கப் பரசிவசொருபத்திலிலயித்து, காலவசத்தால் - தங்கள் தங்கள்பலத்தை க்கொடுப்பதையே முக்கியலக்ஷணமாயுள்ளவதிசயத்தை அவைகளடைகின் றனவென்பார், "திகழ்காலம்" எனவும், அக்காலபாகத்தால் சிருட்டாவா கியபரமசிவத்துக்கு சிருட்டிவிடயவிச்சாகாரணமான முன்பின்னென்றப ரியாயமுடையஸம்ஸ்காரமுதிக்க அதனுல் திரிகுணமுடையமாயாசத்தியான அ இராஜததாமதகுணங்களின் சம்பந்தமில்லாதகாலத்தில், சுத்தசத்துவ மாய் விளங்குதலால் அவ்வுபாதி பெலத்தால் சிருட்டியை இட்ட இச்சாரு ப ஈக்ஷணமுண்டாயிற்றென்பார், "தன்சத்தியை அடைவுற்று" எனவுங் கூறினர். (௩)

அவதாரிகை.

முந்தியபாடலிலுலகங்கள்படைத்தானென்பது உலகசிருட்டியைமுன்னி ட்டிருத்தலால், அச்சிருட்டி, விராட்டைப்பற்றியதாகும். அதெங்ஙனமெனில், சுருதியிற் பசுவைவரவழைத்தல்முதலானவைகள் காண்பதனுலும்- அவைக ள் அபாணிபாதனுன ஈசனுக்குத்தகாததனுலும் பூதசிருட்டியைச்சொல்லா ததனுலுந் தனதுவிகாரமானசகத்தை முன்னிட்டுத் தனக்கத்துவிதங்கூடு

லாலும், விராட்டே சிருட்டாவென்று பூர்வபக்ஷம்வர, இவ்விடத்திற் பூத சிருட்டியுஞ்சொன்னதாகவேசேர்த்துக் கொள்ளத்தக்கது. எங்ஙனமெனில், உபசங்காரவாக்கியத்திற் பூதபௌதிகங்களனைத்துக்கும் பிரஞ்ஞையே ஆதாரவு பிரஞ்ஞானமே பிரமமென்று பிரஞ்ஞான பிரமவிடய சிரவணங்காணப்படுவதனலீச்சுரனே சிருட்டா, இங்ஙனமாயின், சுருதியிற்காரியமனைத்தும் பிரஞ்ஞாநேத்திரமென்று சொல்லியபடி ஏகத்துவமுங் கூடிவருமென்றும், பசுமுதலியவரவழைத்தல் துதியென்றுமாகுஞ்சித்தாந்தத்தால், ஈச்சுரசொரூபத்தைத்தடத்த லக்ஷணத்தாற் காண்பித்துச் சுருதியிற்சொல்லிய லோகபாலாதி சிருட்டிக்குஞ் சிருட்டாவைக்காண்பிப்பதே பிரயோஜனமாதலால்,சொன்னதுபோலவேகொண்டும், அவனிந்த எல்லையைப்பிளந்தென்றது முதலியவாக்கியங்களும் பிரஞ்ஞையே பிரதிட்டை. பிரஞ்ஞானமே பிரமமென்றபிரமான்மைக்கியத்தைக் கூறுநின்றவாக்கியத்துக்குச் சேடமாதலால், அவ்வனைத்தையும்நீக்கி யார் ஆன்மாவென்றதுமுதலான வாக்கியசம்பந்தத்தாற் கூறப்பட்டபொருளைச் சொல்லவேண்டிக் காற்கட்டைவிரல்களாலும் பிரமரந்திரத்தாலுஞ் சரீரத்தை அடைந்தானென்ற சுருதிபெலத்தால் அவ்விதபிரவேசமுடைய கிரியாசத்திஞானசத்தி இவைகளையுடைய பிரமங்களுக்குள் யார் ஆன்மாவெனவுண்டாகுஞ்சமுசயம் போலவே வாதிகளின் விவாதத்துக்கு மஃதேகாரணமாதலால், அவ்விவாதத்தைக்கூறுகின்றார்.

பரமன்செயலறியாதுபடைத்தானுலகெல்லா
மரனென்பவரரியென்பவரயனென்பவர்சிலரிந்
திரனென்பவன்முதற்றேவர்கள்செயலென்பவர்சடமா
மருவுங்குணவடிவென்பவரணுவென்பவர்மயலால்.

இ - ள். பரமன்செயலறியாது -பரமசிவத்தின்கிருத்தியத்தினியல்பையறியாமல், மயலால் - மயக்கத்தினால், உலகெல்லாம்படைத்தான் - எல்லாவுலகையுஞ்சிருட்டித்தவன், அரனென்பவர் - உருத்திரனென்பவர்சிலர், அரியென்பவர் - திருமாலென்பவர்சிலர், அயனென்பவர்சிலர் - பிரமனாகிய நானென்பார்கள்சிலர், இந்திரனென்பவன்முதல் தேவர்கள்செயலென்பவர்- இந்திராதிதேவர்களின்றொழிலென்று அபிப்பிராயப்படுகின்றவர்சிலர், சடமாமருவுங்குணவடிவென்பவர் - திரிகுணத்தின்சமுதாயம்பொருந்தியசுதந்தரமாயுள்ளசடமானமாயையென்பவர்சிலர், அணுவென்பவர் - அணுக்களென்பவர் சிலர், எ - று.

ப - ம். சேதனம் சகத்துக்குப்பிரதானகாரணமாயின், ஜகத்திற்சடத்துவங்காணக்கூடாது அதனாலதற்கனுகுணமான சேதனாசேதனரூபமாகியசத்துவ ரஜோ தமோகுணசமுதாயம்பொருந்திய மாயையைப் பிரதானமென்று சாங்கியர் கூறுகின்றாரென்பார் "மருவுங்குணவடிவென்பவர்" எனவும், அற்பங்களானபரிமாணங்களையுடையமிருத்தினவயவங்களாற் பெரிதானபரிமாணங்களையுடையகடாதிகளின் ஆரம்பங்காணப்படுதலால், பிருதிவிமுதலி

யவற்றின் பரமாணுக்கள் துவியணுவாதிகளின் சேர்க்கைவியாபாரத்தாற்பி ராணிகளின் அதிட்டத்தை முன்னிட்டு ஜகத்தை உற்பத்திசெய்கின்றனவென் பவர் தார்க்கிகர்களென்பார் "அணுவென்பவர்" எனவுங்கூறினார். (ச)

வேறு.

வானிலாவோசையென்பார்வந்தொருகணத்திற்றோன்றி
யானியாம்புந்தியென்பாரடையவுங்கெட்டுநின்ற
சூனியமென்பார்பூதமென்னவேசொல்லாநிற்ப
ரானவாறொருவராலன்றடையவுமியல்பேயென்பர்.

இ - ள். (சிலர்) வானிலாவோசையென்பார் - சிலர் பெருமைபொருந் திய நாதமே பிரமமென்பார்கள், வந்தொருகணத்திற்றோன்றி யானியாம் புந் தியென்பார்-சிலர் க்ஷணப்பிரத்துவம்ஸி விஞ்ஞானமென்பார்கள், அடையவு ங்கெட்டு நின்றசூனியமென்பார் - சிலர் சத்து அசத்து சதசத்தென்னு மிலக் கண மெல்லாமிறந்த சூனியமென்பார்கள், பூதமென்னவே சொல்லாநிற்பர் - சிலர் பூதங்களென்றே சொல்லுகின்றார்கள், ஆனவாறொருவராலன்று- சிலர் உற்பத்தியானவிதமொருவராலுமல்ல, அடையவுமியல்பேயென்பர்- எல்லாஞ் சுபாவந்தானென்பார்கள். எ - று.

ப - ம். சத்தப்பிரமமே அருத்தரூபமானபிரபஞ்சமாக விவர்த்திக்கின் றதென்ற சத்தகாரணவாதிகள், வையாகரணிகளென்பார், "வானிலாவோ சையென்பார்" என்றார். (ரு)

அவதாரிகை.

சுருதியிற்றானே காலம் சுபாவம் நியதி சகசம் பூதங்கள் இவைமுதலி யவற்றை உலககாரணங்களாக விகற்பித்ததனை, அவ்வுலககாரணவாதிகளது வாதங்களின் ஆதரவாகக்காண்பிக்கப்பட்டிருந்திடினும், அவனிச்சித்தானெ ன்றும் வெகுபிரஜைகளாக ஆவோமென்றுந் தானேதன்னைச் சகமாகச் செய் தானென்றுஞ் சொன்னசுருதியாலும், எனக்குவேறாகக்கிஞ்சித்து மில்லவே யில்லை. சூத்திரத்தில் மணிகள்போல் என்னிடத்திற் பிரபஞ்சமனைத்துங்கோ வைப்பட்டிருக்கின்றது. முக்கியனான அதிட்டானப்பொருளாகிய என்னாலே யே பிரகிருதியானது சராசரமான அனைத்தையுஞ் சிருட்டிக்கின்றதென்ற மி ருதியாலும் கண்டிக்கப்பட்டன வாதலா லிம்மதவாதங்கள் சுருதிமிருதிகளுக் குவிருத்தமெனக்கூறுகின்றார்.

வேறு.

தத்தமாலானபெத்தவாதியர் தாந்தங்களிற்றாங்கட்டர்க்கங்கள்
கத்திடாநிற்கும்பரிசெலாஞ்சுருதிமிருதிகள்கருதியதழிக்குஞ்
சுத்தமாவிருத்தமாகுமென்றேயென்றுணிவுதொல்பிறவியிற்சுழல்வார்
சித்தமானதுபோயிவற்றிலேகாதல்செய்யுமுன்செய்ததீவினையால்.

இ - ள். தத்தமாலான - தங்கள் தங்களாலியன்றமட்டும், பெத்தவா தியர்தாம் - (அவிவேகிகளான) பந்தமுடையவாதியர்கள், தங்களிற்றாங்கள்-

தங்களுக்குள்ளேதாங்கள், தர்க்கங்கள்கத்திடாநிற்கும்பரிசெலாம் - (பெலம் போல அதததற்குத்தகுந்த)யுக்திகளைச்சொல்லிக்கதறுகின்ற தன்மையெல்லாம், சுருதிமிருதிகள்கருதியதழிக்கும் - சுருதிமிருதிகளின் கருத்தையொழிக்கும், (ஆகையால்), சுத்தமாவிருத்தமாகுமென்றேயென்றுணிவு- கேவலம் மாறுபாடாகுமென்றேயெனதுநிச்சயம், தொல்பிறவியிற் சுழல்வார்- அநாதியானபிறவியிற்சுழல்கின்றவர்களுடைய, சித்தமானது - மனமானது, முன்செய்த தீவினையால் - முன்செய்தகொடுமைபொருந்திய கருமவாசனையினால், இவற்றிலேபோய் - இவைகளிற்சென்று, காதல்செய்யும் - விரும்பும். எ - று.

ப-ம். இவ்வாறு ஸாங்கியாதிநூல்கள் சுருதிமிருதிகட்குவிரோத மாயிருத்தலாலப்பிரமாணங்களாயின் அவைகளிற்பெரியோர்களுக்கு முயற்சிவரக்காரணமியாதெனில் பாபமேதானென்பார் "சித்தமானதுபோ யிவற்றிலேகாதல்செய்யு முன்செய்த தீவினையால்" என்றார். (ஈ)

அவதாரிகை.

வேதவிருத்தமான வம்மதங்களிற்புகுந்தவர்களும், காலவிளம்பத்தில் வேதமார்க்கத்தைச்சார்ந்து வீட்டையடைவார்களெனக் கூறுகின்றார்.

காதலாற்றத்தங்கடவுளரருளாற்காலபாகத்தினாலறத்தாற், போதராதலினால் வேதவாதத்தைப்பொருந்துவர் புகன்றவவ்வடைவே, வேதவாதத்தைமேவுநல்வினையால் விருப்பினாலங்குமேவினருஞ், சாதலானதும்பிறத்தலுமில்லாத்தற்பதந்தன்னையேசார்வார்.

இ - ள். காதலால் - (உண்மையையடையவேண்டிய) ஆசையால், தத்தங்கடவுளரருளால் - (உபாசிக்கின்ற) தங்கள்தங்கள்தேவர்களின் பிரசாதத்தாலும், காலபாகத்தினால் - வெகுகாலத்தின் பின்படையத்தக்கபரிபாகத்தாலும், அறத்தால் - தருமத்தினாலும், போதராதலினால் - தகுந்தவிவேகிகளாவதனாலும், (சோபானக்கிரமமாக) வேதவாதத்தைப்பொருந்துவர் - வேதமார்க்கத்தை அடைவார்கள், மேவுநல்வினையால் - பொருந்துகின்ற நல்லபூருவபுண்ணியத்தாலும், விருப்பினால் -"முத்திவாஞ்சையினாலும், புகன்றவவ்வடைவே - முன்சொன்ன அவ்வண்ணமே, அங்கு வேதவாதத்தைமேவினரும்- அவ்விடத்தில் வேதமார்க்கத்தை அடைந்தவர்களும், சாதலானவுதும் பிறத்தலும் இல்லா - இறத்தலும் பிறத்தலும் இல்லாத, தற்பதந்தன்னையேசார்வார் - மோட்சத்தையேயடைவார்கள். எ - று.

ப-ம். தத்தநூல்களினின்றும் சாமானியமாக ஆன்மானான்மவிவேகத்தையடைந்தவர்கள் அவ்விவேகத்தைச் சிறப்பித்துக்கூறுகின்ற மேலான வேதமார்க்கத்தைப் பரம்பரையாக அடைவார்களென்பார், "போதராதலினால் வேதவாதத்தைப்பொருந்துவர் புகன்றவவ்வடைவே." என்றார்.

(கருத்து) அவர்களும் தத்தநூல்களின் பலாபலத்தை விசாரிக்குங்காலத்துப் புருடனுடைய புத்தியின் பிரபாவமாதலால் தங்கள் நூல்கள் தர்ப்

பலமுடையதென்றும், வேதம் அபௌருடேயமாதலாற்குற்றமில்லாத பிரமாணமெனவும் நிச்சயஞ் செய்து அம்மார்க்கங்களை நீக்கிக் கேவலம் வேதமார்க்கத்தையேயடைந்து படிப்படியாய் வேதத்தாற்சொல்லப்பட்ட முத்தியை வெகுகாலத்திற்குப்பின் படைவார்கள் என்றுகொள்க. (எ)

அவதாரிகை.

வேதநெறியைவிடுத்துப் பிறநெறியிற் செல்பவனாயிகழ்ந்து கூறுகின்றார்.

வேறு.

வான்கருதியமறைவழியைவிட்டுமேற்
றான்கருதுதல்சதுரன்றுதன்கையிற்
றேன்கமழ்திரளையைச்சிந்திச்சந்தியாற்
கூன்கையில்விழுந்துளிகொண்டதன்மையே.

இ-ள். வான் கருதிய மறைவழியை விட்டு - மேலாகிய வேதமார்க்கத்தைத்தள்ளி, மேல் தான் கருதுதல் சதுரன்று- அன்னியமதங்களைத்தானனுசரித்தல் புத்தியன்றாகும், தன்கையில் தேன்கமழ் திரளையைச்சிந்தி-தன்னுள்ளங்கையிலுள்ள தேன்மணக்கும்பாயசத்தைச்சிந்திவிட்டு, சந்தியால் கூன்கையில் விழும் துளி கொண்டதன்மையே - இடைவழியேபுறங்கையில் ஒழுகாநின்றதுளியை நக்குந்தன்மைபோலாகும். எ - று. (அ)

இதுவுமது.

வேறு.

பொருள்கொண்டமறைநின்றுபுகல்கின்றதுணரா
மருள்கொண்டசமயங்கண்மதிகொண்டுகெதியா
யருள்கொண்டபரவின்பமடைகின்றவவாபே
ரிருள்கொண்டுபொருள்கண்டவவரன்றியிவரார்.

இ- ள். பொருள்கொண்ட மறைநின்று புகல்கின்றதுணரா-உண்மைப் பொருளையுள்ளடக்கிய வேதங்கள்பிரதிபாதிப்பதையறியாது, மருள்கொண்டசமயங்கள்- மயக்கம்பொருந்தியசமயங்களை, கதியாய் மதிகொண்டு-(நல்)வழியாகமனதிற்கொண்டு, அருள்கொண்டபரவின்பமடைகின்றவவர்- அருள் பொருந்திய பேரின்பத்தையடைகின்றவவர்கள், பேர் இருள்கொண்டு - (பிரகாசத்தினுதவியின்றி) பெரிய இருளைக்கொண்டே, பொருள்கண்டவவரன்றி- கடபடாதிகளைப்பார்க்கின்றவவர்களல்லாமல், இவரார் -இவர்வேறார். எ- று.

அவதாரிகை.

வேதங்கூறுவதேசத்தியும் மற்றைச்சமயநூல் கூறுவதசத்தியமாகும். வேதங்கூறியபொருள்சத்தியமாயின், கிரியாகாரக முதலியபேதங்களாற் பின்னமானஜகமும் ஆன்மவத்துப்போல் வேதப்பொருளாதலால் சத்தியமாகவேண்டுமெனச் சங்கிக்க அச்சங்கையால் நேரிட்டசகத்தின் சத்தியத்தை வியா

வகாரிகமாகக்கூறவேண்டி, ஞானகாண்டம் கருமகாண்டமென்று வேதார்த்தமிருவகைப்படும். அதில் ஞானகாண்டத்திற் சத்தியஞானாதி லக்ஷணமுடையபொருள் பரமார்த்தமென்றும், கருமகாண்டத்தில் சுவர்க்க அபூருவ தேவதாதி லக்ஷணமுடைய பிரபஞ்சம், பரமான்மாவினிடத்தில் மாயையாற்கற்பிதமென்றுங்கூற, அக்கருமகாண்டம் கற்பிதத்துவிதவிஷயமாயின் வேதார்த்தமனைத்துஞ் சத்தியமென்ற நியமஞ்சித்தியாதென்று சங்கிக்க அதற்குச்சமாதானங்கூறுகின்றார்.

வேறு.

வேதமோதியதேமெய்ப்பொருண்மற்றைப் பொருளெலாமித்தை
யேவேத, மோதமேவுற்றபொருளிருவகையாமதனிலொன்றென்று
முண்மையதாய்ப், போதவானந்தமாகியசிவனும்பொருளது மற்றதப்
பொருளி, லேதமேவாமற் கற்பிதமாகுமற்றதனியல்பையு மிசைப்
பாம்.

இ - ள். வேதமோதியதே மெய்ப்பொருள் - வேதங்களாற்சொல்லிய பொருளேசத்தியம், மற்றைப்பொருளெலாமித்தையே - (புறமதங்களிற்கூறிய) பொருளெல்லாம் அசத்தியமே, வேதம் ஓத மேவுற்ற பொருள் இருவகையாம்-வேதம் நிரூபிக்கத் தொடங்கியபொருள் இருவகையாகும், அதனில் ஒன்று - அதிலொருபொருள், என்றும் உண்மையதாய்ப் போதவானந்தமாகிய சிவனும் பொருளது - எக்காலத்துஞ் சத்தியஞானானந்த சொரூபமுடைய சிவனென்னும்பொருளேயாகும், மற்றது-மற்றப்பொருள், அப்பொருளில் ஏதம் மேவாமல் கற்பிதமாகும் - அந்தப்பரமசிவனாகியவஸ்துவில் குற்றத்துக்கிடமின்றி அத்தியாசத்தாற்றோன்றிய மாயையாற்கற்பிக்கப்பட்டதாகும், அதன் இயல்பையும் இசைப்பாம்-அந்தக்கற்பிதப்பொருளின் சுபாவத்தையுஞ் சொல்வாம். எ-று. (க0)

அவதாரிகை.

ஜகத்தின் வியாவகாரிக சத்தியவிலக்கணத்தையும் வியாவகாரிகம் பாரமார்த்திகமிரண்டையும் வேதங் கூறுமெனவுங் கூறுகின்றார்.

சொல்லுறுநின்றகற்பிதப்பொருளிற் சொல்லளவுள்ளதாயுண்
மைக், கில்லையாயிருக்குஞ்சிலபொருள்சொலவிலில்லையாஞ்சிலபொ
ருளவைதா, னெல்லைதீர்வானாதிகளுஞ்சுத்திகையிலிரசதாதிகளுமா
முன்னைத், தொல்லையாம்பொருளுங்கற்பிதத்துண்மைப்பொருளையு
ஞ் சொல்லுநற்சுருதி.

இ - ள். சொல்லுறுநின்ற -சொல்லாநின்ற, கற்பிதப்பொருளில் - கற்பிதவஸ்துக்களுக்குள், சொல்லளவுள்ளதாய்- (சிலபொருள்கள் கற்பிதமாக) விவகாரத்தின்மட்டு மிருக்கின்றனவாயும், உண்மைக்கில்லையாயிருக்குஞ் சில பொருள்-பரமார்த்தத்தில் இல்லாதனவாயுமிருக்குஞ் சிலபொருள், சிலபொ

ருள் சொலவிலில்லையாம் - சிலபொருள்கள் விவகாரத்தினுஞ் சத்தியமாயி ல்லாதனவாகும், அவைதான் - இவ்விருவகைகளும், எல்லைதீர்வானாதிகளும் - அளவற்ற ஆகாயமுதலிய ஜகங்களும், சுத்திகையிலிரசதாதிகளுமாம் - இப்பி யிற்காணப்படும் இரசித முதலியவைகளுமாம், முன்னை - முன்சொன்ன, தொல்லையாம் பொருளும் - பழமையான சிற்கனப்பொருளையும், கற்பிதத்து ண்மைப்பொருளையும் - விவகாரத்திலொப்பிய சத்தியப்பொருளையும், நல் சுருதி சொல்லும் - நல்லவேதங்கள் சொல்லும். எ-று.

ப-ம். சுருதியிற்சொல்லிய ஞானகாண்டத்தின் பயனான பரமார்த்தப் பொருளாகிய பரமசிவனும், கருமகாண்டத்தின்பயனான பரமார்த்தம் அபர மார்த்தமென்ற இருவகைப்பேதமுடைய வேதத்தின் கௌணப்பொருளாகி ய இகபரமான ஜகமுமாகிய இரண்டில் பரமசிவஞ் சத்தியமென்றும், வியா வகாரிகப்பிராதிபாசிக ஜகம்பிராந்தியாற்றோன்றியதென்றுந் தெளியும்பொரு ட்டு, "எல்லைதீர்வானாதிகளுஞ் சுத்திகையிலிரசதாதிகளுமாம்" எனவும், பிரமா தாவிருக்குமளவில் அபாதிதமாயுள்ளது வியாவகாரிகசத்தியமென்பார், "சொ ல்லளவுள்ளதாயுண்மைக்கில்லையாயிருக்குஞ் சிலபொருள்" எனவும், பிரமாதா விருக்குங்காலத்தே பாதிதமாயுள்ளது பிராதிபாசிகசத்தியமென்பார். "சொ லவிலில்லையாஞ்சிலபொருளெனவும்," பிரமாதாவிருக்குங்காலத்துமில்லாக் காலத்தும் வாதிக்கப்படாத பாரமார்த்திக சத்தியத்தை "தொல்லையாம்பொ ருளும்" எனவுங்கூறினார். (கக)

அவதாரிகை.

புறமதங்கள் இருவகைச்சத்தியங்களையுங்கூறுமற் கேவலம் வேதாந்தத் தில் விவகாரத்தின்பொருட்டொப்பிய வியாவகாரிக சத்தியத்தையே பர மார்த்தசத்தியமாகக்கொண்டு, பஞ்சபூதபாஞ்சபவுதிக திரவியகுணாதிகளை யன்றி மற்றொன்றுங்கூறிற்றில்லை. ஆதலால், பரமார்த்த சிற்கனப்பிரதிபா தனப்பிரசத்தியே அவைகளிற் கிடையாதெனவும், சத்தியத்தை ஒருதிருட்டி யாற் கூறினும் அன்னியமாகச்சொன்னவதனாலவைகள் பிராந்தங்களெனவுங் கூறுகின்றார்.

வேறு.

கனவிற்கற்பிதப்பொருள்போல்வாதக்கலக்கங்கள்
நனவிற்கற்பிதப்பொருளைநவிலாரினியச்சிற்
கனவத்துவிதத்தினிலென்னுற்றவரொருகண்ணாற்
சொனவத்தகவும்மெய்யேமெய்யிற்றோன்றாதே.

இ-ள். வாதக்கலக்கங்கள் - மயக்கமுற்ற (சுகதர், வைசேடியரொன்னு மதவாதியர்கள், கனவிற் கற்பிதப்பொருள்போல் - சொற்பனத்திற் கற்பித மாயுள்ள பொருள்களைப்போல, நனவிற்கற்பிதப்பொருளை நவிலார் - சாக்கிர த்திற்கற்பிதமாயுள்ளவத்துக்களைப் பொய்யென்று கொள்ளாமல் மெய்யென்

கின்றார்கள், இனி அச்சிற்கன அத்துவிதத்தினில் என்னுற்றவர் - (அவர்கள்) இனிமேலந்தச்சத்திய சிற்கனமாகிய வத்துவிதத்திலெதனை யடைந்தவர்களா வார்கள, ஒருகண்ணுல் - (வியாவகாரிக) மென்னும் ஒருதிருட்டியால், சொனவத்தக்கவும் மெய்யே - சொல்லிய அந்தநீதியுஞ்சத்தியமே, மெய்யிற்றேன்றுதே - (ஆயினும்)பாரமார்த்திக திருட்டியில் நிலையாகாது. எ-று. (௧௨)

அவதாரிகை.

வியாவகாரிக சத்தியமே பாரமார்த்திக சத்தியம். அன்றேல், ஒருவத்து வேசத்தியமாகவு மசத்தியமாகவும் எவ்விதமாப்பவிக்குமெனில்; மிருத்திகை யிருக்குங் காலத்திலேயே கடாதிகளழியக்காணப் படுவதனுற் காரணகாரிய வுபாதி பேதங்களாற் கூடுமெனக் கூறுகின்றார்.

போதக்கண்ணிற்பூதம்பொய்யேமெய்யேயாம்
பேதக்கடகுட்டியமாநிகழ்விற்பேதந்தா
னோதப்படுசுத்திகைவெள்ளியின்மெய்யுணர்காலஞ்
சேதப்படுமக்கனவிற்பெரிதுந்திடனுண்டே.

இ-ள். போதக்கண்ணில் - அறிவுக்கண்ணில், பூதம்பொய்யே - ஆகாசாதிபூதங்களெல்லாம் அசத்தியமேயாகும், பேதக்கடகுட்டியமாநிகழ்வில் - வேருகிய கடம் சுவர் முதலியவைகளின்விளங்குதலையபேட்சித்து, மெய்யேயாம் - அவ்வாகசாதிகளுஞ் சத்தியமேயாகும், பேதந்தான் - பேதமாகிய கடாதிகளும், ஓதப்படு - சொல்லப்படுகின்ற, சுத்திகை வெள்ளியின்மெய் - கிளிஞ்சில் வெள்ளியைப் பார்க்கினுஞ் சத்தியமாகும், உணர்காலம்- சாக்கிராவத்தையானது, சேதப்படுமக்கனவில் பெரிதுந்திடனுண்டு - அழிகின்ற அந்தக்கனவைப் பார்க்கினும் மிகவுஞ் சத்தியமாகும். எ-று. (௧௩)

அவதாரிகை.

அசத்தியத்தில் சத்தியபுத்திசெய்ததுபற்றிப் பரமார்த்ததிருட்டியில் புறமதங்கள் பிராந்தங்களாயின், மித்தைகளான அம்மார்க்கங்களெங்ஙனம் வேதமார்க்கத்தாற் பரமார்த்தசத்திய சிற்கனபரமசிவத்தை அடைவிக்கக் காரணமாகுமெனில், அசத்தியமாயினுஞ் சொற்பனத்திற்கண்ட சிலபொருள் சாக்கிரத்தில் சத்தியமானசிலபொருளை அடைவிப்பதுபோலாகுமெனக்கூறுகின்றார்.

வேறு.

கனவிற்கண்டபொருணனவிற்காணும்பொருளைக்காட்டலா
னினையிற்சமயநெறிவேதநெறிக்குநிமித்தமாநினைமின்
வினவிற்சமயநெறிவிட்டுமேலாம்வேதநெறிநின்றேன்
பினையச்சமயத்தவன்குறுகிற்பிராயச்சித்தஞ்செயல்வேண்டும்.

இ - ள். கனவில் கண்டபொருள் - சொற்பனத்திற்கண்டவஸ்துவான து, நனவில் காணும் பொருளைக் காட்டலால்-சாக்கிரத்திலினிக்காணும்பொரு ளைச்சூசிப்பிக்கின்றதனால், நினையில் - நினைக்குங்கால், சமயநெறி - இச்சமய மார்க்கங்கள், (பிராந்தங்களாயினும்), வேதநெறிக்கு நிமித்தமா நினைமின் - வேதமார்க்கத்தையடைவித்தற்குக் காரணமாகுமெனநினையுங்கள், (அப்படி யாயினும்) வினவில் - ஆராயுமிடத்து, சமயநெறிவிட்டு - அன்னியமார்க்கங் களைத்தள்ளி, மேலாம் வேதநெறி நின்றோன் - உயர்வாகிய வேதமார்க்கத்தில் நிற்கின்றவன், பினை - பிற்பாடு, அச்சமயத்து - அம்மார்க்கங்களில், அவன் குறுகில் - அவன் (மறந்தேனுஞ்) சேர்வானேயாகில், பிராயச்சித்தஞ் செயல் வேண்டும் - பிராயச்சித்தம்பண்ணல்வேண்டும். எ - று. (கச)

அவதாரிகை.

புறமதவாதியர்களைப் பாடண்டிகளெனவும், அவர்களுடன் சம்பந்தமுத லியன கூடாதெனவும் இதுமுதலெட்டுத் திருவிருத்தங்களாற்கூறுகின்றார்.

வேறு.

தண்ணியசமயிகடங்கள்பந்தியி
லுண்ணுதலவர்களோடுறவுபண்ணுதல்
புண்ணியமறிந்திடப்புகுதல்செய்திடிற்
பண்ணுகசாந்திராயணம்பகர்ந்தவா.

இ - ள். (வேதமார்க்கத்திலுள்ளவர்கள்) தண்ணிய - இழிந்த, சமயி கடங்கள்பந்தியில் - சமயத்திலுள்ளவர்களதுபந்தியில், உண்ணுதல் - (மறந் தேனுமிருந்து) புசித்தலும், அவர்களோடுறவுபண்ணுதல் - அவர்களோடுசி னேகித்தலும், விவாகமுதலியவுறவுசெய்தலும், புண்ணியம் அறிந்திடப் புகு தல்செய்திடில்- ஓமம் தானம் வேதாத்தியயனம் தருமாதருமங்கண்முதலிய வற்றையும், அவைகளைப்பற்றிவரும் விவேகஞானத்தையுந் தெரிந்துகொள்ளப் புகுதலுஞ்செய்தால், பகர்ந்தவா சாந்திராயணம் பண்ணுக - (ஒவ்வொன்றிற் குஞ்) சுருதியிற்சொன்னமுறைப்படியே சாந்திராயணவிரத மநுட்டிக்கவே ண்டும். எ - று. (கரு)

வேறு.

வேதஞ்சொனபடியொழியவேறுஞ்சிலகலைகளினை
யோதுந்திறமருவிமறையோதுஞ்சிவனிருகமல
பாதந்தொழநினைவிலர்கள்பாடண்டிகளெனவறிக
தீதொன்றியவவர்களொடுசேருங்கலர்களுமவர்கள்.

இ-ள். வேதஞ்சொனபடியொழிய-வேதஞ்சொன்னமார்க்கத்தையன்றி வேறுஞ்சிலகலைகளினை-அன்னியமார்க்கங்களிலுள்ள சிலகலைகளை, ஓதும் திற மருவி-அப்பியாசிக்குந்திறமடைந்து, மறையோதும் சிவனிருபாதகமலந் தொ ழ நினைவிலர்கள்- வேதங்களாற் சொல்லப்படும் சிவபெருமானுடைய இரண்

டு திருவடித்தாமரைகளைத் தொழுகின்லில்லாதவர்களும், பாடண்டிகளெனவ றிக- பாசண்டிகளென்றேயறியக்கடவீர், தீதொன்றிய - குற்றம்பொருந்திய, அவர்களொடு சேரும் - அவர்களோடுசேருகின்ற, கலர்களும்- கீண்மக்களும், அவர்கள் - அந்தப்பாசண்டிகளேயாம். எ - று. (கசு)

வேறு.

மையறுவேதமார்க்கமறந்துபாடண்டமார்க்கக்
கையரான்மயக்கப்பட்டுக்கலியுகந்தன்னிலுள்ளோர்
மெய்யுணர்வனந்தானந்தமேனியாஞ்சிவனைப்பூசை
செய்யவாதரியார்செய்வார்தம்மையுஞ்செய்யவொட்டார்.

இ - ள். கலியுகந்தன்னிலுள்ளோர்-கலியுகத்திலுள்ளவர்கள், மையறு வேதமார்க்கமறந்து - குற்றமற்றவேதமார்க்கத்தைமறந்து, பாடண்டமார்க் கக் கையரால் மயக்கப்பட்டு- பாடண்டமார்க்கத்தையுடைய கீண்மக்களான் மோகஞ்செய்யப்பட்டு, மெய்யுணர்வனந்தானந்த மேனியாம் சிவனை - (சகத் விதாதாவாகிய) சத்தியஞானவனந்தவானந்தமே திருமேனியாகவுடைய சிவ பெருமானை, பூசை செய்யவாதரியார்- (வேதமார்க்கத்தால்) அர்ச்சிக்க அன்பு கொள்ளார், செய்வார்தம்மையும் - (அப்படி) அர்ச்சிப்பவர்களையும், செய்ய வொட்டார் - அர்ச்சிக்காதபடி தடுப்பார்கள். எ-று. (கஎ)

காதும்வாதியர்களாலேகலியுகத்துள்ளோர்கெட்டு
வேதமோதியவாசெய்யார்மிருதிசொல்வதுவுஞ்செய்யார்
பூதியுமணியார்ஞானசாதனபூதமாக
வோதுவதொன்றுஞ்செய்யாரொழிந்ததேயுகந்துசெய்வார்.

இ-ள. காதும் வாதியர்களாலே (வேதமார்க்கத்தினின்று) பிரிக்கும் பா சண்டிகளாலே, கலியுகத்துள்ளோர்கெட்டு - கலியுகத்திலுள்ளவர்கள்கெட்டு, வேதமோதியவாசெய்யார் - வேதஞ்சொன்னபடி (உமையொருபாகமாயுஞ் சந்திரார்த்தசேகரமாயுமுள்ள சிவபெருமானை) அர்சசித்தலும் உருத்திராட் சத்தைப்பத்தியோடு தரித்தலும் செய்யமாட்டார்கள், மிருதிசொல்வதுவுஞ் செய்யார் - மிருதிகளாற்சொல்லப்பட்ட (தேவ பிதிர்கருமமுதலியவைகளை யுஞ்) செய்யார்கள், பூதியுமணியார்- (வேதத்திற்சொல்லியபடி) விபூதியால் உத்தூளனமுந்திரிபுண்டரமுந்தரிக்கமாட்டார்கள், ஞானசாதனபூதமாக வோ துவதொன்றுஞ் செய்யார்-ஞானசாதனபூதமாகச் சொல்லியவிவைகளிலொ ன்றையேனும் அநுட்டித்திடார்கள், ஒழிந்ததே யுகந்துசெய்வார்-வேதவிரோ தத்தையே பிரியத்தோடுஞ்செய்வார்கள். எ - று.

ப -ம். தினந்தோறு மிலிங்கத்தில் சிவருத்திராதி சமுக்கினையுடைய ம காதேவனை யர்ச்சித்தலும், அநாதியாயுள்ள பரமான்மாவாகிய பரமசிவ னது ஆலயங்களைப் பத்தியுடன் றரிசித்தலும், ஸ்ரீ வியாக்கிரபுரத்தினும் திரு க்காளத்தியினும் போகமோக்ஷம் இரண்டையுங் கொடாநின்ற வாசத்தை

யொருவருடஞ் செய்தலும் உத்தமமாயுள்ள அன்னிய சிவக்ஷேத்திரங்களி லொருவருடம் வசித்தலும் செய்யமாட்டார்களென்பார், "ஞானசாதனபூத மாகவோதுவதொன்றுஞ் செய்யார்" என்றார். (கஅ)

வேறு.

தருமமதறிவில்பாடண்டர்தங்களை
மருவலால்வேதமாவாக்கியப்பொருள்
கருதிடாரதுகரமணியிற்காட்டிடுங்
குருவையும்வழிபடார்குதர்க்கமேவலார்.

இ - ள். தருமமதறிவில் - தருமாதருமங்களையறிய அறிவில்லாத, பாடண்டர்தங்களை - பாசண்டிகளை, மருவலால் - சேர்தலால், வேதமாவாக்கியப்பொருள் கருதிடார் - (தினந்தோறும்) வேதாந்த மகாவாக்கியார்த்ததைக் கருதமாட்டார்கள், அது - அவ்வருத்தத்தை, கரமணியில் காட்டிடும் - கரத்தில் மணிபோற்காட்டியருள்கின்ற, குருவையும் வழிபடார் - (அருள்வடிவமான) சற்குருவையும் வழிபடமாட்டார்கள், குதர்க்கமே வலார் - குதர்க்கங்களையேமொழிய வல்லவர்கள். எ - று. (கக)

வேறு.

முன்னநான்மறைகளோதிமுடிந்திடும்பரமமான
சன்னியாசத்தைச்சாரார்சார்ந்தவர்தமக்குந்தீங்கு
பன்னிடாநிற்பர்வேறுபலபலசொல்லியென்னை
மன்னும்வீடெய்தாதானவழிகளேமருவாநிற்பர்.

இ - ள். முன்னம் நான்மறைகளோதி முடிந்திடும் - முன்னமே நான்குவேதங்களாலு முடிவாகச்சொல்லப்பட்ட, பரமமான சன்னியாசத்தைச் சாரார்-பரமஹம்ஸமானசன்னியாசத்தை (மோகமுடையவராகி) அங்கீகரிக்கமாட்டார்கள், சார்ந்தவர்தமக்கும் - அதை அங்கீகரித்த மகான்களுக்கும், தீங்குபன்னிடாநிற்பர் - கொடியவார்த்தைகளைச் சொல்வார்கள், வேறுபலபல சொல்லியென்னை - வேறுபலவற்றைச்சொல்வதினாற் பிரயோசனம்யாது, மன்னும் வீடெய்தாதான வழிகளே மருவாநிற்பர்- நிலைபெற்றமுத்தியடைதற்கு விக்கினமானமார்க்கங்களையே பொருந்திநிற்பார்கள். எ - று.

ப - ம். வேதங்களாற்சொல்லப்பட்டவெந்தக்கன்மங்களையும் ஸ்மிருதிகளாற்சொல்லிய வெந்தக்கன்மங்களையும் தேவகாரியம் பிதிர்காரியம் அவுபாசனம் பஞ்சயெக்கியம் அதிதிபூசை வைசுவதேவம் இவைகளைச்செய்யாத்தன்மையையும், வேதத்திற்குப் புறம்பானமார்க்கத்தால் நாராயணரைப் பூசித்தலையும், துவேஷத்தாற் சங்கரனை நிந்தித்தலையும், பிரமாவாகியவென்னையும் விஷ்ணுவையும் சங்கரரையும் பேதத்தன்மையாகப்பார்த்தலையும், மூவரையும் ஒன்ருக அறியாததன்மையையும், தெக்ஷிணை அப்பியங்கனம் பாதசுத்தி இவையன்றி அனக்கினிகமாய்ச்சிராத்தத்தைச்செய்தலையும், ஏகாதசி

அஷ்டமி சதுர்த்தசி இவைகளிற் சிவப்பிரசாதத்தின் பொருட்டு உபவாசஞ் செய்யாமையையும், சதருத்திரம் சமகம் புருஷசூக்தம் இவைகளால் சிவபெருமானுக்கு அபிடேகஞ்செய்யாமையையும், நெற்றியில் ஊர்த்துவபுண்டரமாயும் வர்த்துளமாயும் அர்த்தசந்திராகாரமாயும் மோகத்தாற்றரித்தலையும், சங்கசக்கரகெதாபத்மங்களால் உடலிலடையாளஞ்செய்தலையும், அவர்களது ஆகாரத்தினாலும் நாமத்தினாலும் லாஞ்சிதர்களாகப்பவித்தலையுங் கூறவேண்டி, "வேறுபலபலசொல்லியென்னை" என்றார். (உ0)

துட்டமாமார்க்கநூலிற்றுவக்கிலாப்பெரியராகிச்
சிட்டராய்த்தீரராகிச்சிவனருளுடையரானார்
கட்டமாம்பிறவிதீரக்காதலால்வேதஞ்சொல்லப்
பட்டதேசெய்யாநிற்பார்பரமமாம்பதத்தையுன்னி.

இ - ள். துட்டமாம் மார்க்கநூலில் - வேதவிரோதமான மதநூல்களில், துவக்கிலாப் பெரியராகி-கட்டுப்படாத பெரியவராகியும், சிட்டராய் - (வேதத்திற்சொல்லியபிரகார முத்திசித்திக்கும்பொருட்டு ஆதரித்த) சிட்டராகியும், தீரராகி - வைராக்கியதீரராயும், சிவனருளுடையரானார் - சிவப்பிரசாதமுடையவராயும் (இருக்கப்பட்டவர்கள்), கட்டமாம் பிறவிதீர- துன்பமாகிய சனனம் நீங்க, காதலால் - ஆசையினால், பரமமாம் பதத்தை உன்னி - உயர்வாகியமோக்ஷதைக்கருதி, வேதஞ்சொல்லப்பட்டதே செய்யாநிற்பர் - வேதத்திற்சொல்லிய பிரகாரமே யாதரிப்பார்கள். எ - று. (உக)

வேறு.

அவத்தமே பிதற்றப்படுங்கலையெல்லாமல்லற்
பவத்தைவேரறுத்திடுவதுபழமறைப்பொருளே
யுவப்பினாலொருகணத்திலப்பொருள்பெறவுரைப்பான்
சிவப்பிரகாசனேயென்றனன்றிசைமுகன்றெளிய.

இ - ள். கலையெல்லாம் -வேதவிரோதமான சர்வசாஸ்திரங்களினாலும், அவத்தமே பிதற்றப்படும் - மித்தையாம் வத்துக்களையே உறுதியென்று சொல்லப்படும், அல்லல் - துன்பமான, பவத்தை வேரறுத்திடுவது - ஜெனனத்தினது வினைகளைவேரறக்கெடுப்பது, பழமறைப்பொருளே - அநாதியானவெதார்த்தமே, உவப்பினால் - களிப்பினால், ஒருகணத்தில் -ஒருக்ஷணத்தில், அப்பொருள்பெற - அந்தப்பொருளையடையும்படி, சிவப்பிரகாசனே - அருள்வடிவமாகியபரமசிவனே, உரைப்பான் - அனுகிரகிப்பான், என்றனன் - என்றுகூறினான், திசைமுகன் - பிரமாவானவன், தெளிய - தேவர்கள் தெளியுபடி. எ - று. (உஉ)

ஐதரேயவுபநிடததாற்பரியமுரைத்த வத்தியாய முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௫0.

உ

சிவாயபரமகுருவேநம:

மூன்றாவது

ஐதரேயவுபநிடதப்பொருளின்சேடமுந்
தைத்திரியவுபநிடததாற்பரியமு
முரைத்தவத்தியாயம்.

---

தற்பரன்றனுருவுஞ்சயம்புவா
முற்பவம்மதுருவையுமுண்மையி
லற்பமுமதிலன்னியமின்மையும்
பொற்பமைந்தநற்பூமகனோதுவான்.

இ-ள். சயம்புவாம் - சுயம்புவான, தற்பரன்றனுருவும் - பரம்சிவத்தின்சொரூபசுபாவத்தையும், உற்பவம்மதுருவையும் - உற்பவிக்கின்ற (பசுக்களின்) சொரூபத்தையும், உண்மையில் - பாரமார்த்திகத்தில், அற்பமும்-கிஞ்சித்தேனும், அதில் - அவ்வத்துவினிடத்தில், அன்னியமின்மையும்- வேறில்லாமையையும், பொற்பமைந்த - அழகுபொருந்திய, நற்பூமகனோதுவான் - நல்லமலரிலுறைகின்ற பிரமாவானவன் சொல்லுவான். எ-று. (க)

அவதாரிகை.

அரனென்பவர் சிலவொன்றபாடல் முதலியவற்றால் வாதிகளின் சங்கையை நிராகரித்துச் சுருதிப்பிரசித்தவான்மாவே சிருட்டாவெனக் கூறப்பட்டான். அவ்வான்மா தான் சிருட்டித்த தேகங்களில் காற்கட்டைவிரல்களின் வழியாற் கிரியாசத்திருபனாகவும் பிரமரந்திரத்தின்வழியால் ஞானசத்திருபனாகவும் பிரவேசித்தானென்றசுருதியால் அவர்களுக்குள் யார்பிரத்தியகான்மாவாக அறியத்தக்கவனெனச் சுருதியிற்கேள்விவர, எதனாற்பார்க்கின்றானோ எதனாற்கேட்கின்றானோ வென்றதுமுதலான உத்தரமாகுஞ்சுருதிகளின்பொருளைச்சொல்லவிச்சைநண்ணி அவ்வான்மாவைச் சிற்பானமாகவே ஒப்பவேண்டும் இல்லாவிடிற்சாக்ஷீயம் விளங்காது அதுஜடமாதலால் சகம் ஜடாஜடமான இருதன்மையுடையதனால் ஜடமானவொருபாகத்தால் மற்றொருபாகம்விளங்கலாமெனில், அதுவுஞ்சாக்ஷியாலேயேகூடல்வேண்டுமெனக் கூறுகின்றார்.

சான்றதேயெவைக்குஞ் சருவவான்மாவாஞ்சங்கரநாமன்சான்றிலதேற்,றோன்றிடாதுலகந் தோன்றிடாவாறுதனக்கெனத்தோற்றமின்மையினாற்,றான்றனக்குலகந்தோற்ற மிலாமைசடத்துவத்தாற்சடமாகை, யேன்றுதானறியாதொன்றினாலறியப்படும்பொருளாகியவியல்பால்.

இ-ள். சருவவான்மாவாம் - எல்லாச்சரீரங்களினுமான்மாவாகவிளங்குகின்ற, சங்கரநாமன் - சங்கரனென்னும் பெயருடையவன், எவைக்கும் சான்றதே - அனைத்துக்குஞ்சாட்சியாவான், சான்றிலதேல் - அந்தச்சாட்சியில்லாவிடில், உலகந்தோன்றிடாது - சகம்விளங்கமாட்டாது, தோன்றிடாவாறு - உலகம்விளங்காததன்மையும், தனக்கெனத்தோற்றமின்மையினாற்று

ன் - தனக்குத்தனதாகவொருவிளங்குதலில்லாமையினுலேயாம், தனக்கு உலகந்தோற்றமிலாமை-அப்படித்தனக்குத்தானே ஜகம்விளங்காததுவும், சடத்துவத்தால் - சடமாந்தன்மையினுல், சடமாகை - சடமாதலும், ஒன்றுதானறியாது - பொருந்தித்தன்னைத்தானறியாமல், ஒன்றினுல் - வேறென்றினுல், அறியப்படும்பொருளாகிய வியல்பால் - உணரப்படும்பொருளாந்தன்மையினுல். எ - று.

ப - ம். ஜகஞ்சடமாதலாற் சகத்திற்குச் சுயம்விளங்குதலில்லையென்பதுகூடாது. எங்ஙனமெனில்,ஜகங்கேவலஞ்சடமாயின் அதுசரி சகம் ஜடாஜடமாகையால் அவற்றுள் ஞானுதாரமான அஜடமாகிய தனதான்மபாகத்தால் சடமாகிய அனுன்மாவானவொருபாகம் விளங்கப்படுகின்றதெனவர, ஜடாஜடமான இரண்டுபாகமுஞ் சாடசிப்பிரகாசத்தினுலேயே விளங்கவேண்டுவதனுல் எது இதரப்பிரகாசத்தினுல் விளங்குகின்றதோ அது ஜடமேயாதலால் சகம் சுயம்பிரகாசமற்ற ஜடமேதானென்பார், "தானறியாதொன்றினுலறியப்படும் பொருளாகிய வியல்பால்" என்றுர். (உ)

அவதாரிகை.

இவ்விடயத்தில் கண்முதலியவற்றில விலீனமான விஞ்ஞானத்தாற் பானமானது தனது விடயவத்துவிற் சனிக்கப்படுகின்றதென்ற பாட்டமதத்தைச் சங்கித்து அப்படிச்சனிக்குகை கடாதிகளுக்கன்றிப் பானத்திற்குக் கூடாதெனவும், மண்ணிலுண்டான கடத்திற்கும் பானத்திற்குஞ் சனிக்குந்தன்மை சமானமாகவிருத்தலால் கடம்போற் பானமும் பிரகாசியாதெனக்கூறுகின்றுர்.

உலகெலாம்விளங்கவுறுமொளியுணர்விலுற்பவமெனச்சிலர்சொல்வ, ரலகில்பேரொளிதான்பிறக்குமேற்சடமா மாதலாற்பிறக்கைகூடாது, கலவருநாசமுள்ளதுசடங்களாங்கடாதிகடனக்கேயா, முலைவிலாவொளிவிஞ்ஞானமுண்டாகவாக்குகையுள்ளவாறன்றே.

இ - ள். உலகெலாம் விளங்கவுறும் ஒளி - ஜகங்களெல்லாம் விளங்கும்படியிராநின்ற பானமானது, உணர்வில் உற்பவம் எனச் சிலர் சொல்வர் - விஞ்ஞானத்தினின்றும் ஜென்னியமென்று சிலர் சொல்வார்கள், அலகில் பேரொளிதான் பிறக்குமேல்-அளவற்ற உயர்ந்த பானமானது ஜென்னியமாகில், சடமாம் - சடமாய்விடும், ஆதலால் பிறக்கை கூடாது - ஆகையாலப்பானத்துக்குச் செனிக்குந்தன்மைகூடாது, கலவரு - அவயவச்சேர்க்கையின்பிரிவாகிய, நாசமுள்ளது - நாசமுடையது, சடங்களாம் - சடங்களாகும், (அது), கடாதிகடனக்கேயாம் - கடாதிகளுக்கேபொருந்தும், (இங்ஙனமாக), விஞ்ஞானம்-விஞ்ஞானமானது, உலைவிலா - சலனமற்ற, ஒளி - பானத்தை, உண்டாகவாக்குகை - உற்பத்தியாகும்படிசெய்வது, உள்ளவாறன்று - உண்மையாகாது. எ - று. பானம்-விளக்கம். (௩)

ஐதரேயவுபநிடதப்பொருளின்சேடமுந்தைத்திரிய
வுபநிடததாற்பரியமுமுரைத்தவத்தியாயம்.

அவதாரிகை.

விஞ்ஞானமானது பானமாகப்பரிணமிக்கின்றதா அல்லது பானத்தை உற்பத்திசெய்கின்றதா பரிணமித்திடில் விகாரப்பட்டுச் சொரூபமில்லாததா மெனக்கூறுகின்றார்.

வேறு.

பானரூபத்தால்ஞானம்பரிணுமத்தையடையாது
ஞானரூபமவிகாரியாதலாலேவிஞ்ஞானந்
தானும்விகாரப்படுமேற்பாறன்னேமுதலாஞ்சடப்பொருள்போ
லானியாகியறிபொருளாமறிவுமறியும்பொருளாமே.

இ - ள். ஞானம் - ஞானமானது, பானரூபத்தால் - பானரூபமாக, பரிணுமத்தையடையாது - பரிணமித்தலைப் பொருந்தாது, ஞானரூபம்-ஞானத்தின்சுபாவம், அவிகாரியாதலாலே - விகாரத்தன்மையில்லாததனால், விஞ்ஞானந்தானும் - அவ்விதவிஞ்ஞானமும், விகாரப்படுமேல் - விகாரப்படுமாயின், பால் தன்னேமுதலாஞ் சடப்பொருள்போல் - பால்முதலாகியசடவத்துக்களைப்போல, ஆனியாகி - தன்சுபாவங்கெட்டு, அறிபொருளாம் - காட்சிப்பொருளாகும், அறிவும் அறியும்பொருளாமே - ஞானமுங்காட்சிப்பொருளாகத்தகுமே. எ - று.

ப - ம். ஞானம் மற்றைப்பொருள்களைப்போற் சுட்டியறியும் பொருளாகாதென்பார், "அறிவுமறியும் பொருளாமே" என்றார். (௬)

அவதாரிகை.

ஆரம்பகமெனில், திரவியமின்மையானுங் குணமாகையானுங்கூடாதெனக்கூறுகின்றார்.

அறிவுபானந்தனக்குத்தானாரம்பகமுமாக்கூடா
தறிவுதானேரறியவுறும் பொருளாயிராதவதனாலு
மறிவைக்குணமாகப்பிறருமங்கீகரித்தவதனாலு
மறிவிங்கசத்தாம்பானத்துக்காரம்பகமுமாகாதே.

இ - ள். பானந்தனக்கு - (அப்படியே) பானத்திற்கு, அறிவு - விஞ்ஞானமானது, தானாரம்பகமுமாக்கூடாது - தானுஞ்சனகமாகத்தகாது, (ஏனெனில்), அறிவுதான்- ஞானந்தான், அறியவுறும் ஓர் பொருளாயிராதவதனாலும்- திரிசியமாயறியத்தக்க ஒருதிரவியவத்துவாயிராமையாலும், அறிவை - அந்தஞானத்தை, குணமாகப் பிறரும் அங்கீகரித்தவதனாலும் - குணவத்துவாகத் தார்க்கிகர்களாலங்கீகரிக்கப்பட்டிருப்பதனாலும், இங்கு - இவ்விடத்தில், அசத்தாம்பானத்திற்கு - அசத்துருவமானபானத்திற்கு, அறிவு - ஞானமானது, ஆரம்பகமுமாகாது - சனகமாகவொண்ணுது. எ - று. (௭)

அவதாரிகை.

ஆரம்பவாதத்தில் அசத்தாகியகாரியமேயுற்பவிக்கின்றதென்று கொள்கின்றார், இல்லாப்பொருளை உண்டாக்குமாயின் வந்திமகனையுமுண்டுபண்ணுமெனவும், காரியம் முன்னசத்தாயினும் சத்தாசம்பந்தஞ் சத்தாதலால் அததியந்தாபாவத்திற்குப் பேதமாகிச் சனிக்கலாமென்னினும், அச்சம்பந்தமுஞ் சத்துக்கே யன்றி அசத்துக்குக் கிடையாதெனவும் பானமெப்போது முள்ளதெனவுங் கூறுகின்றார்.

தொல்லையசத்தாம்பானத்தைத்தோற்றுவிப்பதொருஞான்று
மில்லையில்லாப்பொருளுக்குப்பண்டின்றென்னவியம்பவருஞ்
சொல்லுமில்லையாதலினற்றோற்றப்படுதல்விஞ்ஞானத்
தில்லையெல்லாப்படியாலுமென்றுமுள்ளதிவ்வொளிதான்.

இ - ள். தொல்லை அசத்தாம் பானத்தை - பிராகபாவமாகியபானத்தை, தோற்றுவிப்பது - உண்டுபண்ணுகின்றது, ஒருஞான்றுமில்லை - ஒருநாளுமில்லை, இல்லாப்பொருளுக்கு- இன்மைப்பொருளாகிய (வந்தியாபுத்திரனுக்கு), பண்டின்றென்ன-காரியவுற்பத்திக்கு முன்னுகவிருக்கத்தக்ககருவிவிசேடங்களில்லையென்று, இயம்பவருஞ்சொல்லுமில்லை - சொல்லவரும்வார்த்தையுமில்லை, ஆதலினல் - ஆதலால், எல்லாப்படியாலும் - சருவவிதத்தாலும், தோற்றப்படுதல் - உண்டாகுதல், விஞ்ஞானத்தில்லை - விஞ்ஞானத்தினின்றுமில்லை, இவ்வொளிதான் - இந்தப்பானமே, என்றுமுள்ளது - எப்பொழுதுஞ்சுயமாயுள்ளது. எ - று. (கூ)

அவதாரிகை.

ஞானமுஞ்சனிக்காது ஜனித்திடில் ஜன்னியமெல்லாஞ் சடமாதலால் சொரூபநாசத்தையடைந்திடும். கடஞானத்தின்பிறகு படஞானம்வரக் காணப்படுகின்றதெனில், விருத்தி ஞானம் இவ்விரண்டினையும் பிரித்தறியாமையால் விருத்தினுற்பத்தியைக்கண்டு ஞானத்தினுற்பத்தியாகக் கொள்கின்றது பிராந்தியெனவும், ஞானமும் விளங்காவிடில்அறியாது. ஆதலால்,ஞானமும் பானமுமொன்றுதானெனவுஞ் சத்தெனவுங்கூறுகின்றார்.

வேறு.

ஓதுநெறியாலுணர்வுமுற்பவமுறாதே
பேதமையதேயதுபிறக்குமெனுமாறிங்
கோதிவருபானமதிலுற்பவமுமற்றே
நீதிபிறவாமலுளதாலவொளிநித்தம்.

இ- ள். ஓதும் நெறியால் - முன்சொன்னநியமத்தால், உணர்வும்- ஞானமும், உற்பவமுறாது - செனிக்கமாட்டாது, அது - அந்தஞானம், பிறக்கு

மெனுமாறு - உற்பவிக்குமென்று சொல்லுகின்றவழியும், பேதமைடதே - பி ராந்திதான், இங்கு - இவ்விடத்தில், ஓதிவருபானம் - சொல்லிவருகின்றபான மும், அதில் - அவ்விஞ்ஞானத்தினின்றும், உற்பவமுமற்றே - பிறக்குமென்ப தும் அப்படியேபிராந்திதான், நீதி - மெய்மையாய், பிறவாமல் - சனிக்காமல், உளதால் - இருத்தலால், அவ்வொளிநித்தம் - அந்தப்பானம் நித்தியமாகும். எ - று.

ப - ம். உற்பத்தியில்லாதபிராகபாவத்திற்கு அழிவுகாண்டலாற் பான முமவ்வாறுகுமோவெனில், நித்தியமேயாகுமென்பார், "பிறவாமலுளதால்" என்றூர். (எ)

## அவதாரிகை.

பானம் நித்தியமென நிச்சயித்துப் பானரூபனுகிய பரமசிவன் சாக்ஷி சின்மாத்திரனென்றுபிரதிஞ்ஞைசெய்தபடி அத்தன்மையைச் சகலவுலகப்பிர காசகபானமே சாக்ஷியெனவும், அச்சாக்ஷிபானமாகியசங்கரன் அசங்கனுத லால் அஞ்ஞானமுதலிய ஜகத்துக்குந் தனக்கும் பிரகாசியப்பிரகாசக சம்ப ந்தங்கூடாததனுல் எங்ஙனமவனுல்விளக்கமுறும் அஞ்ஞானமுதலியவையெ னவும்வர, கற்பிதசம்பந்த விடயமாக விளங்குகின்றதெனக்கூறுகின்ருர்.

## வேறு.

நிகிலலோகந்தனைநிகழ்த்துநித்தவொளியேதவ்வொளியே
சகலலோகந்தனக்கென்றுஞ்சான்ருய்நின்றசங்கரன்ருன்
றுகளிலிறையாற்கற்பிதமாஞ்சம்பந்தத்தாற்ருேற்றமுறுந்
தகவிலஞ்ஞானமுமன்றித்தானுத்தோற்றந்தாராதால்.

இ - ள். நிகிலலோகந்தனை - சருவசகங்களையும், நிகழ்த்தும் - விளக்கு கின்ற, நித்தவொளியேது- அழிவில்லாத சுயம்பிரகாசமானவத்துவெதுவோ, அவ்வொளியே - அந்தப்பானமாகியவத்துவே, சகலலோகந்தனக்கு- சருவஜ கத்துக்கும், என்றும் - எக்காலத்தும், சான்ருய்நின்ற - சாக்ஷியாய்விளங் குகின்ற, சங்கரன்ருன்- சங்கரனென்னும்பெயருடையவன், துகளில்-குற்றம ற்ற, இறையால் - (அந்த) சங்கரனுல், கற்பிதமாஞ்சம்பந்தத்தால் - கற்பித மாகியசம்பந்தத்தைப்பற்றி, தகவிலஞ்ஞானமும் - தெளிவில்லாத அஞ்ஞான மென்பதும், தோற்றமுறும்-விளங்குகின்றது, அன்றி- அஃதன்றி,தானுத்தோ ற்றந்தாராது - தானுகவேவிளங்மாட்டாது. எ - று. (அ)

## அவதாரிகை.

சாட்சியால் கற்பிதசம்பந்தமுடைய அஞ்ஞானம் விளங்குவதுபோல, அஞ்ஞானத்திற்ருேன்றிய சத்துவபரிணமமான வந்தக்கரணம் அதன்விருத் திகளான காமாதிகள் பிராணன் புறக்கரணம் உடல் விடயம் என்னும் இ

வைகளும், இவற்றினுபாதானமாகிய அஞ்ஞானத்திற் பிரதிபிம்பித்த சைதன்னியத்தைமுன்னிட்டுச் சித்தோடுங்கூடிய சித்தவிருத்தியால் வியாபிக்கப்பட்டுத் திருக்குருப சாக்ஷி சைதன்னிய சம்பந்தபலத்தாலேயே பிரகாசிக்கின்றனவெனவும், கடபடாதிவிடயஞானமுந் தனதுசம்பந்தமுடைய நேத்திரேந்திரியமுதலிய இந்திரியசம்பந்தமுடைய சித்தோடுங்கூடிய அவ்விடயாகாரமானவந்தக்கரண விருத்திவியாப்தமாகக்கொண்டு பரம்பராசாக்ஷிசம்பந்தபலத்தாலெயே பிரகாசிக்கின்றதெனவுங் கூறுகின்றார்.

வேறு.

தெரிவிலாமையிற்செனித்திடுஞ் சித்தமுஞ்செற்றமார்வமுமெல்லாந், தெரிவிலாமையைத்திகழ்த்திய சேதனச்செறிவினுற்றிகழ்கின்ற, புரிவதாம்பிராணன்றிகழ்வதும்புறக்கரணங்களுடலந்தான், விரிவதாம்விடயங்களெல்லாஞ்சித்தவிருத்திசேருணர்வாலே.

இ - ள். தெரிவிலாமையில் – அஞ்ஞானத்தினின்றும்; செனித்திடும் – உற்பத்தியாகின்ற, சித்தமும் - மனமும், செற்றமார்வமும் – இராகத்துவேஷாதிகளும், எல்லாம் – (இவை) அனைத்தும், (அப்படியே) தெரிவிலாமையை – அஞ்ஞானத்தை, திகழ்த்திய - (ஸ்பரிசித்து) விளங்குவிக்கின்ற, சேதனச்செறிவினுல் – சைதன்னியத்தின் பலத்தினுல், திகழ்கின்ற – விளங்குகின்றன, புரிவதாம் பிராணன் - தொழிற்படுகின்றபிராணனும், புறக்கரணங்கள்- (இந்திரியமுதலான) புறக்கரணங்களும், உடலந்தான் – உடலமும், விரிவதாம் விடயங்கள் - விஸ்தாரமான விடயங்களும், எல்லாம் – இவையனைத்தும், சித்தவிருத்திசேருணர்வாலே– சித்தவிருத்திசம்பந்தத்தை முன்னிட்டஞானத்தினுலேயாம். எ - று. (௯)

அவதாரிகை.

பிரத்தியக்ஷங்களான பொருள்களை விளங்கச்செய்தலால் அவைகளுக்கு வேண்டுமானுல் சாட்சியாகட்டும். பரோக்ஷங்களாகிய பொருள்களை எங்ஙனம் விளங்குவிக்கின்ற சாட்சியாவனெனவர, அனுமானுதிவிருத்திகளிலிருந்து பரோக்ஷவஸ்துக்களையும் விளங்கவேசெய்கின்றனெனக் கூறுகின்றார்.

வேறு.

அன்றியனுமானமுதறன்னிலறியறிவு
நின்றுசிலசில்பொருணிகழ்த்தியிடுமதனு
லென்றுமிறையெப்பொருள்களியாவுநிகழ்விப்பா
னென்றுமவனுலொழியவென்றுநிகழாதால்.

இ - ள். அன்றி - அல்லாமலும், அனுமானமுதறன்னில் - அனுமானுதிகளிலிருந்து, அறி அறிவு-அறிகின்ற சைதன்னியமானது, நின்று சில சில்பொருள்நிகழ்த்தியிடும் அதனுல் - நிலைபெற்றுச் சில சில பொருள்களை விளங்கச்

செய்யும் அதனாலே, என்றும் இறை - எக்காலத்தும் (அவ்விதசைதன்னியரூபமான) சங்கரன், எப்பொருள்களியாவும்-எவ்வகைப்பொருள்களுளவோ அவைகளனைத்தினையும், நிகழ்விப்பான் - விளங்குவிக்கின்றவனுக்க் கூறப்படுகின்றான், அவனலொழிய - அச்சங்கரனலன்றி, ஒன்றும் - யாதொன்றும், என்றும்-எக்காலத்தும், நிகழாது - விளங்கமாட்டாது. எ-று.

ப-ம். தூமங்காணப்படுதலால் பர்வதத்தில் அக்கினியுண்டென்பது பெறப்படும். எதனாலெனில், எங்கெங்கேதூமங்காணப்படுகின்றதோ அங்கங்கே அக்கினியுங்காணப்படுகின்றதனாலென்ற கூடியிருக்கும் நியமமென்னும் வியாப்தியால், அவ்வித வியாப்தியென்னு மேதுவாலுண்டாகிய ததாகாரவிருத்தியில் முன்சொன்னபிரகாரம் உள்ளபடி வியாபித்து விளங்கிய சைதன்னியர் தனக்காசிரயமான வந்தக்கரணவிருத்தியை யுண்டுபண்ணுகின்ற தூமமுடையதென்றது முதலான ஹேதுக்களுக்கு வியாபகங்களான அக்கினியுடையதென்றது முதலான சிலபொருள்களைப் பரம்பரா சம்பந்தத்தால் விளங்குவிக்கின்றதென்பார், "அனுமான முதறன்னில்" எனவும், அபரோக்ஷஞான விடயங்களிலே அதிட்டானஸ்புரணமுண்டாதலால் விருத்திவியாப்பியத்தன்மையிருப்பதுபோல் பலவியாப்பியத்தன்மை யெப்படியிருக்கின்றதோ அப்படி அனுமானமுதலிய பரோக்ஷஞான விடயங்களில் பலவியாப்பியத்தன்மையில்லையென்பார், "அறியறிவுமின்று" எனவுங்கூறினர். பலம்-இந்திரியம். (௬0)

அவதாரிகை.

ஜீவரூபனாகவனுப்பிரவேசித்திருக்கின்ற பரமசிவன் சாட்சிசின்மாத்திரனென்று சித்தாந்திக்கப்பட்டது. அப்படியே சுருதியிலிருவர்களுக்குள்யார் ஆன்மாவென்ற கேள்விக்கும் சருவசாட்சியான சித்ரூபனே ஆன்மா பிராணனன்றென உத்தரமுங்கூறப்பட்டது. முந்தியசுவிகளால் இந்தப்பொருளையே எவனாற்பார்க்கின்றானோ எவனாற்கேட்கின்றானோ எவனாற்கந்தத்தை ஆக்கிராணிக்கினறானோ எவனால்வாக்கினைப் பேசுகின்றானோ எவனாலருசி அருசிகளை அறிகின்றானோ அவனென்று உத்தரமாகச் சொல்கின்ற சுருதியின் பொருளைக் கூறுகின்றார்.

வேறு.

ஆதலாலுருவங் காண்பதுமொலிதா னழகுறக்கேட்பதுமொருவன், காதலாற்கந்தங்கொள்வதுமினிதின் றதெனவிரதங்காண்பதுவு, மோதலாம்பரிசமுணர்வதுமிறையாலுணாத்தசங்கரனெனுமுணர்வை, மேதையான்மிருத்தோர்வேறுவேறாக விளம்புவாரதுவிளம்பிடுவாம்.

இ-ள். ஆதலால் - ஆகையால், ஒருவன் - ஒருவன், உருவம் - நீலாதிரூபங்களை, காண்பதும் - பார்க்கின்றதும், ஒலிதான் - சத்தங்களை, அழகுற

க்கேட்பதும்-அழகாகக்கேட்பதும், காதலால் - பிரியத்தால், கந்தம் - கந்தங்களை, கொள்வதும்-ஆக்கிராணஞ்செய்கின்றதும், இனிது இன்னது என- ருசி அருசியென்று, இரதங்காண்பதுவும்-இரதத்தை அறிகின்றதும், ஓதலாம்-சொல்லப்பட்ட, பரிசம்- ஸ்பரிசத்தை, உணர்வதும் - அறிகின்றதும், இறையால்-சருவான்மாவாகிய சங்கரனாலேதான், உரைத்த - இப்படிச்சொல்லப்பட்ட, சங்கரனெனுமுணர்வை-சங்கரனென்னும்பெயருடைய விஞ்ஞானத்தை, மேதையான் மிகுத்தோர் - புத்தியால்விசேடம்பொருந்திய வித்துவான்கள், வேறு வேறாக-வெவ்வேறாக, விளம்புவார்-சொல்லுவார்கள், அது-அதனை, விளம்பிவோம்-சொல்லுவாம். எ-று.

ப-ம். பலமென்னும் விடயாகாரபரிணாமமுடைய கண்ணின் சம்பந்தத்தாலுண்டுபண்ணப்பட்ட மனோவிருத்தியி லபிவியத்தியுடைய சருவப்பிரகாசனாயும், சருவ இருதயமத்தியங்களிலுமுள்ளவனாயு முள்ள சிவனென்னுஞ் சிற்பிரகாசத்தினாலேயே ரூபங்களை ஜனங்களறிகின்றார்களென்பார், "உருவங் காண்பதும்" எனக்கூறினார். இப்படியே மற்றனைத்திற்குங்கொள்க. (௧௧)

அவதாரிகை.

கண் செவி முதலியபேதங்களான கரணத்தாலுண்டாகிய ரூபாதிஞானங்களிலிடைவிடாமலிருக்கின்ற சிற்பிரகாசமெதுவோ அதுவேயாம் ஆன்மாவெனக்கூறப்பட்டது. ஆயினும், இவனல்லவாதிருஷ்டா இவனல்லவா சுரோதாவென்றது முதலான சுருதியால் எவன் இடைவிடாத சிற்பிரகாசனாகக்கூறப்பட்டானோ அவனே உபலப்தாவாகக் காணப்படுகின்றான், அவனைப் பார்க்கின்றானென்று கருத்தாவாகச்சொல்லியிருக்க இறையாலென்ற மூன்றாம்வேற்றுமை எங்ஙனங்கூடுமெனவர, அஃது தோஷமல்ல அந்தக்கரணமதன்விருத்தி இவைகளாற் கற்பிக்கப்பட்ட பேதத்தை அநுசரித்து உபசாரமாகக் காணத்தன்மை கூடலாம். இங்ஙனமே கடவல்லியினுங் கூறப்பட்டிருக்கின்றது. எதனால் ரூபம் இரதம் கந்தம் சத்தம் பரிசம் மைதுனமிவைகளை யறிகின்றான் இதிலெது சேஷிக்கின்றதோ அதுவேதானல்லவா எனவும், கவுஷீதகீசுருதியில் பிரஞ்ஞையால் வாக்கையடைந்து வாக்கால்சருவநாமங்களையுமடைகின்றான் பிரஞ்ஞையால் நேத்திரத்தையடைந்து சருவரூபங்களையடைகின்றானெனவும், பிரஞ்ஞையென்னும் நாமமுடைய வோரந்தக்கரணமே வாய் கண் முதலானநானாவிதகரணபாவத்தை அடைந்திருப்பதனால் யாதொன்று பிராணனோ அதுவே பிரஞ்ஞை யாதொன்று பிரஞ்ஞையோ அதுவேபிராணனென அவைகளுக்கேகத்துவங்கூறிய சுருதிப்படி அந்தக்கரணமுபலப்திகரணமானதுகொண்டு அப்பிரதானமாதலாற் பிராணனை அனுன்மாவெனக் கூறவேண்டி எதனாற்பார்க்கின்றானோவென்றது முதலானவிடங்களில் ஸ்ரீபாஷ்யகாரர்கள் மூன்றாம்வேற்றுமையாய் முடிந்தபதத்தைக் கண்முதலியபேதமுடைய வந்தக்கரண விடயமாக உரைசெய்து சுருதியில் இந்த இருதயம் மனம் என்றபதங்களால் நிச்சயரூபமாகவுஞ் சங்கற்ப விகற்பரூபமாகவுமுள்ள வந்தக்கரண

மானது சகல இந்திரியசாதாரணமாகப் பிரதிபாதிக்கப்படுகின்றதெனக் கண் முதலியவற்றுளுண்டான மனோவிருத்திலக்ஷணமான வுபாதிப்பிரதானமாக விவேகித்து, இந்தவோரந்தக்கரணமே கண்ணாகப்பவித்து ரூபத்தைப்பார்க்கின்றது. சுரோத்திரமாகப்பவித்துக் கேட்கின்றது. கிராணமாகப்பவித்து ஆக்கிராணிக்கின்றது. வாக்காகப்பவித்து வசனிக்கின்றது. நாவாகப்பவித்து ரஸிக்கின்றது. தானே கற்பனாரூப மனமாகக்கொண்டு சங்கற்பிக்கின்றது. இதயரூபமாகப் பவித்து அத்தியவசாயஞ்செய்கின்றது. ஆதலால், எல்லாவிடயவியாபகமாயுள்ளது இவ்வந்தக்கரணமொன்றே யென்றுரைத்தனர். இந்தவிடயத்திலிதயம் மனம் என்ற இரண்டுபெயர்களுஞ் சம்ஞானமுதலிய சத்தங்கள்போல நாமங்களாகச் சுருதியிலிருக்கின்றன. எவ்வாறெனில், இதயம் மனம் சம்ஞானம் ஆஞ்ஞானம் விஞ்ஞானம் பிரஞ்ஞானம் மேதை திருட்டி மதி திருதி மநீஷை ஸ்மிருதி ஸ்மிருதி சங்கற்பம் கிருது அசு காமம் வசம் என்ற சருவநாமங்களும் பிரஞ்ஞானத்தின் நாமங்களாகப் பவிக்கின்றதுகளென அவ்வப்படி விவகரிக்கின்ற அந்தவந்தப்புருடர்களின் சம்பந்தத்தால் அந்த அந்தநாமங்களைக் கூறுகின்றார்.

சிலவர்தாமிதயமென்பர்கண்மனமேயென்பர்கள் சிலவர்தாஞ்சிலர்கள், நலமதாஞானமென்பர்களெல்லாநாடிடுஞானமென்பர்களா,
மிலகுவிஞ்ஞானமென்பர்கண்மிகுத்தேயிலங்கிய ஞானமென்பர்களாஞ், சொலவருமேதையென்பர்கள்வேறுசொல்லிடும் பரிசையுங்கேண்மோ.

இ - ள். சிலவர் தாம் - சிலர்கள், (அவ்விஞ்ஞானத்தை) இதயமென்பர்கள் - இருதயமென்பார்கள், சிலவர்தாம் - சிலர்கள், மனமேயென்பர்கள்- மனமென்று சொல்லுவார்கள், சிலர்கள் - சிலர்கள், நலமதாம் - நன்மையாகிய, ஞானமென்பர்கள் - சம்ஞானமென்பார்கள், எல்லாம் - அனைத்தையும், நாடிடு - நாடப்பட்ட, ஞானமென்பர்கள்- ஆஞ்ஞானமென்பார்கள், இலகு - பிரகாசிக்கின்ற, விஞ்ஞானமென்பர்கள் - விஞ்ஞானமென்பார்கள், மிகுத்தே - மிகுதியாய், இலங்கிய - பிரகாசிக்கின்ற, ஞானமென்பர்கள் - பிரஞ்ஞானமென்பார்கள், சொலவரும் - சொல்லப்படாநின்ற, மேதையென்பர்கள் - மேதையென்பார்கள், வேறு - மற்றும், சொல்லிடும் - பகர்ந்திடும், பரிசையும் - விதத்தையும், கேண்மோ - கேளுங்கள். எ - று. (௧௨)

இதுவுமது.

யாதையுங்காணுங்கண்ணென மொழிவரொழின் மிகுதிருதியாமென்பார், ஸ்மிருதியதென்பார்ஸ்மிருதி யென்றுரைப்பார் சொல்லுஞ்சங்கற்பமென்றுரைப்பார், நீதியாங்கிருதுவாமமேயென்பார் நிகழ்வுறுவசமெனவுரைப்ப, ரோதியவிந்தநாமதேயங்களுணர்வதாஞ்சிவனது பெயரே.

இ-ள். யாதையும்-சகலத்தையும், காணும் - பார்க்கின்ற, கண்ணென-திருஷ்டியென்று, மொழிவர்-சொல்லுவார்கள், எழில்மிகு-அழகுமிகுந்த, திருதியாமென்பார் - திருதியென்பார்கள், சூதியதென்பார் - சூதியென்பார்கள், மிருதயென்றுரைப்பார் -மிருதியென்று சொல்லுவார்கள், சொல்லும்-சொல்லப்பட்ட, சங்கற்பமென்றுரைப்பார் - சங்கற்பமென்றுசொல்லுவார்கள், நீதியாங்கிருது - நீதியாகியகிருதுவென்பார்கள், காமமேயென்பார் - காமந்தானெனபார்கள், நிகழ்வுறு-விளங்குகின்ற, வசமெனவுரைப்பர் - வசமென்று சொல்லுவார்கள், ஓதிய இந்தநாமதேயங்கள்- சொல்லப்பட்ட விந்தநாமங்களெல்லாம், உணர்வதாம் - பிரஞ்ஞானரூபனுகிய, சிவனதுபெயரே - சிவனுடையநாமங்களாகும். எ - று.

ப - ம். அகங்காரமுதலியவனைத்தையும் விருத்தியினேகதேசத்தா லடக்கித்தோற்றுவிக்கின்ற உள்ளத்திற் பிரதிவிம்பித்துவிளங்கிய அறிவை "இதயம்" எனவும், கற்பனுவிருத்தியாற்ருேற்றிய நாமரூபமாகிய கற்பிதவிருத்தியிற் பிரதிவிம்பித்த சைதன்னியத்தை "மனம்" எனவும், எந்தவிருத்தியின் சம்பந்தத்தால் இவன் சேதனனெனப்படுவானே அந்தவிருத்தியிற் பிரதிவிம்பித்த சைதன்னியத்தை சம்ஞானமெனவும், அஞ்ஞானவிருத்தியிற் பிரதிவிம்பித்து விளங்கிய சைதன்னியத்தை ஆஞ்ஞானமெனவும், லௌகிகருக்குமவத்துவிடயமானவிருத்தியிற் பிரதிவிம்பித்த சைதன்னியத்தை "விஞ்ஞானம்" எனவும், திரிகாலத்தை அறியாநின்றவிருத்தியிற் பிரதிவிம்பித்த சைதன்னியத்தை, பிரஞ்ஞானமெனவும், சாஸ்திரதாரணுசாமர்த்தியமுடைய விருத்தியிற்பிரதிவிம்பித்த சைதன்னியத்தை "மேதை" எனவும், கண்வழியாக் கடபடாதியாகாரமாய்ப் பரிணமித்தவிருத்தியிற் பிரதிவிம்பித்த சைதன்னியத்தைக் "கண்" எனவும், தேகேந்திரியாதிதாரணுசாமர்த்தியமான விருத்தியிற்பிரதிவிம்பித்த சைதன்னியத்தை "திருதி" எனவும், பிணிமுதலியவற்ருல் நான்றுக்கியென்ற பாவனுவிருத்தியிற் பிரதிவிம்பித்த அறிவை "சூதி" எனவும், ஒருபொருள்களினனுபவவிருத்தி மறந்திருக்கினும் அதைவெளிப்படுத்தக் காரணமாய்நின்ற விருத்தியிற் பிரதிவிம்பித்த சைதன்னியத்தை "மிருதி" எனவும், பொருள்களினனுபவத்தை யிட்டநாமரூபங்களைக் கற்பிக்கவல்லமையாய்நின்ற கற்பனுவிருத்தியிற் பிரதிவிம்பித்த சைதன்னியத்தை "சங்கற்பம்" எனவும், இப்பொருளிவ்வாறேயென்ற அத்தியவஸாயவிருத்தியிற் பிரதிவிம்பித்த சைதன்னியத்தை "கிருது" எனவும், தூரத்திலிருக்கின்ற விடய இச்சாவிருத்தியிற் பிரதிவிம்பித்த சைதன்னியத்தை "காமம்" எனவும், சமீபித்திருக்கின்ற மாலை சந்தனமுதலிய விடயவிச்சாவிருத்தியிற் பிரதிவிம்பித்த சைதன்னியத்தை "வசம்" எனவுங்கூறினர். மேல்வருபவைகளை விடயீகரிக்கும் விருத்தியை மதியெனவும், மனத்தின்வழிச்செல்லாதவிருத்தியை மனிடையெனவும் வடநூலிற்கூறப்பட்டிருக்கின்றது. அவ்வடநூலார் சுருதியிற்சொல்லிய அசு என்னுநாமத்தைக் கூருதொழிந்த தென்னையெனின்?

அந்நாமமானது பிராணவாசகமாகப்பிரசித்தமா யிருத்தலாலும், அந்தவுபா தியையுடைய பிரமமும் பிரசித்தமாகையாலும் என்றறிக. (௧௩)

அவதாரிகை.

இதுகாறும் அந்தக்கரணம் அதன்விருத்தி இவைகளினுபகிதமாயும் சத் தாதி சகலவத்துக்களையும் விளங்கச்செய்கின்றதாயுமுள்ள நித்தியசுயம்பிர காச சாக்ஷிசைதன்னியமே ஆன்மாவெனப்பிரதிபாதிக்கப்பட்டது. இனிப் பி ரமன்முதல் தம்பம்வரை தாவரசங்கமரூபமாயுள்ள செகத்தில் எங்குஞ் சீவ ரூபனாகவும் உபாதானரூபனாகவுமிருக்கின்றானென்ற அபிப்பிராயத்தால் அவ னைப்பற்றிய பரிச்சேதப்பிராந்தியை நீக்குதற்க்காகச் சுருதியிற்சொன்ன ஸ ருவான்ம சொரூபத்தைக் கூறுகின்றார்.

வேறு.

பிரமனிவனேயிந்திரனும் பிரசாபதியுமிவனிவனே
யுரமதுடையவும்பர்கள்பூதங்களுலகங்களுமெல்லா
முரைசெய்திடுமண்டசமுதலாமியோனிபேதங்களுமிவனே
குரகதங்கோமானிடமுங்குஞ்சராதிகளுமிவனே.

இ-ள். பிரமன்-இரணியகருப்பனும், இவனே-இந்தச்சிவசைதன்னிய மே, இந்திரனும்-மகவானும், பிரசாபதியும் - விராட்டும், இவன்-இச்சிவசைத ன்னியமே, உரமதுடைய-வலியுடைய, உம்பர்கள் - தேவர்களும், பூதங்கள்- பூதங்களும், உலகங்களும் - புவனங்களும், எல்லாம் - அனைத்தும், இவனே- இந்தப்பரமசிவனே, உரைசெய்திடும் - சொல்லாநின்ற, அண்டசமுதலாம்- அண்டச சராயுச சுவேதச உற்பிசமுதலாகிய, யோனிபேதங்களும் - பலவ கையோனிகளும், இவனே - இச்சிவசைதன்னியமே, குரகதம்-குதிரைகளும், கோ-பசுக்களும், மானிடமும் - மானிடர்களும், குஞ்சராதிகளும் - யானை முதலானவைகளும், இவனே-இந்தச்சிவசைதன்னியமேதான். எ-று.

ப-ம். முற்கூறியசாட்சியான சித்ரூபவான்மாவை "இவனே" எனவு ம், அபஞ்சீகிருதபஞ்சமகாபூதத்தும் அதன்காரியமான லிங்கசரீரசமஷ் டியினும் உபகிதசைதன்னியமாமிரணியகற்பனை "பிரமன்" எனவும், மேலா ன ஐசுவரியயோகமுடையவனையும் இது கடமென்றுகாண்டல்போல அச் சாட்சிசொரூபமுடையதானுகிய பிரமத்தை யெவன் அபரோக்ஷீகரிக்கின்றா னோ அவனையும் தேவர்களுக்கிறைவனையும் "இந்திரன்" எனவும், பஞ்சீகிரு ததூலபூதத்தாலுண்டாகிய பிரமாண்டத்துள்ளிருக்கின்றமுந்திய சரீரியான விராட்டை, "பிரசாபதி" எனவுங்கூறினர். (௧௪)

அவதாரிகை.

ஸருவசாக்ஷிபூதமாயிருக்கின்ற பிரஞ்ஞை ஆதேயப்பிரதானமாகக்கூறப் பட்டதுகொண்டு அப்பிரதானமாதலால் சுருதி எல்லாம் பிரஞ்ஞானத்தில்

வைக்கப்பட்டிருக்கின்றதென அந்தப்பிரஞ்ஞையை ஆதாரமாகக்கூறி அத னுமுக்கிய விருத்தியாலாதாரமாகவே யறியத்தக்கதென்று தெரிவித்தற்பொ ருட்டு சிவருத்திராதிநாமங்களையுடைய பிரமமே பிரஞ்ஞானமென்று ஆதார ப்பிரதானமாகக் கூறுகின்முர்.

ஏனைமற்றுமியம்பாதவியங்கிற்கப்படுவதெல்லா
ஞானகனமாமிறையவனேநலமாஞ்சிவனுமரனுமுத
லானநாமங்களையுடையபிரமமறிவுமெய்ப்பரம
னீனமில்லாவறிவுருவேயெல்லாப்பொருட்கும்பதிட்டையதாம்.

இ-ள். ஏனை - ஒழிந்த, மற்றும் - இன்னமும், இயம்பாத - சொல் லாத, இயங்கிற்கப்படுவதெல்லாம் - சராசரமாகிய வனைத்தும், ஞானகன மாமிறையவனே - பிரஞ்ஞானகனமான இச்சிவனேதான், நலமாம் - நன் மையான, சிவனும் - சிவனும், அரனும் - உருத்திரனும், முதலான - முதலா கிய, நாமங்களையுடைய - பெயர்களையுடைய, பிரமம்- பிரமமே, அறிவு - பிர ஞ்ஞானமாங்கூடத்தன், மெய்ப்பரமன் - சத்தியசைதன்னியமாகிய வீசனு டைய, ஈனமில்லா - கெடுதலில்லாத, அறிவுருவே - பிரஞ்ஞாசொருபமே, எல்லாப்பொருட்கும் - எல்லாவத்துக்களுக்கும், பதிட்டையதாம்-பிரதிட்டை யாகும். எ-று.

ப-ம். செகமனைத்தும் பிரஞ்ஞையை நேத்திரமாகவுடையதென்ற சு ருதிவாக்கியத்தின் பொருள் பிரஞ்ஞானபிரமருபமாஞ் சருவசாட்சியாகிய அதிஷடானத்திற் சகமனைத்துங் கற்பிதமாதலாலும், அவ்வதிஷ்டானமாந்தி ருக்கினுலேயே விளங்குதலாலும், உண்மையாகச் சொருபத்திற்கு வேருகவி ல்லாமையாலும், நிரந்தரப் பிரஞ்ஞானலக்ஷணனை பரமசிவனேதான் அவ னுக்கு வேருகவில்லையென்பார் "எல்லாஞானகனமாமிறையவனே" எனவும் அஞ்ஞானகற்பிதமான சகத்தைப் படைத்தளித்தழித்தற்கு அதிகரணமாத லால் சிவமே ஜகமனைத்திற்கும் ஆசிரயமென்பார் "எல்லாப்பொருட்கும் பதிட்டையாம்" எனவும், தடத்த இலக்கணத்தால் எதினின்றுஞ் செக முண்டாயிருந்து லயிக்கின்றதோ எது சாதகர்களினிருதயத்திற் சகலகற்பனு தீத சாக்ஷிசித்தாய் விளங்கப்படுகின்றதோ அவ்வத்துவே சிவ உருத்திராதிச ம்ஞையுடைய உலககாரணப்பிரமமாம். எது பிரமவத்துவோ அதுவே சி ருட்டிக்குமுன் இச்செகமனைத்தும் ஆன்மாவொருவன்மாத்திரமாகவே யிரு ந்ததென்று ஆன்மசப்தத்தாற் சுருதியில் நிருபிக்கப்பட்டிருப்பதுகொண்டு, சோயந்தேவதத்தனென்பதுபோல் சுயம்பிரகாசமான அவத்தாத்திரய சா ட்சியாகிய பிரஞ்ஞானத்திற்கும், சகத்திற்குக் காரணமான சிவமென்னும் பிரமத்திற்கும், பிரஞ்ஞானம் பிரமமென்னும் பதங்களால் ஸாமானுதிகரணி யமன்றி ஐக்கியங்கூடாததனுல் சமுசாரசாட்சித்துவ ஜககருத்திருத்துவாதி சகலதருமங்களையுந்தள்ளி யிரண்டிடத்தும் இடைவிடாத சிதேகரசமாயுள்ள

நிர்விசேடத்தன்மையே பிரத்தியக்குப்பிரமங்களுக்கு உண்மையான சொரூப ஐக்கியமென்பார் "பிரமமறிவு" எனவுங்கூறினர். (௧௫)

அவதாரிகை.

அஞ்ஞானகற்பிதமான பேதமயக்கத்தை நிராகரிக்கவேண்டி அவன் இந்தப்பிரஞ்ஞானமானவான்மாவினு லிவ்வுலகத்தினின்று உத்கிரமித்தென்ற சுருதிமுதலியவற்றல் யாதொரு பிரமான்மவிஞ்ஞானம் மோக்ஷசாதனமெனக் கூறப்பட்டதோ, அதனையும் சுருதியிற் கன்மத்தால் பிரஜையால் தனத்தினுல் மோக்ஷமில்லையென்றபடி கன்மம் மோக்ஷசாதனமில்லையென்பதையுங்கூறுகின்ருர்.

வேறு.

மையலொன்றறவிவ்வறிவினையறியின்மானுடன்முத்தனுமன்றித், துய்யகன்மத்தான்மைந்தரான் மற்ருேர்பொருளினு லுற்பவந்துடையான், வையகம்பிரமவேதனந்தன்னின்மாத்திரத்தாற்பிரமந்தா, னையமொன்றறவேயாமெனமுக்காலாணையிட்டறைந்தனனலரோன்.

இ - ள். மையலொன்றற - மயக்கமொன்றுமில்லாமல், இவ்வறிவினை-இப்பிரகாசமானஞானத்தை, அறியில் - அறிந்தால், மானுடன்-மனிதனுவன், முத்தனும் - அமிர்தனுவான், அன்றி - இதுவல்லாமல், துய்ய - பரிசுத்தமுடைய, கன்மத்தால் - கருமத்தினுலும், மைந்தரால் - சற்புத்திரராலும், மற்ருேர்பொருளினுல் - மற்றையாதொரு திரவியத்தினுலும், உற்பவந்துடையான் - பிறவியை நீக்கமாட்டான், வையகம் - உலகத்தோர், பிரமவேதனந்தன்னின்மாத்திரத்தால் - பிரமஞானமாத்திரத்தினுலேயே, ஐயம் ஒன்று அறவே பிரமந்தான் ஆமென - சந்தேகமொன்றுமில்லாமற் பிரமமாவாரென்று, முக்கால்-மூன்றுதரம், ஆணையிட்டு -சபதஞ்செய்து, அலரோன்- பிரமாவானவன், அறைந்தனன் - சொன்னுன். எ - று.

ப - ம். அஞ்ஞானகற்பிதபேதத்தை நீக்குதற்பொருட்டு, அவ்வித ஐக்கியஞானம் வேண்டுவதனுல் அதுவே ஜீவனுக்கு மோக்ஷத்தைக்கொடுப்பதனுல் அதனை "மையலொன்றற விவ்வறிவினையறியின்மானுடன் முத்தனும்" எனவும், தீபத்தாலன்றி யிருளை இருப்புலக்கை முதலியவற்ருலெவர்களாலும் நீக்கத்தகாததுபோல் சொரூபயதார்த்தத்தைத் திரோதானஞ்செய்யக் காரணமான அஞ்ஞானம் இஞ்ஞானததினுலேயே நிவிர்த்தியடையவேண்டியதனுல் அவ்விதஞானமே பிரத்தியக்குப்பிரமைக்கிய விலக்கணமுடையமுத்திக்குச் சாதனம். மற்றஜடங்களான கன்மமுதலியவெவைகளுஞ் சாதனங்களாகாதென்பார், "துய்யகன்மத்தால் மைந்தரால் மற்ருேர்பொருளினுலுற்பவந்துடையான்" எனவும், கேவலங்கருமமாத்திரததால் முத்தி சித்தியாவிடினும் ஞானங் கன்மம் இரண்டுங் கூடியே சித்திக்கவேண்டும். கேவலஞானத்தால்

அது கூடாதென ஞான கன்மசமுச்சயவாதிவர,இருளும் பிரகாசமும் போல் இரண்டும் ஒன்றுகூடியிருக்கத்தகாததனுலும், கேவலஞானத்தினுலேயே முத்திசித்தித்தலாலும், ஞானத்தோடு கன்மமும் கூடி முத்தி சித்திக்கவேண்டுமென்பதிற் பயனில்லாமையானும், ஞானகன்மசமுச்சயவாதம் பிரயோசனமில்லையென்பார், "பிரமவேதனந்தன்னின்மாத்திரத்தால்" எனவுங்கூறினுர். (கசு)

அவதாரிகை.

ஐதரேயவுபநிடதத்தின் பரியாலோசனையாற் கன்மத்தினுதவியின்றிப்பிரமான்மைக்கியசாக்ஷாத்காரமே முத்திசாதனமெனக்கூறி, தைத்திரியவுபநிடதத்தின் பரியாலோசனையாலும், அப்பொருளைச் சொல்லத்தொடங்குகின்ருர்.

அந்தவிச்சைக்குவிடயமாஞ்சச்சிதானந்தமாம்பிரமத்தைப்
பந்தமாங் * குகையின்மாயையஞ்ஞானமென்பதிற்பரவியோமத்தில்
† அந்தவங்கத்துப்பிரமரூபமதாவறிந்தவனவனெருக்காலே
சிந்தைசெய்காமமியாவைவும்பெற்றுத்தீரவேசீவன்முத்தனுமாம்.

இ-ள். அந்த விச்சைக்கு விடயமாம் - அந்தஞானமொன்றிற்கே விடயமாகிய, சச்சிதானந்தமாம் பிரமத்தை - சச்சிதானந்தமானபிரமசொரூபத்தை, மாயை அஞ்ஞான மென்பதிற் பரவியோமத்தில் - மாயை அஞ்ஞானம் பரமாகாசம் என்னும் பெயர்களையுடைய, பந்தமாங் குகையில் - சமுசாரமாகிய குகையினிடத்திருக்கின்ற, அந்த அங்கத்துப் பிரமரூபமதா - முன்சொன்ன விலக்கணமுடைய பிரத்தியக்குச் சொருபமாக, அறிந்தவன் அவன் - எவனறிகின்ருனே அவனே, ஒருக்காலே - ஏககாலத்திலேயே, சிந்தைசெய் காமம் யாவையும்பெற்று - கருதியகாமமனைத்தையுமடைந்து, தீரவே- உண்மையாகவே, சீவன்முத்தனுமாம்-சீவன்முத்தனுகவும் பவிப்பான். எ-று.

ப-ம். சருவசாக்ஷியாகிய பிரஞ்ஞையே பிரமம். அதுவே மோக்ஷசாதனமான பரஞானத்திற்கு விடயமென்று காணப்படுதலால், அந்தப்பிரமத்தைச் சத்தியஞானுதி யிலக்கணமுடையதாகச் சொல்வதில் பிருஹி விருத்தியில் வருமென்ற தாதுவின் அருத்தப்படி, பிரதியோகி விசேடமாகிய விரண்டாவது வரக் காரணமில்லாததனல், வேற்றுப்பொருளாற் பரிச்சேதமில்லாததுபற்றி, இலக்கணையால் நிரதிசயமாகக்கூறப்படுதலால், அந்தப்பிரமம் தேசகால வத்து பரிச்சேத மில்லாததாகும். விவகாரத்திற் காலாதிகள் காணப்படுதலாற் பிரமம் பரிச்சேதமாகாதோவெனில், அவைகள் கற்பிதங்களாத

* வடமொழியின்படி குகையை விசேடியமாகவும், மாயையஞ்ஞானமென்பதிற் பரவியோமத்தில் என்றதை விசேஷணமாகவுங் கொள்க.

† அந்தவங்கத்துப்பிரமரூபத்தையென்றுபாடமோதுவாருமுண்டு.

லாற் கற்பிதங்களெல்லாம் தனததிஷ்டானசத்தையால் விளங்கியும் பாதிக்க ப்பட்டும் பாதிக்கப்படாத அதிஷ்டானத்திற்கு வேறின்மையால் மூன்றுபரிச் சேதமுமில்லாததென்பார், "பிரமம்" எனவும், ஆரோபசற்பாதிகளுக்கு ஆதா ரமாகிய பழுதைமுதலியவைகள் அதிஷ்டானப்பொருளாகக் காணப்படினும் உண்மையாக அனித்தியங்களேயன்றி அதிஷ்டானமாகாது. திரிசியமெல்லா மனித்தியமாதலாலும் உபாதானகாரணமாகிய மண்ணைமுன்னிட்டே கடம்வி ளங்குவதுபோல் சகமனைத்துமிருக்கின்றதென்று இருக்குந்தன்மையைமுன் னிட்டே சித்தித்தலாலும், அழியாததே இருக்கின்றதனாலும், ஆரோபிதமான சற்பம் இருக்கின்றதென்ற இருக்குகை இரச்சுவினிருக்குகையேபோல,ஆரோ பிதவதிஷ்டேயமானசகலஜகத்தினிருக்குகையும் பிரமத்தினிருக்குகையாதலா லும்,பிரமமே ஏகமாகிய அதிஷ்டானம். அதுவேஅழியாததென்பார், "சத்து" எனவும், அதுவேவிளங்காவிடில் சூனியமாய்விடும், ஆதலால் அதுசுயம்பிர காசமென்பார், "சித்து" எனவும், அதுவும்சுகசொரூபமாகாவிடில் சுகவிச்சை யுடைய ஜகமனைத்தும் தானுகக்கொள்ள உபகாரப்படாதென்பார், "ஆனந்த ம்" எனவும்,ஜீவர்களுக்கு எப்போதும் ஜனனமரணங்களான போக்குவரவுக ளைச்செய்கின்ற சமுசாரத்தை, "பந்தம்" எனவும், காரியப்பொருள்களனைத்து ம் முக்காலங்களினுங்கிடையாதனவாயும் கிடைக்கப்படுவனவாயும் கிடைத்தி ருக்கின்றனவாயும் இதிலிருத்தலால், இந்தஅவ்வியாகிருதத்தை இவ்விதமான பொருளுடையதெனத் தெரியவேண்டி, "குகை" எனவும், விசித்திரமாகச்செ ய்யமுடியாத காரியங்களைச் செய்தலாலும், சுயம்பிரகாச நிஷ்பிரபஞ்ச பி ரமசொரூபஞானத்தால் நீக்கப்படுதலாலும், "மாயை யஞ்ஞானம்" எனவும், அந்த அவ்வியாகிருதமே ஆகாயாதிகளையபேக்ஷித்துப் பரமென்பதையும், வி யோம சமுக்கினையுடையதென்பதையும் தெரிவிப்பார், "பரவியோமம்" என வும், பிரமம் சருவவியாபகமாயிருந்திடினும் பஞ்சகோசமாய்ப் பரிணமித்து விளங்கிய முக்குணரூபமான அவ்வியாகிருதத்தினிடமாகவே ஆன்மபிரகாச ங் கிரகிக்கப்படுதலால், அவ்வவ்வியாகிருதமே ஆன்மலாபபூமியென்பதையு ம், அவ்விடத்தில்விளங்குகின்ற பிரகாசமே அவ்வியாகிருத தத்துவம் அதன் காரியமானபிரபஞ்சம் என்னும் இவைகளின் சங்கோச விகாசங்களைப் பிரகா சிப்பித்து தான் சுபாவமாய் பாதிக்கப்படாமல் அனைத்திற்கும் ஆன்மவஸ்து வாய் விளங்குவதனால், அது சத்தியஞானனந்த ஏகரசமென்பதையும் தெரி விப்பார், "பரவியோமத்திலந்தவங்கத்து" எனவும், சிரவண மனனுதிசாதன த்தாலுண்டாகிய பிரமாகார அகண்டமனோவிருத்தியிற் பிரதிவிம்பித்த சைத ன்னியத்தால் ஜீவேச பேதமற்ற பிரமசொரூபமாகப் பிரத்தியகான்மாவை அ பரோக்ஷீகரிக்கின்ற அபரோக்ஷ அனுபவத்தையுடையவனே, "பிரமரூபமதாவ திந்தவன்" எனவும், ஆரோபித சகல ஜகங்களினுமுள்ள மனுடானந்தமுதல் சதாசிவானந்தம்வரை சகலானந்தமும் அதிஷ்டான பிரமசொரூபனுகிய தன் னாலேயே ஏககாலத்தில் அவ்வவ்விடத்தும் வியாபித்துப் புசிக்கப்படுவதை, "ஒருக்காலேசிந்தைசெய்காமமியாவையும் பெற்று" எனவுங்கூறினர். (கஎ)

## அவதாரிகை.

சத்தியமாயும் ஞானமாயும் ஆனந்தமாயுமுள்ளது பிரமம். அதை பரவியோமாவென்னுங் குகையில் வைக்கப்பட்டிருக்கின்ற பிரத்தியகபின்னமாக யாவனறிகின்ருனே அவன் அறிந்தபிரமரூபமாகிய தன்னுற் சகலகாமங்களேயும் அடைகின்ருனென்ற சுருதிவாக்கிய அக்ஷரானுசாரமாக முற்கவியிற்பொருள்கூறி, இக்கவியில் பலிதார்த்தமாகப் பிரமத்தை யறிந்தவன் பிரமத்தையடைகின்ருனென்றபடி பிரத்தியக்கை மறைக்கும் அஞ்ஞானம் அந்தக்கரணம் மாயை இவைகளுக்குச்சாட்சியான அத்துவிதப்பிரமத்தை அபரோக்ஷமாக அறிகின்றவன் உத்தமப்பிரம வித்தெனவும், சுருதியில் சூத்திரம்போற்கூறிய வாக்கியார்த்தத்தை சுருதிதானே சுருக்கமாகவுரைசெய்ததின் பிறகு, அவ்விடத்துண்டாகிய சங்காநிவர்த்திசெய்யவேண்டி இவ்வான்மாவினிடத்தினின்றென்றது முதல் இப்படியுபநிடதமென்றதுவரைக்கும் விரிவாகவுரையுஞ் செய்யப்பட்டிருக்கின்றது. அதனைச்சங்கிரகித்துச்சொல்வார் இவ்விடத்திற் பிரமம் சச்சிதானந்தமென்பதுகூடாது என்னெனில், பரிச்சேதமாயுள்ள விண்முதலியபூதபவுதிகப்பிரபஞ்சமிருத்தாலாலென்ற சங்கையைநீக்கற்பொருட்டு, அந்தப்பிரமத்தினிடத்தினின்றுஞ் சிருட்டியைக் கூறுகின்ருர்.

அஞ்ஞானமாயாசத்திக்குச்சான்ருயகத்துறையசலவான்மாவை
மெய்ஞ்ஞானபரத்தின்வேறறக்காணுமவன்பிரமவித்தினின்மிக்கான்
மெய்ஞ்ஞானபரத்தில்வேறறுஞ்சத்திமிச்சிரமித்தவான்மாவிற்
பைஞ்ஞாகமாலேபோலவேதோன்றப்படும்பஞ்சீகரித்திடாவானம்.

இ-ள். அஞ்ஞானமாயாசத்திக்கு-அஞ்ஞானமாகிய மாயாசத்திக்கு,சான்ருய் - சாக்ஷியாய், அகத்துறை - உள்ளத்திலுறைகின்ற, அசல-அசைவற்ற, ஆன்மாவை - பிரத்திய கான்மாவை, மெய்ஞ்ஞானபரத்தில்-மெய்யுணர்வாகியபிரமத்திற்கு, வேறறக்காணும் அவன்-பின்னமற அறிகின்றவன், பிரமவித்தினின்மிக்கான் பிரமவித்துக்களில் மேலானவன், மெய்ஞ்ஞானபரத்தில்- சத்தியஞானமாகிய பிரமத்திற்கு,வேறறுஞ்சத்தி-அபின்னமாகிய கற்பிதசத்தியினுடன், மிச்சிரமித்த - கூடியிருக்கின்ற, ஆன்மாவில்- ஆன்மாவினிடத்திலிருந்து, மாலைபைஞ்ஞாகம் போலவே - மாலையினிடத்திற்ருேற்றுகின்ற விடப்பையையுடைய சர்ப்பம்போலவே, பஞ்சீகரித்திடாவானம்- பஞ்சீகரிக்கப்படாதவாகாயம், தோன்றப்படும் - தோற்றப்படும். எ - று.

ப - ம். அஸங்கோதாசீன நிற்குண ஆன்மாவுக்கு சிருட்டிகருத்திருத்துவம் எப்படிக்கூடுமென்ற சங்கைக்குச்சமாதானமாக, "சத்திமிச்சிர மித்தவான்மா" எனவும்,இங்ஙனம் உற்பத்தி ஒப்பப்பட்டினும், ஆரம்பம் பரிணாமமென்னும் இரண்டு வாதத்திற்குள் ஒன்று ஒப்பவேண்டும், அங்ஙனமொப்பின்ல் பிரமம் அனித்தமாகுமென்ற மதகண்டனமாக, "பைஞ்ஞாகமாலேபோல" எனவும், சிலமதத்தில் ஆகாயத்திற்கு நித்தியத்துவம் ஒப்பப்பட்டிருத்தலால் அதுபற்றி பிரமம் பரிச்சேதமுடையதென்ற மதகண்டனமாக, "தோன்றப்படும் பஞ்சீகரித்திடாவானம்" எனவுங்கூறினர். (கஅ)

இதுவுமது.

வேறு.

வாயுவென்றுபெயருடையபரிசம்வானத்துண்டாகித்
தேயுவதிலேதோன்றிற்றவ்வனலிலப்புமுண்டாயத்
தோயமதின்மண்ணுதித்ததுசூக்குமமைந்தையும்பஞ்சீகரிக்கத்
தூயவிறைவனுக்கினையாற்றூலபஞ்சபூதமுமாம்.

இ - ள். வானத்து-அவ்வாகாயத்திலிருந்து, வாயு என்று பெயருடைய பரிசம் - வாயுவென்னும் நாமமுடைய பரிசமானது, உண்டாகி - தோன்றி, அதிலே - அதில் நின்றும், தேயு - அக்கினியானது, தோன்றிற்று - உண்டாயிற்று, அவ்வனலில் - அவ்வக்கினியிலிருந்து, அப்புமுண்டாய்- ஜலமுமுண்டாகி, அத்தோயமதில் - அச்சலத்தில்நின்றும், மண்ணுதித்தது - பிருதிவியுண்டாயிற்று, சூக்குமமைந்தையும் - (இவ்வித) சூக்குமபஞ்சபூதங்களேயும், பஞ்சீகரிக்க-பஞ்சிகரணஞ்செய்ய, தூய - பரிசுத்தம் பொருந்திய, இறைவனுக்கினையால் - சிவாக்கினையால், தூல - தூலமான, பஞ்சபூதமுமாம்- பஞ்சபூதங்களு முண்டாகும். எ - று.

கருத்து. மண்ணிற்றோன்றிய கடாதிகள் மண்ணிற்குவேறில்லாமைபோல, காரியங்களான உலகங்கள் காரணப்பிரமத்திற்கு வேறில்லாததனுல், பிரமத்திற்கு அவற்றுற் பரிச்சேதமில்லையென்பதாம். (௪௯)

இதுவுமது.

வேறு.

பரமனுக்கினையினுலேபஞ்சபூதங்களாலே
பிரமாண்டம்படைத்தேனந்தப்பிரமாண்டமத்தினுள்ளே
திரமுறுமுலகுந்தேவசாதியுந்தாந்தாம்பண்ணுங்
கருமரூபத்தால்வானேராதியும்பிறவுங்கண்டேன்.

இ-ள். பரமனுக்கினையினுலே-சிவாக்கினையினுலே, பஞ்சபூதங்களாலே-பஞ்சபூதங்களைக்கொண்டு, பிரமாண்டம் - பிரமாண்டத்தை, படைத்தேன் - நான்சிருட்டித்தேன், அந்தப்பிரமாண்டமத்தினுள்ளே- அந்தப்பிரமாண்டத்தினுள்ளே, திரமுறும் - நிலைபெற்றிருக்கின்ற, உலகும் - புவனங்களையும், தேவசாதியும் - தேவசாதிகளையும், தாந்தாம்பண்ணும் - தாங்கள் தாங்கள் செய்யப்பட்ட, கருமரூபத்தால் - கருமரூபமாகவந்த, வானேராதியும் - தேவர் முதலானவர்களையும், பிறவும் - மற்றுள்ளவனைத்தையும், கண்டேன் - நான் சிருட்டித்தேன். எ - று. (௨0)

## அவதாரிகை.

அன்னபரிணாமமான புருடசரீரத்தில் தாதான்மியமுடைய ஆன்மாவை சருவாந்தரமான பிரமமாகக்கூறவேண்டி, ஒன்றற்கொன்று வெளியாகவும் ஆந்தரமாகவும் அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமயமென்னும் பெயருடைய பஞ்சகோசங்கள் அதிகாரிகளின் சவுகரியத்தின் பொருட்டு சுருதியினாலுரைக்கப்பட்டன. அவற்றைக்கூறுகின்றார்.

### வேறு.

யாதொன்றெலும்புநரம்புமுதலிந்தவுடம்பதெனத்தோன்று
மோதுபிராணமயனத்துக்குள்ளாய்வேறாயேயொளிரு
மோதுபிராணமயற்கயலாயுள்ளாயொளிருமனோமயனந்
நீதியுறவிஞ்ஞானமயனவனுக்குள்ளாய்நிகழுமால்.

இ-ள். யாதொன்று - எது, எலும்பு நரம்புமுதல்- என்பு நரம்புமுதலிய, இந்தவுடம்பதெனத்தோன்றும் - இந்தச்சரீரமென்றுவிளங்காநிற்கும், ஓது-சொல்லப்பட்ட, பிராணமயன்-பிராணமயனானவன், அத்துக்குள்ளாய்-அதற்குள்ளாகி, வேறாயேயொளிரும் - பின்னமாகவிளங்குவான், ஓதுபிராணமயற்கு- (இப்பொழுது) கூறியபிராணமயனுக்கு, அயலாய்-வேறாயும், மனோமயன்-மனோமயனானவன், உள்ளாயொளிரும் - ஆந்தரமாயும்விளங்குவான், விஞ்ஞானமயன் - விஞ்ஞானமயனென்பவன, அந்நீதியுற - அந்தக்கிரமமாக, அவனுக்குள்ளாய் - மனோமயனுக்குள்ளாகி, நிகழுமால் - பிரகாசிப்பான். எ - று.

ப-ம். பிராணன் கேவலம் ரஜோகுணபரிணாமமாதலால் அதற்குச் சிற்பிரகாசாபிவியஞ்சகத்தன்மையில்லாமையாலும், மனத்திற்கஃதிருத்தலாலும், "உள்ளாய்" எனவும், ஆகாயமுதலிய சூக்குமபஞ்சபூதவியட்டிசத்துவாங்கிசங்களாலுண்டானவை பஞ்சஞானேந்திரியங்கள், அவ்விதசத்துவாங்கிசசமுதாய பரிணாமரூபம் அந்தக்கரணம். அவ்வந்தக்கரணவுபாதானமாகியஸத்துவத்திற்கு ஆன்மசொரூபமாகியசுகம் பிரகாசம்என்னுமிவற்றை வெளிப்படுத்துஞ் சாமர்த்தியமிருப்பதனால், அதன்காரியமாகியவந்தக்கரணமும் சுகப்பிரகாசாபிவியஞ்சகவிருத்தியும் கொஞ்சமிராசதகுணசம்பந்தத்தால் சங்கற்பவிகற்பரூபமான மனமென்னும் பெயரையடைகின்றது. இராசதத்தின் சம்பந்தமின்றி நின்மலமாய்ப்பவித்துநிச்சயரூபமான புத்தியென்னும் பெயரையடைகின்றது. இப்படியேமனோ புத்திவிருத்திபேதத்தாற் பின்னங்களானவிருத்திகளோடுங்கூடிய அந்தக்கரணத்தை சகாயங்களாயுடைய நேத்திராதி இந்திரியங்களும் விமர்சன நிச்சயமென்னு மிருவகைவிளக்கத்தைக்கொடுப்பதனால் இரண்டுவகுப்புடையதாகும். இவ்விடத்தில் விமர்சஞானத்தையுண்டுபண்ணும் பஞ்சஞானேந்திரியங்களோடுங்கூடிய மனமென்னும்பெயருடையவிருத்தியோடுங்கூடிய அந்தக்கரணவுபாதியுடைய ஆன்மாவை மனோமயனெனவும், அனுஷ்டிக்கத்தக்கபதார்த்தவிடயமானநிச்சயஞானவானுக்கே வி

த்தியாகன்மங்களிலதிகாரமாதலால் முற்கூறியமூன்றுகோசமும் அனுன்மாவென்பார், "விஞ்ஞானமயனவனுக்குள்ளாய்" எனவும், நிச்சயஞானத்தை உண்டுபண்ணுகின்ற நேத்திராதியிந்திரியங்களோடுக்கூடிய புத்திவிருத்தியுடைய அந்தக்கரணவிசிட்டவான்மாவை, "விஞ்ஞானமயன்" எனவுங்கூறினர். (உக)

இதுவுமது.

வேறு.

அன்னியமாய்விஞ்ஞானமயனுக்குள்ளா மானந்தமயனன்னமயன்றன்னுள்ளா, மன்னியவப்பிராணமயனுலேபூர்ணன் மனோமயனுற்பூர்ணனவன்மனோமயன்று, னன்னவகைவிஞ்ஞானமயனுற்பூர்ணனந்தமயனுலேயவன்றன்பூர்ணன், றன்னிகரற்றனைத்திநுக்குமுள்ளாய்வேறுந் தற்பரத்தாற்பூர்ணனதுதானேபூர்ணம்.

இ-ள். ஆனந்தமயன்-ஆனந்தமயனுனவான்மா, அன்னியமாய் - விபின்னனுய், விஞ்ஞானமயனுக்குள்ளாம் - விஞ்ஞானமயனுக்காந்தரத்தன்மையாவான், அன்னமயன் - அன்னமயனுனவன், தன்னுள்ளாமன்னிய - தனக்குள்ளாகப்பொருந்துகின்ற, அப்பிராணமயனுலே - அந்தப்பிராணமயனுலே, பூர்ணன் -வியாபிக்கப்பட்டவன், மனோமயனுல் - மனோமயனென்பவனுல், அவன்-அப்பிராணமயனும்,பூர்ணன்-வியாபிக்கப்பட்டவன், மனோமயன்றன்-மனோமயனுனவனும், அன்னவகை - அத்தன்மையாகவே-விஞ்ஞானமயனுல்-விஞ்ஞானமயனென்பவனுல், பூர்ணன் - வியாபிக்கப்பட்டவன், ஆனந்தமயனுலே - ஆனந்தமயனுல், அவன்றன் - அவ்விஞ்ஞானமயனும், பூர்ணன் - வியாபிக்கப்பட்டவன், தன்னிகரற்று - தனக்கொப்பில்லாதாயும்-அனைத்தினுக்கும் உள்ளாய் - எல்லாவற்றிற்கும் ஆந்தரனுயும், வேறும் - தனக்கன்னியமாயுமுள்ள, தற்பரத்தால் - பிரமமாகியசாக்ஷியால், பூர்ணன் - (அவ்வானந்தமயனும்) வியாபிக்கப்பட்டவன்- அது - அப்பிரமமோவெனில், தானேபூர்ணம் - (மற்றென்றினுலும் வியாபிக்கப்படாமல்) தானேபூர்ணமாயிருக்கின்றது. எ - று.

ப - ம. விஞ்ஞானத்தாற்சம்பாதிக்கப்பட்ட வித்தியாகன்மங்களுக்குப் பலஞ் சுகமாதலால், அச்சுகமும்ஆனந்த சொரூபமாகையால், அவ்வானந்தத்தை அபிவியஞ்சிப்பிக்குமுபாதி யுடையவான்மாவை, "ஆனந்தமயன்" எனவும், இந்தஐந்துகோசங்களும் கிரமமாயொன்றற்கொன்று சித்தினபிவியத்திபெலத்தால் வியாபகமாகப்பவித்து விம்பமானகூடத்தசித்தால் வியாபிக்கப்பட்டு அவைகளின் சித்துவல்லமை பிரதிபிம்பத்தின்வல்லமையாதலாலும், பிரதிபிம்பம் வஸ்துவாகத்தகாததனுலும், அந்தஅஞ்சுகோசங்களையும் அனுன்மாவென்பார், "தன்னிகரற்றனைத்திநுக்குமுள்ளாய்வேறுந்தற்பரத்தாற்பூர்ணன்" எனவும், பஞ்சகோசாதீதனே குறைவுநிறைவற்ற அசகாயசுயம்பிரகாசபூரணவஸ்துவான பிரமமென்பார், "அதுதானேபூர்ணம்" எனவுங்கூறினுர்.

## அவதாரிகை.

முந்தியகவியில் பஞ்சகோசங்களையும் ஆன்மாவியாபித்து சுயம்பூரண னாயிருக்கின்றானென்றதனால், அன்னமயமாகியதூலசரீரமும் பிராணமனோ விஞ்ஞான மயமாகிய சூக்குமசரீரமும் ஆனந்தமயமாகிய காரணசரீரமும் அனான்மாவெனக்கூறியதாம். ஆனந்தமயனையே ஆன்மாவாகவுபாசிக்கவேண் டி பிரியம் மோதம் பிரமோதம்இவைகள் சிரம் சிறகுகளாகவும் ஆனந்தம் உடலாகவும் பிரமம் புச்சமாகவும் சுருதியிற்காணப்படுவதனால் ஆனந்தமய னெப்படி அனான்மாவாவானெனவர; மயனென்பது விகாரமாதலாலும், மற் றெவ்விதத்தாலும்ஆனந்தமயன் சோபாதிகனாகவே சித்திப்பதனால் பிரியமோ தாதிகளை அவயவங்களாக வர்ணித்திடினும் அவனுக்கு பிரமம் புச்சமாகாது. அங்ஙனமாயின், சுருதிகூறியபிரமம் பிரமசத்தார்த்தமுடையதாகாது நிருபா திகப்பிரமமே ஆன்மாவாதலால் ஆனந்தமயன் சோபாதிகனாதுபற்றி அவன் அனான்மாவென்பதுசித்தம். ஆனால் பிரியமோதாதிகள் உபாதிவிகாரங்களானு லும் ஆனந்தம் ஆன்மாவென்று ஆனந்தத்தை உடலாகக்கூறியிருக்கின்றதே யெனில்; அதாவது ஆன்மசொரூப சுகாபிவியஞ்சகமாயுள்ள சாத்துவிகாந்தக் கரணபரிணாமமானவிருத்தியாகும். அதுவேபிரியமோதாதிபேதத்தால் பின்ன ப்படுகின்றது. எங்ஙனமெனில், நற்கன்மத்தால் சமீபிக்கப்பட்ட இட்டர் புத்தி ரர் வித்தம் களத்திரமுதலிய தரிசனலாபபோகங்களாலுண்டாகிய பிரியமோ தாதிசமுக்கினையுடைய அந்தக்கரணவிருத்திவிசேடங்களால் இவற்றில் நிரதி சயமான ஆன்மானந்தம்பிரகாசிக்க அவ்வானந்தமேவிடயானந்தமெனப்படும். ஆனால் விடயானந்தம் கணப்போதுடையதேயெனில்; அது உபாதியைப்பற்றி யதாம் அப்படிப்பட்டவிருத்திகள் சுழுத்தி பிரளயமுதலியகாலங்களில் தங்க ள்காரணமானசத்துவத்திலிலயிக்கின்றன. அப்படிக்காரண சத்துவாகாரமாக இருக்கின்றதாயும், மலினசத்துவப்பிரதானமாயும், அவித்தையென்னும்பரியா யமுடையதாயுமுள்ள பாவரூபமான அஞ்ஞானமே ஆனந்தமயனது உபாதி யாதலால், அவன் அனான்மாவேதானென்னுந்தாற்பரியத்தால் நிரூபித்து, இக் கவியில் புச்சமென்பது சச்சிதானந்தமான பஞ்சகோசாதீத அதிட்டான ஆ ன்மாவாகிய பிரமமெனவும், பஞ்சகோசத்திற்கதீதமாயின் அவிடயமாதலால் சூனியமாவானெனவர; பிரமநிட்டர்களால்அபரோக்ஷமாக ஆன்மசுகமனுப விக்கப்படுவதுகொண்டு ஸத்தென்னவேண்டி இரதமெனவுங் கூறுகின்றார்.

### வேறு.

சச்சிதானந்தமாகியொன்றும்பரப்பிரமம்
புச்சமென்றுரைத்திடப்படுமிரதமப்பொருளே
யிச்சதானந்தமெய்தினோனியாவனெவ்விடத்துங்
அச்சவாக்கையின்றுயரறுத்தவன்சுகம்பெறுமால்.

இ - ள். சச்சிதானந்தமாகி - சச்சிதானந்தமாயும், ஒன்றும் - அத்துவித மாயுமுள்ள, பரப்பிரமம் - பரப்பிரமமானது, புச்சமென்றுரைத்திடப்படும் -

புச்சமென்றுசொல்லப்படும், அப்பொருளே - அந்தப்பிரமமே, இரதம்- (எக்காலத்திலும்) ரஸவஸ்துவாகும், இச்சதானந்தம் - இந்தச்சதானந்தரஸவஸ்துவை, எய்தினேன்யாவன் - அடைந்த (ஸனுதன்ன்) எவனே, அவன் -அவனே, துச்சஆக்கையின் துயர் அறுத்து-இழிவான உடலைப்பற்றிய துயரொழித்து, எவ்விடத்தும்- எங்கும், சுகம்பெறுமால் - சுகத்தைப்பெறுவான். எ-று.

ப - ம். இவ்வானந்தமயனே ஆன்மாவா அல்லது அன்னியனு எனில்; அவனே யான்மா, என்னென்னில், பிரியமுதலியவற்றை சிரமுதலிய அவயவங்களாயுடையவனுக சுருதியில் கூறப்பட்டிருப்பதனுல், அவ்வானந்தமயனை அப்பியாசத்தால் பிரமமாகக்காணப்படுவதனுலும், அவ்வானந்தமயனது உபாசனையின்பொருட்டு பிரியமுதலியவைகள் சிரமுதலியஅவயவங்களானதுபோல், பிரமமும் புச்சரூப அவயவமாகச் சொல்லப்பட்டிருப்பதனுலும், அவனுக்கன்னியமாயொருபொருள் கிரமபடிதமாகக் காணப்படாததனுலும் என்று பூருவபக்ஷம்வர; ஆனந்தமயனென்றதில் மயட்டென்றபொருள் விகாரமாதலால் ஆனந்தம் மிகுதியென்னில் மிகுதியாயினுஞ் சிறிதுதுக்கமுடையதாகும், அதெங்ஙனமெனில் பிராமணரிந்தக்கிராமத்தில் மிகுந்திருக்கின்றுரென்னினும் இதரஜாதிகளில்லையென்று நிடேதிக்கத்தகாமல் கொஞ்சமுண்டென்பதுபோலும், பிரசுரப்பிரகாசன் சூரியனென்பதுபோலெனினும், மேகாவரணுதிகளால் பிரகாசமாந்தியம் இருந்ததாகக்காணப்படுதலாலும், நக்ஷத்திராதிகளை அபேக்ஷித்து சூரியன் பிரசுரப்பிரகாசனுகக்காணப்படுவதில் பிரசுரார்த்தத்தால் நேரிட்டபிரகாசமாந்தியம் நக்ஷத்திராதிகளைச்சாருதலால் ஆனந்தமயற்கு வேருயுள்ள விஞ்ஞானமயாதிகளிடத்தில் சிறிதுதுக்கஞ்சாருமென்றிடினும் அதுவும் சொப்பிரகாசநிராவரணனுகிய ஸவிதாவை ஒப்பவேண்டும். இங்ஙனமாயின் ஆனந்தமயனையும் நிராவரண சொப்பிரகாச சித்தாகவொப்பவேண்டும், அப்படியொப்பிடில் அவன் நிருபாதிககூடத்தனுவான். அவனைக் கோசாதீதனுன கூடத்தனுகவொப்புங்கால் ஆனந்தமயத்துள்அடங்கினவனுகக்கூற உபகாரப்படாது. மேலும் உபசங்கிரமணகாலத்தில் ஆனந்தமயனையும் உபசங்கிரமித்துச் சொல்லுவதனுலும், அவனதுஉபசங்கிரம அதிஷ்டானமாகியகூடத்தனே ஆன்மாவாவானெனவும், புச்சமாகியபதம் பிரமசமானுதிகரணமாயிருப்பதனுல், புச்சமென்பதின்பொருள் கூடுபோல் ஆதாரவாயுள்ள அதிஷ்டானமாமென்று சித்தாந்தஞ்செய்வார், "சச்சிதானந்தமாகியொன்றும் பரப்பிரமம்புச்சமென்றுரைத்திடப்படும்" எனவும், சுருதியிற்சிலவிடத்தில் அன்னமயாதி உபாசனைகாணப்படுவதெங்ஙனமெனில்; அன்னத்திலிருந்தே அனைத்துமுண்டாகி பாலிக்கப்பட்டு அதிலிலயிப்பதனுல் அதுவேபிரமமெனவுபாசனுவிதி, அப்படி இதுவும் ஆகலாமன்றி பஞ்சகோசவிவேகவுபதேசம் அன்றெனவர; ஆங்கு உபாசனைசொல்லப்பட்டிருப்பதுபோல இவ்விடத்தில் அதுசொல்லப்படாததனுல் கோசாதி உபாசனுவிதியிங்கில்லை கோசவிவேகவுபதேசமேதான் என்னும் உத்தரத்தின்மேல் பஞ்சகோசாதீத ஆன்மாவொருவனிருந்திடில் அவைகளை விவேகத்தால்அறு

ன்மாவாகத்தள்ளி அதீதத்தையான்மாவாகக்கொள்ளலாம். அப்படிக்காணப் படாததனுலில்லையெனலாம்என் னெனில், பஞ்சகோசமே அனுபவத்திற்குவ ருவதனுலும், அவைகடந்தவிடம் பாழாயிருப்பதனுலும், மேலும் அதீதமாக வொருபொருளிருப்பதாகவொப்பிடில் அது அனுபவத்திற்குவருமா வரக்கூ டாதா, அதுவும் வித்துவான் அவித்துவான்அனைவருக்கும் வரத்தகாதா என் றுசுருதியிற்கண்டசங்கைக்கு சுருதிதானேயுத்தரமாகக்கூறியபடி வித்துவா ன்களாகியயோகியர்களால் உள்ளத்தின்கண்ணே பஞ்சகோசாதீதமாகக் கா லத்திரயாபாதித ஆனந்தவடிவாய் பிரத்தியக்குத்திருட்டியைக்கொண்டு அமி ர்தரசம் போல் பிரமம் அபரோக்ஷமாகவனுபவிக்கப்படுவதென்பார, "இரசம ப்பொருளே'' எனவும், பிராகிருத இரதவஸ்துக்கள் இரதமாகத்தகாது புசிக் குங்காற் பிராந்தியாலவைகளிற் சுகந்தோற்றினும் மறுகணத்தில் துக்கத்தை க்கொடுப்பதனுல் அன்னியக்களிரதவஸ்துக்களாகாது, இதுவே ரசவஸ்து இதனையடந்தவனே யெக்காலத்தும் ஸம்ஸாரதுன்பம் நீங்கிச்சுகியாவானென் பார், "இச்சதானந்தமெய்திஞேன் யாவனெவ்விடத்துந் துச்சவாக்கையின் றுயரறுத்தவன் சுகம்பெறும்" எனவுங் கூறினர். (உரு)

அவதாரிகை.

வியதிரேகமுகமாகவும் சுருதியில் யாதொரு இந்தசிதாகாசமான ஆன ந்தமில்லாவிடில் எவன் சேட்டித்திடுவான் எவன் ஜீவித்திடுவானெனவும் மு ற்கூறிய ஆன்மசுதந்தர அஸ்தித்துவத்தை அங்கீகரிக்கத்தக்கதாகக்கூறி, அவ் வான்மரூபமான பிரமம் எந்த இருதயங்களிலும் ஆனந்த ரூபமாக விளங் குந்தன்மையையுங்கூறி, எங்ஙனம் பிரமம் ஆனந்தரூபமாகுமெனில், துயரப் படுகின்ற ஜீவர்களைத் தனதுகருணையினுற்சுகப்படச்செய்தலினுல் எனக்கூ றுகின்முர்.

வேறு.

இன்பமாம்பாமிலதெனியாவனுண்டாகுமேதெவன்செய்வான்
றுன்பமேதனக்கியல்பதாய்த்துயர்க்கடலிடைப்படுமுயிர்தன்னைத்
தன்பரம்பெருங்கருணையாலிரதமாய்ச்சார்ந்தவனுளத்தேநின்
றின்பமேவுறவளித்திடலிறைவனுக்கியல்பதெப்படியாலும்.

இ-ள். இன்பமாம்பரம்-பரானந்தசொரூபனுகிய பரமனொருவன், இல தெனில் - இல்லாமற்போனுல், யாவனுண்டாகும் - எவனுண்டாவன், எவன்- யாவன், ஏது - எதனை, செய்வான் - செய்யத்தகுவான், துன்பமேதனக்கு இயல்பதாய், துக்கமே தனக்குச் சுபாவமாய், துயர்க்கடலிடைப் படும் உயிர்தன்னை - துக்கசமுத்திரத்துக்குள் முழுகுகின்ற சீவான்மாவை, தன் பரம்பெருங்கருணையால் - தன்னுடைய உயர்வாகிய பெரிய கிருபையால், இரதமாய்ச்சார்ந்து - ரஸசுபாவமாகக்கலந்து, அவனுளத்தேநின்று - அச்சீ வனிருதயத்தில்நின்று, எப்படியாலும் - எவ்விதத்தாலும், இன்பமேவுறஅ ளித்திடல் - ஆனந்தஞ்சேரும்படிகொடுத்தல், இறைவனுக்குஇயல்பது - பரம சிவனுக்குச் சுபாவமாகும், எ - று.

ப-ம். பஞ்சகோசம்நீங்கியவிடம் பாழென்றது கூடாது, பஞ்சகோசங்கடந்த பாழான சூனியத்தை அறியச்சாட்சிவேண்டும் அந்தச்சாட்சியுஞ் சுயஞ்சித்தாகவிருக்கவேண்டும், அவ்வித சுயஞ்சித்தாக ஒரு ரஸவஸ்துவில்லாவிடில் சரீரத்திரயங்களினுள்ளடங்கிய பஞ்சகோசமுடைய ஜடமான இப்பிரபஞ்சம் எப்படிச் சீவிக்கின்றதாகவிளங்கும் எப்படிச்சேட்டிக்கும். அவனன்றிச் சேட்டிக்குமெனில், சுழுத்தியில் பிராணவாயுவுடன்தேகேந்திரியாதிகளிருந்தும் பிரேதம்போல்உபகாரமில்லாததனாலும், அவைகளைத் திரும்பவுந் தனதுபிரதிபிம்பசத்தையாற் சீவித்துச் சேட்டிக்கச்செய்வதனாலும், பிரதிவிம்பத்தால் விளங்குகின்றவைக்கும் பிரதிவிம்பத்திற்கும் விம்பமே ஆதரவாதலாலும், விம்பமாகிய பஞ்சகோசாதீத கூடத்தவான்மாவை அசத்தென்றவன், கன்ம யோக பத்தி ஞானமென்னும் எம்மார்க்கங்களை யனுசரித்தும் அவன் அஸத்துத்தானெனவும், அவ்விதகூடஸ்தனிருப்பதாகவொப்பிடில் அவனையே சுருதிகளும் பெரியோர்களுஞ் சத்தெனக்கூறுதலாற் சுருதி யுத்தி யனுபவங்களாலும் நிருணயிக்கப்பட்டிருப்பதாயும், எவர்களாலும் நானில்லையென்று நிஷேதிக்கத்தகாததாயும், அஞ்ஞர்கள்கூடப் பிரதிதினஞ் சுழுத்தியுத்தானகாலத்தில் நான் தூங்கினேனென்று அகங்காரமற்ற சென்றகாலத்துள்ள ஆன்மாவை அகம்பொருளாகப் பிரயோகிப்பதனாலும், அறிஞர் அஞ்ஞர் அனைவர்களாலும் அவசியமொப்பத்தக்கதாகப் பஞ்சகோசாதீத ரஸசொரூபனை கூடத்தனிருக்கவேசெய்கின்றான், அவனே அஸ்திபதார்த்தமென்பார், "இன்பமாம்பரமிலதெனிலியாவனுண்டாகு மேதெவன்செய்வான்" எனவும், சித்துருபனாகிய கூடத்தனொருவன் பஞ்சகோசாதீதனாகச் சித்தித்திருந்திடினும் அவன் ரஸரூபனென்பதெங்ஙனங் கூடுமெனவும், யோகிகளாலிரதமாக வனுபவிக்கப்பட்டாலும் மற்றையர்களாலப்படி அனுபவிக்கப்படாததுகொண்டு அவ்விதமாகாதெனவர; அனைவர்களும் நான்சுகமாகத்தூங்கினேனென்று அகங்காரமற்ற சென்றகாலத்துள்ளவான்மாவைச் சுகரூபனாகப்பிரயோகிப்பதனாலும், வியாவகாரிகனாகிய அகங்காரியான ஜீவத்துவம் அவனிடத்தில் அபேதமாகச் சுழுத்தியிலுஞ் சமாதியிலுமடங்கிட, ஆவரணவிக்ஷேபாதிகளாற்றோற்றிய துக்கசாகரமொழிந்திடக்காண்பதனாலுஞ், சுகமாகத்தூங்கினேனென்பதனோடு ஒன்றுந்தெரியாமைகாணப்படுவதனால் அந்தத்தெரியாமை தமோகுணத்தினியல்பாதலால் அந்தத்தமோகுணத்தின் வல்லமையாம் ஆவரணமுஞ் சமகாலத்திலனுபவிக்கப்படுதலாலும், தமோகுணமிருக்குமிடத்திற் சுகமிருக்காது இருப்பதாகவொப்பிடில் இரண்டுமிருக்கின்றதாக வொப்பவேண்டும், அங்ஙனமொப்பிடில் தமோகுணம் துக்கத்தையே கொடுக்கத்தக்கதனால் அந்தத்துக்கமும் விழித்தபின் காண்பதனால் வாதிக்கப்படாதவனுபவமாதலாலும், அகங்காரமில்லாத சென்றகாலத்துள்ளவான்மாவைத் துக்கரூபனாகவே சொல்லவேண்டும். உபயரூபத்தையுஞ்சொல்வதில் ஒருவத்து இரண்டுசுபாவமுடையதாகாது. அவைகளிலொன்று சுபாவமாயும், ஒன்றுகற்பி

தமாயுமாகவேண்டும். இங்ஙனமாயின், ஆனந்தத்தைமாத்திரம் ஆன்மாவுக்கு
ச்சொரூபமாகவொப்பிடில் துக்கமேதான் சொரூபமென ஏன்ஒப்பக்கூடாதெ
னவர; நியாயம், அங்ஙனமொப்பிடில் ஒன்றுந்தெரியாமையான தமோகுண
வல்லமையாம்அஞ்ஞானஞ் சித்தா ஜடமா, சித்தென்றால், பிரகாசத்தால்ஆவர
ணமாகிய தமத்தைநீக்குமேயன்றி மறைக்கமாட்டாது. ஜடமெனில், தானே
விளங்காமல் தனக்கன்னியமான சித்தினாலேயேவிளங்கல்வேண்டும். ஆன்ம
ப்பிரகாசத்தால் தெரியாமையாந் துக்கப்பிரயோஜக தமோகுணமான ஆவர
ணமாகிய இருள்விளங்குவதெனில், பிரகாசசன்னிதானத்தில் இருள்போல்
சிற்சன்னிதானத்தில் தெரியாமையென்னும் ஆவரணம் விளங்காது. ஆவரண
மாகியதமோகுணமில்லாவிடில் தமோகுணப் பிரதிபிம்பித துக்கமும் ஆன்ம
சுபாவமாகாது. விழிக்குங்காலனுபவத்திற் காணப்படுவதெனில், அவ்விடத்தி
ற்பிரபஞ்சங்காணப்படாததனாற் பிரபஞ்சானுபவஞானமில்லாமலுங் கூடத்த
ன் சிற்சுகனுதலாற் சுகமாயென்றும், இவ்வனுபவத்தைப் பகிர்முகப்படுத்துவ
தற்குமுன்னமே தன்னுடையவியல்பாயுள்ள ஆஸ்திக்கியத்தைத் தூங்கினே
னென்றும் தூங்கினேனென்றால் தூங்கியிருந்தேனெனப்படுமோதலால் பிரப
ஞ்சானுபவரகித சிற்சுகமாத்திரமாயிருப்பதனால் சருவஜனசமுதாயமாகக் கூ
டத்தவான்மா சுகசாகரமானரஸசொரூபமென்றும், கூடத்தனாகிய ஈசனிட
மாகவே இச்சா ஞான கிரியா சத்திகளைப்பெற்றிருந்துங் கிருதக்கினனாகி அ
வனைமறந்திடினும் இவனைக்காக்கும்பொருட்டு இவனுளத்தில் நீங்காமலிருந்
து இரக்ஷிக்கின்றானென்றும், அவனாலேயே ஜாக்கிர சொப்பனமான பிரப
ஞ்சவாசனையிற்றோற்றிய துக்கங்களைச் சுழுத்தியாகிய அவிவேகநிசையினும்
கூடத்தனாகிய தன்னை அடைந்திடும்படிசெய்வித்து, அவர்களுக்கு இயல்பதா
கவே சகிக்கவொண்ணாததுக்கத்தைநீக்கியும், உபநிடதமார்க்கமாய்த் தன்னை
யறிந்து உள்ளபடியடைய ஆத்தியந்திகசமுசாரதுக்கநிவிர்த்தியோடு நித்தி
யானந்தமாகத் தன்னைத்தவிர வேறில்லாமற் சுகமுறச்செய்கின்றானென்றும்,
புண்ணியபாவத்திற்குத்தகுந்தபடி பலத்தைக்கொடுத்துச் சுகப்படுத்துகின்
றானென்றும், கூறுவார், "துன்பமேதனக்கியல்பதாய்த்துயர்க் கடலிடைப்
படுமுயிர்தன்னைத் தன்பரம்பெருங்கருணையாலிரதமாய்ச்சார்ந்தவனுளத்தேநி
ன் றின்பமேவுறவளித்திடலிறைவனுக்கியல்பதெப்படியாலும்' எனவுங்கூறி
னார். (உ௯)

அவதாரிகை.

பிரமமானது பயம் அபயம் இவ்விரண்டிற்குங் காரணமாகவிருத்தலால்
உண்மைப்பொருளென்று சாதித்த சுருதியின்பொருளைக் கூறுகின்றார்.

வேறு.

யாதொருபொழுதுகாட்சிமுதலிலதாம்பரத்திற்
பேதமதறவுணர்ந்தானப்பொழுதபயனாகிக்
கோதிலாவமுதமெய்துங்கூடுமேற்சிறிதுபேதஞ்
சாதலும்பிறப்புமச்சஞ்சாதலுஞ்சங்கையில்லை.

இ - ள். யாதொருபொழுது - எப்பொழுது, (இச்சீவன்), காட்சிமுதலி லதாம் - திரிசியத்தன்மைமுதலானவையில்லாத, பரத்தில் - (சொரூபஞன) அரனிடத்தில், பேதமதற - பேதமில்லாமல், உணர்ந்தான் - அறிகின்றானே, அப்பொழுது - அக்காலத்தே, அபயனுகி - பயமில்லாதவனாகி, கோதிலாவமு தம் - குற்றமில்லாத (பரமாமிர்தமாயும் கலியாணமாயும் சற்சொரூபமாயும், முன்னமேதானாயடையப்பட்டிருப்பதாயுமுள்ள) பரப்பிரமத்தை, எய்தும்- அடைவான், சிறிதுபேதக்கூடுமேல்- (பிரமம் வேறு சமுசாரியாகிய நான்வே று என்று) அற்பமேனும்பேதபுத்திபொருந்தவானாயின், (இச்சீவன்), சாதலு ம் - இறப்பதும், பிறப்பும் - ஜனிப்பதும், அச்சம் சார்தலும் - பயம்பொருந்து வதும், சங்கையில்லை - அளவில்லாததாகும். எ - று. (உரு)

## அவதாரிகை.

இவ்வான்மாவையெவனறிகின்றான் அவனுக்கு தனதுருபத்தைப் பி ரகாசப்படச்செய்கின்றானென்ற உபநிடதப்படி, எவ்விடத்தும் பிரமம் ஒன் றுபோற் பக்ஷபாதமின்றி இருக்கவும், பெத்தர்களுக்குமாத்திரம் ஏன் பயம் வருமென்று சங்கைவர; சகல இருதயங்களிலுஞ் சமமாயிருந்திடினும் பி ரமஜிஞ்ஞாசையிற் பராமுகனாயிருக்கின்றவனிடத்தில் உள்ளபடிவிளங்காம ல் அம்மூர்க்கனைத் தள்ளிவிடுவதெனவும், ஞானநிஷ்டர்களுக்கு அடையத்தக் கபரமபதமான பிரமம் சாக்ஷாத்காரசமயத்தில் தானாகவேகருணையாற் பிர காசிக்கின்றதெனவுங் கூறுகின்றார்.

## வேறு.

தானெலாவிடத்திலுமுளதாகிலுஞ்சாங்கரியஞ்சேர்ந்த
வீனசாதியைக்குறித்ததுவெளிப்படாதிருக்குமேயெப்போது
ஞானமேமுயல்பவற்குநற்பரம்பரநற்பரம்பதமேதா
னைவாறறிந்திடும்படிகேவலமருளினால்வெளியாமால்.

இ - ள். தான்-தானாகிய (அந்தப்பிரமம்), எலாவிடத்திலும் உளதாகி லும் - எவ்விடத்துமிருந்தபோதிலும், சாங்கரியஞ்சேர்ந்த - வரம்புதப்பிச்சே ர்ந்திருக்கின்ற, ஈனசாதியைக்குறித்து - (அஞ்ஞர்களாகிய) இழிந்தசாதியை க்கருதி, அது - அந்தப்பிரமம், வெளிப்படாதிருக்கும் - (உதாசீனமாய்) வெ ளிநண்ணாதிருக்கும், எப்போதும் - எக்காலத்தும், ஞானமே - ஞானத்தை யே, முயல்பவற்கு - முயலுகின்ற ஞானிகளுக்கு, நற்பரம்பரம் - நல்லபிரம மானது, நல் பரம்பதமே தான் ஆனவாறு அறிந்திடும்படி - நன்மையாகியபி ரமமேதானானவண்ணந் தெரிந்திடும்படி, கேவலம் அருளினால் - கேவலங்கிரு பையினால், வெளியாம் - (தானாகவே) வெளிப்படும். எ - று.

ப - ம். கூடத்தபரமசிவம் அனைவர்களுக்கும் பொதுவாகி எவ்விடத்து மிருக்க. அபேதவான்களிடத்தில் அபயமாயும், பேதவாதிகளிடத்தில் பயஞ்

கரமாயும் இருக்குமானால், பக்ஷபாதமாகுமெனச்சங்கிக்க; தாணுவைத் தாணுவாகவறிந்தவனுக்கு அத்தாணுவே அபயங்கரமாயும், சோரனென்றறிந்தவனுக்குப் பயங்கரமாயும் பவித்தும், எப்படிப் பக்ஷபாதமுடையதாகாதோ அப்படியே பக்ஷபாதமுடையதாகாதென்றும், வித்தியாதிகாரமான மானுடசரீரத்தையடைந்தவன் ஆன்மாவையே விசாரிக்கவேண்டும், அவனையே மனனித்திடவேண்டும், அவனையே நிதித்தியாசிக்கவேண்டும், அவனுக்குவேறுயிரண்டாம்பொருளில்லை, இருக்கின்றதாகப்பார்க்கில் துன்பத்தையடைவானென்ற பரமசிவனுக்கிணையாகிய சுருதிநீதியைத்தப்பினவர்களைச் சிக்ஷிக்கின்றது, தன் ஆக்கினையைக்கடந்தவர்களைச் சிக்ஷிப்பதில்அரசனுக்குப் பக்ஷபாதமில்லாததுபோலப் பக்ஷபாதமாகாதென்றுங் கூறுவார், "தானெலாவிடத்திலுமுளதாகிலுஞ்சாங்கரியஞ்சேர்ந்த ஈனசாதியைக்குறித்தது வெளிப்படாதிருக்கும்" என்றார். எ - று. (௨௬)

அவதாரிகை.

அந்தப்பிரமந்தானே வித்துவானுக்கும் மனனமில்லாவிடிற் பயமாகப் பவிக்குமென்ற சுருதியின்பொருளைக்கூறி, அதனையேதிடப்படுத்தவேண்டிச் சுருதியில் இவ்வீசனிடத்தில் வாயு சூரியன் அக்கினி இந்திரன் இயமன் இவர்கள்பயப்பட்டு நடக்கின்றார்களென்றபொருளைக் கூறுகின்றார். எ - று.

வேறு.

அங்கமாறினையும்வேதநான்குடனேயறியினுமனனமில்லவனுக்,கெங்குமெப்பொழுதும்பயத்தினுக் கேதுவாயிடுமிறைவனிந்திரன்கால்,
* செங்கதிர்ச்செல்வன்றீயமன்றத்தஞ்செய்தொழில்களிலொருகாலும், பங்கியாதொழுகும்பரிசதுபரனைப்பற்றியுண்டாகியபயத்தால்.

இ - ள். வேதநான்குடனே-நான்குவேதங்களுடனே, அங்கமாறினையும் - ஆறங்கங்களையும், அறியினும் - உணர்ந்தபோதினும், மனனமில்லவனுக்கு-மனனமில்லாதவனுக்கு, எங்கும் - எவ்விடத்தினும், எப்பொழுதும் - எக்காலத்தும், இறைவன் - பரமசிவனானவன், பயத்தினுக்கேதுவாயிடும் - அச்சத்துக்கேதுவாகவேபவிப்பான், இந்திரன் - வாசவன், கால் - வாயு, செங்கதிர்ச்செல்வன் - சூரியன், தீ - அக்கினி, யமன் - காலன், (என்னும்மிவர்கள்), தத்தம் - தங்கள்தங்கள், செய்தொழில்களில்-செய்கின்றதொழில்களில், ஒருகாலும் - ஒருபோதும், பங்கியாது - பங்கம்பொருந்தாமல், ஒழுகும்பரிசது - நடக்குந்தன்மையும், பரனைப்பற்றி - (அந்தப்) பரமசிவனைப்பற்றி, உண்டாகியபயத்தால் - விளைந்தஅச்சத்தினாலேதான். எ - று.

ப - ம். வாயு சூரியன் சந்திரன் அக்கினி காலன் இவர்கள் பூருவகற்பத்தில்உள்ளபடி பரமசிவமாகிய கூடஸ்தனையறிந்தும், மனனத்தாழ்வாற் பலத்தைவேண்டிக் கிஞ்சித்து பேதபுத்தியுடன்உபாசித்ததுபற்றிச், சிவாக்கி

* செங்கதிர்வாரியென்பாருமுளர்.

ஊயென்னுங் காலவசத்தாற் பயத்தினோடு அவ்வதிகாரங்களிற் கோணுமற்செல்கின்றனென்பார், "இந்திரன்கால் செங்கதிர்ச்செல்வன் தீயமன்றத்தஞ்செய் தொழில்களிலொருகாலும் பங்கியாதொழுகும்பரிசது பரனைப்பற்றியுண்டாகியபயத்தால்" என்றார். (உஎ)

அவதாரிகை.

சுருதியில் மானுடானந்தமுதல் இரணியகற்பானந்தம்வரை உத்தரோத்தரம் நூறங்கிசம் தாரதம்மியமுடையதாகக் கூறி, அவ்வதிகாரஆனந்தம் நச்வரமெனத்தெரியவேண்டி அவைகளில் ஆசையற்ற சிரவணமனனநிதித்தியாசனமென்னும் சாதனவானைச் சுரோத்திரியனெனக்கூறி, அச்சுரோத்திரியனாகிய பிரமநிஷ்டனுக்குக் கன்மசாதனங்களன்றி அவ்வதிகாரானந்தங்கள் கற்பிதங்களாதலால் தன்னானந்தத்தின் இலேசங்களாகிய அவைகளும் அதிஷ்டானமாகியதனக்குவேறில்லாமல் தானாகவேவிளங்குகின்றனவென்றபடி கூறுகின்றார்.

வேறு.

தந்தமளவிலரியாதிதம்பமீருச்சகத்தெல்லா
மிந்தவிறைவனானந்தவிலேசத்தாலேயின்புறுமா
லந்தவந்தப்பதத்தாசையற்றோற்கருளாலுள்ளபடி
தொந்தமறுதன்சொரூபமதாமின்பந்தானேதோன்றுமால்.

இ - ள். அரியாதி - மாயோன்முதல், தம்பமீரு - தம்பாந்தமுள்ள, சகத்தெல்லாம் - உலகத்துள்ள உயிர்களெல்லாம், இந்த இறைவன்-இந்தக்கூடஸ்தபிரமமாகிய பரமசிவனுடைய, ஆனந்த இலேசத்தாலே - ஆனந்தத்தின் ஒருதிவலையினாலே, தந்தம் அளவில்-தங்கள்தங்களுக்கியன்ற அளவின்படி, இன்புறும் - சுகத்தைஅடைவார்கள், அந்த அந்தப்பதத்தாசை அற்றோற்கு - அவ்வப்பதங்களில் இச்சையில்லாதவனுக்கு, அருளால் - சிவனருளால், உள்ளபடி - மெய்யாகவே, தொந்தமறு - துவிதமில்லாத, தன்சொரூபமதாம் - தனதுசொரூபமாகிய, இன்பம் - ஆன்மானந்தம், தானேதோன்றுமால்-தானாகவேயுண்டாகும். எ - று.

ப - ம். மாயோன்முதல் தம்பமீருயுள்ள சகலப்பிரபஞ்சத்தின்கண்ணேவிளங்கிய உயர்ச்சிதாழ்வுடைய அதிகாரத்தையிட்ட ஆனந்தம் லோபாதிகமாதலால், சமுத்திரம்போல் கானல்நீர்தோன்றினும் அதில்ஈரங்கூடஇராது ஆகையால் மித்தையேதா னென்றும், பிராந்தியினால் மிகுந்ததவம்புரிந்து அவ்வானந்தங்கிடைக்கினும் அதுவும் அதிஷ்டானானந்தத்தின் அணுமாத்திரமான ஆபாசமேயாகுமென்றுங் கூறுவார், "தந்தமளவிலரியாதிதம்பமீருச்சகத்தெல்லா மிந்தவிறைவனானந்த விலேசத்தாலேயின்புறுமால்" எனவும், அவ்வதிகாரஆனந்தங்கள் துக்கரூபங்கள்தானென்றும் விடத்தைப்பிராணப

யமுள்ளவன் தன்னுவதுபோல் அதிஷ்டானசுகத்தையடையக் கெடுதல்செய்யுமென்று அவைகளில் இச்சையில்லாமல் அச்சமென்றும் விடுத்த மகாவைராக்கியமுடைய அதிகாரியை, "அந்தவந்தப்பதத்தாசையற்றோர்க்கு" எனவும், வைராக்கியமுதலிய சாதனமிருந்திடினும் சிவப்பிரசாதமின்றி ஐக்கிய ஞானங்கிடையாது, ஆதலால் அதுவும் சிவனது திருவருளாலேகிடைப்பதென்றும், அப்படிக்கிடைத்திடினும் அதுவும் தனதுசுபாவமேயாதலால் சுதந்திரமென்றும், தன்சொரூபம் ஆனந்தவடிவமாக எப்போதும் இருந்திடினும் அவித்தையால் துக்கரூபமாகக்காணப்பட்டதனுல் அபரோக்ஷத்தில் அதுவும் மாறிச் சுயவானந்தமாக விளங்குமென்றுங்கூறுவார், "அருளாலுள்ளபடி தோர்ந்தமறுதன் சொரூபமதாமின்பந்தானேதோன்றுமால்" எனவுங்கூறினுர்.

## அவதாரிகை.

சாகரத்தில் அலை நுரை குமிழி முதலியவைபோல், இரணியகற்பாந்தமாயுள்ள இவ்வதிகார ஆனந்தங்கள் எதிலொடுங்குகின்றதோ அந்தப்பிரமம் பரிச்சேதமில்லாததனுல் நிரதிசயானந்தமாகப் பவிக்கின்றதெனத் தாற்பரியங்கொண்டு அதனைச்சாதிக்கவேண்டி, எவன் அதிகாரியாகியபுருடனிதயத்தில் இருக்கின்றுனே எவன் ஆதித்தனிதயத்தில் இருக்கின்றுனே அவன் ஒருவனேயெனவும், அவனை விவேகத்தால் சர்வக்கிய கிஞ்சிக்கிய உபாதிகளைத் திரிசியங்களாகத்தள்ளி எவன் அபரோக்ஷமாக அறிகின்றுனே அவன் அறிகின்றுனெனவுங் கூறுகின்றுர்.

## வேறு.

பருதிநெஞ்சினுமொழிந்தவர்நெஞ்சினும்பரனே
கரியதாகிநின்றறிபவன்காயமேமுதலாம்
பொருளைமாய்வுறத்தத்துவவிவேகத்தாற்போக்கிக்
கரியதாகியவீசனைக்கண்டவன்கண்டான.

இ - ள். பருதிநெஞ்சினும் - ஆதித்தனிருதயத்திலும், ஒழிந்தவர்நெஞ்சினும் - ஏனையர் இருதயத்திலும், பரனே - பரமசிவனே, கரியதாகிநின்று - சாக்ஷியாகவேநின்று, அறிபவன் - (தானே)அறிகின்றவன், (ஆகையால்), காயமேமுதலாம்பொருளை - (சாக்ஷியமாகிய) தேகமுதல் (மாயையீருன) அனைத்தையும், தத்துவவிவேகத்தால் - தத்துவவிவேகத்தினுல், மாய்வுறப் போக்கி - மடியும்படிதள்ளி, கரியதாகிய - சருவசாக்ஷியாகிய, ஈசனை - பரமசிவனை, கண்டவன் - (எவன்) பார்த்தானே, (அவனே), கண்டான் - பார்த்தவனுவான். எ - று.

ப - ம். இரணியகற்பன் தன்னைமூன்றுபாகமாக்கி அதில் ஆதித்தனை இரண்டாவதாயும் வாயுவை மூன்றுவதாயும் கொண்டான் என்றசுருதியினுல், முந்தியசரீரியான இரணியகற்பனது இருதயத்தில் சுத்தசத்துவப்பிரதான

மாயோபாதிகனுகவும், அனுவிருதஞானனுகவும், ஈசன் விளங்குகின்ருனென்பார், "பருதிநெஞ்சினும்" என்ருர். (உக)

அவதாரிகை.

பரமசிவத்தின் லீலாவிக்கிரகதாரிகளான அவதாரவிசேடங்களாகிய மும்மூர்த்திகளுக்கும் மற்றனைத்திற்கும் சாக்ஷியாகத்தன்னைத் தர்க்கப்பிரமாணங்களால் அறிந்தவன் ஆன்மதரிசியென நிரதிசய நிருவிகார சச்சிதானந்த ஏகரச பிரமாஸ்தித்துவம் கூறப்பட்டதனுல், அது உணடோ இல்லையோ என்ற சங்கையை நிராசரித்து, அவித்துவானும் அதனை அடைகின்ருனு இல்லையா என்ற கேள்விக்கு உத்தரமாக இந்தப்பிரகாரம் அறிந்தவன் எவனே அவனொருவனே அறிந்தவன் என்றதுமுதல் ஆனந்தமயனை உபசங்கிரமிக்கின்ருன் என்றது ஈருகச்சொன்னசுருதியின் பொருளைக் கூறுகின்ருர்.

வேறு.

உருத்திரன்மான்முதலாகத்தம்பமீரு யுளபொருட்குஞ்சான்ருகு மொருவன்றன்னைக், கருத்துறத்தர்க்கத்தாலுமானத்தாலுங்கண்டவன்கண்டவன்றர்க்கமானஞானங், கருத்துறவுள்ளவனுலகினின்றுந்தன்னைத் தன்னலேவேறுபடக்கழற்றிக்கற்ருே, னுருத்துவருமன்னதிகோசமெல்லாமுட்பகிருமிறைவனருளொன்றினுலே.

இ-ள். உருத்திரன் மால்முதலாக - உருத்திரன் நாரணன்முதலாக, * தம்பமீருயுளபொருட்கும்- ஸ்தம்பாந்தமுள்ளபொருள்களனைத்திற்கும், சான்ருகும் - சாக்ஷியான, ஒருவன்றன்னை - பரமசிவனை, கருத்துற - இருதயத்திற்பொருந்த, தர்க்கத்தாலும் - தருக்கத்தினுலும், மானத்தாலும் - பிரமாணத்தினுலும், கண்டவன் - (எவன்) பார்த்தவனே (அவனே), கண்டவன் - (அபரோக்ஷமாகப்) பார்த்தவன், தர்க்கம் - யுக்தியோடும், மானம் - சுருதியோடுங் (கூடிய), ஞானம் - விஞ்ஞானம், கருத்துறஉள்ளவன் - (எவன்) சித்தத்திற்பொருந்த இருக்கின்ருனே (அவனே), உலகில்நின்றும் - இவ்வுலகத்தில் நின்றும், தன்னலே - தன்னுலேயே, தன்னை - (கூடஸ்தனுகிய) தன்னை, வேறுபட - வேருக, கழற்றி - பிரித்து, கற்ருேன் - அறிந்தவன், இறைவனருளொன்றினுலே - சிவப்பிரசாதமொன்றினுலேயே, உருத்துவரும் - (ஆபாசமாகத்) தோற்றிவருகின்ற, அன்னதிகோசமெல்லாம் - அன்னமயாதிகோசங்களையெல்லாம், உட்பகிரும்- ஆந்தரமாகப் பிரித்தறிவான். எ-று.

---

* தம்பமென்பது-ஒருபூச்சி, ஒன்றன்மேலொன்று அடுக்காக ஏழுபானையில் ஜலம்வைத்திடில் அந்தஜலம் பொசியாமலிருக்கவும் ஏழுபானையுநீங்கி வெளிவரும், அதற்குமூனறுஅவத்தைகளுமுண்டு.

யமுள்ளவன் தள்ளுவதுபோல் அதிஷ்டானசுகத்தையடையக் கெடுதல்செய்யுமென்று அவைகளில இச்சையில்லாமல் துச்சமென்றும் விடுத்த மகாவைராக்கியமுடைய அதிகாரியை, "அநந்தவந்தப்பதத்தாசையற்றோர்க்கு" எனவும், வைராக்கியமுதலிய சாதனமிருந்திடினும் சிவப்பிரசாதமின்றி ஐக்கிய ஞானங்கிடையாது, ஆதலால் அதுவும் சிவனதுதிருவருளாலேகிடைப்பதென்றும், அப்படிக்கிடைத்திடினும் அதுவும் தனதுசுபாவமேயாதலால் சுதந்திரமென்றும், தன்சொரூபம் ஆனந்தவடிவமாக எப்போதும் இருந்திடினும் அவித்தையால் துக்கரூபமாகக்காணப்பட்டதனுல் அபரோக்ஷத்தில் அதுவும் மாறிச் சுயவானந்தமாக விளங்குமென்றுங்கூறுவார், "அருளாலுள்ளபடி தொந்தமறுதன் சொரூபமதாமின்பந்தானேதோன்றுமால்" எனவுங்கூறினர்.

அவதாரிகை.

சாகரத்தில் அலை நுரை குமிழி முதலியவைபோல், இரணியகற்பாந்தமாயுள்ள இவ்வதிகார ஆனந்தங்கள் எதிலொடுங்குகின்றதோ அந்தப்பிரமம் பரிச்சேதமில்லாததனுல் நிரதிசயானந்தமாகப் பவிக்கின்றதெனத் தாற்பரியங்கொண்டு அதனைச்சாதிக்கவேண்டி, எவன் அதிகாரியாகியபுருடனிதயத்தில் இருக்கின்றனோ எவன் ஆதித்தனிதயத்தில் இருக்கின்றனோ அவன் ஒருவனேயெனவும், அவனை விவேகத்தால் சர்வக்கிய கிஞ்சிக்கிய உபாதிகளைத் திரிசியங்களாகத்தள்ளி எவன் அபரோக்ஷமாக அறிகின்றனோ அவன் அறிகின்றனெனவுங் கூறுகின்றார்.

வேறு.

பருதிநெஞ்சினுமொழிந்தவர்நெஞ்சினும்பரனே
கரியதாகிநின்றறிபவன்காயமேமுதலாம்
பொருளைமாய்வுறத்தத்துவவிவேகத்தாற்போக்கிக்
கரியதாகியவீசனைக்கண்டவன்கண்டான.

இ - ள். பருதிநெஞ்சினும் - ஆதித்தனிருதயத்திலும், ஒழிந்தவர்நெஞ்சினும் - ஏனையர் இருதயத்திலும், பரனே - பரமசிவனே, கரியதாகிநின்று - சாக்ஷியாகவேநின்று, அறிபவன் - (தானே)அறிகின்றவன், (ஆகையால்), காயமேமுதலாம்பொருளை - (சாக்ஷியமாகிய) தேகமுதல் (மாயையீறுன) அனைத்தையும், தத்துவவிவேகத்தால் - தத்துவவிவேகத்தினுல், மாய்வுறப் போக்கி - மடியும்படிதள்ளி, கரியதாகிய - சருவசாக்ஷியாகிய, ஈசனை - பரமசிவனை, கண்டவன் - (எவன்) பார்த்தானே, (அவனே), கண்டான் - பார்த்தவனுவான். எ - று.

ப - ம். இரணியகற்பன் தன்னைமூன்றுபாகமாக்கி அதில் ஆதித்தனை இரண்டாவதாயும் வாயுவை மூன்றாவதாயும் கொண்டான் என்றசுருதியினுல், மூர்த்தியசரீரியான இரணியகற்பனது இருதயத்தில் சுத்தசத்துவப்பிரதான

மாயோபாதிகனாகவும், அனாவிருதஞானனாகவும், ஈசன் விளங்குகின்றானென்பார், “பருதிநெஞ்சினும்” என்றார். (உக)

## அவதாரிகை.

பரமசிவத்தின் லீலாவிக்கிரகதாரிகளான அவதாரவிசேடங்களாகிய மும்மூர்த்திகளுக்கும் மற்றனைத்திற்கும் சாக்ஷியாகத்தன்னைத் தர்க்கப்பிரமாணங்களால் அறிந்தவன் ஆன்மதரிசியென நிரதிசய நிருவிகார சச்சிதானந்த ஏகரச பிரமாஸ்தித்துவம் கூறப்பட்டதனால், அது உணடோ இல்லையோ என்ற சங்கையை நிராகரித்து, அவித்துவானும் அதனை அடைகின்றானா இல்லையா என்ற கேள்விக்கு உத்தரமாக இந்தப்பிரகாரம் அறிந்தவன் எவனோ அவனொருவனே அறிந்தவன் என்றதுமுதல் ஆனந்தமயனை உபசங்கிரமிக்கின்றான் என்றது ஈறாகச்சொன்னசுருதியின் பொருளைக் கூறுகின்றார்.

## வேறு.

உருத்திரன்மான்முதலாகத்தம்பமீறா யுளபொருட்குஞ்சான்றாகு
மொருவன்றன்னைக், கருத்துறத்தர்க்கத்தாலுமானத்தாலுங்கண்டவ
ன்கண்டவன்றர்க்கமானஞானங், கருத்துறவுள்ளவனுலகினின்றுந்த
ன்னைத் தன்னாலேவேறுபடக்கழற்றிக்கற்றோ, னுருத்துவருமன்னாதி
கோசமெல்லாமுட்பகிருமிறைவனருளொன்றினாலே.

இ-ள். உருத்திரன் மால்முதலாக - உருத்திரன் நாரணன்முதலாக, * தம்பமீறாயுளபொருட்கும்- ஸ்தம்பாந்தமுள்ளபொருள்களனைத்திற்கும், சான்றாகும் - சாக்ஷியான, ஒருவன்றன்னை - பரமசிவனை, கருத்துற - இருதயத்திற்பொருந்த, தர்க்கத்தாலும் - தருக்கத்தினாலும், மானத்தாலும் - பிரமாணத்தினாலும், கண்டவன் - (எவன்) பார்த்தவனோ (அவனே), கண்டவன் - (அபரோக்ஷமாகப்) பார்த்தவன், தர்க்கம் - யுக்தியோடும், மானம் - சுருதியோடுங் (கூடிய), ஞானம் - விஞ்ஞானம், கருத்துறஉள்ளவன் - (எவன்) சித்தத்திற்பொருந்த இருக்கின்றானோ (அவனே), உலகில்நின்றும் - இவ்வுலகத்தில்நின்றும், தன்னாலே - தன்னாலேயே, தன்னை - (கூடஸ்தனாகிய) தன்னை, வேறுபட - வேறாக, கழற்றி - பிரித்து, கற்றோன் - அறிந்தவன், இறைவனருளொன்றினாலே - சிவப்பிரசாதமொன்றினாலேயே, உருத்துவரும் - (ஆபாசமாகத்) தோற்றிவருகின்ற, அன்னாதிகோசமெல்லாம் - அன்னமயாதிகோசங்களையெல்லாம், உட்பகிரும்- ஆந்தரமாகப் பிரித்தறிவான். எ-று.

---

* தம்பமென்பது-ஒருபூச்சி, ஒன்றன்மேலொன்று அடுக்காக ஏழுபானையில் ஜலம்வைத்திடில் அந்தஜலம் பொசியாமலிருக்கவும் ஏழுபானையுநீங்கி வெளிவரும், அதற்குமூன்றுஅவத்தைகளுமுண்டு.

ப-ம். எப்படிச் சாதகனிடத்தில் அவன் அவத்தைகளுக்குக் கூடத்தன்சாக்ஷியாயிருக்கின்றானோ அப்படியே மும்மூர்த்திகளது தொழில்களுக்கும் விசேடமின்றிச் சாக்ஷியாகவேயிருக்கின்றானென்றும், அப்படியே தம்பம்வரையிலும் சாக்ஷியாயிருக்கின்றானென்றும், கூறுவார், "உருத்திரன் மான்முதலாகத்தம்பமீறாயுளபொருட்குஞ்சான்றாகுமொருவன்" எனவும், ஐக்கியச்சுருதிப்பிரமாணத்தாலும் அதனையனுசரித்தயுத்தியாலும், சந்தேகமில்லாமல் அபரோக்ஷமாக அறிந்தவனே ஆன்மதரிசியென்பார், "கருத்துறத் தர்க்கத்தாலுமானத்தாலுங்கண்டவன்" எனவும், சுருதியுத்தியனுபவமுடைய பிரமவித்தினை, "தர்க்கமான ஞானங்கருத்துறவுள்ளவன்" எனவும், காணப்பட்டதாயும் பிருதிவி அந்தரிக்ஷ சுவர்க்காதி பேதமாயும்உள்ள நிகிலமான அனான்மப்பிரபஞ்சத்தினின்றும் என்பார், "உலகினின்றும்" எனவும், ஆன்மாவாகிய பிரபஞ்சசாக்ஷியான கூடத்தசைதன்னியத்தை, "தன்னை" எனவும், இஃதனான்மா இஃதான்மா எனப் பகுத்தறிகின்றபுத்தியால் என்பார், "தன்னால்" எனவும், மற்றனைத்தையும் அனான்மாவாகக்கருதி அன்னமய ஆன்மாவாகப்பவித்து என்பார், "வேறுபடக்கழற்றி" எனவும், அப்படியே ஆனந்தமயன் வரைக்கும் அனான்மாவாகத்தள்ளுங்கால் அவ்வைந்து கோசங்களுக்கும் வேறுபட ஆந்தரமாகிச் சருவஜகக்கற்பனைக்கும் அதிஷ்டானபுச்சமென்ற சத்தியஞானானந்த ஏகரசமாம் பிரமத்தை கண்டகத சாமீகரம்போல் தானாக அடைகின்றானென்பார், "அன்னாதிகோசமெல்லாமுட்பகிரும்" எனவும், சிவார்ப்பணபுத்தியால் அனுட்டிக்கப்பட்ட எக்கியம் தானம் தவமுதலியவற்றால் பிரசன்னனாயிருக்கின்ற பரமசிவத்தின் கிருபையினாலேயே ஆன்மப்பிராப்தியுண்டாகும் என்பார், "இறைவனருளொன்றினால்" எனவுங், கூறினார்.

தாற்பரியம். இதனால் சச்சிதானந்தமானபரமசிவம் தேவேசவுபாதியால் நேரிட்டபரிச்சேதமில்லாததுபற்றி அபரிச்சின்னநிரதிசய ஞானானந்த ஏகரசமாகக்கூறப்பட்டது. இது, பிரமவித்து பரத்தை அடைகின்றான் என்ற சுருதியின் சூத்திரபதத்தின் தாற்பரியமாகியசருவகாமங்களையும் பிரமரூபனாகவிருந்து புசிக்கின்றான் என்றமந்திரபாகத்தினஉரையாதலால் முடிவிற்சொல்லத்தக்கது. ஆயினும் சுருதியில் இந்தச்சிதாகாயமான ஆனந்தமில்லாவிடில் என்றவாக்கியம் உபனியாசஞ்செய்யப்பட்டது. அதனைச் சமர்த்திக்கவேண்டி இவ்விடத்தே பிராசங்கிகமாகக் கூறப்பட்டதென அறியத்தக்கது. வித்துவானே அடைகின்றானென்றமையால் அவித்துவானும் அடையவானா அடையமாட்டானா என்றகேள்வி நிராகரிக்கப்பட்டதென்றறிக. ()

## அவதாரிகை.

இவ்வாறு அறிந்தமாத்திரத்தால் பிரமப்பிராப்தியைக்கூறியதனால் பிரமவித்து பரத்தையடைகின்றானென்ற சுருதியின்சூத்திரவாக்கியமும், அதன் உரையாகிய எவனறிகின்றானோ என்றதுமுதல் புசிக்கின்றானென்றது ஈறாயுள்ள மந்திரபாகமும், முற்கவிவரைக்கும உரைசெய்யப்பட்டது. அத்துவிதீயபிர

திசயானந்த அபயப்பிரமப்பிராப்தியானது, ஞானமாத்திர சாத்தியமென்று தன்னாற்கூறப்பட்ட பொருளில் சம்வாதநிமித்தமாக எதில் நின்றும் வாக்குகள் மனத்தோடும் எட்டமாட்டாமல் திரும்பிவிடுகின்றனவோ, அந்தப்பிரமானந்தத்தை அறிந்தவன் ஓரிடத்தினின்றும் பயமடையானென்று சுருதியில் மந்திரவாக்கிய மாயிருக்கின்றது, அவ்வாகியப்பொருளைக் கூறுகின்றார்.

வேறு.

விளம்பும்வாக்குயாதொன்றின்பக்கற்செல்லாதேமீளும்
விளம்பும்வாக்குத்தான்விளம்பவிசேடமொன்றும்பெறுமையினால்
விளம்பும்வாதஞ்சிறிதில்லைவிசேடம்பெறிலேவிசேடமாம்
விளம்பலாவதறுஞ்சிவனையுளையால்விளம்பும்பரிசென்னே.

இ-ள். விளம்பும்வாக்கு - சொல்லப்பட்டவாக்கானது, யாதொன்றின் பக்கல் - எதனிடத்தில், செல்லாதேமீளும் - போகாமல் திரும்பிவிடும், விளம்பும்வாக்குத்தான் - சொல்லப்பட்ட (அந்த) வாக்கானது, விளம்பவிசேடம் ஒன்றும் பெறுமையினால் - நிரூபிக்க விசேடம் ஒன்றும் அடையாமையினால், விளம்பும்வாதம்சிறிதில்லை - சொல்லத்தக்கவாதங் கொஞ்சமும் இல்லை, விசேடம்பெறில் - விசேடத்தை அடைந்திடுமானால், விசேடமாம் - (நிர்விசேடமாகியபிரமம்) சவிசேடமாய்விடும், விளம்பலாவதுஅறும் சிவனை - சொல்லலாகுந்தன்மையில்லாத (நிர்விசேஷ) பரமசிவத்தை, உளையால்-வாக்கால், விளம்பும்பரிசு என்னே - சொல்லுந் தன்மை என்னிருக்கின்றது. எ-று. (௬௧)

இதுவுமது.

யாதொன்றின்பாலெங்குங்கோசரமாமிந்தமனஞ்செல்லா
தியாதொன்றின்பாற்செவிமுதலிந்தியங்கள்விடயங்களுஞ்செல்லா
தோதுஞ்சச்சிதானந்தவொன்றும்பிரமமதுதன்னைப்
பேதமறத்தன்வடிவாகப்பெற்றானச்சமற்றானல்.

இ-ள். யாதொன்றின்பால் - எந்தவஸ்துவினிடத்தில், எங்குங்கோசரமாம் - எவ்விடத்தையும்விஷயீகரிக்கின்ற, இந்தமனம் - இந்தமனமானது, செல்லாது - அடையமாட்டாதோ, யாதொன்றின்பால் - எந்தவஸ்துவினிடத்தில், செவிமுதல் இந்தியங்கள் - சுரோத்திரமுதலான ஞானேந்திரியங்களும், விடயங்களும் - விஷயங்களும், செல்லாது - சேரமாட்டாதோ, (அஃதே), ஓதும் - சொல்லப்பட்ட, சச்சிதானந்த ஒன்றும்பிரமம் - சச்சிதானந்தஅத்துவிதமாகியபிரமமாகும், அதுதன்னை - அந்தப்பிரமத்தை, பேதமற - துவிதம் நீங்கும்படி, தன்வடிவாகப்பெற்றான் - தன்சொருபமாகஅடைந்தவனே, அச்சமற்றான் - பயம்நீங்கினவனாவான். எ-று.

ப-ம். சத்தப்பிரவிர்த்திக் கேதுவான ஜாதிகுணகிரியா சூனியமென்பார், "விசேடமொன்றும்பெறுமையினால்" எனவும், பிரமம் வாக்குமனங்களுக்கெ

அ

ட்டாதெனில் பிரமாணத்திற்கு அவிடய மானதுபற்றி நரசிருங்கம்போல அச த்தாகுமெனில் இதுதோஷமாகாது. பிரமம் அவிடயமாயினும் அதனைலக்ஷியப் படுத்தக்கூடும். எங்ஙனமெனில் சத்தியஞானமுதலியவாக்கியம் உலகசித்த சத் தியமுதலியவற்றைச் சொல்லியவழியே முன்சொல்லிய விசேஷணமுடைய பிரமத்தைவிதிமுகமாக இலக்கணையாற்கூறிற்று. நேதிவாக்கியமோவெனில் பி ரமபின்னசகலவத்துவினிஷேதனத்தால் பிரபஞ்சாபாவாவச்சின்னமாகக்கொ ண்டு வியதிரேகமுகமாக லக்ஷணையாற் கூறுகின்றது. ஆனுல் இந்தவேதார்த்த ம் அறியப்படாதபொருளை அறியப்படுத்துவதனுல் உற்பத்திவிதியாகும். ஆனு ல் பூருவமீமாஞ்சகர்கள்நியாயப்படி லக்ஷணைகூடாதெனில், வத்துக்களையிட் டு நியமமாயுள்ள வாச்சியார்த்தத்தைத்தள்ளி லக்ஷணைஅங்கீகரிக்கப்பட்டிடில் இலக்கியார்த்தம் நியமமாகாததுபற்றி அனேகார்த்தமாகச் சந்தேகம்வருமெ ன்றுதாற்பரியங்கொண்டல்லவா விதியினிடத்திலிலக்கணை கூடாதென்றது. எ வ்விடத்தில் பிரகாராந்தரத்தால் சந்தேகம்நீங்கப்படுமோ அவ்விடத்தில் ல க்ஷணை தூஷிக்கப்படாது, எப்படிப் பாதி உள்வேதியென்பதில் பாதி வெளிவே தியென விதியினியாயலக்ஷணையோ அப்படியே பிரமபின்னமானசகலத்தை யும் நிஷேதிப்பதனுல் அனேகார்த்த ஸந்தேகமின்மையால் மிஞ்சினதாகக் கொண்டு பிரமமேலக்ஷியமாகச் சித்திப்பதனுல் விதியினும்லக்ஷணைகூடும். இதனுலும் லக்ஷியத்தன்மையுடையதாகவேகிரகிக்கப்படுதலால் நிருபாதிக ஞ் சத்தத்திற்கவிடயமென நினைக்கத்தக்கதல்ல. லக்ஷியத்தன்மை உபலக்ஷ ணமானதுபற்றி கிராகியகோடியிற் பிரவேசமில்லாமையின் வாக்கிற்கவி டயமென்பது அபிதாவிருத்தி அபிப்பிராயம். அதனுலேயன்றோ சுருதியு ம் அவ்வுபநிடதபுருடனை கேட்கின்றேனெனக் கூறிற்று. விதியென்றும் நி ஷேதமென்றும் வாக்கியம்இரண்டு பிரிவுடைய தாதலால் அதனுலுண்டாகிய பிரமாகாரமனோவிருத்தியும் இரண்டு பிரிவுடையதாகும். அவைகளில் விதி வாக்கியத்தாலுண்டாகிய மனோவிருத்தியானது உபாதியுடையதாயினும் த னதாசிரயபெலத்தால் நிருபாதிகப்பிரமத்தைத் தெரியும்படியேசெய்கின் றது. இதனுற் பிரமம் மனோவிருத்திக்குவிடயமென்பதும் பங்கப்படாது. ம னோவிருத்தி இருப்பதுபற்றிச் சோபாதிகமாதலால், வத்துத்தன்மை இல்லா ததாயும்ஆகாது. உபாதி உபலக்ஷணமானதுகொண்டு விடயகோடியைச்சாரா மையின். இப்படியே நிஷேதவாக்கிய ஜனிதமனோ விருத்தியும் வியதிரேகாவ ச்சின்னமாகக்கொண்டு பிரமத்தைக்கோசரிப்பித்து அவச்சேதமானபிரபஞ் சம் இன்மையெனும் வியதிரேகத்தையும் விருத்தியாந்தன்னையும் கதகரேணு நியாயமாக நிவிர்த்தியாகும்படி செய்கின்றது. இந்த அபிப்பிராயங்கொண் டு சுருதியும் மனத்தினுலேயே அடையத்தக்கதெனக்கூறியது. இந்தப்பிரகா ரம் உபாதிசம்பந்தமில்லாத நிருபாதிகமாகிய அத்தியந்த நிருவிகற்பமாம்பி ரமம் வாக்குமனங்களுக்கவிடயமென்பார், "(முன்செய்யுளில்) விளம்பும்வா க்குயாதொன்றின்பக்கற் செல்லாதேமீளும்" எனவும், (இந்தச்செய்யுளில்), யாதொன்றின் யாலெங்குங்கோசரமாயிந்த மனஞ்செல்லாது" எனவும், தன

க்குவேறுகப் பயத்திற்கேதுவான இரண்டாம் வத்துவில்லாததனுற் பயமில்லையென்பார், "அச்சமற்றான்" எனவுங்கூறினர். (கூஉ)

அவதாரிகை.

சுருதியிற் பிரமவித்தென்பவனை சுபாசுபகன்மங்கள் தபிக்கச்செய்யாதென்ற பொருளையும், நற்கன்மத்தை நான்செய்யவில்லை பாபகன்மத்தைத்தான் நான்எவ்வாறுசெய்தேனென்ற பொருளையுஞ், சுருதியில் இந்தப்பிரகாரமாகவறிந்தவனுக்குப் புண்ணியபாபங்கள் ஆன்மாவாகவிளங்குமென்ற பொருளையுங் கூறுகின்றார்.

வேறு.

அன்புறுகுரவனருளினலிங்ஙனறிந்தவனயர்ந்திருவினையாற்
றுன்புறான்றுன்பஞ்செய்வதுந்துன்பந்துய்ப்பதுமாகியதோற்ற
முன்பதாம்வேதமுடிவுவாக்கியத்தான்மூளைத்தஞானத்தினன்முற்று
மின்பமாந்தன்னதுருவமாயிலங்குமிறைமிகுதிருவருளதனல்.

இ-ள். அன்புறு - கிருபைபொருந்திய, குரவன் அருளினல் - குருவினுபதேசத்தினல், இங்ஙன் அறிந்தவன் - இத்தன்மையாக எவனறிகின்றானே, (பிரபுவாகிய அவனே), இருவினையால் அயர்ந்து - புண்ணியபாவங்களால்தளர்ந்து, துன்புறான் - துயரம்பொருந்தமாட்டான், துன்பஞ்செய்வதும் - துக்கப்படச்செய்கின்றதும், துன்பந்துய்ப்பதுமாகியதோற்றம் - துக்கத்தையனுபவிப்பதுமாகிய காக்ஷிப்பொருள், முற்றும் - அனைத்தும், முன்பதாம் வேதமுடிவுவாக்கியத்தால் - முந்தியதானவேதாந்த மகாவாக்கியத்தால், மூளைத்தஞானத்தினல் - உண்டாகிய அறிவினலும், இறை மிகுதிருவருளதனல் - பரமசிவனதுபரிபூரணப் பிரசாதத்தினலும், இன்பமாம் - பிரத்தியகான்மானந்தமாகிய, தன்னதுருவமாய் - தன்னுடைய சொரூபமாகவே, இலங்கும் - விளங்கும். எ-று.

ப-ம். அஞ்ஞனல்லவா மரணவத்தையில் எக்கியதானதிசுபகன்மஞ் செய்யாததுகொண்டு சொர்க்கத்தையடையாத்தன்மையையும், தான்செய்தபாபத்தின்பலமான நரகஞ்சேருந்தன்மையையும் ஆலோசித்து அவைகளாற்பயமுடையவனவான். ஞானியோவெனில், மூலாஞ்ஞான நிவிர்த்தியானதுபற்றி கிரியாகாரகபலமானபிரபஞ்சம் பாதிக்கப்பட்டதனல் வருபிறப்பைக்கொடுக்கத்தக்க கன்மபஞ்சரம் ஞானக்கினியால்தகிக்கப்பட்டு வருபிறவிநீங்கலால் தன்னைத்துயருறச் செய்யானென்பார்,"இருவினையாற்றுன்புறான்" எனவும், சாதுவாகியும் அசாதுவாகியுமுள்ள கருமங்களை, "துன்பஞ்செய்வதும்" எனவும், போக்திருப்பிரபஞ்சத்தை, "துன்பந்துய்ப்பதுமாகியத்தோற்றம்" எனவுங்கூறினர். (கூஙு)

## அவதாரிகை.

முற்கவியில் அனைத்துஞ்சுகவடிவான பிரத்தியகான்மசொரூபமாக விள ங்குவதென்றபடியே இந்தக்கவிமுதல் வித்தரித்துக் கூறுகின்றார்.

### வேறு.

செய்வான்செய்விப்பவன்செய்யும் பொருள்செய்கருவிசெய்தொ ழிலென், றைவாய்ப்பொருளும்வெறுமான்மாவாகித்தோன்றுமிறை யருளா, லெய்யாமானமறிபொருளு மறிவோனென்னப்படும்பேத, மெய்யாமிறைவன்றிருவருளாலெல்லாந்தானாய்விளங்குமால.

இ-ள். இறை அருளால் - பரமசிவப்பிரசாதத்தினால், செய்வான் - கர்த்தா, செய்விப்பவன் - காரயிதா, செய்யும்பொருள்-செயப்படுபொருள், செய்கருவி - கரணம், செய்தொழிலென்று - கருமமென்று சொல்கின்ற, ஐவாய்ப்பொருளும் - ஐந்தினிடத்தடங்கியவெல்லாப்பொருள்களும், வெறும் ஆன்மாவாகி - கேவலம் ஆன்மாவானதானாகவே, தோன்றும் - விளங்கும், எய்யா - இளையாத, மானம் - பிரமாணமும், அறிபொருளும் - பிரமேயமும், அறிவோன் - பிரமாதாவும், என்னப்படும் பேதமெல்லாம் - என்று சொல்லப்பட்டபேதமெல்லாம், மெய்யாம் - உண்மைப்பொருளாகிய, இறைவன் - பரமசிவத்தின், திருவருளால் - பிரசாதத்தால், தானாய்விளங்கும்-தானாகவேபிரகாசிக்கும். எ-று. (௩௪)

துய்க்குமவன்றான்றுய்ப்பிப்பான்றுய்க்கும்பொருடான்றுய்த்தருன், கைக்கொள்பொருள்கொள்பவன்கொள்கை கடவுளருளாற்றானேயா,மைக்கொள்ஞானமொன்றொன்றா மாறுஞானமையமுறுந்,துய்க்குஞானமுற்றுமிறையருளாற்றானேயாய்த்தோன்றும்.

இ-ள். துய்க்குமவன்தான் - புசிப்பவன், துய்ப்பிப்பான் - புசிக்கச்செய்பவன், துய்க்கும்பொருள்தான் - புசிக்கப்படுபொருள், துய்த்தல்தான்-புசித்தல், கைக்கொள்பொருள் - கிரகிக்கும்பொருள், கொள்பவன் - கிரகிப்பவன், கொள்கை - கிரகித்தல், (இவையெல்லாம்), கடவுளருளால் - பரமசிவப்பிரசாதத்தால், தானேயாம் - தானாகவேவிளங்கும், மைக்கொள்ஞானம் - அஞ்ஞானம், ஒன்றொன்றாமாறுஞானம் - ஒவ்வொன்றாகமாறுபடுகின்ற பிராந்திஞானம், துய்க்கும் ஐயமுறும்ஞானம் -அனுபவிக்கின்ற சமுசயம்பொருந்தும்ஞானம், முற்றும்-இவையனைத்தும், இறையருளால்- பரமசிவப்பிரசாதத்தால், தானேயாய் - தானாகவே, தோன்றும் - விளங்கும். எ - று. (௩௫)

### வேறு.

கட்பட்குட்டியமுதலாமிதின்ஞானங்கள் கடமதுகுட்டியங்குதுலம் படமதாகுந்,தடமலைபாதாளமுதலுலகமற்றைச் சத்தியமேமுதலான

வுலகமெல்லா, மிடவியமாமலரவன்றனண்டமித்திற் கற்பிதமாமெல்லேயிலண்டங்களெல்லாங்,கடறடமாறுகண்மற்றுங்கண்டதெல்லாங் கடவுளருளதனலேதானய்க்காணும்.

இ-ள். கடபடகுட்டியமுதலாம்இதின்ஞானங்கள் - குடம் வத்திரஞ் சுவர்முதலான இவற்றின்ஞானங்களும், கடமது - கலசம், குட்டியம் - சுவர், குதுலம் - குதிர், படமது-வத்திரம், ஆகுந்தடமலே - வித்தாரமாகியமலே, பாதாளமுதலுலகம் - பாதாளமுதலானவுலகம், மற்றைச்சத்தியமே முதலானஉலகம் எல்லாம் - இன்னமுள்ள சத்தியலோக முதலான உலகங்கள் அனைத்தும், இடவிய - விரிவாயுள்ள, மாமலரவன்றன்அண்டம் - பெருமைபொருந்திய பிரமதேவனுற்படைத்த இவ்வண்டமும், இத்தில் - இந்தச்சிவனிடத்தில், கற்பிதமாம் - கற்பிதமாகிய, எல்லேயில்அண்டங்கள்எல்லாம் - அளவில்லாத அண்டங்களனைத்தும், கடல் - சமுத்திரங்களும், தடம் - தடாகங்களும், ஆறுகள் - நதிகளும், மற்றுங்கண்டதெல்லாம் - இன்னமுங்காணப்பட்ட அனைத்தும், கடவுள் அருள் அதனுல்-பரமசிவப்பிரசாதத்தால், தானய்க்காணும் - தானகவேவிளங்கும். எ-று. (௬௬)

வேறு.

மேருமந்தரமுதலதாமிகுத்தமால்வரைகள்
சாருமெல்லேயின்றியவனம்வனத்திலுள்ளவைதான்
றருவந்தமில்விதங்கள்புற்புதலெல்லாந்தானு
வேதமின்றியவிறைதிருவருளினுலிலங்கும்.

இ-ள்- மேருமந்தரமுதலதாம் - மகாமேரு மந்தரம் முதலிய,மிகுத்த-மிகுந்த, மால்வரைகள் - பெரியபருவதங்களும், சாரும் எல்லேயின்றியவனம் - பொருந்திய எல்லேயில்லாதகாடுகளும், வனத்திலுள்ளவைதான் - (அந்த) வனத்திலுள்ளவனைத்தும், தாரு - விருக்ஷங்களும், அந்தமில்விதங்கள் - அளவற்றவருக்கங்களும், புற்புதலெல்லாம் - புல்பூண்டுமுதலனைத்தும், ஏதமின்றிய - குற்றமில்லாத, இறைதிருவருளினுல் - பரமசிவப்பிரசாதத்தால், தானு - தானகவே, இலங்கும் - விளங்கும். எ-று. (௬௭)

வேறு.

வான்முதலாம்பூதங்கள்பௌதிகங்கண் மன்னுமொலிபரிசமுருசுவைநாற்றங்க, ளூன்மருவுகிருமிகீடம்பதங்கமுலவுபசுவிதமோடுமொட்டையாணே, கான்மருவுபரிகரபமனிதர்சித்தர் கந்தருவராக்கரியக்கர்கடாமிக்க, வான்மருவுதேவகணமெல்லாமற்று மாபரமனருளாற்றன்வடிவாய்த்தோன்றும்.

இ-ள். வான்முதலாம் பூதங்கள் - ஆகாசாதிபூதங்கள், பௌதிகங்கள்- பௌதிகங்கள், மன்னும் - நிலேபெற்ற, ஒலி - சத்தம், பரிசம் - பரிசம், உரு-

ரூபம், சுவை - ரஸம், நாற்றங்கள் - கந்தங்கள், ஊன்மருவுகிருமி- தசைபொருந்தியபுழு, கீடம்- வண்டு, பதங்கம்-பறவைகள், உலவுபசுவிதமோடும் - உலவுகின்றபசுவகைகளோடும், ஒட்டை - ஒட்டகம், யானை - மாதங்கம், கான்மருவு - காட்டகத்திருக்கின்ற, பரி - குதிரை, கரபம் - கழுதை, மனிதர் - மானுடர், சித்தர் - சித்தர்கள், கந்தருவர் - கந்தருவர்கள், அரக்கர் - ராக்ஷதர்கள், இயக்கர்கள்தாம் - இயக்கர்கள், மிக்க-பெருமைமிகுந்த,வான்மருவு-ஆகாயத்திருக்கின்ற, தேவகணம் - தேவகணங்கள், எல்லாம் - (இவை) அனைத்தும், மற்றும் - மற்றுமுண்டாகியசகலமும், மா-பெருமைபொருந்திய, பரமனருளால் - பரமசிவப்பிரசாதத்தால்,தன்வடிவாய் - தன்சொருபமாகவே, தோன்றும் - விளங்கும். எ-று. (௩அ)

வேறு.

வினைமிகுவிண்ணோர்விண்ணவர்விண்ணோர்வேந்தனும்விராட்டுடன்சுராட்டு,மெனையடைந்தவரென்செல்வமியானெடுமாலுருத்திரனீசனற்சிவனென், றனைவர்தம்பதங்களவர்களையடைந்தோரவர்கடாமன்னியமின்றித், தனைநிகரில்லாவிறையவனருளாற்சகலமுந்தானெனத்தோன்றும்.

இ - ள். மிகுவினைவிண்ணோர்- மிகுந்தகன்மதேவர்களும், விண்ணவர்-தேவர்களும், விண்ணோர்வேந்தனும் - தேவேந்திரனும், விராட்டுடன்சுராட்டும் - விராட்டென்பவனோடு சுராட்டென்பவனும், எனையடைந்தவர் - என்னையடைந்தவர்களும், என்செல்வம் - என்னுடைய ஐசுவரியமும், இயான் - பிரமனுகிய) நான், நெடுமால்- விஷ்ணு, உருத்திரன் - ருத்திரன், ஈசன் - ஈச்சுரன், நற்சிவனென்று - நன்மைபொருந்திய சதாசிவனென்றுசொல்லப்பட்ட, அனைவர்தம்பதங்கள் - எல்லார்களுடையபதவிகளும்,அவர்களையடைந்தோர்அவர்கள்தாம் - அவர்களையடைந்தவர்களான அவர்கள்தாமும், சகலமும் - அனைத்தும், தனைநிகரில்லா - எந்தவிதத்தாலுந் தனக்குவமை சொல்லக்கூடாத, இறையவன் அருளால் - பரமசிவப்பிரசாதத்தினுல், அன்னியமின்றி - வேறில்லாமல், தானெனத்தோன்றும் - தானுகவேவிளங்கும். எ - று. (௩௧)

தீதெனும்பொருள்கணன்றெனும்பொருள்கள்செய்யலாவனசெயப்பவேதமாமுடலமிந்தியம்பிராணனிசைமனம்புத்தியாங்காரம் (டாததீதுறுகாமங்கோபமேமுதலாந்தியனசாந்திதாந்திகளே
யாதியாநலங்களடையவுந்தானேயாகியேதோன்றுமெய்யருளால்

இ - ள். தீதெனும் பொருள்கள் - தீமையென்று சொல்கின்ற பொருள்களும், நன்றெனும் பொருள்கள் - நன்மையென்கின்ற பொருள்களும், செய்யலாவன - செய்யப்பட்டவைகளும், செயப்படாத - செய்யப்படாதவைகளும், ஏதமாம் - குற்றமாகிய, உடலம்-சரீரம், இந்தியம்-பொறிகள், பிராணன்-உயிர், இசைமனம் - பொருந்தியமனம், புத்தி - புத்தி, ஆங்காரம்-அகங்காரம்,

தீதறுகாமம்- தீமைபொருந்தியகாமம், கோபமேமுதலாந்தியன-குரோதமுத லானகொடுமையுடையவைகளும், சாந்தி தாந்திகளேயாதியாம் - சமம்தமம் இவைகள்முதலான, நலங்கள்அடையவும் - நன்மைகளனைத்தும், மெய்யரு ளால் - சத்தியமானபரமசிவப்பிரசாதத்தால், தானேயாகியே - தான்மாத்தி ரமாகியே, தோன்றும் - விளங்கும். எ - று. (சo)

பேதமாஞ்சிவபரங்களுமவர்கள்பேதமும்பேதிக்குமதுவும், போத மில்சடசத்தியுமதன்பிதையும்போதசத்தியுமதன்பிதையு, மோதுமு ண்டில்லையெனவெழுமுரையிலுள்ளதாம்பொருள்களுமிலாது, மியா துமிவ்விறைவனருளினுற்றன்னதேகமாமுருவமாயெறிக்கும்.

இ-ள். பேதமாம் - பேதமாகிய, சிவபரங்களும் - சிவேசர்களும், அவர் கள்பேதமும் - அவர்களதுபிரிவுகளும், பேதிக்கும்அதுவும்-பேதகவுபாதியனை த்தும், போதமில் - அறிவில்லாத, சடசத்தியும் - சடசக்தியும், அதன்பிதையு ம் - அதன்பேதங்களும், ஓதும் - சொல்லப்பட்ட, உண்டில்லையெனஎழும் - அஸ்திநாஸ்தியென்று உதிக்கின்ற, உரையிலுள்ளதாம்பொருள்களும் - வார் த்தையிலிருக்கின்றபொருள்களும், இலாதும் - இல்லாதபொருள்களும், இயா தும் - மற்றுமுள்ளவனைத்தும், இவ்விறைவன்அருளினுல், இந்தப்பரமசிவப் பிரசாதத்தினுல், தன்னதுஏகமாம்உருவமாய்-தன்னுடைய ஏகமானஸ்வரூப மாகியே, எறிக்கும் - விளங்கும். எ-று. (சுக)

அவதாரிகை.

இவ்விதமானசகலஜகமும் வித்துவானுக்குத் தன்சொரூபமாகவேவிளங் குமானுல் ஆன்மா சவிசேடனேவென்றசங்கைக்குச் சமாதானங்கூறுகின்முர்

வேறு.

தன்னதொளியாற்முன்விளங்கப்படுவானுன்மாவெனத்தகுவா
னன்னவனையேநானீயென்றறியாநின்றவவ்வுளத்தே
யுன்னவரியவவன்றன்னதுண்மையுணராரொருவர்களும்
பின்னமில்லாமையிலறிவார்தாமுமறியப்பெற்றிலரால்.

இ-ள். தன்னதொளியால் - தனதுபிரகாசத்தால், தான்விளங்கப்படு வான் - (வேறுதவியின்றி) தானேயியல்பாகவிளங்குகின்றவன், ஆன்மாவென த்தகுவான் - ஆன்மாவென்று கூறத்தகுவான், அன்னவனையே - அந்தஆன் மாவையே, நான்நீஎன்றுஅறியாநின்ற - நானென்றும்நீயென்றும்விவகாரகால த்திலுணர்கின்ற, அவ்வுளத்தே - அந்தவுள்ளத்திற்றனே, உன்னஅரிய - நினை க்கஅரியதான, அவன்றன்னதுண்மை - அந்தஆன்மாவினுடைய உண்மையை, ஒருவர்களும் உணரார்-ஒருவர்களும்அறியமாட்டார்கள், (ஏன்அறியமாட்டார் களென்னில்), பின்னமில்லாமையில் - ஆன்மாவுக்குவேறாக ஒன்றும்இல்லா

மையினல், அறிவார்தாமும் - பின்னபதார்த்தங்களை யறிந்தவர்களாகியஅவர்களும், அறியப்பெற்றிலர் - அறியுந்தன்மையடையாமற்போனார்கள். எ-று.

ப-ம். தன்னில்ஆரோபிதஜகத்தை விளக்கச் செய்கின்றதாயும் மற்றோருதவியின்றித் தானே விளங்குகின்றதாயுமுள்ள சின்மாத்திரசாக்ஷிஎவனோ அவனேஆன்மாவென்பார், "தன்னதொளியாற்முன்விளங்கப்படுவானான்மாவெனத்தகுவான்" எனவும், ஆன்மா தானாகவே பிரகாசிக்கின்றவனாயின் வித்துவான்களிடம்போல் அவித்துவான்களிடத்தும் பிரகாசிப்பதனால் அவர்களும்முயற்சியின்றி முத்தராவர்களோஎனில் அவர்களிடத்திலான்மா சுயம் பிரகாசனாகவிளங்கிடினும் நீசனென்று அகங்காரியாகவே அறியப்படுதலால் உண்மையாகச்சகல உபாதியும்நீங்கிய அத்துவிதசின்மாத்திரமாகத் தம்மையறியாததனால் முத்தர்களாகமாட்டார்களென்பார், "நானீயென்றறியாநின்றவவ்வுளத்தே உன்னவரியவவன்றன்னதுண்மையுணராரொருவர்களும்" எனவும், ஏன்அறியார்களென்னில் அறிதற்குப் பிரமாதிரு பிரமாண முதலியவற்றை யபேக்ஷிப்பதனால் ஆன்மா அத்துவயனாதலால் அறியமாட்டார்களென்பார், "பின்னமில்லாமையிலறிவார்தாமுமறியப்பெற்றிலர்" எனவுங்கூறினார்.

கருத்து. ஜகம் அத்தியாசத்தால் தோற்றுதலின் மித்தையாதலால் ஆன்மாசவிசேஷனாகானெனக்கொள்க, (௬௨)

அவதாரிகை.

இங்ஙனமாயின் வித்துவான்மாத்திரம் எப்படி அறிவானெனில், அதற்குச்சமாதானமுஞ் சுருதியில் இந்தச்சாமவேதத்தை கானஞ்செய்து கொண்டிருப்பவனென்றதுமுதற் சுவர்ணச்சோதியென்றவரைக்குங் கூறியவித்துவானுடைய கானத்தை பிரயோஜனமாகவுங்கூறுகின்றார்.

அயலான்றித்தன்னைத்தானான்மாவாகவறிவுற்றோ
னியல்பாலிந்தப்பொருளினையேயென்றும்பாடியிருக்குமா
லியல்பாராலுமறிவரியவீசனடம்போலியாவர்க்கும்
நயமார்ஞானவினோதன்றன்கீதநலமேநல்கிடுமால்.

இ-ள். அயல்தானின்றி - வேறில்லாமல், தான் தன்னை ஆன்மாவாக அறிவுற்றோன் - தான்தன்னைப்பரமான்மாவாக அறிந்தவன், இயல்பால் - (அந்தச்) சுபாவத்தினால், இந்தப்பொருளினையே - இவ்வருத்தத்தையே, என்றும் பாடி இருக்கும் - நித்தியமுங்கானஞ் செய்துகொண்டிருப்பான், இயல்பு ஆராலும் அறிவரிய-தன்சுபாவத்தை எவராலும் அறியக்கூடாத, ஈசன் நடம்போல் - பரமசிவத்தினது திருநடனம்போல, நயமார் - இன்பம்பொருந்திய, ஞானவினோதன்றன் - ஞானேல்லாசனுடைய, கீதம் - கானமும், யாவர்க்கும் - எல்லார்களுக்கும், நலமே நல்கிடும் - இன்பமேகொடுக்கும். எ-று.

ப-ம். சிரவணமனனமுதலிய சாதனத்தாலுண்டாகிய உபாதி யில்லாத பிரமான்மவிடயமானமனோவிருத்தியால் ஆவரணஞ்ஞானம் நீங்கிடில்

அத்துவிதியமான ஆன்மாவைத் தானான ஆன்மாவாகவே யபரோக்ஷீகரிக்கின்றானென்பார், "அயமானின்றித்தன்னைத்தானன் மாவாக வறிவுற்றோன்" எனவும், இதுவரைக்கும் யாதொருபோக்திரு போக்கிய போகப்பிரதரூபமான ஜகம் பின்னமாகத்தோற்றியதோ அஃதனைத்தும் நானேதான் கிஞ்சித்தேனும் எனக்கு வேறாகவில்லை, இதுவும் மகத்தாகிய ஆச்சரியமென்றுஞ், சொப்பிரகாச இலக்கணமுடைய பரஞ்சோதிரூபமும் நானே தானென்றுங், கூறிய பொருளுடைய சாமவேதத்தைக் கானஞ்செய்தும், அதன்பொருளை அனுசந்தானஞ்செய்தும், விக்ஷேபத்திற்கு ஏதுவின்மையால் வித்துவான் அனுகூலனாயிருக்கின்றானென்பார், "இந்தப்பொருளினையேயென்றும் பாடியிருக்குமால்" எனவுங் கூறினர். (சாங)

அவதாரிகை.

கூர்மபுராணத்திற் பரமசிவனுலுபதேசிக்கப்பட்ட ஈச்சுவரகீதையைப் போல, வித்துவானதுகானம் உலகத்திற்குஉபகாரமெனக்கூறுகின்றார்.

அன்பினலெம்மாதிகுருவாகுமிறைவனருள்கீதை
யின்பமேசெய்திட லுலகுக்கியல்பாமெவ்வாறவ்வாறே
முன்புபரமன்திருவாக்கான்மொழிந்தகீதைப்பொருளான
பின்பிக்குரவனருள்கீதைபேராவின்பம்பிறப்பிக்கும்.

இ - ள். எம் ஆதிகுருவாகும் இறைவன்-எமது மூலகுருவானசிவபெருமான், அன்பினல் - திருவருளினல், அருள்கீதை - திருவாய்மலர்ந்தருளியகீதையானது, உலகுக்கு-உலகத்திற்கு, இன்பமேசெய்திடல்-சுகத்தையே செய்வது, எவ்வாறு இயல்பாம்-எப்படிச்சுபாவமாகுமோ, அவ்வாறே-அப்படியே, முன்பு - முற்காலத்தில், பரமன்திருவாக்கால் - பரமசிவத்தின்திருவாக்கால், மொழிந்த - (அப்படி) உரைத்தருளிய, கீதைப்பொருளான - அந்தக்கீதையின் அருத்தமாகிய, பின்பு - பிற்காலத்தில், இக்குரவன் - (பிரமநிஷ்டனாகிய) இந்தஆசிரியன், அருள்கீதை - மொழிந்தருளுங்கானமானது, பேராவின்பம் - நீங்காதசுகத்தை, பிறப்பிக்கும் - உண்டாக்கும். எ - று. (௬௪)

அவதாரிகை.

அதனையெவ்வேளையிலுங் கானஞ்செய்கின்றானென்ற மற்றைவாக்கியத்தாலும் வித்துவானுக்குக்கானங்கூடுமென்றுகூறுகின்றார்.

வேறு.

உலகியல்பாங்கீதைக்குமுவந்தருளுமிறையென்று
விலகியவைதிககீதைக்கேன்செய்யானிறையதனை
னலமிகுத்தபொருள்வேண்டினலமிகுபத்தியினேடும்
பலமிகுநற்கீதைகளேயெப்பொழுதும்பாடுவான்.

இ - ள். உலகியல்பாங்கீதைக்கும் - லௌகிகமானகானத்திற்கும், இறை உவந்தருளும் என்றால்-சிவபெருமான்மகிழ்ந்து திருவருள்செய்வானென்றால், இலகியவைதிககீதைக்கு - விளங்குகின்றவைதிககானத்திற்கு, இறை - பரமசிவன், ஏன்செய்யான் - ஏன் (திருவருள்) செய்யமாட்டான், அதனால் - அத்தன்மையினால், நலமிகுத்த - நன்மை மிகுந்த, பொருள்வேண்டில் - மோக்ஷத்தைக்கருதிடில், நலமிகுபத்தியினோடும் - நன்மைமிகுந்தஅன்போடும், பலமிகு நற்கீதைகளே -பயன்மிகுந்த நல்லகானங்களையே, எப்பொழுதும் - இடைவிடாமல், பாடுவான் - பாடக்கடவான். எ - று. (சரு)

அவதாரிகை.

சிவத்தின் ஐக்கியத்தை வைதிககானம் ஆகமகானம் இவைகளின்வழியால்அடையுந்திறமில்லாவிடினும் திராவிடாதி தேசபாஷைகளாயுள்ள கீதியினாலாவது கானஞ்செய்வானாயின் அவனும்அடைவானெனக்கூறுகின்றார்.

வேறு.

அறையுமறையாலாகமத்தாலறியானாகின்மற்றுந்தா
னறிவதொருபாடையினாலேயறைவானென்றுமமைவுறவே
யிறையையடைதற்கேதுவிதுவிதனாற்பரமயோகெய்தும்
பிறிவொன்றறவேசிவன்றன்னையோகத்தாலேபெறலாமால்.

இ - ள். அறையும் மறையால் - சொல்லுகின்ற வைதிககானத்தாலும் ஆகமத்தால் - வியாக்கியாகானத்தாலும், அறியானாகில் - அறியுந்திறமில்லாதவனாகில், மற்றும்-இன்னமும், தான்அறிவது ஒருபாடையினாலே-தான்அறிந்த ஒருபாஷையெதுவோஅதனாலே, என்றும்அறைவான் - (சிவபெருமானைக்குறித்து) எந்நாளுங்கானஞ்செய்யக்கடவான், அமைவுறவே - பொருந்தும்படி, இறையை அடைதற்கு இதுஏது - சிவபெருமானைச்சேர்வதற்கு இதுவேகாரணமாகும், இதனால் பரமயோகு எய்தும் - இந்தக்கானத்தால் உயர்ந்தயோகமுண்டாகும், யோகத்தாலே - (அந்த) யோகத்தினாலேயே, சிவன்றன்னை- பரமசிவத்தை, பிறிவொன்றுஅறவே - ஒரு பேதமுமில்லாமல், பெறலாம் - அடையலாகும். எ - று. (சசா)

அவதாரிகை.

பிரதிபந்தமிகுதியால் அப்போதே ஐக்கியத்தை அடையாவிடினும் காலவிளம்பத்தின்மேலாவது சென்றடைவானெனவும், பரமசிவவிடயமன்றி வீணனகானஞ்செய்வானாகில் பாதகியாவானெனவுங் கூறுகின்றார்.

கீதைசெய்தோன்யோகத்தாற் கீழ்ச்செய்வினையின்பெருமையினாற்
பேதமில்லான்றனைக்கூடப்பெறாதேவிடினும்பின்சென்றா
ஞதலாலேயிறைகீதையல்லாதெல்லாங்கைவிடுவான்
பேதமையினாற்செய்தானேற்பிராயச்சித்தஞ்செயவேண்டும்.

இ-ள். கீதைசெய்தோன் - (இப்படி) கானஞ்செய்தவன், யோகத்தால்-யோகத்தினாலும், கீழ்ச்செய்வினையின்பெருமையினால் - முன்னேசெய்தநல்வினையின்மிகுதியினாலும், பேதமில்லான்றனை- அபின்னஞானபரமசிவனை, கூடப்பெறுதேவிடினும் - (இப்பொழுதே) அடையப்பெறுமற்போனாலும், பின்சென்றுன்-பின்பு அடையக்கடவான், ஆதலாலே-ஆகையினாலே,இறைகீதை அல்லாது - பரமசிவத்தின் கானத்தைத்தவிர, எல்லாம் கைவிடுவான் - மற்றனைத்தையும் கைவிடக்கடவான், பேதமையினால் செய்தானேல்-அறியாமையால் (வேறுள்ளகானங்களை) செய்தானானால், பிராயச்சித்தஞ்செயவேண்டும் - பிராயச்சித்தஞ்செய்யவேண்டியது. எ - று. (சுஎ)

அவதாரிகை.

முற்கூறியபடி முமுட்சுவானவன் சுருதி தர்க்கம் இவைகளால் சிவபோதத்தை யடைந்து அவ்வனுசந்தானத்துடன் கானஞ்செய்து சுகத்திற் சஞ்சரிக்கவேண்டுமெனவும், இவ்வுபநிடதப்பொருளை சிவபத்தர்களுக்குச் சொல்லலாம் மற்றவர்களுக்குச் சொல்லக்கூடாதெனவுங் கூறுகின்றார்.

வேறு.

ஆதலாற்பிறவிபறுக்கவாதரிப்போனருமறைப்பிரமாணத்தாலுந்
தீதிலாத்தர்க்கநெறியதனாலுஞ்சிவனுடையுணர்வுபெற்றதுவே
கீதமேசெய்வானுபநிடமதனிற்கிளத்தியபொருளிதிப்பொருளைத்
தீதிலாச்சிவனற்பத்தருக்குரைக்கவல்லவர்தமக்குரையீரோ.

இ - ள். ஆதலால் - ஆகையால், பிறவி அறுக்க ஆதரிப்போன் - சனனத்தைநீக்குதற்கு இச்சைகொண்டவன், அருமறைப்பிரமாணத்தாலும் - அரிதானவேதப்பிரமாணத்தினாலும், தீதிலா - குற்றமில்லாத, தர்க்கநெறியதனாலும் - தருக்கவழியினாலும், சிவனுடையுணர்வுபெற்று - பரமசிவஞானத்தையடைந்து, அதுவே கீதமேசெய்வான் - அந்தச்சிவஞானமகிமையையேகானஞ்செய்துகொண்டிருப்பான், உபநிடமதனில்-உபநிடதத்தில், கிளத்தியபொருள் இது - சொல்லிய அருத்தம் இதுதான், இப்பொருளை - இந்தத்தாற்பரியத்தை, அல்லவர்தமக்கு உரையீரோ - (சிவநேச) மில்லாதவர்களுக்குச் சொல்லவேண்டாம், தீதிலா - தீமையில்லாத, சிவன் நல் பத்தருக்கு உரைக்க - சிவபெருமானிடத்தில் பேரன்புடைய நல்லஅடியார்களுக்கே உபதேசிக்கவேண்டியது. எ - று. (சுஅ)

மூன்றுமத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கூஅ.

---

உ

சிவாயபரமகுரவேநம:

## நான்காவது.

## கேனோபநிடததாற்பரியமுரைத்தவத்தியாயம்.

### அத்தியாய அவதாரிகை.

முந்தியஅத்தியாயங்களில் ஐதரேய தைத்திரிய உபநிடதங்களின்தாற்பரியத்தைக்கூறி, இந்த அத்தியாயத்தாற் பிரமதத்துவம் உபதேசத்தால் அடையத்தக்கதேயன்றி தருக்கத்தால் அடையத்தக்கதன்றென்று காண்பிக்கவேண்டி, சுருதியில் கேள்வி மறுமொழிகளாற் பிரமம்உபதேசிக்கப்படுகின்றது. அஃதெங்ஙனமெனில், எதனுல் மனம் பிராணன் வாக்குவிழி சுரோத்திரம் இவைகள் பிரேரிக்கப்பட்டு தந்தம் விடயங்களிற் செல்கின்றன என்றது கேள்வியும், அதற்கு அவ்வத்து கண்ணுக்குக்கண் சுரோத்திரத்திற்குச்சுரோத்திரம் மனத்திற்குமனம் வாக்குக்குவாக்கு பிராணனுக்குப்பிராணன் என்றது மறுமொழியும் ஆகும். அவ்விரண்டின்பொருளையுங்கூறுகின்றார்.

### அவதாரிகை.

தேவர்களுக்குப் பிரமத்தை ஜைமினிசாகையானஉபநிடதத்தின் பொருளுடைய இவ்வத்தியாயத்தாலும் உபதேசிக்கின்றேனெனக்கூறுகின்றார்.

வான்றொடங்கிமலர்ந்தனயாவைக்குஞ்
சான்றதாமறிவைத்தன்னருளினாற்
றோன்றுசோதியைச்சொல்லுவனென்றெலா
மீன்றவனிமையோர்கட்கியம்பினான்.

இ - ள். வான் தொடங்கி - ஆகாயமுதலாகத்தொடங்கி, மலர்ந்தன யாவைக்கும் - உண்டாகிய அனைத்திற்கும், சான்றதாம் - சாக்ஷியாகிய, அறிவை - பிரமசொரூபத்தை, தன்னருளினால் தோன்றுசோதியை - தன்னுடைய கருணையினால் தானாகவே விளங்குகின்ற சோதியை, சொல்லுவன் என்று - (உங்களுக்கு) கூறுவேனென்று, எல்லாம் ஈன்றவன் - சகலப்பிரபஞ்சங்களையும்படைத்த நான்முகனானவன், இமையோர்கட்கு - தேவர்களுக்கு, இயம்பினான் - சொன்னான். எ - று. (க)

### அவதாரிகை.

சுருதியில் எதனாலென்றபொருள் பொதுவாதலால் அதனைச்சருவசாக்ஷியான கூடத்தனாகத்தெரியக்கூறி, அவ்விறையால் மனம்பிராணன் இரண்டும் பிரேரிக்கப்பட்டுத் தங்களது விடயங்களில் செல்லுமெனக்கூறுகின்றார்.

### வேறு.

தானேயுளனாயெப்போதுமெல்லாப்பொருட்குஞ்சான்றாகி
யூனேய்பவசாகரத்துற்றோற்குடன்றாகமாகியவும்பர்

கோனேநியமித்திடமனமுங்குறித்துவிடயங்களிற்செல்கை
தானேசேட்டைசெய்யாதுபிராணனிறைவன்றன்னாலே.

இ-ள். தானே உளனாய்-தானாகவேவிளங்கியிருக்கின்றவனாகி, எப்போதும் - எக்காலத்தும், எல்லாப்பொருட்கும்-சகலவஸ்துகளுக்கும், சான்றாகி - சாக்ஷியாகி, ஊன் ஏய் பவசாகரத்தாற்றோர்க்கு - தசைபொருந்திய தேகத்தைத்தருகின்ற சன்மசமுத்திரத்திலாழ்ந்தவர்களுக்கு, உடன்தாரகமாகிய உம்பர்கோனே-அப்போதே யாதாரமாகியிருக்கின்ற தேவதேவனாகிய பரமசிவனொருவனே, நியமித்திட - பிரேரணை செய்ய, மனமும் -நெஞ்சமும், குறித்து - கருதி, விடயங்களில் செல்கை - விஷயங்களிற்செல்வது, பிராணன்- பிராணனும், தானேசேட்டைசெய்யாது- தானாகவேசலிக்கமாட்டாது, இறைவன்தன்னால்- (அந்த) பரமசிவத்தினாலேயே (சேட்டிக்கப்படுகின்றது). எ-று.

ப-ம். எப்போதும் இயல்பாகவிருக்கின்ற பரமார்த்தசொரூபத்தை "தானேயுளனாய்" எனவும், தான் புறம்பு என்ற விவகாரகாரணமான சிற்பிரகாசஞ் சாக்ஷியப்பிரபஞ்சத்திற்குட்படாததனால் அஃது நித்தியமென்பார், "சான்றாகி" எனவுங் கூறினார். (உ)

அவதாரிகை.

ஞானேந்திரிய கன்மேந்திரியங்களும் இறைவனாலேயே பிரேரிக்கப்பட்டுத் தங்கள் விடயங்களிற் செல்லுகின்றனவெனவும், அவ்விதபிரேரகத்துவமும் மாயையாலன்றி அவனுக்கில்லையெனவுங் கூறுகின்றார்.

வேறு.

நாவுரைப்பதுவுஞ்செவியுரைப்பதனைநலம்பெறக்கேட்பதுநயன
மேவுருத்திகழக்காண்பதுமற்றும்வேறுளவிந்தியங்களுமத்
தேவனாற்றத்தம்விடயமேற்செல்லப்படுவதிங்கிவைசெலுத்திடலத்
தேவமாயையினாலன்றியுண்மையிலத்தேவனுக்கில்லையேதெரியில்.

இ-ள். நா உரைப்பதுவும் - நாவானது வசனிக்கின்றதும், செவி - காது, உரைப்பதனை நலம்பெறக்கேட்பதும் - வசனிக்கின்றசொல்லை நன்மையடையக்கேட்கின்றதும், நயனம் - கண்கள், மேவுருத்திகழக்காண்பதும்- பொருந்திய உருவங்களை விளங்கப்பார்க்கின்றதும், மற்றும்வேறுள இந்தியங்களும் - இன்னமும் வேறுவேறாயிருக்கின்ற இந்திரியங்களும், அத்தேவனால் - அந்தப்பரமசிவனால், தத்தம்விடயமேல் செல்லப்படுவது - தத்தம்விடயங்களிற் செல்லப்படுகின்றன, தெரியில் - ஆராயுங்கால், இங்கு இவைசெலுத்திடல் - இவ்விடத்தில்இவைகளைஏவுவது, அத்தேவமாயையினால் அன்றி - அந்தப்பரமசிவனுடைய மாயையினாலல்லாமல், உண்மையில் அத்தேவனுக்கு இல்லை - சுபாவத்தில் அந்தப்பரமசிவனுக்கில்லை. எ - று.

ப-ம். எல்லாப்பிராணிகளினிதயங்களிலுஞ் சிவரூபனாக அநுப்பிரவேசித்திருக்கின்ற சருவசாக்ஷியான சுதந்தரபரமேச்சுரனால் எல்லாஇந்திரியங்க

ளுந் தத்தம்விடயங்களிற்செல்கின்றனஎன்பார், "வேறுளவிந்தியங்களுமத் தேவனுற்றத்தம்விடயமேற்செல்லப்படுவது" எனவும், அலையில்லாத சாசரச மானனுன அசங்கனுகிய கூடத்தவான்மாவுக்கு இவ்விதபிரேரகத்துவம் எவ்வனங் கூடுமெனில், சத்துவப்பிரதானமாகியமாயாபரிணுமமான தேகேந்திரியமுதலிய உபாதிசம்பந்தவசத்தாலென்பார், "மாயையால்" எனவுங் கூறினுர். (ரு)

அவதாரிகை.

மனம் இந்திரியம் இவைகளுக்குச் சத்தை சொந்தமில்லையென்று கூறுகின்ருர்.

வேறு.

இந்தியங்களுக்குச்சத்தையில்லையேயிவற்றின்சத்தை
செந்தழலயம்போலுள்ளதேவனுளுள்ளசத்தை
தொந்தமில்பரன்ருன்றன்னிற்சோத்திரந்தனைக்கற்பித்
தந்தவத்தன்மையுண்டாவளிக்குமங்கனுவேசித்து.

இ - ள். இந்தியங்களுக்குச்சத்தை இல்லையே - இந்திரியங்களுச்குச்சுபாவமாகச்சத்தையில்லை, இவற்றின்சத்தை - (ஆனுல்) இவ்விந்திரியங்களில் தோற்றுகின்ற சத்தையானது, செந்தழல் அயம்போல் - சிவந்தஅக்கினியால் வியாபிக்கட்ட இரும்புஎப்படிவிளங்குமோ (அப்படியே), உள்ளதேவனுளுள்ளசத்தை - (என்றும் அழியாமல்) இருக்கின்றபரமசிவனுற் பொருந்தியசத்தைதான், தொந்தமில்பரன்ருன் - துவிதமில்லாத பரமசிவனுனவன், தன்னில் சோத்திரந்தன்னைக் கற்பித்து-தன்னிடத்தில் செவியைத்தோற்றுவித்து, அங்கு அனுவேசித்து - அவ்விடத்தில்அனுப்பிரவேசித்து, அந்தஅத்தன்மையுண்டா அளிக்கும் - அழகாகியஅச்செவியின்றன்மையை யுண்டாகும்படி கொடுக்கின்ருன். எ - று.

ப - ம். பிரேரகவான்மா அன்னியன், அவனுற்பிரேரிக்கத்தக்க மனமாதிகள் அன்னியமாயின் துவிதமாகுமோவென்னில், சிற்பிரகாசனுன அவனிடத்தில்அத்தியாசமானதனுல் தப்தாயப்பிண்டகியாயம்போல் அதிஷ்டானசத்தையைத்தவிர ஆரோபிதசத்தை வேறில்லாததனுல் அவைகளில்விளங்கியசத்தையும் அதிஷ்டானசத்தைகளேன்பார், "தொந்தமில்பரன்ருன்" எனவும், மனமுதலியவைகள் எவனது இச்சாமாத்திரத்தாற் பிரேரிக்கப்படுகின்றன அவன் எச்சொருபமுடையவன் என்று கேள்வியைவருவித்துக்கொண்டு உத்தரமாகச், சிரவணசாதனமுள்ளசுரோத்திரத்திற் சருவாந்தரசிற்சோதியான பரமசிவனனுப்பிரவேசித்து அதற்குச் சிரவணசாமர்த்தியத்தைக் கொடுக்கின்ருனென்பார்," அத்தன்மையுண்டாவளிக்குமங்கனுவேசித்து" எனவுங்கூறினுர். (சு)

இதுவுமது.

வேறு.

தன்னிற்கற்பிதமனத்தையனுவேசித்துச் சத்துவத்தினின்றுமன த்தன்மைநல்கும், நண்ணுற்றகற்பிதமாநாட்டந்தன்னை நாட்டமாந்த ன்மைபெறநல்காநிற்கும்,மன்னுற்றபிராணனுக்குப்பிராணனுகை வா க்குக்குவாக்காகைமற்றுமுண்டாய்ப், பன்னுற்றகற்பிதமாங்கருவிக ட்கும் பரிசனுவேசித்தளிக்கும் பரமன்முனே.

இ - ள். தன்னில் கற்பிதமனத்தை - தன்னிடத்தில் அத்தியாசிக்கப்ப ட்டமனத்தை, அனுவேசித்து - அனுப்பிரவேசித்து, சத்துவத்தில்நின்றுமனத்த ன்மைநல்கும் - சத்துவகுணத்தில் தான்இருந்து அதற்குமனத்தன்மையைக் கொடுக்கின்முன், கற்பிதமாம் நண்ணுற்றநாட்டந்தன்னை - (அப்படியே) க ற்பிதமாகப்பொருந்தியகண்ணை, நாட்டமாந்தன்மைபெற நல்காநிற்கும் - பார்வையாந்தன்மையையடையும்படி (அனுப்பிரவேசஞ்செய்து) கொடுக்கின் முன், மன்னுற்ற பிராணனுக்கு - நிலைபெற்றபிராணனுக்கு, பிராணனுகை- பிராணத்தன்மையாதலும்,வாக்குக்குவாக்காகை-வாக்கிந்திரியத்துக்குவாக்கு த்தன்மையாதலும், மற்றுமுண்டாய் - இன்னமும்பலவகையாகவுண்டாகி, பன்னுற்றகற்பிதமாங்கருவிகட்கும் - சொல்லுகின்றகற்பிதமாகிய இந்திரியங் களுக்கும், பரிசு- அவைகளின்தன்மையை, பரமன்முனே- பரமசிவன்முனே, அனுவேசித்து - அனுப்பிரவேசஞ்செய்து, அளிக்கும் - கொடுக்கின்முன். எ - று.

ப - ம். சத்துவகாரியமானஅந்தக்கரணத்துக்குங் காரணமாகியசத்து வஞ் சைதன்னியப் பிரகாசாபிவியஞ்சகமானதனுல் அவ்வுபாதியுடையவனெ ன்பார்,“ சத்துவத்தினின்றும்” என்முர். (ரு)

அவதாரிகை.

சுரோத்திரமுதலியசகலகற்பனைக்கும் அதிஷ்டானமாகியும் கற்பிதங்களா னவைகளுக்குச் சிரவணமுதலியவல்லமைகளைக் கொடுக்கின்றதாயும் உள்ள, சருவாந்தரமான சிதேகரசமாகியபிரமம் முற்கவிகளாலுபதேசிக்கப்பட்டது. ஆயினும் இவ்விதவத்து கடாதிகள்போற் பிரத்தியக்ஷமாக ஏன்அனுபவிக்கப் படவில்லையெனச் சங்கைவர, அதைநிராகரிக்கவேண்டி சுருதியாற் கூடத்த ஞகிய அவனிடத்திற் கண் வாக்கு மனம் இவைகள்செல்லாதெனக்கூறிய பொருளை யிக்கவியிற் கூறுகின்முர்.

வேறு.

வாக்குமனமுங்கண்ணுமற்றுளவிந்தியங்களுமே
நோக்கரியபரஞ்சுடரைநோக்கியிவைசெலமாட்டா
தாக்கில்பரம்பரனறியிற்முன்வேமுமறியாதே
போக்குபொருளினும்வேமும்பரனரியபொருளன்முே

இ - ள். வாக்கும் - வாயும், மனமும்- நெஞ்சமும், கண்ணும்-விழியும், மற்றுள இந்தியங்களும்-வேறுள்ள இந்திரியங்களும்,நோக்கரியபரஞ்சுடரை-பார்ப்பதற்கரியபரமசிவனே, நோக்கி - எதிரிட்டுப்பார்த்து, இவைசெலமாட்டா - இவைகள்செல்லமாட்டாது, தாக்கில்பரம்பரன் - தொந்தமில்லாத அந்தப்பரமசிவன், அறியில் தான்வேறும் - அறிந்தால் அந்தப்பொருளுக்கும்வேருவன், அறியாதே போக்குபொருளினும்வேறும் -அறியாமல்விடுத்த பொருளுக்கும் வேருவன், பரன் அரியபொருளன்றே- அந்தப்பரமசிவன்அறிதற்கரியபொருளல்லவா. எ - று.

ப - ம். வாக்கிந்திரியத்தையும் அதனல் விளக்கமுறுஞ் சத்தத்தையும் "வாக்கு" எனவும், இந்தக்கண்முதலிய இந்திரியங்கள் பிரமத்தில்அத்தியஸ்தமானதுகொண்டு அச்சொரூபங்களேயாகும். அங்ஙனமாயின் தங்கள்சொரூபமாகிய பிரமத்தில் எங்ஙனம் அவைகளுக்குப்பிரவர்த்திகூடும். தங்கள் சொரூபமாயினும் ஏன்விடயீகரிக்கப் பிரவர்த்தியாதெனில்; விடயவிடயீபாவம் பேதத்தைமுன்னிட்டிருப்பதனல் அஃதில்லாததுபற்றி அவைகளுக்கு அவிடயமென்பார், "நோக்கரியபரஞ்சுடர்" எனவும், சொரூபத்தாற் பேதமில்லாவிடினும் ஆரோபபேதம் அங்கீகரிக்கக்கூடலாமேயென்னில், சருவசாட்சியானதிருட்டாவை திரிசியங்களான அவைகள் விடயீகரியாதென்பார். "நோக்கியிவைசெலமாட்டா" எனவும்,இங்ஙனங் கண்முதலியஎல்லாப்பிரமாணங்களுக்கும் பரமசிவசொரூபம் அவிஷயமானுல்,வேதந்தான் எப்படியடையும்படி கூறுமென்னில்;சுருதியில் அறியப்பட்டதாயும் அறியப்படாததாயுமுள்ள பொருள்களின் தன்மையில்லாத சுபாவமுடையதாக அறியலாமெனக் கூறியபடி ஞாதாஞ்ஞாதவியதிரேகாவச்சின்னமாகப் பிரமம் அறியப்படுமென்பார், "அறியிற்றுன்வேறுமறியாதேபோக்கு பொருளினும் வேறும்" எனவுங் கூறினர். (சு)

அவதாரிகை.

பிரமம் ஞாதாஞ்ஞாதங்களுக்கு வேருதலால் உபதிட்டப்பிரமாணத்தால் அறியத்தகுமென உபதேசிக்கப்பட்டிருந்திடினும்ஞேயப்பிரமமாகிய இதற்குப் பின்னமாக உபாசியப்பிரமமிருக்கலாமென்று சீடனுக்குச்சங்கைவரில் அதனை நிராகரிக்கவேண்டி, எதுவாக்கில்உதிக்கப்படாததோ, எதனுல் வாக்கு உதிக்கின்றதோ, அது பிரமமென்றறி. எதுமனத்தால்எண்ணப்படாததோ, எதனுல் மனம் மதிக்கப்படுமோ அதுவேபிரமமென்றறி. எந்தப்பிரமமானது இத்தன்மையுடையதெனவுபாசிக்கப்படாதோ எதைக்கண்ணுற்பார்க்கப்படாதோ எதனுற்கண்பார்க்கப்படுகின்றதோ அதுவேபிரமமென்றறி. இந்தப்பொருள் இத்தன்மையுடையதென அறியப்படாது என்ற சுருதியின்பொருளைக் கூறுகின்றுர்.

வாக்குமனங்கண்செவியான்மன்னிநின்றபிராணனு
னீக்கியுளகரணத்தானின்மலன்கோசரிக்கவுறுன்
பார்க்கரனுக்குருவம்போற்பகர்பொருளெலாந்திகழ்வ
தாக்கதனைச்சனுதனமாம்பரப்பிரமமெனவறிமின்.

இ - ள். வாக்கு - வாக்கினாலும், மனம் - மனத்தினாலும், கண் - கண்ணினாலும், செவியால் - காதினாலும், மன்னிநின்றபிராணனால் - நிலைபெற்றிருக்கின்ற பிராணனாலும், நீக்கியுளகரணத்தால் - (இவை)யொழிந்த அந்தக்கரணத்தினாலும், நின்மலன்-மலரகிதனாகிய (சங்கரனானவன்), கோசரிக்கவுறான் - விஷயீகரிக்கப்படமாட்டான், பார்க்கரனுக்கு-சூரியனொளிக்கு(முன்), உருவம்போல் - சகலரூபங்களும் (விளங்குவது)போல, பகர்பொருளெலாம்-சொல்லுகின்ற (வாக்குமனமுதலிய) எல்லாப்பொருள்களையும், திகழ்வதாக்கதனை - பிரகாசிப்பதாகச்செய்கின்றவஸ்துவை, சனாதனமாம்பரப்பிரமமெனசநாதனமாயுள்ள பரப்பிரமமென்றே, அறிமின்-நீங்களறியுங்கள். எ-று. (எ)

அவதாரிகை.

இங்ஙனம் இந்திரிய முதலியவைகளுக்கு வேறாகவும் அவைகளுக்குச்சாட்சியாகவும் உள்ள பிரத்தியகான்மாவைப், பிரமமாகஅனுபவிக்கும்படி யாதொருஞானமுபதேசிக்கப்பட்டதோ அதன்பலத்தைக்கூறி, இந்தப்பிரகாரம் தனதான்மசொரூபமாக உபதேசிக்கப்பட்ட பிரமாபரோக்ஷ சமயத்தில், நான் பிரமத்தை அறிவேனென்று கன்மகர்த்திருத்தன்மையான லக்ஷணமுடைய பேதத்தோற்றம் வத்துவன்றெனவும், பேதமில்லாத அகண்டைகரஸமான பிரமான்மதத்துவஞ் சொருபப்பிரகாசத்தாலேயே அறியத்தக்கதெனவும், தெரிவிக்கவேண்டி, குரு சீடர்களுடைய கேள்வி மறுமொழிகளாகச் சுருதிகூறுகின்றது. அது, நன்றாயறிந்தேனென அபிப்பிராயங்கொள்வாயானால் நிச்சயமாகவே அற்பமாய்விடும் பிரமசொருபமென நீயறியென்றது குருவின் வாக்கியமும், நன்றாயறியப்பட்டதாகவும் அறியப்படாததாகவும் நான் அபிப்பிராயப்படவில்லையென்றது சீடன்வசனமுமாகும். அவ்விரண்டு வாக்கியங்களின் பொருளையுங்கூறுகின்றார்.

ஆனதர்க்கத்தான்மானத்தாற்குரவனருளினாலனுபூதியதனால்
ஞானமெய்ப்பொருளையறிந்திடுமவரோநலம்பெறுமுத்தரானவர்க
ளூனமற்றந்தத்தற்பரம்விளங்கவுணர்ந்திடப்பட்டதென்றுணரிற்
றானனைத்தினுக்குஞ்சாட்சியாம்பிரமந்தானறிபொருளுமாயசத்தாம்.

இ - ள். ஆனதர்க்கத்தால் - யூகமானதருக்கத்தினாலும், மானத்தால் - வேதப்பிரமாணத்தினாலும், குரவன்அருளினால் - குருபரனுடைய கிருபையினாலும், அனுபூதியதனால் - சுவானுபூதியினாலும், ஞானமெய்ப்பொருளை - சத்தியஞானசொரூபத்தை, அறிந்திடுமவரோ - அறியப்பட்டீரர்களே, நலம்பெறுமுத்தரானவர்கள் - நன்மையுடையமுத்தராயினவர்கள், ஊனம்அற்று-களங்கமில்லாமல், அந்தத்தற்பரம் விளங்கஉணர்ந்திடப்பட்டதென்று உணரில்-அந்தப்பிரமசொருபம்நன்றாக அறியப்பட்டதென்றுணர்ந்தால், தான்அனைத்தினுக்கும்- தானேசகலசகத்துக்கும், சாட்சியாம்பிரமம்- சாக்ஷியாகிவிளங்குகின்ற பிரமமானது, தான் அறிபொருளுமாய் அசத்தாம்-தன்னாலெயறியப்பட்டபொருளுமாகி அசத்துமாகிவிடும். எ - று.

திவிடயமான விழிமுதலிய சம்பந்தத்தாலுண்டாகிய ஞானத்தை, "கடஞானம்" எனவும், சிரவணமனனாதி சாதனத்தாலுண்டாகிய உபாதியில்லாத பரமார்த்தமான பிரமவிடயமாம் ஞானத்தை, "பிரமஞானம்" எனவும், பிராதிபாசிக முதலிய சகல விருத்திஞானங்களிலுந் தானாகஇருக்கின்ற சிதேகரசமான நிருபாதிகப்பிரமம் விகாரப்படாமையால், கருத்தாவாயும் கருமமாயும் ஆகாது. இதுவென்று குறிக்கப்பட்ட அனைத்தையும் சின்மாத்திரமான சாக்ஷிசொரூபமாக விளங்குவிக்கின்ற சொப்பிரகாசஞானமேதானென்பார், "இவற்றிற்கத்தாவன்று பரப்பிரமங்கன்மந்தானுமன்று வெறுஞ்சித்தாம்" எனவும், சகலத்திலும்இருந்துவிளங்கும் இச்சொரூபஞானம் இயல்பாகவே அகர்த்தாவாயிருக்க அதனைக்கருத்தாவாகவறிதல் விபரீதஞானமாதலால் அந்தஞானத்தை, "சித்தாமிதனைத்தெரியாமற் கத்தாவாகச் சிந்தித்தல் பித்தாம்" எனவும், புருடதந்திரமில்லாமல் வத்துவின் இயல்பின்பிரகாரமே வஸ்துதந்திரமாகியஅகர்த்தவாயறிந்தஞானம் உண்மைஞானமாதலால் அந்த ஞானவானை, "அகர்த்தாவாயறியப்பெற்றான்அறியப்பெற்றானும்" எனவுங் கூறினார். (கo)

அவதாரிகை.

அந்தச்சுருதியின் முக்கியதாற்பரியமான வேதனப்பிரகாரத்தைக்கூறுகின்றார்.

தர்க்கமானந்தானொழியத்தானுயுள்ளபேரொளியை
மிக்ககருத்தாவாகுதலும்விடயமாகுதலுமொழியப்
பொக்கமறவேறறக்கண்டபொழுதுபுரைதீர்பொருளான
தக்கபிரமதத்துவத்தைக்கண்டானாகுந்தானாக.

இ-ள். தர்க்கம்மானந்தானொழிய- தர்க்கம் வேதப்பிரமாணம் இவைகள்நீங்க, தானுயுள்ள பேரொளியை -சுயமாகவேவிளங்குகின்ற பிரமத்தை, மிக்ககருத்தாவாகுதலும் - மிகவுங்கருத்தாவாதலும், விடயமாகுதலும்-விஷயமாதலும், ஒழிய - நீங்க, பொக்கமற - பொய்யில்லாமலும், வேறற - அன்னியமில்லாமலும், கண்டபொழுது-காணும்பொழுது, புரைதீர்-குற்றம்நீங்கிய, பொருளான-பொருளாய்விளங்கிய, தக்க பிரமதத்துவத்தை - தகுந்தபிரமதத்துவத்தை, தானாக - தானாகவே, கண்டானாகும்- கண்டவனாவான். எ - று.

ப - ம். சிரவணத்தாலுண்டான மனனவிருத்தியும், சிரவணித்தவேதவாக்கியத்தின் வாச்சியவிருத்தியும் நீங்க என்பார், "தர்க்கமானந்தானொழிய" எனவும், இயல்பாகவே அகர்த்தாவாயும் அகன்மமாயும்உள்ள பிரத்தியகான்மப் பிரகாசத்தை, "தானுயுள்ள பேரொளியை" எனவுங்கூறினார்.()

அவதாரிகை.

இவ்விதநிருபாதிக சொப்பிரகாச ஞானமாகவிளங்குகின்ற சுபாவமே பிரமவித்தென்றதின்பொருளாகவறியாமல், அபரோக்ஷசமயத்தில் அங்ஙனங் கூ

ழியபடி நிருபாதிகம்போல் விளங்கிய ஒருவிருத்தியாற் பிரமத்தைக்குறித்தி டின் அதுபிரமமன்றெனக்கூறுகின்றார்.

வேறு.

நோக்குறுதமெய்ஞ்ஞானமுங்காட்சியாய்நோக்கவும்பட்டுத்தான்
சாக்கியாயறிந்திடுபவனெங்ஙனேதத்துவவித்தானன்
றாக்கிலாப்பரவிச்சையுஞ்சனிக்குமேற்சடமதாங்கடம்போலப்
பார்க்கிலந்தவிச்சையின்புணர்ப்பாலுணர் பொருளதாம்பரன்றானும்.

இ-ள். நோக்குறுதமெய்ஞ்ஞானமும்-திரிசியப்படாத இந்தப்பிரமஞா னமும், காட்சியாய் - திரிசியமாய், நோக்கவும்பட்டு - பார்க்கவும்பட்டு, தா ன்சாக்கியாயறிந்திடுபவன்- தான்சாக்ஷியாயும் இருந்தறிபவன், எங்ஙனே-எங் கே, தத்துவவித்தானன்-பிரமசொருபத்தையறிந்தவனாயினன், தாக்கிலா- ச ம்பந்தமில்லாத, பரவிச்சையுஞ் சனிக்குமேல் - பரஞானமுஞ் சனிக்குமா னல், கடம்போல - கடவஸ்துப்போல, சடமதாம் - சடமாய்விடும், பார்க்கி ல்- கூர்ந்துபார்த்திடில், அந்தவிச்சையின் - அந்தத்திரிசியஞானத்தின், புண ர்ப்பால்- சம்பந்தத்தால், பரன்றானும் உணர்பொருளதாம் - பரமசிவமுந்தி ரிசியமாக அறிகின்றவஸ்துவாகும். எ - று.

ப-ம். பிரமாபரோக்ஷானுபவமின்றி ஜீவத்துவம் நிவிர்த்தியடையாதத னல், பரோக்ஷமென்பது வத்துவையிட்ட நிர்ணயஞானுபவமாதலால்வ த்துநிச்சயஞானமுண்டாகியே அபரோக்ஷானுபவம் உண்டாகவேண்டும். ஆத லால், பிரமத்தைநிருணயப்படுத்திஅபரோக்ஷீகரிக்கத்தக்கதாகப் பிரமஞான ஞ்சனிக்கின்றதெனில், ஜன்னியமெல்லாந் திரிசியமாதலால் சடமாகிக் கடத்தி ற்குச்சமானமாமென்பார், "தாக்கிலாப்பரவிச்சையுஞ் சனிக்குமேற் சடமதா ங்கடம்போல" எனவும், எதுதிரிசியசம்பந்தமுடையதோ அது திரிசியமேயா கும். ஆதலால் திரிசியமான ஞானசம்பந்தத்தால் பிரமமுந்திரிசியமாய்விடும் என்பார், "பார்க்கிலந்தவிச்சையின் புணர்ப்பாலுணர் பொருளதாம் பரன்றா னும்" எனவுங் கூறினர். (கஉ)

அவதாரிகை.

வித்தியாசம்பந்தத்தாற் பிரமம் சவிசேஷமாகும், அவ்வாறறிந்தவன்பிர மவித்தாகான் எனவும், பிரமம் வித்தைக்கு ஆசிரயமாயும் விடமாயும் இராது எனவுங், கூறுகின்றார்.

வேறு.

விச்சையுள்ளவன்விசேடவானும்பரதத்துவமவிசேடம்
விச்சையுள்ளவனுதலாற்றத்துவவித்தலன்விச்சைக்கண்
டுச்சமுற்றுளதாகுதல்விடயமாய்த்தோன்றுதல்செய்யாது
சச்சிதானந்தமப்படியிராதெனிற்றற்பரமாமோதான்.

இ-ள். விச்சையுள்ளவன் - பரவித்தையுடையவன், விசேடவானும் - சவிசேஷனுவான், பரதத்துவம் - பிரமம், அவிசேடம் - நிர்விசேடம், ஆதலால் - ஆகையால், விச்சையுள்ளவன் - (இந்தப்) பரவித்தையுடையவன், தத்துவவித்தலன் - ஆன்மவித்தாகான், (இந்தப்பிரமமானது), விச்சைக்கண்துச்சம் உற்று உளதாகுதல் - வித்தையினிடத்திற் கீழ்மைபொருந்தி அதற்காசிரயமாயாகுதலும், விடயமாய்த்தொன்றுதல் செய்யாது - விடயமாய்க்காண்பதும்ஆகமாட்டாது, சச்சிதானந்தம்அப்படியிராதெனில்- சச்சிதானந்தமான (அந்தவஸ்து)அப்படியிருக்காவிட்டால், தற்பரமாமோ - (எப்படிப்) பிரமமாகும். எ - று.

ப - ம். விச்சையின் சம்பந்தமாத்திரத்தாற் கடம்போல்என்று கூறக்கூடாது. பிரமரூபம்ஞானுகாரமாக அனுபவிக்கப்படுவதனுல் என்னில்,திரிசியமான விஞ்ஞானத்தோடுஞ்சம்பந்தப்படுவதனுல், அச்சம்பந்தத்தால் தானுனவத்து சவிசேடமாய்விடுமென்பார், "விச்சையுள்ளவன் விசேடவானும்" எனவும், சவிசேடமாயினும் பரவத்துவானபிரமமாக ஏன்ஆகக்கூடாதெனில், பிரமவத்து இயல்பாகவே நிர்விசேடமாதலாற் சவிசேடமாகாதென்பார், "பரதத்துவமவிசேடம்" எனவும், வத்துவினியல்பு நிர்விசேடமாயிருக்க அஃதைச் சவிசேடப்படுத்தி வேருகஅறிந்ததனுல் வேருனஞானமெல்லாம் அனுன்மவிடயஞானமாதலால் அந்தஞானமுடையவன் எங்ஙனம் ஆன்மவித்தாவானென்பார், "விச்சையுள்ளவனுதலாற்றத்துவ வித்தலன்" எனவும், வித்தைக்குவிடயமென்னில் கூறியதூஷணம்வரும். ஆசிரயமாகலாமே எனில், ஆசிரயமென்பதும் விடயமென்பதும் ஒன்றேதான். ஏனெனில், ஆசிரயியினுடைய சம்பந்தத்தையிட்டே ஆசிரயமெனக்கூறவேண்டும், அப்படியானுல் சம்பந்தமெல்லாம் விகாரவத்துக்களையேபற்றியுள்ளது. விடயமென்பதூஉம் அங்ஙனமே ஆகின்றது. அங்ஙனமாயின், எதுவிகாரியோ அதுஜடமாம். எதுஜடமோ அது அனுன்மவத்துவாகும். ஆதலால், விச்சைக்குப்பிரமம் ஆசிரயமாயும் விடயமாயும் ஆகத்தகாதென்பார், "விச்சைக்கண்டுச்ச முற்றுளதாகுதல் விடயமாய்த் தோன்றுதல் செய்யாது" எனவும், பிரமம் விச்சைக்கு விடயமாயேனும் ஆசிரயமாயேனும் இருக்குமென்னில், சுருதிகூறியதிரிவிதபரிச்சேதசூனியசச்சிதானந்தமாம் பரப்பிரமவத்துவாகாதென்பார், "சச்சிதானந்தமப்படியிராதெனிற் றற்பரமாமோதான்" எனவுங் கூறினுர். (கஅ)

அவதாரிகை.

விச்சைக்கு ஆசிரயமும்அன்று, விடயமும்அன்று, கருத்தாவும்அன்று, கன்மமும்அன்று, எனவாயிற்று. இங்ஙனமாயின் அதிகாரி எங்ஙனம் வேத்தாவாவான்எனவர, ஆசிரயம் விடயம் கருத்திரு கன்மம் இவைகளாகஇராமல் வேத்தாவாவான்என்றுகூறுகின்றுர்.

வேறு.

ஆதலால்விஞ்சையாலறிவுறுதற்காவதன்றுகிலப்பரந்தா
னேதினுலறியப்படுமறிவுறுதற்கேவனுலாமிமையவர்காள்

காதலாற்பரத்திற்கற்பிதமாயைகழியுமேற்பரம்பரன்கண்ணே
ரேதமாமாயையில்லையுண்டாகிலிருக்குமோயிரவிமுன்னிருடான்.

இ - ள். ஆதலால்-(அவ்வித்தையானது) பிரமசம்பந்தி யாயில்லாததா கையால், விஞ்சையால் அறிவுறுதற்குஆவதன்றாகில்- (பிரமம்) ஞானத்தினால றியப்படுவதல்லவென்றாகில், அப்பரந்தான் - அந்தப்பிரமமானது, எதினால் அ றியப்படும்-எதனாலேதான்அறியப்படும், இமையவர்காள்-தேவர்களே, எவனா ல் அறிவுறுதற்குஆம் - எவனாலேதான்அறியலாகும், காதலால் - மிகுந்தபிரே மையினால், பரத்தில்-பிரமத்தின்கண், கற்பிதமாயை-அத்தியாசிக்கப்பட்டமா யையானது, கழியுமேல்-(ஞானத்தினால்)நீங்குமேல்,பரம்பரன்கண்-பிரத்திய கான்மாவினிடத்தில், ஓர்-ஒரு, ஏதமாமாயையில்லை - குற்றமுடைய இருளாகி யமாயைக்கு (சம்பந்தம்) இல்லை, உண்டாகில்- (உங்கள்மதிக்கேற்க) உண்டா யிருக்குமானால், இரவிமுன் - சூரியன்முன்பு, இருள் - இருட்டானது, இரு க்குமோ - இருக்குமா.எ - று.

ப - ம். பிரமம் பரிச்சேதமில்லாமல் அசங்கியாயிருத்தலால் விச்சை பிரமசம்பந்தமுடையதாகாது. அக்காரணத்தால் விச்சையால்பிரமம் அறியக் கூடாததாகும். அங்ஙனமாயின்,மற்றெதனாலறியப்படும் ஒன்றினாலும்அறியப் படாதென்பார்,"ஆதலால் விச்சையாலறிவுறுதற்காவதன்றாகி லப்பரந்தா னே தினாலறியப்படும்" எனவும், இங்ஙனம் அறியக்கூடாததாகில் ஒருவனும்வேத் தாவாகமாட்டான். தனதுஞானத்தால் அறியப்படினும் வேத்தாவாகான். முற் கூறியபடி வத்து விடயமாகிப் பிரமசத்தார்த்தமுடையதாகவே சித்தியாமல் அவத்துவாய்விடும். ஆதலால் சுருதியில்பிரமவித்து பிரமமாகின்றானென்றபடி அபரோக்ஷமாய்ப் பிரமமாகவே பிரகாசிக்கின்றானேயன்றி வேத்தாவாகின்ற தில்லையென்பார், "அறிவுறுதற்கேவனாலாம்" எனவும், சொப்பிரகாசமாகிய பிரமத்தைப் பிரகாசிப்பிக்கவல்லமை இல்லாததாயினும், அவித்தியாநிவிர்த்தி யைஉண்டு பண்ணும்பொருட்டேனும் விச்சையின்சம்பந்தம் ஒப்பவேண்டுமெ னில், அங்ஙனம் அஞ்ஞானமானமாயையை விச்சையானது நீக்குமானால் கூ டலாம், நீக்காவிடிற்கூடாதென்பார், "பரத்திற்கற்பிதமாயை கழியுமேல்" எ னவும், விச்சை ஏன் அவித்தையை நிவிர்த்திசெய்யாது, அதற்குக்காரணம் யாதெனில், பிரத்தியக்குச்சொரூபமாகவே சாக்ஷாத்காரமாய்விளங்கிய கு ற்றமற்றபிரமத்தில், மாயை அதன்காரியம் இவற்றின்சம்பந்தமென்பதே இல் லாததனால், இல்லாததனை நிவிர்த்திசெய்ததெனக்கூற ஒவ்வாததுபற்றி வி சாரிக்கில் விச்சை அவித்தையை நிவிர்த்திசெய்யாதென்பார், "பரம்பரன்க ண்ணேரேதமாமாயையில்லை" எனவும், அஞ்ஞானத்தாற்சொரூபஞானம் ம றைபட்டு அதனால் அனைவர்களும் மோகிக்கின்றார்களெனச்சாத்திரங்கள் கூ றுவதனால், எங்ஙனம் மாயையை யில்லையெனலாமெனில், அதுவும் விசாரமி ல்லாதகுற்றமேயன்றி வேறில்லை. எங்ஙனமெனில் திரிவிதபரிச்சேதமில்லா த சுயஞ்சோதியான பிரமத்தை அந்தகாரமாயை எவ்வாறுமறைக்கும். சொ

ப்பிரகாச ஆன்மா அத்துவிதனுகவே எவ்விடத்தும் எப்போதும் பிரகாசித்தி ருக்க, இரவிமுன் இருள்போல் மாயையாம் இருள் உதிக்கமாட்டாதென்பார், "உண்டாகிலிருக்குமோயிரவிமுனிருடான்" எனவுங் கூறினர். (கச)

அவதாரிகை.

பரமார்த்தமாக மாயைசொருபத்தில் இல்லாததனுல் அதனை நீக்கவேண் டிவிச்சை வேண்டுவதும் இல்லையென்பதையே சுருதியுத்தி அனுபவம் இவை களாலுறுதிப்படுத்தி, பின்பு பிரமசொருபத்தையடைதற்கு விச்சையாற்பி ரயோசனம் இல்லையென்னில், சுருதியிற் பிரமவித்து பரத்தையடைகின்று ன், பிரமத்தை அறிந்தவன் பிரமமாகவேயாகின்றுன், எதனுல் அக்ஷரவ த்து அடையப்படுகின்றதோ அஃது பரவிச்சை என்றதுமுதலானவாக்கியங் கள் உபயோகம் இல்லாததுகளாய்விடுமென்று சங்கிக்க. அங்ஙனம்வித்தை அவித்தைஎன்றது உலகவிவகாரத்தைஅனுசரித்துக் கூறியதேயன்றி, உண்மை யில்இல்லையென்று சமாதானங்கூறி, வியாவகாரிகமாயேனும் அவைகள் ஒப் பவேண்டியதுதானே, அப்படிஒப்பிடில் வத்து துவிதப்படுமென்று சங்கித்து, விவகாரமென்பதும் பிரகாசிப்பதுகொண்டு பிரமரூபப்பிரகாசமேயாதலால் எப்போதும் அத்துவிதமேதானுள்ளதென்று கூறுகின்றூர்.

ஆதலான்மாயைதர்க்கமானத்தாலானுபாவத்தினுற்றுனே (டா
சோதிஞானச்சிற்கனச்சுடர்முன்னர்த்தோன்றிடாதவிச்சைவிச்சைக
ளோதுமாத்திரமாமுலகுளாவழக்கத்துள்ளனவுண்மையிலில்லை
யேதமாமுலகவழக்குமொளியாயிலங்கலாலபேதமேயென்றும்.

இ-ள். ஆதலால் - ஆகையினுல், தர்ககமானத்தால் - தர்க்கப்பிரமாண ங்களாலும், அனுபாவத்தினுல் - சுவானுபூதியினுலும், மாயை - மாயையெ ன்பது, தானே - சுயமாகவே, சோதிஞானச்சிற்கனச்சுடர்முன்னர் - ஞான ப்பிரகாசசிற்கன பரமான்மாவின்முன்பு, தோன்றிடாது - உண்டாகமாட்டா து, அவிச்சைவிச்சைகள்- அவித்தைவித்தையென்னுமிரண்டும், ஓதுமாத்திர மாம் - சொல்லளவேயாகிய, உலகுளாவழக்கத்துள்ளன- உலகவிவகாரவழக் கத்திலிருக்கின்றனவாம், உண்மையிலில்லை - பாரமார்த்திகதிருட்டியிலில்லை யாம், ஏதமாமுலகவழக்கமும் - குற்றமாகியலோகவிவகாரமும், ஒளியாயில ங்கலால் - ஆன்மப்பிரகாசமாகவே விளங்குவதனுல், அபேதமேயென்றும்- எப்பொழுதும் அத்துவிதந்தான். எ-று.

ப - ம். விவகாரமாத்திரமாயுள்ள மாயாகற்பிதமான பிரபஞ்சத்தை அனுசரித்தே,பிரத்தியக்ஷாதி பிரமாணங்கள் பிரவர்த்திக்கின்றன. அப்படியே பிரபஞ்சவிவகாரதிருட்டியினுலேயே சுருதியும் அவித்தியாநிவிர்த்திநிமித்தமா க விச்சையைக்கூறுகின்றது. ஆதலால் வித்தை அவித்தையிரண்டும் விவகா ரமாத்திரமாயுள்ளனவென்பார், "அவிச்சைவிச்சைகடாமோதுமாத்திரமாமு

லகுரைவழக்கத்துள்ளன" எனவும், கடபடாதி சகலமனோவிருத்திகளினுஞ் சாக்ஷிசிற்பிரகாசனாகவிருந்து பிரகாசிக்கச்செய்வதனால் வியபிசரிக்கப்படாமல் இடைவிடாததாகித் தான் இதரமென்றவிவகாரத்திற்கு ஏதுவான பிரகாசரூபமானபிரமத்தில் இதமென்னும்அங்கிசத்திற் சற்பம்போற்சிலகாலத்திற்காணப்பட்டுஞ் சிலகாலத்திற்காணப்படாததாயுமுள்ள வியபிசாரமுடையபிரபஞ்சங் கற்பிதமானதுகொண்டு மித்தையானதனால், அதிஷ்டானமாகியதன்பிரகாசத்திற்கு வேறில்லாததாகிஎப்போதும் அத்துவிதமாம்பிரமமேயுளதென்பார், "ஏதமாமுலகவழக்கமு மொளியாயிலஙகலாலபேதமே" எனவுங்கூறினர்.

கருத்து. பரமார்த்தமாகப்பிரமம் அசங்கப்பொருளாதலால், அவித்தையின்சம்பந்தமின்றி மற்றெல்லாவற்றையும் விஷயீகரிக்கும் புத்திவிருத்திகளனைத்தையும் விளங்கு விக்கின்றசாட்சி சிற்பிரகாசமாய் மிஞ்சுதலால் சொப்பிரகாசமான அத்துவிதமேபிரமமென்றாராகலின், விருத்திதோறும் அறியப்படின் அறியப்படுமென்ற சுருதிக்குப்பொருள் கூறினாரென்றறிக. (௧௫)

அவதாரிகை.

அத்துவிதமென்பதும் துவிதவிஷேதமான விசேடமுடையதாதலால், பிரமம் நிருவிசேடமாய் எங்ஙனஞ்சித்திக்குமென்று சங்கித்துக்கூறுகின்றார்.

வேறிலத்துவிதமென்பதுமொளியில்வேறிலாமையிலுளதொளியே
கூறலற்றிடலாலிப்பொருள்கூடுங்கூடுவதளவையினாலு
மூறிறர்க்கத்தான்மறைகளாற்குரவனுபதேசத்தாலிறையருளா
லீறின்மாதவத்தாற்காலபாகத்தாலப்பொருள்புருடனுக்கெய்தும்.

இ-ள். வேறு இல் அத்துவிதமென்பதும் - பின்னமில்லாத அத்துவிதமென்பதும், ஒளியில்வேறு இலாமையில் - ஆன்மப்பிரகாசத்திற்கு வேறாகஇல்லாததனால், உளது ஒளியே - எப்பொழுதுமுள்ளது(அந்தப்) பிரகாசமேதான், இப்பொருள் - இந்தப்பொருளானது, கூறலற்றிடலால் -மௌனத்தினால், கூடும் - ஒருவனுக்குஅடையக்கூடும், கூடுவது - அப்படியடைவதும், அளவையினாலும்-பிரத்தியக்ஷமுதலிய பிரமாணங்களாலும், ஊறுஇல்-குற்றமில்லாத, தர்க்கத்தால் - தருக்கத்தினாலும், மறைகளால்-சுருதிகளாலும், குரவன் உபதேசத்தால் - ஆசிரியனுபதேசத்தினாலும், இறைஅருளால் - சிவபிரான்திருவருளினாலும்,ஈறு இல் மாதவத்தால்- (பலஜன்மங்களிற்செய்த)அழிவில்லாதபெரியதவங்களாலும், காலபாகத்தால் - காலபரிபாகத்தினாலும், அப்பொருள்- அந்த (மகத்தாயுள்ளசிவரூபமாகிய) பொருளானது, புருடனுக்கு- ஒரு(புண்ணிய) புருஷனுக்கு, எய்தும் - பொருந்தும். எ-று.

ப-ம். துவிதவிஷேதவிருத்தியாம் அத்துவிதமென்றவிவகாரமும் பிரகாசிப்பதுகொண்டு முற்கூறியபிரகாரம் பிரகாசத்துக்கு வேறாகவில்லாமையாலும், அபரோக்ஷசமயத்தில் துவிதம்போல் தானாகவேநீங்கிக் கேவலம்பிரகாசமேசேடித்து விடுவதனாலும் எப்போதும் பிரகாசமேதானிருக்கின்றதெ

ன்பார், "வேறிலத்துவிதமென்பதுமொளியில் வேறிலாமையிலுளதொளியே" எனவும், கேவலஞ் சிற்பிரகாசஆன்மாவாகிய பிரமம் வாக்கு மனங்களா ல்விடயீகரிக்கப்படின் அந்தவந்தவுபாதியையுடையதாய்விடும் ஆகையால், மனத்தோடுங்கூடச் சுரோத்திரமுதலிய இந்திரியங்களைத் தந்தம்விடயங்க ளினின்றும் நிவர்த்தித்து அந்தர்முகப்படுத்திட விக்ஷேபவாசனையில்லாததா கி அந்தக்கரணம்பிரசன்னமாகும். அவ்விடத்து அதனைப்பிரகாசிப்பிக்கின்ற பிரத்தியக்குச்சைதன்னியமாம் பிரமம் தானாகவேபிரகாசிக்கின்றதாதலால், மவுனமாமிதுவே முடிவானபிரமப்பிராப்தியி னுபாயமென்பார், "கூறலற்றி டலாலிப்பொருள் கூடும்" எனவும், மவுனமாத்திரமாயின் பிரமோபதேசம் எல்லாருக்குஞ் சுலபமாகி அதன்சித்தியின்பொருட்டு எத்தனிக்கவேண்டுவதி ல்லையெனில், இஃதுசுலபமன்று. மகத்தாயுள்ளது. மிகுந்தசாதனங்களன்றிக் கிட்டாதென்பார், எதிர்மறைமுகத்தால், "கூடுவதளவையினுலூமுறிறர்க்கத் தால்" எனவுங் கூறினர். (கசு)

## அவதாரிகை.

பவபரம்பரைகளில் வருணாச்சிரமதரும முதலியவற்றால் பரமேசனை நன்றாயாராதித்து, அவனது திருவருளையடைந்த சாதனசதுட்டயமுடைய முமுட்சுவான அபூருவனாயுள்ளஒருபுருடனுக்கே மிகுசூக்குமமாதலால் அதி கம்பீரமுடைய இந்தப்பொருள் பிரகாசிக்கின்றதென முற்கவியிற்கூறி, சுரு தியில் அமிர்தத்தன்மையையல்லவா அடைகின்றானென்றது முதலியவைக ளால் இதரசாதனங்களின் உதவியின்றி உள்ளபடி உண்மையானஞானத்தி ற்கு யாதொரு மோக்ஷசாதனத்தன்மை கூறப்பட்டிருக்கின்றதோ அதனை க்கூறுகின்றார்.

## வேறு.

ஓதுமிப்பரம்பெரும்பொருளுணர்ந்தவன்செயவ
தேதுமில்லைஞானமுமிலையிரண்டிலாமையினால்
நீதிவன்னவாச்சிரமமுநிடேதமும்விதியுஞ்
சாதிநல்வினைதீவினைசகலமுமிலதே.

இ - ள். ஓதும்-இப்பொழுதுசொல்லப்பட்ட, இப்பரம்பெரும்பொருள்- மேலான இந்தப்பரவஸ்துவை, உணர்ந்தவன் - சுவானுபூதியாலறிந்தவனெ வனோஅவனுக்கு, செய்வது - செய்யத்தக்ககருமம், ஏதும் இல்லை - யாதொன் றுமில்லை, இரண்டிலாமையினால் - (அவனுக்குத்) துவிதமில்லாமையால்-,ஞா னமும் இலை- (அனுசந்தானத்திற்கு உபகாரமான பிரமாகாரவிருத்தி) ஞான முமில்லை, நீதி - நீதியும், வன்னவாச் சிரமமும் - வருணாச்சிரமதருமமும்- நிடேதமும் - விலக்கும்; விதியும் - விதியும், சாதி - சாதியும், நல்வினை - புண்ணியமும், தீவினை - பாவமும், சகலமும் - மற்றனைத்தும், இலது - இல் லை. எ - று.

கருத்து. வித்துவானுக்கு அத்துவிதப்பிரமசாக்ஷாத்காரத்தால் சாதனமா

னஞானகருமமுதலிய எல்லாம் தோற்ருமையால், அதுகளில்அதிகாரமில்லை யென்றறிக. (கள)

அவதாரிகை.

கேவலம்பேதத்தாலுபஜீவித்துப் பிரவர்த்தமானசகல விவகாரமும் அவ் வித்துவானுக்கில்லையென்று முற்கவியிற்கூறி, சுருதியில் ஆன்மாவினல் வீரியத்தையடைகின்ருனென்ற பொருளைக் கூறுகின்ருர்.

வேறு.

இந்தப்பரமாம்பொருளிறைவனருளாலியாவன்பெறுமவன்ரு
னந்தப்பரமனேயென்றெனறிவிற்றிகழ்வதவன்பெருமை
சிந்தித்திடவொண்ணுதென்னுற்செய்யப்படுமத்தேவர்களாற்
சந்தப்படுமாலாலரனுற்சாற்றுந்தன்மைசாராதால்.

இ - ள். இந்தப்பரமாம்பொருள் - இந்தமகத்தாகியபிரமவஸ்துவை, இறைவன் அருளால் - சிவப்பிரசாதத்தால், யாவன் பெறும்-எவன் அடைகின்ருனே, அவன்ருன் - அந்தமகான், அந்தப்பரமனேயென்று-அந்தச்சம்புவே யென்று, என் அறிவில் திகழ்வது - என்னுடைய அறிவில்விளங்குகின்றது, அவன்பெருமை-அவனுடையமகிமையை, என்னல் - என்னுலும், சிந்தித்திட ஒண்ணுது - நினைத்தளவிடுதற்குக்கூடாது, செய்யப்படும் அத்தேவர்களால் - என்னுல் சிருட்டிக்கப்பட்ட அந்தத்தேவர்களாலும், சந்தப்படு மாலால் - அழகுபடும்விஷ்ணுவினுலும், அரனுல் - உருத்திரனுலும், சாற்றுந்தன்மை - சொல்லுந்தன்மை, சாராது - பொருந்தாது. எ - று.

ப - ம். தனசகாயமுடைய மந்திரம் ஔஷதமுதலிய சாதனங்களாலுண்டாகிய வீரியம் அனித்தியவத்துவினுல் உண்டானதாதலால், மோக்ஷத்திற்குவேருன பலத்தின்சாதனமாம், அஃதற்பமாயிருத்தலின். மதிக்கப்படும் வித்தையால் விளங்கும் ஆன்மசொருபத்தால், அவித்தை அதன்காரியம் இவைகளை அவமானித்திடும்வல்லமையுடைய இந்தவித்துவானதுவீரியம் அப்படியாகாமையால், எவர்களாலும் மதிக்கக்கூடாதென்பார், "சிந்தித்திடவொண்ணுதென்னுல்" என்ருர். (கஅ)

அவதாரிகை.

மோக்ஷசாதனமாகிய இந்தவித்தை புண்ணிய விசேடத்தால் அறியத்தக்கது. சரீரம் இருக்கும்போதே அதனைவருத்தமுற்றேனும் சம்பாதியாவிடின் அவனுக்கெப்போதுஞ் சமுசாரமேதானென்று அதிகாரிக்குச் சுருதிஉபதேசிக்கின்றது. அந்தவாக்கியமும் இங்கறிந்திடிற் பின்புசத்தியமிருக்கின்றது. இங்கறியாவிடின் மகத்தான நட்டமேதானென்பதாம். அதன்பொருளைக்கூறுகின்ருர்.

வேறு.

இந்தவாக்கையிலியம்பியபரம்பொருளறிபி
லந்தமானுடன்மெய்யதாயபேதமாயறிந்த

தொந்தமாம்பரமடைந்திடுந்தோன்றிடாதாகிற்
பந்தமாம்பவக்கடற்படும்பரகதியடையான்.

இ - ள். இந்த ஆக்கையில் - இந்த(மானுட) தேகமுள்ளபொழுதே, இயம்பிய - (முன்) சொல்லிய, பரம்பொருள் அறியில் - மகத்தாயுள்ள பொருளையறியப்பெற்றிடில், அந்தமானுடன் - அந்தப்புண்ணியபுருஷனே, மெய்யதாய் - உண்மையாயும், அபேதமாய் - பேதமில்லாததாயும், அழிந்ததொந்தமாம்- துவிதம்நீங்கிய, பரமடைந்திடும் - பரத்தையடைந்திடுவான், தோன்றிடாதாகில் - (அந்தஅறிவு) தோன்றுமற்போனல், பந்தமாம் - பந்தமாகுகின்ற, பவக்கடல் படும் - ஜனனசமுத்திரத்தில் அகப்படுவான், பரகதியடையான் - மோக்ஷத்தையடையமாட்டான். எ - று.

ப - ம். சோம்பலினுற்சிரவணமனனமுதலிய நிரதிசயானந்த சாதனங்களைவிடுத்தலினல், முன்கூறிய இலக்கணமுடைய பரமபுருஷார்த்தத்தையடையானென்பார், "பரகதியடையான்" என்ருர். (கக)

அவதாரிகை.

இந்தப்பிரகாரம் அன்னுவயவியதிரேகங்களால் முமுட்சுவின்சரீரத்தில் வித்தியாலாபஞ் சுலபமெனக்கூறி, பின்பு அதன்பலத்தைக்கூறுவார் பூதங்கடோறும் விவேகித்து தீரர்களிந்தவுலகத்தினின்று நீங்கி முத்தர்களாகின்ருர்களென்ற சுருதியின்தாற்பரியப்படி கூறுகின்ருர்.

வேறு.

தங்களாக்கையிற்சகலயாக்கையினிலுந்தத்துவமதுதானே
யெங்குமொன்றெனக்காண்பவர்யாவரிங்கிறந்திடார்பிறவாராற்
பங்குபட்டறிந்தவனறியாதவன்பந்தன்முத்தர்களென்றே
யிங்கொருத்தனேநிகழ்பவன்சேதனனிவைகனவியல்பொக்கும்.

இ - ள். தங்களாக்கையில்-தங்கள்சரீரத்திலும்,சகலயாக்கையினிலும்-எல்லாச்சரீரங்களினும், எங்கும்- மற்றெல்லாவிடத்தும், தத்துவமதுதானே-பிரமசொரூபந்தான், ஒன்றெனக்காண்பவர் இயாவர் - ஏக சுபாவமாகவிளங்குகின்ற தென்றனுபவித்தறிபவர்களெவர்களோ (அவர்கள்), இங்கிறந்திடார்-இவ்விடத்தில் சாகாதவர்களும், பிறவார்-சனிக்காதவர்களும்ஆவார்கள், பங்குபட்டு அறிந்தவன் - பிரித்தறிந்தவனென்றும், அறியாதவன் - அறியாதவனென்றும், பந்தன்-பெத்தனென்றும், முத்தர்களென்றே-முத்தர்களென்றுஞ் (சொல்லப்பட்டு), இங்கு - இவ்விடத்தில், சேதனன்-சேதனனுகிய, ஒருத்தனே - அவனொருவனே, நிகழ்பவன் - விளங்குகின்ருன், இவை - மேற்கூறியவனைத்தும், கனவு இயல்பு ஒக்கும் - சொப்பனத்தின் தன்மையைநிகராகும். எ-று.

ப - ம். விச்சையினுற் சகலசமுசாரகாரணமாகிய அவித்தை மூலத்தோடும் நீங்கலால், பிறப்பற்ற அழியாதபிரமசொருபமாகவே பவிக்கின்ருர்க

னென்பார், "பிறவார்" எனவும், ஏகனுகியவான்மா தனது சரீரத்திலும் இதரமானசகல சரீரத்தினும் எப்படிச்சமனுகவிருக்கக்கூடும், அங்ஙனமிருந்திடில் பெத்தமுத்தவிவஸ்தை கெடுக்கப்படும்ஆகையால் அதன்சித்தியின்பொருட்டு ஆன்மாஅனேகனுக அகத்தியமொப்பவேண்டுமெனில், தைஜஸன்ஒருவனே சொப்பனுவத்தையில் மலைமுதலியசொப்பனபதார்த்தமாய் நாநாவாய்த்தோற்றுகின்ருன். அதுபோல, ஆன்மா ஒருவனேதனதவித்தையினுற் கற்பிக்கப்பட்டவுபாதிபேதத்தாற் பெத்தன் முத்தன் அஞ்ஞன் ஞானி எனநானுவாகத் தோற்றுகின்ருனென்பார், "பந்தமுத்தர்களென்றே யிங்கொருத்தனே நிகழ்பவன்" எனவுங் கூறினுர். (உ0)

அவதாரிகை.

ஆன்மா ஒருவனுயின் ஒரு உபாதியின்கண் ஒருவனுல் வித்தையை முன்னிட்டுப் பிரமம் சாக்ஷாத்கரிக்கப்பட்ட அளவில் அவித்தைநீங்கலால், ஒருவனுன அவ்வான்மாவும் முக்தனுய் அவனுக்குப்பின்பு அவித்தியாசம்பந்தங்கூடாததனுல், சகலஜீவர்களுக்கும் பிரயத்தினமின்றி முத்திசித்தித்திடுமென்ற சங்கைக்குச் சமாதானங் கூறுகின்ருர்.

தன்னில்வேறிலாமையிற்பரமுத்தியிற்றனதுபுத்தியினுலே
யன்னியங்களாய்த்தோற்று மாபாசர்க்கும்பரம்பதமறிகின்ருன்
முன்னமெப்படிமூடமாந்திசையிற்றன்மோகத்தாலெலாம்பெத்த
மென்னவுற்றனன்முத்தியிலப்பரிசிருக்குமதியல்பேயாம்.

இ - ள். தன்னில் - தன்னைத்தவிர, வேறுஇலாமையில் - வேறில்லாததனுல், பரமுத்தியில்-உயர்ந்தமுத்திதிசையில், அன்னியங்களாய்த் தோற்றும் - (அந்தக்கரணவிருத்தியால்) அன்னியசரீரங்களாகத்தோற்றுகின்ற, ஆபாசர்க்கும் - ஜீவர்களுக்கும், தனதுபுத்தியினுல் - (தெளிந்த) தனதுபுத்தியால், பரம்பதம் - முத்திநிலையை, அறிகின்ருன் - உணர்கின்ருன், முன்னம்- (தான்முத்தியையடைதற்கு) முன்னமே, எப்படி - எவ்விதமாக, மூடமாந்திசையில் - அஞ்ஞானதிசையில், தன்மோகத்தால் - தனதுபிராந்தியால், எலாம் - அனைத்தையும், பெத்தமென்னவுற்றனன் - சமுசாரபந்தமுடையதென்றிருந்தானே, முத்தியில் - முக்தி திசையினும், அப்பரிசு இருக்கும்-அப்படியே எல்லார்களையும் முத்தர்களென்றேஅறிந்திருப்பான், அதுஇயல்பேயாம்- அப்படியறிதல்சுபாவமேதான். எ-று.

ப - ம். சிரவணுதிசாதனுனுட்டானமுடைய வித்துவான் கண்ணுடியிற்பிரதிபிம்பித்தமுகாபாசம்போல அந்தக்கரணுே பாதிகளிற்பிரதிபிம்பித்த அன்னியர்களான ஆபாசமாய்த்தோற்றிய ஜீவர்களும் உண்மையாய்த்தனக்கு வேறில்லாமையால், அவர்களையுமுத்தர்களாகவே தனதுமுத்திதிசையில் விச்சையாலறிகின்ருன் என்பார், "வேறிலாமையிற்பரமுத்தி யிற்றனதுபுத்தியினுலே,யன்னியங்களாய்த்தோற்று மாபாசர்க்கும் பரம்பதமறிகின்ருன்" எனவும், எப்படி ஒருவன் தனதுபந்ததிசையில் அனைவர்களுக்கும் பந்தத்தைய

ம், தனதுமுத்திதிசையில் அனேவர்களுக்கும்முத்தியையும்அறிகின்ருனே, அப்படியே எல்லாச்சீவர்களும் தந்தம் அவித்தையாற் கற்பிக்கப்படும் சமுசாரத்தைப்பிரமவித்தையுண்டாகும் வரைக்கும் அறிகின்றதனுல், வித்துவானது பார்வையால் அவர்கள்முத்தர்களாயினும், தங்களதுபார்வையாற்பெத்தர்களேதானென்பார், "முத்தியில் அப்பரிசிருக்குமதியல்பேயாம்" எனவுங் கூறினர். (உக)

அவதாரிகை.

அவித்துவானுக்கு அவித்தியாசம்பந்த மிருப்பதனுற் பிரபஞ்சத்தோற்றங்கூடும். வித்துவானுக்கு அஃதில்லாததனுல் எங்ஙனம்பிரபஞ்சத்தோற்றங்கூடுமென்றுசங்கித்துக் கூறுகின்ருர்.

வேறு.

ஒருகாலமுன்செய்வினையளவும்யோகி யுயிருலகாதியைக்காண்பானெருகாற்காணுன், ஒருகாலிற்ருேற்றமெல்லாம்பரமாய்க்காணுமுளபரிசேயாயொருகாலொன்றுங்காணுன், றுரிசானசகரூபந்தோன்றும்போது துக்கசுகங்களுமாபாதித்துத்தோன்றும், பரமாகத்தோன்றுபொழுதாபாதித்துத் தோன்ருதுதுக்கசுகம்பரமேதோன்றும்.

இ - ள். முன்செய்வினையளவும் - பிராரத்தகன்மபரியந்தம், ஒருகாலம் - ஒருகாலத்தில், யோகி - (சிவயோகியென்னும்) பிரமவித்தானவன், உயிர் உலகாதியைக்காண்பான் - உயிர்கள் உலகமுதலியவற்றைக்காண்பான், ஒருகாற்காணுன் - ஒருகாலத்திற்காணமாட்டான், ஒருகாலில் - ஒருகாலத்தில், தோற்றம் எல்லாம் - தோற்றுகின்ற எல்லாவற்றையும், பரமாய்க்காணும் - பிரமசொரூபமாகவேபார்ப்பான், ஒருகால் - ஒருகாலத்தில், உளபரிசேயாய் - உள்ளபடியேயாகி, ஒன்றுங் காணுன் - (அன்னியமான) ஒன்றையுங்காணமாட்டான், துரிசான - குற்றமான, சகரூபம் தோன்றும்போது - உலகரூபந்தோன்றுங்காலத்தில், துக்கசுகங்களும் - துன்ப இன்பங்களும், ஆபாதித்துத்தோன்றும் - ஆபாசமாகத்தோன்றும், பரமாக - பிரமமாக, தோன்றுபொழுது - (சகமானது) தோன்றுங்காலத்தில், துக்கசுகம் - துன்பஇன்பங்கள், ஆபாதித்துத்தோன்ருது - ஆபாசமாகத்தோன்ருது, பரமேதோன்றும் - பிரமமேவிளங்கும். எ - று.

ப - ம். கருமங்கள் ஆரப்தபலமுடையனவெனவும் அனுரப்தபலமுடையனவெனவும் இரண்டுபிரிவாகும். அவற்றில் ஆரப்தபலமுடைய கன்மங்கள் ஞானத்தால் நீங்காமல் போகத்தாலே நசிக்கின்றன. ஆதலாற் பிராரத்தநாசமாகும்வரைக்கும் போகசமயத்திற் புசிப்போனுகியும் புசிக்கத்தக்கதாகியுமுள்ள சகத்தை வித்துவானுமறிகின்ருனென்பார், "ஒருகாலமுன்செய்வினையளவும் யோகியுயிருலகாதியைக்காண்பான்" எனவும், அத்துவிதப்பிரமானுசந்தானசமயத்தில் சகத்தையறியமாட்டார்களென்பார், "ஒருகாற்காணுன்" எனவும், வியவகாரசமயத்தில் அவித்துவான்போல் வித்துவானுஞ் சகத்

தோற்றமுள்ளவனுனல் அவித்துவானுக்கும் வித்துவானுக்கும் என்னபேதமெனில், விவகரித்திடினும் ஒருகால் பிரத்தியகான்மாவான பிரமத்திற் சகமனைத்துங்கற்பிதமானது பற்றிச் சகத்தையும்அதிஷ்டானப்பிரமமாகவே அறிகின்ருனென்பார், "ஒருகாலிற் ருெற்றமெல்லாம் பரமாய்க்காணும்" எனவும், சமாதிசமயத்தில் அதிஷ்டானப்பிரமஞானத்தினுல் ஆரோபிதஜகம் விலாபிக்கப்பட்டதுபற்றி நிஷ்பிரபஞ்சமான ஆன்மசொரூபமாத்திரமாய் விளங்குவதனுல் பிரபஞ்சத்தைப் பார்கின்ருனில்லை. ஆதலால் அவித்துவான் வித்துவான் இருவர்களுக்கும் வெகுபேதமிருக்கின்றதென்பார், "ஊபரிசேயா யொருகாலொன்றுங் காணுன்" எனவும், விவகாரசமயத்தில் வித்துவானுக்கு வாதிக்கத்தக்க போத்திரு போக்கியப்பிரபஞ்சாகாரமாகப் பிரமந்தோற்றிடில், சுகதுக்காதிபோகங்களும் ஆபாசமாகவே தோன்றுமேயன்றிச் சச்சிதானந்தாகாரத்தைத்தவிர வேருகித் தன்னைப்பாதிக்கும் வத்துவாகத்தோற்ருதென்பார், "அரிசான சகரூபந்தோன்றும்போது துக்கசுகங்களு மாபாதித்துத்தோன்றும்" எனவும், சமாதிசமயத்தில் திரிபுடியில்லாத சொரூபமாத்திரமாக விளங்குவதனுல் ஆபாசமாய்க்கூடச் சகத்தோற்றமில்லாததனுல் துக்கசுகாதிகளும் அங்ஙனமே தோற்ருமற் சொரூபமாகவே விளங்குகின்றதென்பார், "பரமாகத்தோன்று பொழுதாபாதித்துத்தோன்ருது துக்கசுகம் பரமேதோன்றும்" எனவுங்கூறினுர். (௨௨)

## அவதாரிகை.

அவித்துவானைப்போல வித்துவானுங் குறைவின்றி சகலஜகத்தையும் பார்க்கின்ருன். எங்ஙனம் அவனுக்குச் சகத்தோற்றம் தத்தபடநியாயமாய் ஆபாசமாகுமென்று சங்கித்துக்கூறுகின்ருர்.

## வேறு.

தத்துவஞானிகாணினுஞ்சகத்தைக்கண்டிலன்றத்வமேகண்டான்
வத்துவேயாகவல்லவேயாகமற்ருெருபொருளிலையானு
லித்தில்வேருென்றையெங்ஙனங்காண்பானியாதொருபடிசகத்தாகத்
தொத்தரவில்லாத்தோற்றமெப்படியோவப்படிநிகழ்வதுபரந்தான்.

இ - ள். தத்துவஞானி - பிரமவித்தானவன், சகத்தை - செகத்தை, காணினும் - கண்டாலும், கண்டிலன் - காணுதவன்ருன், தத்வமேகண்டான் - சத்ரூபமான பிரமமாகவே கணடவனுவான், வத்துவேயாக - பாரமார்த்திகமாயாவது, அல்லவேயாக - வியாவகாரிகமாயாவது, மற்ருெரு பொருளிலையானுல் - பிரமத்துக் கன்னியமாக ஒருபொருளுமில்லாததாகுமானுல், இத்தில் - இதில், யாதொருபடி - எப்படி, சகத்தாக - சகத்ருவமாக, வேருென்றை - வேருெருபொருளை, எங்ஙனங்காண்பான் - அவனெங்கே காண்பவனுவான், தொத்தரவில்லா - தொந்தரவில்லாத, தோற்றம் எப்படியோ - (அவனது) தோற்றம் எவ்வண்ணமோ, அப்படி - அவ்வண்ணமே, பரம் - பிரமமானது, நிகழ்வது - விளங்குகின்றது. எ - று.

ப-ம். ஆரோபிதமாயுள்ள ஜகங் கண்டிடினும் அதிஷ்டானசத்ரூப பரமார்த்தபிரமசொரூபமாகவே காண்கின்றனேயன்றி நாமரூப சுபாவமாகக்காண்கின்றதில்லையென்பார், "தத்துவஞானிகாணினுஞ் சகத்தைக்கண்டிலன் தத்வமேகண்டான்" எனவும், வித்துவான் பிரத்தியக்ஷமாய்ச் சகத்தை யனுபவிக்கப்பார்த்தும் பார்க்கிலனென்று எங்ஙனங் கூறலாமெனில், அணுமாத்திரமேனுந் துவிதவத்துவில்லையென்ற சுருதியால் ஆரோபிதமெல்லாம் அதிஷ்டானத்திற்குவேறில்லாததுபற்றி அதிஷ்டானமே எப்போதும் உள்ளதாயிருப்பதனால், பின்னவத்துவில்லாமலிருக்கத் தத்துவவித்தெங்ஙனஞ்சகத்தைப் பார்ப்பானென்பார், "வத்துவேயாகவல்லவேயாக மற்றொருபொருளிலையானு, வித்தில்வேறொன்றை யெங்ஙனங் காண்பானியாதொரு படிசகத்தாக" எனவும், அதிஷ்டானபிரமரூபமாயாவது ஆரோபிதபோக்திரு போக்கிய பிரபஞ்சரூபமாயாவது எந்தவெந்தப் பிரகாரம் வித்துவானது ஞானம்பிரகாசிக்கின்றதோ, அந்தவந்தப் பிரகாரமாகப் பிரமமே பிரகாசிக்கின்றதனால் பிரமபானமேதான் எப்போதும் வித்துவானுக்குள்ளதென்பார், "தொத்தரவில்லாத் தோற்றமெப்படியோ வப்படிநிகழ்வது பரந்தான்" எனவுங்கூறினர். ()

அவதாரிகை.

வித்துவானுக்குச் செகத்தோற்றமுஞ் சமாதியவத்தையைக்காட்டினும் விசேடப்படாது. சமாதியேதானெக்கூறுகின்றார்.

எப்படித்தோற்றமப்படியாகியிலங்குவதுண்மையேயோகிக், கப்படியுண்மையாகவேதெளிவுற்றறிவதேயான்மவேதனந்தான், செப்புநாமத்தாலுண்மையாலெல்லாத்திகழ்வுமாதேவனேயாகி, லிப்படியறிந்தஞானிகைக்கொள்வானெத்தையன்றெனவெத்தைவிடுவான்.

இ-ள். யோகிக்கு - சிவயோகிக்கு, எப்படித்தோற்றம் - எந்தப்பிரகாரங்காணப்படுகின்றதோ, அப்படியாகி - அந்தப்பிரகாரமாகவே, இலங்குவது உண்மையே - (ஆன்மசுபாவம்) விளங்குவதுமெய்தான், அப்படி உண்மையாகவே- அந்தப்பிரகாரம்மெய்யாகவே, தெளிவுற்று- தெளிவடைந்து, அறிவதே- அபரோக்ஷமாகவறிவதே, ஆன்மவேதனந்தான் - ஆன்மதெரிசனமாகும், செப்புநாமத்தால்- சொல்லுகின்றநாமத்தினாலும், உண்மையால் - (அதன்) உண்மைப்பொருளாலும், எல்லாத்திகழ்வும் - சகலப்பிரகாசமும், மாதேவனேயாகில் - பிரபுவாகியமகாதேவரது விளக்கமேயாகுமானால், இப்படிஅறிந்தஞானி - இவ்விதமாகவுணர்ந்தஞானியானவன், எத்தைக்கைக்கொள்வான் - எந்தப்பொருளைக்கிரகிப்பான், எத்தை - எந்தபொருளை, அன்றுஎன - கிரகிக்கத்தக்கதன்றென்று, விடுவான் - தள்ளுவான். எ - று.

ப-ம். மகாதேவசத்தார்த்தத்தைப் பரியாலோசிக்கும்போது வித்துவான் தனக்குவேறாகச் சிறிதேனுந் தள்ளத்தக்கதாகவுங் கூட்டத்தக்கதாகவும் உள்ளவத்துவில்லையென்பார், "செப்புநாமத்தாலுண்மையா லெல்லாத்தி

கழ்வுமாதேவனேயாகி, லிப்படியறிந்த ஞானிகைக்கொள்வானெத்தை யன்றெனவெத்தை விடுவான்'' எனவுங் கூறினர். (உச)

அவதாரிகை.

அந்தமகாதேவனுக்கன்னியமாகயாதேனுமிருப்பதாகவொப்பிடில் அவன் மகத்துவங்குறைந்துவிடும். அவனியல்போ குறைவுடையதன்றெனவும், பேதமில்லாததனல் மகத்துவந் தருமமாகாதெனவுங் கூறுகின்ருர்.

அன்னியமாகவிடுதல்பற்றுதலுண்டாகுமேற்பூரணனுகப்
பன்னியபெருமைக்கானியாமந்தப்பரமனதியல்பழுதுருதே
தன்னில்வேறின்மையான்மகத்துவமுந்தன்மமோதன்மதன்மிகளாம்
பின்னவாசகமுமிப்பரம்பொருளிற்பேதமுண்டாகிலேபிறக்கும்.

இ - ள். அன்னியமாக - (அந்த மகாதேவருக்கு) வேருக, விடுதல் - தள்ளுவதாகவும், பற்றுதல் - கொள்ளுவதாகவும், உண்டாகுமேல் - (ஏதேனு) மிருக்குமாகில், பூரணனுக - சுயம்பூரணனென்று, பன்னியபெருமைக்கு - சொன்னமகத்துவத்திற்கு, ஆனியாம் - குறைவுண்டாகும், அந்தப்பரமனது - அந்தமகாதேவரது, இயல் - சுபாவநிலைமை, பழுதுருதே - (ஒருநாளுங்) கெடத்தக்கதல்லவே, தன்னில்வேறு இன்மையால் - தன்னைத்தவிரவேறில்லாததனல், மகத்துவமும் தன்மமோ - (அம்மகாதேவரது) மகத்துவமுந்தர்மமாகுமோ, தன்மதன்மிகளாம் பின்னவாசகமும் - தர்மதர்மிகளாகச்சொல்லுகின்றபேதவார்த்தையும், இப்பரம்பொருளில் - இந்தமகாதேவரிடத்தில், பேதமுண்டாகில் - பேதத்தன்மையிருந்தாலல்லவா, பிறக்கும் - உண்டாகும். எ - று.

ப - ம். சருவசொரூபனுகியிருக்கின்ற பிரத்தியக்கான பரமசிவத்துக்கு அன்னியமாகக் கொள்ளுதல் தள்ளுதலானபொருள் இருக்கின்றதாக அங்கீகரித்திடில், திரிவிதபரிச்சேதசூனியமாகிய அவனதுமகத்துவங் குறைந்திடுமென்பார், "அன்னியமாகவிடுதல் பற்றுதலுண்டாகுமேற பூரணனுகப், பன்னியபெருமைக்கானியாம்'' எனவும், பிரத்தியக்ஷமாகவனுபவிக்கப்பட்ட ஜகத்தை இல்லையென்பதைக்காட்டிலும் அவன்மகத்துவங் குறைவது நமக்கிஷ்டந்தானெனின், மேலான மகத்துவம் அவனதுசொரூபமேயாதலால், கெடுக்கத்தகாததுதான். சொரூபமானதர்மங் கெடுக்கப்பட்டதாக வொப்பிடில் அதிட்டானமானவவனுங் கெடுதலையடைந்து இச்சகமுமில்லாததாகவேயாகும். மேலும் மகத்தான அவனதுசொரூபத்தைக் குறைவுடையதாக எண்ணிடில் எண்ணினவன் குறைந்திடுவானேயன்றிச் சொரூபமகத்துவங் குறையாதென்பார், ''அந்தப்பரமனதியல் பழுதுருதே'' எனவும், மகத்துவம் பரமசிவனுக்குச் சொபாவமன்று தருமமென்னில், பரமான்மாவுக்கு ஸ்வகத ஸஜாதிய விஜாதியபேதமில்லை, ஒன்றேதான். அத்துவிதம்பிரமமென்று சுருதிசொல்லுகின்றதனுலும், பிரத்தியட்சமுதலியபிரமாணங்கள் பேதத்தையேகிரகின்றனவென்று பத்தாவதத்தியாயத்தில் நிரூபித்திருத்தலாலும், தன

ணக்குத்தானேதருமமாயிருத்தல் கூடாமையானும், தருமதருமிபாவமும் நியமாகப்பேதத்தை அபேட்சித்துச் சித்திப்பதனாலும், அங்ஙனமாகாதென்பார், "தன்னில்வேறின்மையான்மகத்துவமுந்தன்மமோதன்மதன்மிகளாம், பின்னவாசகமுமிப்பரம்பொருளிற்பேதமுண்டாகிலே பிறக்கும்" எனவுங்கூறினர்.

கருத்து. வியாபகபேதமில்லாமையால் வியாப்பியதருமதருமிபாவமுமில்லையென்றறிக. (உரு)

அவதாரிகை.

ஆன்மாவுக்குப்பேத மில்லாவிடினுந் திரிசியப்பிரபஞ்சதாதான்மிய லக்ஷணமுடையபேதம்வரும். வந்தால் பிரமம் சவிசேஷமாய்விடுமென்ற சங்கைக்குச்சமாதானமும், தள்ளத்தக்கதுங் கூட்டத்தக்கதுமான பேதத்தோற்றம் ஞானிக்கில்லையென்றுங் கூறுகின்றார்.

வேறு.

பேதமுமபேதந்தானும்பேதாபேதமும்வேறல்ல
வோதிலப்பரத்துக்கென்றுமுள்ளதுபிரமந்தானே
தீதாகநன்றேயாகச்சிவனலாதில்லைஞானி
யேதாகுமென்றுகொள்வானேதாகாதென்றுநீப்பான்.

இ - ள். ஓதில் - சொல்லுங்கால், பேதமும் - பேதமும், அபேதந்தானும் - அபேதமும், பேதாபேதமும் - பேதாபேதமுமாகிய இவைகள், அப்பரத்துக்கு - அந்தப்பரமான்மாவுக்கு, வேறல்ல - அன்னியமல்லவாம், பிரமந்தானே என்றுமுள்ளது - பிரமமொன்றுதானே யெக்காலத்துமிருக்கின்றது, தீதாக - தீமையாயினுமாகுக, நன்றேயாக-நன்மையாயினுமாகுக, (அவைகள்), சிவனலாதில்லை-பரமசிவனன்றிவேறில்லை,(இப்படியானால்), ஞானி- சிவஞானியானவன், ஏதாகுமென்றுகொள்வான் - எதனைத்தனக்காகுமென்றுகொள்வான், ஏதாகாதென்றுநீப்பான்-எதனைத்தனக்குக்கூடாதென்று தள்ளுவான். எ- று.

ப - ம் அத்தியாசிக்கப்பட்ட பிரபஞ்சஞ் சதசத்துவிலக்ஷணமானதாற்றி, வஸ்துவாயாவது அவஸ்துவாயாவது அதிஷ்டானப்பிரமத்திற்கு வேறாகவில்லாததனால், எப்போதும் அத்துவிதியப்பிரமமேதான் விளங்குகின்றதென்பார்," என்றுமுள்ளதுபிரமந்தான்" என்றார். (உகூ)

அவதாரிகை.

சொரூபதிருஷ்டியாற் பிரபஞ்சமில்லாவிடினும் மாயையாலுளதாகலாமென்றசங்கைக்குச் சமாதானங் கூறுகின்றார்.

வேறு.

எப்பொருளுமாயையினாலெனச்சிலவறியம்புவர்கள்
மெய்ப்பரமன்றனையொழியவேறொருமாயையுமில்லை
யொப்பரியபரனொழியவொருமாயையுண்டாகி
லப்பரமன்றன்பெருமைக்கதுசேரயிழிவன்றோ.

இ-ள். சிலவர் - சிலர்கள், எப்பொருளும் - எந்தப்பொருள்களும், மாயையினுலென-மாயையினுலேயுண்டா யிருக்கின்ற தென்று, இயம்புவர்கள் - சொல்லுவார்கள், மெய்ப்பரமன் தனையொழிய - உண்மையாகியபரமசிவனைத்தவிர, வேறொருமாயையும் இல்லை - மற்றொருமாயையுமில்லை, ஒப்புஅரிய - உவமையில்லாத, பரன் ஒழிய - பரமசிவனைத்தவிர, ஒருமாயை உண்டாகில் - ஒருமாயை யுண்டாகியிருக்குமானுல், அது - அவ்விவகாரமானது, அப்பரமன்றன் பெருமைக்கு - அந்தப்பரமசிவனது மகத்துவத்திற்கு, நேரே அழிவன்றே - பிரத்தியக்ஷமாகவேகெடுதலல்லவா. எ - று.

கருத்து. பிரபஞ்சம்போல அதன்காரணமானகற்பிதமாயையுஞ் சதசத்விலக்ஷணமாதலால், மாயாமயமாகிச் சகமிருக்கின்றதென்ற வாதியர்களதுவாதமும் விருத்தமென்றறிக. (உஎ)

அவதாரிகை.

திரிவிதபரிச்சேதசூனியமாய் பிரமமேஉள்ளதென அத்துவிதத்தைத்தாபித்துக்கூறுகின்றூர்.

> பெருமையினிற்சங்கோசம்பிறவாது பிறக்குமெனி
> லருமறைவாக்கியம்பொய்யாமப்பிரமாணமுமாகும்
> பொருவில்பரானந்தபரிபூரணமெய்ச்சுடராகுந்
> தெரிவருமாதேவனலாற்றிகழ்வதொருசிறிதுமிலை.

இ-ள். பெருமையினில் - மகத்துவத்தில், சங்கோசம்பிறவாது - குறைவுண்டாகமாட்டாது, பிறக்கும் எனில் - உண்டாகுமென்றொப்பிடில், அருமறைவாக்கியம்பொய்யாம்- அருமையாகிய சுருதிவாக்கியம் அசத்தியமாகும், (ஆகவே) அப்பிரமாணமுமாகும்-பிரமாணமில்லாததாகவும் பவிக்கும், (ஆகையால்), தெரிவரும் - எவராலுங்காண்டற்கரிய, பொருவில்பரானந்த - ஒப்பற்றபிரமானந்த, பரிபூரண - சம்பூரண, மெய்ச்சுடராகும் - சுயம்பிரகாசனுகிய, மாதேவனலால்- மகாதேவரல்லாமல், ஒருசிறிதும்-ஓரணுவும், திகழ்வது-பிரகாசிப்பது, இலை - இல்லை. எ - று.

ப-ம். ஆகாயத்தினது மகத்துவம்போல பரமசிவத்தின் மகத்துவம் இதரத்தை அபேக்ஷித்ததெனில், சத்தியஞானனந்தமாம் பிரமமொன்றேதானென்று திரிவிதபரிச்சேத சூனியமாகக்கூறியசுருதி பிரமாணமாகாது. அதுவோ உண்மையாகவே சத்தியார்த்தத்தைக் கூறுமியல்புடையதனுல் எவராலும் அதனையப்படிக்கூறக்கூடாதென்பார், "பிறக்குமெனிலருமறைவாக்கியம்பொய்யாமப்பிரமாணமுமாகும்" என்றூர். (உஅ)

அவதாரிகை.

வைதிகாவைதிகமானசகலசாஸ்திரங்களினும் இந்தப்பரமாத்துவிதமேகூறப்பட்டிருக்கின்றதெனக் கூறுகின்றூர்.

வேறு.

இதுவேமுடிந்தநிலமெல்லாத்தர்க்கங்களுக்குங்காட்சியே
முதலாம்பிரமாணங்களுக்குமொழியும்வேதாந்தங்களுக்கும்
விதமாம்புராணமனைத்தினுக்குமிருதிகளுக்கும்வேதத்தின்
மதமாம்விச்சையனைத்தினுக்குமன்னுமாபாரதத்துக்கும்.

இ - ள். எல்லாத்தர்க்கங்களுக்கும் - தர்க்கங்களனைத்தினுக்கும், காட்சியேமுதலாம்பிரமாணங்களுக்கும் - பிரத்தியக்ஷமுதலியபிரமாணங்களுக்கும், மொழியும் வேதாந்தங்களுக்கும்-சொல்லாநின்ற உபநிடதங்களுக்கும், விதமாம்புராணம் அனைத்தினுக்கும் - பலவிதமாகிய எல்லாப்புராணங்களுக்கும், மிருதிகளுக்கும் - மிருதிகட்கும், வேதத்தின்மதமாம் - வேதத்தின்சம்மதமான, விச்சையனைத்தினுக்கும் - சகலவித்தைகளுக்கும், மன்னுமாபாரதத்துக்கும் - நிலைபெற்றமகாபாரதமென்னுமிதிகாசத்துக்கும், இதுவே - இந்தப் பரமாத்துவிதமொன்றே, முடிந்தநிலம் - முடிவானவிடமாகும். எ - று. (உக)

இதுவுமது.

ஐயன்சைவாகமங்கட்குமரியாகமத்துக்குமெனது
பொய்யின்றியவாகமத்துக்கும்புத்தாகமங்கட்குமருகன்
செய்யுமாகமத்துக்குஞ்சித்தரியக்கர்கந்தருவ
ருய்யும்பரிசுமற்றுள்ளோருரைத்தவாகமங்கட்கும்.

இ - ள். ஐயன் சைவாகமங்கட்கும் - நாதனாகிய மகாதேவரால்மொழிந்தருளிய சைவாகமங்களுக்கும், அரி ஆகமத்துக்கும் -வைஷ்ணவாகமங்களுக்கும், எனது - (இரணிய கர்ப்பனாகிய) யென்னுடைய, பொய்யின்றிய ஆகமத்துக்கும் - சத்தியார்த்தமாகிய ஆகமத்துக்கும், புத்தாகமங்கட்கும் - பௌத்தாகமங்களுக்கும், அருகன்செய்யும் ஆகமத்துக்கும் - அருகனாற்செய்யப்பட்ட ஆகமத்துக்கும், உய்யும்பரிசு- யாவரும் பிழைக்கும்படி, சித்தர்-சித்தர்களும், இயக்கர் - இயக்கர்களும், கந்தருவர் - கந்தருவர்களும், மற்றுள்ளோர் - இன்னமுள்ள அனைவர்களும், உரைத்த - சொல்லிய, ஆகமங்கட்கும் - ஆகமங்களுக்கும், (இதுவே முடிந்த நிலமாகும்). எ-று. (கூ0)

அவதாரிகை.

இவ்விதமான பரமாத்துவிதம் தேவர் மானிடர்களிலெவர்களுக்கும் இயல்பாகச் சித்திக்காது. பரமசிவத்துக்கே இயல்பாக இருக்கின்றது. பரமசிவம் பராசத்தி யிவர்கள் திருவருளாலேயே பிரமா விஷ்ணு விராட்டு சம்ராட்டு முதலியதேவர்கள் மற்றுமுள்ள எவர்களுக்குஞ் சித்தித்திருக்கின்றதெனக்கூறுகின்றார்.

வேறு.

உவமையில்பரமாத்துவிதமாமிந்தவொண்பொருளுலகின்யானிட்
டி, லெவரிதுபெற்றோரன்றிவிண்ணவரிலேவரேபெற்றவருடையான்,

சிவனொருவனுமிப்பரம்பொருள்சுபாவசித்தமாஞ்சிவனுக்குஞ்சிவை
க்கு, மவரருளாலேயரிக்குமிப்பொருளுண்டப்படியெனக்குமுண்ட
ருளால்.

இ - ள். இந்த ஒண்பொருள் - இந்த பிரகாசமான தாற்பரியமே, உவமையில் - ஒப்பில்லாத, பரமாத்துவிதமாம் - பரமாத்துவிதமாகும், உலகின் மானிடரில் - இவ் வுலகத்துள்ள மனிதர்களில், எவரிதுபெற்றோர் - எவர் களிதனையடைந்தவராவார்கள், அன்றி - அன்றியும், விண்ணவரில் - தேவர்களில், ஏவரே பெற்றவர் - எவர்தானடைந்தவராவார்கள், சிவனொருவனும்- பரமசிவனொருவனே, உடையான் - உடையவன், சிவனுக்குஞ் சிவைக்கும்- பரமசிவனுக்கும் பராசத்திக்கும், இப்பரம்பொருள் - இந்தப் பரமாத்துவிதஞானமானது, சுபாவசித்தமாம் - சுபாவமாகவே சித்தித்திருக்கின்றதாகும், அவரருளாலே-அந்தப் பரமசிவன் பராசத்தி இவர்களுடைய திருவருளாலே, அரிக்கும் - விஷ்ணுவுக்கும், இப்பொருளுண்டு - இந்தப்பரமாத்துவிதஞானமுண்டு, அப்படி - அந்தப்பிரகாரமே, அருளால் - (அவர்களது) திருவருளினால், எனக்குமுண்டு - எனக்குமுண்டாயிருக்கின்றது. எ - று. (கூக)

இதுவுமது.

சாற்றிடப்பட்டவிராட்டுடன்சுராட்டுசம்மிராட்டெனுமிறையவர்க்கு
மேற்றமதுடையதேவராமுமக்குமியக்கரோடரக்கர்கந்தருவர்
சீற்றமில்சித்தரிவர்முதலானதேவசாதிகளனைவருக்குந்
தோற்றியமனிதர்விலங்குசாதிகட்குமருளினுலிப்பொருடோன்றும்.

இ-ள். சாற்றிடப்பட்ட - சொல்லப்பட்ட, விராட்டுடன் - விராட்புருஷனோடு, சுராட்டு - சுராட்டு, சம்மிராட்டெனுமிறையவர்க்கும் - சம்ராட்டென்று சொல்லுகின்ற அதிகாரிகளுக்கும், ஏற்றமதுடைய - மேன்மையுடைய, தேவராம் உமக்கும் - தேவர்களாகிய உங்களுக்கும், இயக்கரோடு - இயக்கர்களுடனே, அரக்கர் - ராக்ஷதர்கள், கந்தருவர் - கந்தருவர்கள், சீற்றமில் - அகங்காரமற்ற, சித்தர் - சித்தர்கள், இவர்முதலான - இவர்கள்முதலாகிய, தேவசாதிகளனைவருக்கும்- தேவவர்க்கங்களெல்லார்களுக்கும், தோற்றியமனிதர் - தோற்றுகின்ற மானுடர்கள், விலங்கு - மிருகங்கள்,(என்னும்), சாதிகட்கும் - சாதிகளுக்கும், அருளினுல்- பரமசிவனது திருவருளினுல், இப்பொருள்தோன்றும் - இந்தப்பரமாத்துவிதஞானமுண்டாகும். எ-று.

அவதாரிகை.

சிவப்பிரசாதமுண்டானுற் கீடம் பதங்கமுதலிய சகலசெந்துக்களும் மோக்ஷத்தை அடையும். அந்தச்சிவனன்றி நாராயணர்முதலிய எந்தத்தேவர்களுஞ் சுதந்திரமாக மோக்ஷங்கொடுக்கத்தக்கவரன்றெனக்கூறுகின்றார்.

பரமனதருளுண்டாயிடிற்கிடம்பதங்கமானிடவரோடசுரா
சுரரனைவருக்குஞானமுண்டவனேசுடர்மிகுஞானமிங்களிப்பா

னரியினுலென்னுலவனருளொழியவளித்திடப்படாதொருபொருளு
ஞ், சுரர்களேதரவும்வாங்கவுநாங்கள்சுதந்திரரன்றுமெய்சொல்லில்.

இ - ள். பரமனது அருளுண்டாயிடில்-சிவப்பிரசாதமுண்டானுல், கீடம் - புழுக்கள், பதங்கம் - விட்டில், மானிடவரோடு அசுரர் - நரரோடு தானவர்கள், சுரர் - தேவர்கள் (முதலான), அனைவருக்கும் - எல்லார்களுக்கும், ஞானமுண்டு - பரமஞானமுண்டு, அவனே - அந்தப்பரமசிவனே, இங்கு - இவ்விடத்தில், மிகுசுடர் ஞானம் - மிகவும் பிரகாசியாநின்ற ஞானத்தை, அளிப்பான் - கொடுக்கத்தக்கவன், அவனருள் ஒழிய - அந்தப்பரமசிவனது திருவருளில்லாமல், அரியினுல் - விஷ்ணுவினுலும், என்னுல் - (பிரமாவாகிய) என்னுலும், ஒருபொருளும்-யாதொருபொருளையும், அளித்திடப்படாது-கொடுக்கக்கூடாது, சுரர்களே - சுரர்களே, சொல்லில் - சொல்லுங்கால், தரவும் - கொடுக்கவும், வாங்கவும் - வாங்கவும், நாங்கள் - நாங்களிருவர்களும், சுதந்திரரன்று - சுதந்திரர்களல்ல, மெய் - (இது) சத்தியவசனமாகும். எ-று.

அவதாரிகை.

சிவனொருவனே சுதந்திரன் அவனருளன்றி நாரணன் பிரமனிவர்களாற் சுதந்திரமாக இச்சமுசாரநிவிர்த்திசெய்யக்கூடாது. அவர்கள்கொடுப்பது பாத்திரத்திலுள்ளபதார்த்தத்தை யகப்பைகொடுப்பதுபோல அவன்றிருவருளாலேயே எனக்கூறுகின்ருர்.

சுதந்திரன்சிவனேயவனன்றேபிறவிச்சூழனின்றெடுப்பவனவன்றன்
பதங்களாலன்றியெங்களாலெடுக்கப்படாதொருசெந்துவுமெங்கண்
மதங்களாலொழியவருளினுற்பிறவிமாற்றவும்வல்லமற்றெருருவன்
றிதம்பெறவழங்கும்போதுதான்வழக்கஞ்செய்வதுதருவியேபோல.

இ - ள். சிவனே-(இந்தப்) பரமசிவனொருவனே, சுதந்திரன் - சுதந்திரம் உடையவன், அவனன்றே - அந்தப்பரமசிவனல்லவா, பிறவிச்சூழனின்றெடுப்பவன் - ஜனனமென்னும் இடத்தினின்றுமெடுத்தருளத்தக்கவன், அவன்றன் - அந்தப்பரமசிவனது, பதங்களாலன்றி - திருவடிகளாலன்றி, ஒருசெந்துவும் - ஒருஜந்துவையும், எங்களால் - எங்களாலே, எடுக்கப்படாது - (சமுசாரத்தினின்றும்) நீக்கக்கூடாது, மற்றொருவன் - வேறொருவன், திதம்பெற - நிலைபெற, வழங்கும்போது - (இலையிற்) படைக்குங்காலத்தில், (அவனுதவியால்), தருவி - அகப்பையானது, தான்வழக்கஞ்செய்வதுபோல - தான்படைக்குந்தன்மையைப்போல, எங்கள்மதங்கள் - எங்களிருவர்களுடைய வல்லமைகளும், ஒழிய - நீங்க, அருளினுல் - (பரமசிவனது) திருவருளைக்கொண்டு, பிறவிமாற்றவும் - (பிராணிகளது) ஜனனத்தையொழிக்கவும், வல்லம் - வல்லமையுடையோம். எ-று. (நகூ)

அவதாரிகை.

பரதத்துவம் மிகவும் நிருவிசேடமாதலால் இந்திராதிதேவர்களுக்கும் உபதேசமின்றிக்கிட்டாது அவனதுபிரசாதத்தால் அடையவேண்டுமென்வும்,

பரசிவத்தினது மகத்துவத்தை அவனது திருவருளாலன்றி மகத்துக்களாலும் அறியவொண்ணாதெனவும் கூறுகின்றார்.

வேறு.

தேவதேவன்சிவன்பெருமைதானுமவன்றன்றிருவுருவு
மேவரறிவராதலினாலில்லையாகிற்றவறுதலே
யாவரருளாலன்றியவிர்பெரியோர்தமக்குமறிவரியன்
கோவினறிதற்கருமையைத்தான்கூறமிகவுங்குறிக்கொண்மின்.

இ-ள். தேவதேவன் - தேவர்களுக்குந் தேவனாகிய, சிவன் - மகாதேவனது, பெருமைதானும் - பெருமையையும், அவன்றன் - அந்தமகாதேவனது, திருவுருவும் - திவ்விய சொருபத்தையும், ஏவரறிவர் - யாவரறிவார்கள், ஆதலினால் இல்லை - ஆகையினால் ஒருவராலு மறியப்படுவதில்லை, ஆகில் - எவரேனும் அறிந்தார்களானால், தவறுதலேயாவர் - சொருபஞானத்தினின்றுந் தவறுதலையுடையவராவார்கள், அவிர் - விளங்குகின்ற, பெரியோர்தமக்கும் - (எந்த) மகான்களுக்கும், அருளாலன்றி - திருவருளாலன்றி, அறிவரியன் - அறிதற்கரியவன், கோவின் - இறைவனாகிய (அந்த) பரமசிவனது, அறிதற்கருமையை - அறிய அரிதாகிய பெருமையை, கூற - (யான்) சொல்ல, மிகவுங்குறிக்கொண்மின் - (நீங்கள்) நிரம்பவுங்குறியாக (வுள்ளத்திற்) கொள்ளுங்கள். எ - று. (ருரு)

அவதாரிகை.

முற்கூறியவிடத்திற் சுராசுரயுத்தஞ் சுருதியிற்கூறப்பட்டிருப்பதனால் அதனைக்கூறுகின்றார்.

வேறு.

கலக்குறுமோகத்தாலிமையவருங்கடுந்திறலசுரரும்பகைத்து
விலக்கரும்பூசன்முன்பொருகாலம்விளைந்துவிண்ணவர்தலைசாயப்
பெலத்தினான்மிக்கவசுரர்கள்வெல்லப்பெருகியவருளுடையிறைவ
னலத்தகுமிமையோர்வெல்லவுமசுரர்நசிக்கவுந்திருவருணயந்தான்.

இ-ள். முன்பொருகாலம் - முன்பொருகாலத்தில், கலக்குறும் - கலங்கப்பண்ணுகின்ற, மோகத்தால் - மகாமோகத்தினால், இமையவரும் - தேவர்களும், கடுந்திறல்அசுரரும் - கொடியவீரத்தையுடையஅசுரர்களும், பகைத்து - (ஒருவர்க்கொருவர்) பகையடைந்து, (அதனால்), விலக்கரும் - விலக்குதற்கரிதாகிய, பூசல்விளைந்து - யுத்தமுண்டாகி, விண்ணவர் - தேவர்கள், தலைசாய - (அபசயமடைந்து) தலைகுனியும்படி, பெலத்தினான்மிக்க - வீரத்தினால்மிகுந்த, அசுரர்கள்வெல்ல - தானவர்கள்ஜெயிக்க, (பின்பு), பெருகியவருளுடையிறைவன் - மிகுந்த கருணையுடைய சிவபெருமான், நலத்தகும் - நன்மைக்குரிய, இமையோர் - தேவர்கள், வெல்லவும் - ஜெயிக்கவும், அசுரர் - தானவர்கள், நசிக்கவும் - மாளவும், திருவருணயந்தான் - திருவருள்செய்தான். எ - று. (ருசு)

அவதாரிகை.

இனி பரமசிவத்தின்றிருவருளால் தேவர்கள் ஜயத்தையடைந்து, மகா கங்காரத்தால் அவனது திருவருளைமறந்து தாங்களே ஜயித்ததாகச்செருக்குற்றதைத்தெரிந்து கருணாநிதியாகிய பரமசிவம் தாமெவர்களாலும் அறியப்படாதவரென்பதையறிவிக்கவேண்டி இயக்கரூபமாக ஆவிர்ப்பவித்தாரென்றது முதலான சுருதியின்பொருளை மேல்வருஞ்செய்யுட்களாற் கூறுகின்றார்.

திருவருளதனாலசுரரைத்தேவர்செயித்துமாதேவன்றன்செயலென்
றொருவருமறியாரும்பர்தானவரையோட்டினார்தாமெனவுவந்து
பெருகியவகந்தைசெய்திடத்தேவர்பிழைக்கவும்பிரான்றனையறிதற்
கருமையுமறியவியக்கரூபங்கொண்டமலனங்கருளினானின்றான்.

இ-ள். திருவருளதனால் - மகாதேவப்பிரசாதத்தினால், தேவர் - சுரர்கள், அசுரரை - தானவர்களை, செயித்து - வென்று, (இப்போதுநாம்வென்றது), மாதேவன்றன் செயலென்று - மகாதேவனது திருவருளென்று, உம்பர்- (அந்த) த்தேவர்களில்- ஒருவரு மறியார், ஒருவருமறிந்தாரில்லை - தானவரை, அசுரர்களை - ஓட்டினார், (புறங்காட்டி) யோடச்செய்தவர்கள், தாமெனவுவந்து - தாங்களேயென்று மகிழ்ந்து, பெருகிய - மிகுந்த, அகந்தைசெய்திட - அகங்காரஞ்செய்திட, தேவர்பிழைக்கவும் - அந்தச்சுரர்களுய்யவும், பிரான்தனை-மகாதேவனாகியதன்னை, அறிதற்கருமையுமறிய - பிறராலறிதற்கருமையாகியதன்மையை யாவரும் அறியவும், அமலன் - மகாதேவன், அருளினால்- (தனது) காருண்ணியத்தினால், அங்கு-அந்தத்தேவலோகத்தின்கண், இயக்கரூபங்கொண்டு-ஒருயக்ஷரூபங்கொண்டு, நின்றான்- நின்றருளினான். எ-று. (௩௭)

வேறு.

இயக்கரூபனாமிறையவன்றன்னைக்கண்டிமையவரினங்கூடி
வியக்கவுற்றதுவேதெனத்தங்களில்விசாரித்துவிளங்காமன்
மயக்கமற்றிடவறிந்தெமக்குரையெனவன்னியைவிடுத்தார்க
ணயக்கவுற்றிதுதன்னியல்பறிந்துநானவிலுவனெனச்சென்றான்.

இ-ள். இயக்கரூபனாம் - யக்ஷரூபனாகிய, இறையவன்றன்னைக்கண்டு- சிவபெருமானைப்பார்த்து, இமையவரினங்கூடி-தேவர்வருக்கமெல்லா(மொன்றாகக்) கூடி, வியக்கவுற்றது-(நாமெல்லாம்) அதிசயிக்கும்படிவந்தவிது, ஏதென - யாதென்று, தங்களில் விசாரித்து - தங்களுக்குள்ளே விசாரித்தும், விளங்காமல்- தெளியாமல், எமக்கு - எங்களுக்கு, மயக்கமற்றிட - மயக்க மறும்படி, அறிந்து - தெரிந்து, உரையென - சொல்லென்று, வன்னியைவிடுத்தார்கள் - அக்கினிதேவனையேவினார்கள், நயக்கவுற்று - நன்மையாகும்படி சென்று, நான் - நான், இதுதன்னியல்பறிந்து - இதன்சுபாவத்தைத்தெரிந்து, நவிலுவனென- சொல்லுவேனென்று, சென்றான்- (இயக்கரூபனாகச் சிவபிரானெழுந்தளி நிற்குமிடத்திற்குப்) போனான். எ-று. (௩௮)

வேறு.

அனலனைக்குறித்தியக்கனுமிறைவனாரென்று
வினவவங்கிநானென்றவற்குறித்தவன்விளம்ப
வுனதுவீரியமேதெனவிறையவனுரைப்ப
வெனதுபூமியிலுளதெலாஞ்சுடுமியல்பென்றான்.

இ - ள். அனலனைக்குறித்து - (தன்னிடத்தில்வந்த) அக்கினியைப்பார்த்து, இயக்கனுமிறைவன் -யக்ஷசு ரூபனாகிய சிவபெருமான், யாரென்றுவினவ- நீ யாரென்றுகேட்க, அங்கிநானென்று - அக்கினிதேவனானென்று, அவற்குறித்து - அவ்விறைவனைக்கருதி, அவன்விளம்ப - அந்தஅக்கினிதேவன்கூற, இறையவன் - சிவபெருமான், (அவனைநோக்கி), உனதுவீரியமேதென - உன்னுடைய சவுரியமென்னென்று, உரைப்ப - கேட்டருளலும், எனது - என்னுடைய, இயல்பு - சுபாவம், பூமியிலுளதெலாம்-சகத்திலுள்ள சகலத்தையும், சுடும் - தகித்துவிடும், என்றான் - என்றக்கினிதேவன் கூறினான். எ-று.

அத்தனங்கொருதிரணத்தையெடுத்தனலவனை
யித்தைநீதகியெனக்குறுமுறுவல்கொண்டிசைப்ப
வெத்தன்வேகமுங்கொண்டதுசுட்வெரியவனுஞ்
சத்தனன்றிநாணிப்பயந்தமரரைச்சார்ந்தான்.

இ - ள். அத்தன் - (அப்போது) சிவபெருமானும், அங்கு - அவ்விடத்தில், ஒருதிரணத்தையெடுத்து - ஒருதுரும்பையெடுத்து வைத்து, அனலவனை-அக்கினியைப் பார்த்து, இத்தை-இத்திரணத்தை, நீதகியென-நீதகிப்பாயென்று, குறுமுறுவல்கொண்டு - புன்சிரிப்படைந்து, இசைப்ப-திருவாய்மலர்ந்தருள, எத்தன்வேகமுங்கொண்டு - தனக்கெவ்வளவுவேகமுண்டோ அவ்வளவையுங்கொண்டு, அதுசுட - அந்தத்திரணத்தைக்கொளுத்துவதற்கு, எரியவனும் - அக்கினியும், சத்தனன்றி - வல்லமையில்லாதவனாகி, நாணி - வெட்கமுற்று, பயந்து - பீதியடைந்து, அமரரைச்சார்ந்தான் - தேவர்களிடத்திலடைந்தான். எ-று. (சo)

வேறு.

அவனதியல்பையென்னலிங்கறிதற்கரிதென்றனல்சொல்லப்
பவனனறியென்றிமையவர்கள்பகரவவனுமப்பரிசே
சிவனாலபசெயப்பட்டுத்தேவர்தம்பாற்செல்லுதலு
மவனைநானேயறிகுவனென்றகந்தையுற்றானமரேசன்.

இ - ள். அவனதுஇயல்பை - அவனுடையதன்மையை, என்னல்-என்னாலே, இங்கு - இவ்விடத்தில், அறிதற்கரிதென்று - தெரிதற்கருமையாயிருக்கின்றதென்று, அனல்சொல்ல - அக்கினியானவன்கூற, பவனன் - பவனனே, அறியென்று - நீ போய்த் தெரிந்துவாவென்று, இமையவர்கள்பகர - தே

வர்கள் சொல்ல, அவனும் - அந்தவாயுவும், அப்பரிசே - அக்கினியைப்போலவே அந்தத்திரணத்தை யசைக்கமுடியாமல், சிவனுலபசெயப்பட்டு - சிவபெருமானுலபஜயமடைந்து, தேவர்தம்பால் - தேவர்களிடத்தில், செல்லுதலும் - எய்துதலும், அமரேசன் - இந்திரனானவன், அவனை - அந்தஇயக்கனை, நானேயறிகுவனென்று-யானே போய்அறிகின்றேனென்று, அகந்தையுற்றுன் - செருக்கடைந்தான். எ - று. (சக)

வேறு.

புரந்தரனறியச்சென்றிடும்பொழுதிற்போக்கறவவ்விடந்தனிலே
கரந்திடமிகவுங்கலங்கியுள்வெதும்பிக்கருதுபுகருணையேவடிவாய்
வரந்தரும்விச்சாவல்லியாளுமையைவைதிகநெறியினல்வழுத்தா
அரந்தைதீர்வுறவேபுகழ்ந்தனன்புகழ்ந்தவளவிலங்களவிலாவருளால்

இ - ள். புரந்தரன்- தேவேந்திரனானவன், அறியச்சென்றிடும்பொழுதில்-அறியும்படிசெல்லுங்காலத்தில், போக்கற - (சிவபெருமான் வேறெங்கும்) போகாமல், அவ்விடந்தனிலே - நின்ற அவ்விடத்திலேயே, கரந்திட - திரோதானஞ்செய்ய, மிகவுங்கலங்கி - (இந்திரன்அப்போது) மிகவுங்கலக்கமுற்று, உள்வெதும்பி - மனம்வாடி, கருதுபு - மதித்து, கருணையேவடிவாய் - ஜீவகாருண்ணியமேசொரூபமாகி, வரந்தரும்-வரங்களைக் கொடுத்தருளும், விச்சாவல்லியாளுமையை- வித்தியாவல்லியாகியபார்வதிதேவியை, வைதிகநெறியினல் - வேதமார்க்கமாக, வழுத்தா - துதித்து, அரந்தைதீர்வுறவே- துன்பம் அகலும்பொருட்டே, புகழ்ந்தனன் - கொண்டாடினன், புகழ்ந்தவளவில் - அப்படிக்கொண்டாடியவுடனே, அங்கு - அவ்விடத்தில், அளவிலாவருளால் - முடிவில்லாததிருவருளினல். எ - று. (சஉ)

அவதாரிகை.

விரகங்காரிகளான இந்திராதிகளுக்குப் பிரமசொரூபத்தை உபதேசிக்கும்பொருட்டுப் பராசத்தி ஆவிற்பவித்தது முதலியவற்றைச் சுருதி கூறியபிரகாரங் கூறுகின்ருர்.

அங்கவேதத்தின்மயமதாய்ச்சிவனுக்கபினையாயானந்தமாகிச்
சங்கரன்றனக்குந்தானளித்தின்பங்கருணையாலுயிர்க்கெலாந்தாயாய்த்
துங்கமால்வரையிலிச்சையாற்றேன்றுந்தோகையீசனதுவல்லபமு
மங்கவனறிதற்கருமையுந்தோன்றத்தோன்றினளவ்விடந்தனிலே.

இ - ள். அங்கவேதத்தின்மயமதாய் - ஆறங்கங்களையுடையவேதசொரூபியாயும், சிவனுக்கபினையாய் - சிவபெருமானுக்கு வேறில்லாதவளாயும், ஆனந்தமாகி - ஆனந்தசொரூபியாயும், சங்கரன்றனக்கும் - (எல்லாருக்குஞ்சுகத்தைச் செய்கின்ற) சிவபிரானுக்கும், தான் - தான், இன்பம் - சுகத்தை, அளித்து - கொடுத்து, கருணையால் - (தனது) திருவருளினல், உயிர்க்கெலாம் -

சீவர்களுக்கெல்லாம், தாயாய்- மாதாவாகியும் (விளங்கி), துங்கமால்வரையில்- உன்னதமாகியஇமயமலையில், இச்சையால் தோன்றும்-தனதுஇச்சையினுல் தோன்றியருளிய, தோகை-மயில் போன்றசாயலை யுடையபார்வதி தேவியானவள், ஈசனதுவல்லபமும் - (தனதுநாயகனுகிய) சிவபிரானுடைய வல்லமையும், அங்கு - அவ்விடத்தில், அவன் - அந்தஈசனது, அறிதற்கருமையும் - அறிதற்கரியதன்மையும், தோன்ற - விளங்கும்பொருட்டு, அவ்விடந்தனில்- அந்தவிடத்தில், தோன்றினுள் - ஆவிற்பவித்தாள். எ - று. (௪௩)

உமையையர்ச்சித்தங்கும்பர்கோனியக்கருபமாயிவ்விடத்துண்டா (ப
யெமதுகட்புலத்துற்றிவ்விடந்தனிலேமறைந்ததீதென்னேயென்றியம்
மமதிருக்கொழுநனருளினுற்றேன்றிமறைந்தனன்மாலுக்குமயற்கு
மிமையவரெவர்க்குமுனக்குமாதேவனியல்பறியப்படாதென்றும்.

இ - ள். உமையை - (இப்படியெழுந்தருளிய) உமாதேவியை, உம்பர்கோன் - இந்திரன், அங்கு - அவ்விடத்தில், அர்ச்சித்து - அருச்சனைசெய்து, இயக்கருபமாய் - எக்ஷருபமாக, இவ்விடத்துண்டாய் - இந்தவிடத்திலாவிற்பவித்து, எமது - எங்களுடைய, கட்புலத்துற்று - கண்ணுக்கெதிராகத்தோன்றி, இவ்விடந்தனிலே - இந்தவிடத்திற்றுனே, மறைந்தது-திரோதானஞ்செய்தது, ஈதென்னே யென்றியம்ப - இதுவென்னவென்று வணங்கிக் கேட்க,(அதை உமையவள் கேட்டு), மமதிருக்கொழுநன் - எனதுபதியாகிய பிரமமே, அருளினுற்றேன்றி - கிருபையினுலாவிற்பவித்து, மறைந்தனன் - திரோதானஞ்செய்தார், மாலுக்குமயற்கும் - விஷ்ணுவுக்கும் பிரமாவுக்கும், இமையவரெவர்க்கும் - சகலதேவர்களுக்கும், உனக்கும் -இந்திரனுகிய உனக்கும், மாதேவனியல்பு - (என்னுடையபதியாகிய) மகாதேவரது சுபாவத்தை, என்றும் - எக்காலத்திலும், அறியப்படாது - உணரக்கூடாது. எ - று. (௪௪)

வேறு.

தன்னையறிதற்கருமைதன்னையறிவித்தற்
குன்னிநிகழ்வுற்றதுமொளித்ததுவுமும்பன்
என்னதறவானவருநீயும்விசயத்தே
மன்னவவனெயசுரர்மாயவருள்செய்தான்.

இ - ள். தன்னை - சச்சிதானந்தசொரூபியாகிய தன்னை, அறிதற்கருமைதன்னை - ஒருவராலுந் தெரிவதற்கருமையாகிய தன்மையை, அறிவித்தற்குன்னி - தெரிவிக்கவேண்டுமென்றுகருதி, நிகழ்வுற்றதும் - ஆவிற்பவித்ததும், ஒளித்ததுவும் - திரோதானஞ்செய்ததும், உம்பன் - அந்தமகாதேவரே தான், என்னதற - உங்களுடையநானெனதென்னுஞ் செருக்ககலவும், வானருவம் - தேவர்களும், நீயும் - நீயும், விசயத்தேமன்ன - விசயத்திற்றுனே நிலைபெறவும், அசுரர்மாய - அசுரர்களழியவும், அவனே -அந்தமகாதேவரே, அருள்செய்தான் -கிருபைசெய்தார். எ - று. (௪௫)

வேறு.

அத்தனேசரணமாகவடையுமென்றருளிச்செய்து
பத்தர்கள்பாசந்தீர்க்கும்பரமகாருணிகையாகிச்
சித்துருவாகிச்சான்ருய்த்திகழ்ந்திடுந்தேவியுந்தன்
சுத்தமாஞ்சொரூபந்தன்னிற் கரந்தனடோன்ருவண்ணம்.

இ-ள். அத்தனேசரணமாக - ஆதலாற் பரமசிவத்தையேயடைக்கலமாக, அடையுமென்றருளிச்செய்து - அடையுங்களென்று திருவாய்மலர்ந்தருளிச்செய்து, பத்தர்கள் - அடியார்களுடைய, பாசந்தீர்க்கும் - அஞ்ஞானத்தைநீக்குகின்ற, பரமகாருணிகையாகி - பரமகிருபையுள்ளவளாயும், சித்துருவாகி - சித்துருபியாயும், சான்ருய் - சர்வசாக்ஷியாயும், திகழ்ந்திடும் - பிரகாசிக்கின்ற, தேவியும் - பார்வதிதேவியும், தன் - தன்னுடைய, சுத்தமாம் - நிர்மலமாகிய, சொரூபந்தன்னில் - பிரமசொரூபத்தில், தோன்ருவண்ணம் - தோற்றுதலில்லாதபடி, கரந்தனள் - திரோதானஞ்செய்தாள். எ-று. (௬௬)

அவதாரிகை.

பரமசிவத்தின் திருவருளின்பெருமையைக்கூறுகின்ருர்.

வேறு.

அன்றுமாலொழிந்தங்கிமையவரீசனறிவதற்கருமையுமருளுந்
துன்றுபுத்தியுநன்முத்தியுமளிக்குஞ்சுதந்திரந்தன்னேயுந்துணிந்து
நன்றியேயுற்ருரருள்பெறிலெளியநாதனிங்கறிவுறுமருடா
னின்றியேயொழியிலொருவராலுந்தன்னியல்பறியப்படாதென்றும்.

இ-ள். அன்று - அக்காலத்தில், அங்கு - அவ்விடத்தில், இமையவர் - தேவர்கள், மாலொழிந்து - (சமுசாரகாரணமாகிய) மயக்கமகன்று, ஈசன் - பரமசிவனுடைய, அறிவதற்கருமையும் - அறிதற்கரிதாகியதன்மையையும், அருளும் - காருண்ணியத்தையும், துன்றுபுத்தியும் - நெருங்கியபுக்தியையும், நன்முத்தியும் - நன்மையாகியமோக்ஷத்தையும், அளிக்கும் - கொடுத்தருளும், சுதந்திரந்தன்னேயும் - சுதந்திரத்தன்மையையும், துணிந்து - (நன்ருகத்) தெளிந்து, நன்றியேயுற்ருர் - நன்மையேயடைந்தார்கள், அருள்பெறில் - திருவருளடைந்தால், எளியநாதன் - அவர்களுக்கெளிய சிவபெருமான், இங்கறிவுறும் - இவ்விடத்திற்ருனே யறியப்படுவான், அருடானின்றியேயொழியில் - அவனது திருவருளில்லாது நீங்குமாயின், ஒருவராலும் - யாவராலும், தன் - அந்தச் சிவபிரானுடைய, இயல்பு - சுபாவத்தை, என்றும் - எக்காலத்திலும், அறிந்திடப்படாது - அறியக்கூடாது. எ-று. (௬௭)

இதுவுமது.

சம்புவினருளாலன்றிமாலியானுஞ்சகலதேவதைகளுமந்த (ஞ்
வும்பனேயுணரோமருள்பெறும்பொருட்டேயோதியயாவையுமுளதா

செம்பொருடன்னையருளினலொழியத்தெரிவினற்றெளிகுவராக
நம்புமானிடவர்கையினனற்றமறிவரோநாசியாலொழிய.

இ - ள். சம்புவினருளாலன்றி - சிவபெருமானது பிரசாதத்தாலன்றி, மால் - விஷ்ணுவும், யானும்-நானும், சகலதேவதைகளும் - சகலதேவர்களும், அந்தவும்பனையுணரோம்- அந்தச்சிவபெருமானைச் (சுதந்தரமா) யறியுந்தகுதியுடையவராகமாட்டோம், ஓதியயாவையும் - சொல்லிய வனைத்தும், அருள்பெறும்பொருட்டே- சிவப்பிரசாதங்கிடைக்கும்பொருட்டே, உளதாம் - (எக்காலத்தும்) உள்ளதாகிய, செம்பொருடன்னை - செவ்வியபொருள்தன்னை, அருளினலொழிய - சிவப்பிரசாதத்தாலன்றி, தெரிவினல் - அறிவினல், தெளிகுவராக - அறிபவர்களாக, நம்புமானிடவர் - நம்புகின்றமனிதர்கள், நாசியாலொழிய - மூக்கினலன்றி, கையினல் - கரத்தினலும், நாற்றம் - வாசனையை, அறிவரோ - அறிவார்களோ. எ - று. (௬௮)

அவதாரிகை.

சிவப்பிரசாதத்தின் சொரூபத்தைக்கூறுகின்ருர்.

ஒழிவிலாவிறைவனருளுருவுணரிலொத்திடும்வினையினிற்குரவன்,
விழியினல்விளையப்படுவதாயுளதோர்மிக்கதோரதிசயமதனை, மொழியுமாறென்னுன்முகுந்தனலரனன் முடிந்திடாகண்முகப்பட்டாதே,
யழிவிலாச்சிவற்குஞ்சிவைக்குமாற் கெனக்குமறிவுறுஞ்சிலவறிகுறியால்.

இ - ள். இறைவன் - சிவபெருமானுடைய, ஒழிவிலா - நீங்காத, அருளுருவு - பிரசாதத்தின்சொரூபத்தை, உணரில் - கருதுங்கால், ஒத்திடும்வினையினில் - கருமசாமியமானகாலத்தில், குரவன்விழியினல் - தேசிகரதுகருணகடாக்ஷத்தினல், விளையப்படுவதாயுளது - உண்டாகத்தக்கதாயிருக்கின்றது, ஓர் - ஒப்பற்ற, (இந்தப்பிரசாதத்தின்),மிக்கதோரதிசயமதனை - மிகுதியான ஓரதிசயத்தன்மையை, மொழியுமாறு - சொல்லுதற்கு, என்னல் -என்னலும், முகுந்தனல் - விஷ்ணுவினலும், முடிந்திடா - கூடாது, (ஏனென்னில் அந்தப்பிரசாதம்), கண்முகப்படாது - திரிசியமாகாது, அழிவிலாச்சிவற்கும்- (ஒருநாளும்) அழிவில்லாதபரமசிவனுக்கும், சிவைக்கும்- பராசத்திக்கும், மாற்கு-மாயோனுக்கும், எனக்கும் - எனக்கும், சிலவறிகுறியால் - சிலஅடையாளங்களால், அறிவுறும் - தெரியப்படும். எ-று. (௬௯)

ப - ம். சுகதுக்கத்திற்கேதுவாய தருமாதருமங்களென்னுங் கன்மங்கள் போகத்தால் அழிவுற்றுஒத்தவளவிலென்பார், "ஒத்திடும்வினையினில்" என்ருர்.

அவதாரிகை.

பிரசாதத்தையறியவேண்டி அதனது சின்னங்களைக்கூறுகின்ருர்.

மொழியுமக்குறிதான்மிக்கபேருவகைமொழிதழுத்தழுகையங்கத்தும், விழியிலும்விகாரம்பிறக்கைதம்பிக்கைமெய்விதிர்த்திருக்கைமெய்விழுகை, சுழல்கைமற்றெழுகைவானிலேயிருத்தல்சுடரொளியாகியேதோன்ற, லொழியுமிவ்வுடலங்கண்டிடாதிருத்தலும்பர்தேகாந்தரத்துறைதல்.

இ - ள். மொழியும் - சொல்லப்பட்ட, அக்குறிதான் - அந்தவடையாளங்கள், (யாதெனில்), மிக்கபேருவகை - மிகுந்தபேரானந்தசந்தோஷமடைதலும், மொழிதழுத்தழுகை - மொழிதழுதழுத்தழுதலும், அங்கத்தும் - சரீரத்திலும், விழியிலும் - நேத்திரங்களிலும், விகாரம்பிறக்கை- விகாரமுண்டாதலும், தம்பிக்கை - தம்பமாயுறுதலும், மெய்விதிர்த்திருக்கை - புளகமாயுடல்நடுக்குற்றிருத்தலும், மெய்விழுகை - சரீரங்கீழேவிழுதலும்; சுழல்கை - சுற்றுதலும், மற்றெழுகை - இன்னமும்ஊர்த்துவகெதியாதலும், வானிலேயிருத்தல் - ஆகாயத்திலிருத்தலும், சுடரொளியாகியே- (தேகம்) விளங்குகின்றசோதியாகியே, தோன்றல் - காணப்படுதலும், ஒழியுமிவ்வுடலம்-அழியுஞ்சுபாவமுடைய இந்தச்சரீரமானது, கண்டிடாதிருத்தல் - ஒருவருக்குந்தெரியாமல்மறைந்திருத்தலும், உம்பர் - உயர்வாக, தேகாந்தரத்துறைதல் - பரகாயப்பிரவேசஞ்செய்தலும். எ - று. (ருo)

இதுவுமது.

ஓதிட்டாதுணர்தல்கலை மலைமுதலாவுள்ளபேதனந்தெறலுணர்த்தலாதியாங்குறிகளிறைவனருளுக்கறி குறியாவனவருடன்னீதிதானெவர்க்குமொருபடித்தாகி நிகழ்வுறாதந்தநின்மலன்றன்பாதமேவுறுவார்பக்குவந்தோறும் படுதரமாகியேநிகழும்.

இ - ள். ஓதிடாது - அப்பியாசிக்காமல், கலை - சாஸ்திரங்களை, உணர்தல் - தானேதெரிந்து கொள்ளுதல், மலைமுதலாவுள்ள - பருவதமுதலாகவுள்ளவைகளை, பேதனம் - (சாதனமின்றிப்) பேதித்திடல், தெறல் - நிக்கிரகித்தல், உணர்த்தல் - அனுக்கிரகித்தல், ஆதியாங்குறிகள் - என்னும்இவைமுதலானகுறிகள், இறைவனூர் அருளுக்கு - சிவபெருமான்திருவருளுக்கு, அறிகுறியாவன - அடையாளங்களாகின்றன, அருள்தன்னீதிதான் - (அந்தச்) சிவப்பிரசாதத்தின் முறைமையானது, எவர்க்கும்-எல்லாருக்கும், ஒருபடித்தாகி - ஒரேதன்மையாகி, நிகழ்வுறாது - விளங்கமாட்டாது, அந்தநின்மலன்றன் - அந்தநின்மலனாகிய சிவபிரானுடைய, பாதமேவுறுவார் - திருவடிகளையடையத்தக்கவர்களுடைய, பக்குவந்தோறும் - பக்குவங்கள்தோறும், படுதரமாகியே - (அததற்குத்தகுந்தபடி) அதிகமதிகமாகவே, நிகழும் - அந்தப்பிரசாதம் விளங்கும். எ - று. (ருக)

அவதாரிகை.

[பரசிவன்பராசத்தி இவர்களாற்செய்யப்பட்டபிரசாதம் நாராயணர் நான்முதலிய எவர்களாலுஞ் செய்யக்கூடாதெனவும், அதிசீக்கிரத்தில் முத்தி

யடையவேண்டுமேல் முமுக்ஷுக்கள் மற்றத்தேவர்களதுபத்தியை நீக்கிச் சிவனையேமோசகனென்று சரண்புகுதல்வேண்டுமெனவுங் கூறுகின்றுர்.

செப்பியவிந்தவருள்சிவனுலுஞ் சிவையினுலுஞ்செயப்படுவ
தப்பெருந்தன்மையரியினுலென்னு லொருவராலளிக்கலாகாதே
யிப்பவந்தனிலேமுத்தி யிச்சிப்பானியம்புமெத்தேவையும்விட்டுச்
சிற்பரனுகுஞ்சிவனெருவனையே சரணெனச்சென்றுசேர்வுறுவான்.

இ - ள். செப்பிய - (இப்போது) சொல்லிய, இந்தவருள் - இந்தப்பிர சாதம், சிவனுலும் - சிவபிரானுலும், சிவையினுலும் - பார்வதிதேவியாலும், செயப்படுவது - கொடுக்கப்படுவது, அரியினுல் - நாரணனுலும், என்னுல் - என்னுலும், ஒருவரால் - வேருெருவராலும், அப்பெருந்தன்மை - அந்தம கத்துவமுடைய (பிரசாதத்தை), அளிக்கலாகாது - கொடுக்கக்கூடாது, இப் பவந்தனிலே - இந்தப்பிறப்பிற்ருனே, முத்தியிச்சிப்பான் - மோக்ஷத்தைய டைதற்காசையுற்றவன், இயம்பும் - சொல்லப்பட்ட, எத்தேவையும்விட்டு - எந்தத்தேவர்களையும்நீக்கி, சிற்பரனுகும் - சிற்சொரூபனுகிய, சிவனெருவ னையே-சிவபிரானெருவனையே, சரணென-அடைக்கலமென்று, சென்று சேர் வுறுவான் - போயடைவான். எ - று. (ருஉ)

அவதாரிகை.

சிவபத்தியினுலே முத்திசித்திப்பதன்றி, விஷ்ணுமுதலியோரிடத்துச்செ ய்யப்படும் பத்தியால் சித்தியாது. சிவனடியார்களிடத்தில் திருவருள்விளங் குவதுபோல மற்றைத் தேவர்களுடைய அடியார்களிடத்தில் விளங்காதெ ன்று கூறுகின்றுர்.

பரகதிசிவன்பால்வைத்திடப்பட்ட பத்தியாலுறுமதுவன்றி
யுரகமேற்றுயில்வோன் பாலுமென்பாலுமுற்றபத்தியினிலுண்டாகா
திரமுறுசிவபத்தன்றனுகத்துத்திருவருளொளிமிகத்திகழும்
பரிசரிபத்தர்க்கெனது பத்தர்க்கும்பரமுறநிகழ்வுறப்படாதால்.

இ - ள். சிவன்பால் - சிவனிடத்தில், வைத்திடப்பட்ட-வைக்கப்பட்ட, பத்தியால் - உத்தமபத்தியால், பரகதி - முத்தியானது, உறும் - பொருந்தும், அதுவன்றி - அந்தச்சிவபத்தியல்லாமல், உரகமேல் - அரவணைமேல், துயில் வோன்பாலும் - யோகநித்திரைசெய்கின்றமாயோனிடத்திலும், என்பாலும்- என்னிடத்திலும், உற்றபத்தியினில் - பொருந்தியபத்தியினுல், உண்டா கா - ஒருவருக்கும் பரகதியுண்டாகமாட்டாது, திரமுறு - நிலையுற்ற, சிவப த்தன்றன் - சம்புபத்தனுகியமகானுடைய, ஆகத்து - தேகத்தில், திருவரு ள்ஒளி - பரமசிவப்பிரசாதவிளககம், மிகத்திகழும்பரிசு - மிகுதியாய்விளங் குந்தன்மைபோல, அரிபத்தர்க்கு -நாராயணனடியார்களுக்கும், எனதுபத்தர் க்கும் - என்னுடையவடியார்களுக்கும், பரமுற-பரத்தையடையும்படி, நிகழ் வுறப்படாது- (அந்தப்பிரசாதம்) விளக்கமுறமாட்டாது. எ - று. (ருங)

அவதாரிகை.

நாராயணர் முதலாகியதேவரதுபத்தியைக் கௌவுணமாகக்கொண்டுநீக்கிச் சிவபெருமானையே திரிகரணங்களாலும் பத்திசெய்திடில் அவரே பிரசாதஞ்செய்கின்றார். செய்யில் எவராலும்அறியவொண்ணாதபரசிவனைப் பிரத்தியகான்மசொரூபமாகவுஞ் சாம்பமூர்த்தியான சகுணரூபமாகவும் பிரத்தியக்ஷமாகக்காணலாமெனக்கூறுகின்றார்.

வேறு.

ஆதலாலரியையென்னையாதரவுசெய்திடாதரன்மகேசனைக்
காதலாலடைகமுத்தி சித்திகடு கக்கிடைக்குமருளெய்துமப்
போதிலேயரியனாகிலுந்தனதுபூரணப்புரணமானசிற்
சோதியேமுழுதுமாகிநின்றபடிதோன்றுமாறுவெளிதோன்றுமால்.

இ - ள். ஆதலால் - இவ்வாறாகையால், (முமுட்சுவானவன்), அரியை - விஷ்ணுவையும், என்னை - என்னையும், ஆதரவுசெய்திடாது - விரும்பாமல், அரன் - அரனென்னும், மகேசனை - சிவபெருமானை, காதலால் - அன்பினால், அடைக - சரணடையக்கடவன், முத்திசித்தி - மோக்ஷசித்தியானது, கடுகக் - சீக்கிரத்தில், கிடைக்குமருளெய்தும்-கிடைக்கத்தக்க பிரசாதஞ்சம்பவிக்கும், அப்போதிலே - அக்கணத்திற்றானே, அரியனாகிலும் - (பரமசிவன்) காணடற்கரியனாகிலும், தனது - தன்னுடைய, பூரணப்புரணமான - பூரணப்பிரகாசமான, சிற்சோதியே - சிற்பிரகாசமே, முழுதுமாகிநின்றபடி - எல்லாமாயிருக்கின்றதன்மை, தோன்றுமாறு - விளங்கும்படி, வெளிதோன்றும் - (சாம்பமூர்த்தியாகப்) பிரத்தியக்ஷமாவான். எ - று. (௩சு)

அவதாரிகை.

பரமாத்துவிதவிஞ்ஞானமே முடிந்தநிலமென்றும் இதற்குவேறாயறிந்தவன்பசுவென்றுங் கூறுகின்றார்.

வேறு.

சாக்கியாமெல்லாப்பொருட்கு மீசனையெப்பொருள்களுஞ்சாக்
கிமாத்திரமா, நோக்கினனியாவனேக்கதனாலேநோக்கலாமிதுமறை
யந்த, நீக்கிலாப்பரமாத்துவிதநிட்டையாமிந்நிலமொன்றேமுடிவிதி
ற்பேத, மாக்கினனறிவாலறிவிலாதமையாலவனலாதார்பசுவாவார்.

இ - ள். எல்லாப்பொருட்கும் - சகலவத்துக்களுக்கும், சாக்கியாம் - சாக்ஷியாகிய, ஈசனை - பரமசிவனையும், எப்பொருள்களும் - (சாக்ஷியமான) எந்தப்பொருள்களையும், சாக்கிமாத்திரமா - சாக்ஷிமாத்திரமாகவே, நோக்கினனியாவன் - அறிந்தவனெவனோ (அவனுடைய), நோக்கதனால்-ஞானத்தினாலே, இது-இந்தப்பிரமமானது, நோக்கலாம் -அறியலாகும், மறையந்தம் நீக்கிலா - வேதாந்தத்தைநீங்காத, பரமாத்துவிதநிட்டையாம் - பரமாத்துவித

நிஷ்டையாகும், இந்நிலம் ஒன்றேமுடிவு- இந்தப் பூமியொன்றே முடிவாயுள்ளது, அறிவால் - ஞானத்தினாலேனும், அறிவிலா தமையால்-அஞ்ஞானத்தினாலேனும், இதில் பேதமாக்கினன் - இந்தப்பரமாத்துவிதத்தில் பேதஞ்செய்தவனெவனோ, அவனலாது - அவனைத்தவிர, ஆர்பசுவாவார் - (உலகத்தில்) எவர்கள்தான்பசுவாவார்கள். எ - று. (ருரு)

அவதாரிகை.

பரமாத்துவிதஞானியே பரதேவதை யென்பதையும் அதில் துவேஷமுண்டாவதற்குக் காரணத்தையுங் கூறுகின்றார்.

வேறு.

பரமாத்துவிதஞானியே பரதேவதைதானவனேயித்
திரமாமுத்தியானிங்குச் செப்பும்பொருள்செய்வினையாலு
முரமாந்ததீசிகௌதமனாலுண்டாஞ்சாபவுரையாலுங்
கரமாமனிதர்நெஞ்சுதனிற்காதல்செய்யாரொருகாலும்.

இ - ள். பரமாத்துவிதஞானியே - (இந்தப்) பரமாத்துவிதவிஞ்ஞானமுடையவனே, பரதேவதை - பரவஸ்துவாவான், அவனே - அந்தஞானியே, இத்திரமாமுத்தி - இந்தநிலைபெற்றதாகியமுத்தியுமாவான், யான்- நான், இங்கு செப்பும்பொருள் - இவ்விடத்திற் கூறிய (பரமாத்துவித) தாற்பரியத்தை, செய்வினையாலும் - (முன்) செய்தபாவத்தினாலும், உரமாந்ததீசி - (தவத்தில்) வலிமைபொருந்தியததீசிமுனிவராலும், கௌதமனால்- கௌதமமுனிவராலும், உண்டாம் - (ஒவ்வொருகாரணத்தால்) சம்பவித்த, சாபவுரையாலும் - சாபவார்த்தையாலும், கரமாமனிதர் - கழுதைபோன்றமானிடர்கள், நெஞ்சுதனில் - (தங்கள்) மனத்தின்கண், ஒருகாலும் காதல்செய்யார்- எக்காலத்திலு மன்புசெய்யமாட்டார்கள். எ - று. (ருசு)

இதுவுமது.

வேறு.

ஆரணத்தன்னியமில்லாச்சிவன்றன்பாலு மத்துவிதவேதனத்து மடைதற்குள்ள, காரணமாஞ்சிவலிங்கார்ச்சனத்துஞ்சாலக் காய்வதுவுமேயன்றியுருத்திராக்க, தாரணத்துந்திரிபுண்டரதாரணத்துஞ் சருவாங்கோத்தூளனத்துந்தாமேகாய்வர், சீரிணக்குஞ்சிவனென்னு முரையுந்தங்கள் செவியாலுங்கேளார்செய்வினையாற்றீயோர்.

இ - ள். தீயோர் - கொடியவர்கள், செய்வினையால் - (சென்மாந்தரத்திற்செய்தகொடிய) வினையால், ஆரணத்தன்னியமில்லா - வேதத்திற்குவேறில்லாத, சிவன்றன்பாலும் - சிவபெருமானிடத்திலும், அத்துவிதவேதனத்தும் - துவிதமில்லாத ஞானத்திலும், அடைதற்குள்ள - (சிவபெருமானை) யடைதற்குத்தகுதியாயுள்ள, காரணமாம் - காரணமாகிய, சிவலிங்கார்ச்ச

னத்தும் - சிவலிங்கபூசையிலும், சால - மிகவும், காய்வதுவுமேயன்றி - அ வேஷிப்பதுமல்லாமல், உருத்திராக்கதாரணத்தும் - உருத்திராக்ஷந்தரித்தலி னும், திரிபுண்டரதாரணத்தும்- (விபூதியை) திரிபுண்டரமாகத்தரித்துக்கொ ள்வதிலும், சருவாங்கோத்தூளனத்தும்- (விபூதியை)உடலெங்கும் பூசிக்கொ ள்ளுவதிலும், தாமேகாய்வர்- தாங்களே துவேஷிப்பார்கள், சீர்இணக்கும்- (ஒருதரஞ்சொன்னவர்களுக்கு முத்தியென்னும்) பெருஞ்செல்வம் பொருந் தச்செய்கின்ற, சிவனென்னும்உரையும் - சிவனெனகின்றவார்த்தையையும், தங்கள்செவியாலும்-தங்கள்காதினுலும், கேளார்-கேட்கமாட்டார்கள். எ-று.

அவதாரிகை.

அனேகஜன்மசுகிர்தங்களால் சுருதிஸ்மிருதிகளின்படிநடப்பவர்களுக்கே பரமாத்துவிதஞானமுண்டாகுமெனவும், அவ்விதஞானி மும்மூர்த்திகளாலும் பூசிக்கத்தக்கவனெனவுங் கூறுகின்ருர்.

வேறு.

தொல்லைநல்வினையாற்சுருதி நன்மிருதிசொன்னவாதுணிந்தவ த்தூயோ, ரொல்லையிற்பரமாத்துவிதவேதனத்தை யுள்ளவாறுணர வேயுணர்வர், நல்லவிப்பரமாத்துவிதஞானியைநாராயணனுனுருத் திரனு, மெல்லையிலெல்லாத்தேவரும் பூசித்தேத்தவும்படுமிவனெ ன்றும்.

இ-ள். தொல்லைநல்வினையால் - முன்னியற்றியபுண்ணியகருமங்களால், சுருதி - வேதங்களும், நன்மிருதி - நல்லஸ்மிருதிகளும், சொன்னவா-சொல் லியபிரகாரமே, துணிந்த - தெளிந்தவர்களாகிய, அத்தூயோர் - அந்தப்பரி சுத்தர்கள், ஒல்லையில் - சீக்கிரத்தில், பரமாத்துவிதவேதனத்தை - பரமாத் துவிதஞானத்தை, உள்ளவாறு - உள்ளபடி, உணரவேயுணர்வர் - அறியவே அறிவார்கள், நல்ல - நன்மைபொருந்திய, இப்பரமாத்துவிதஞானியை - இ ந்தப்பரமாத்துவித ஞானமுடையவனை, நாராயணன்- மாயவனும், நான் - நானும், உருத்திரனும் - உருத்திரனும், எல்லையில் - அளவில்லாத, எல்லா த்தேவரும் - சகலதேவர்களும், இவண் - இவ்விடத்தில், என்றும் - எக்கால த்தும், பூசித்து - அருச்சித்து, ஏத்தவும்படும்-துதிக்கவும்படும். எ-று. (௫௮)

அவதாரிகை.

பரமாத்துவித விஞ்ஞானியினது பெருமையைக்கூறுகின்ருர்.

ஈசனுஞானியிருந்துளவிடத்தேயிருப்பதுமுத்திதானந்தத்
தேசிகனேவல்செய்பவன்காலென்சென்னியிலிருப்பதுமன்னி
மாசிலாப்பரமஞானியாமுனிக்குமகேசனுமொப்பலன்மதிக்கி
லாசிலாவரியுமொப்பலனுனுமொப்பலனேவரொப்பாரே.

இ-ள். ஈசனும் ஞானி-ஈச்வர சொருபனுகிய ஞானியானவன், இரு ந்துள இடத்தே-வசிக்கின்ற இடத்திலேயே, முத்தி-மோக்ஷமானது,இருப்பது

இருக்கின்றது, அந்தத்தேசிகன் - அந்தக்குருவினது, ஏவல்செய்பவன் கால் - பணிவிடைசெய்பவன் பாதங்கள், என் சென்னியில் - எனது தலையின்மேல், மன்னி இருப்பது-நிலையாயிருக்கின்றன, மாசிலா - குற்றமில்லாத, பரமஞானியா முனிக்கு-அத்துவிதவிஞ்ஞானியான முனிவனுக்கு, மகேசனும்-உருத்திரனும், ஒப்பலன் - சமானமாகமாட்டான், மதிக்கில் - ஆராயுங்கால், ஆசிலா - குற்றமில்லாத, அரியும் - திருமாலும், ஒப்பலன் - சமானமாகமாட்டான், நானும் - (பிரமனாகிய) யானும், ஒப்பலன் - சமானமாகமாட்டேன் (என்றால்), ஏவர் - யாவர்தாம், ஒப்பார் - சமானமாவார்கள். எ-று. (ருக)

அவதாரிகை.

பரமாத்துவிதஞானிக்கு உடல்பொருள் ஆவியை தத்தஞ்செய்யில் ஞானமுண்டாகுமென்று கூறுகின்றார்.

ஒப்பறுபரமாத்துவிதஞானத்தை யுணர்ந்துள பரமயோகிக்குக்
கைப்பொருளாவிகாயமுங்கொடுப்பான் காதலாலவைகொடுத்திட
யிப்பவமறுக்குஞானம்வந்துதித்தற்கேதுவாமதுவிதுவொழிய [வெ
வுற்பவந்துடைக்குமுணர்வுபெற்றுய்தற்கிலதிதிலையுநீரொன்றும்.

இ-ள். (முமுக்ஷுவானவன்), ஒப்பறு-நிகரில்லாத, பரமாத்துவிதஞானத்தை - மேம்பாடுள்ளஅத்துவிதவிஞ்ஞானத்தை, உணர்ந்துள - அறிந்திருக்கின்ற, பரமயோகிக்கு - பரமாத்துவிதநிஷ்டனுக்கு, கைப்பொருள் - தன்கையிலுள்ளபொருளையும், ஆவி - பிராணனையும், காயமும் - தேகத்தையும், காதலால்- (மிகுந்த) அன்பினாலே, கொடுப்பான் -கொடுக்கக்கடவன், அவை கொடுத்திடவே-அந்தமூன்றையுங்கொடுக்கவே, இப்பவம் அறுக்கும் - இந்தப்பிறவித்(துன்பத்தை) யொழிக்கத்தக்க, ஞானம்வந்து உதித்தற்கு-பரமஞானம்வந்துதோற்றுவதற்கு, அது ஏதுவாம்-அதுகாரணமாகும், இதுவொழிய-இதுவல்லாமல், உற்பவந்துடைக்கும் - செனனத்தைநீக்குகின்ற, உணர்வுபெற்று-ஞானத்தையடைந்து, உய்தற்கு- பிழைப்பதற்கு, இலது-வேறுமார்க்கமிலதாகும், இதில்- இந்தத்தாற்பரியத்தில், ஒன்றும் - யாதொன்றும், ஐயுறீர்-(நீங்கள்) சந்தேகப்படாமலிருங்கள். எ-று. (கூo)

அவதாரிகை.

பரமாத்துவிதஞானத்திற்கு விரோதமானவற்றைக் கூறுகின்றார்.

சதுமறையொழிந்தவாதனைபொல்லாத்தர்க்கவாதனையுலகத்தின்
மதமுறுசமயவாதனைதாரமக்கள்சுற்றத்தின்வாதனையு
மிதமுறும்பொருளின்வாதனைதேகேந்தியமனம்புத்திநற்பிராணன்
முதலவாதனையும்வித்தைவாதனையுமுடிவில்போகத்தின்வாதனையும்.

இ-ள். சதுமறையொழிந்தவாதனை-நான்குவேதங்களுக்கும் புறம்பானவாசனையும், பொல்லாத்தர்க்கவாதனை-குதர்க்கவாசனையும், உலகத்தில்-சகத்

தில், மதமுறுசமயவாதனை -அகங்காரமுள்ள சமயவாசனையும், தாரம்-மனைவி, மக்கள்-புத்திரர், சுற்றத்தின்வாதனையும் - உறவோர் (ஆகியவிவர்களிடத்துள்ள) வாசனையும், இதமுறும் - நன்மைபொருந்துகின்ற, பொருளின்வாதனை-திரவியத்தின்வாசனையும், தேகேந்தியமனம்-உடல்இந்திரியம் மனம், புத்தி-புந்தி, நற்பிராணன்-நல்லஆவி, முதலவாதனையும் - முதலானவற்றின்வாசனையும், வித்தைவாதனையும் - கல்வியின்வாசனையும், முடிவில்-ஒழிவில்லாத, போகத்தின்வாதனையும்-போகத்திலுள்ளவாசனையும். எ-று. (சூ௧)

இதுவுமது.

ஏறுடைச்சிவனைத்திருநெடுமாலையிகழும்வாதனையும்வேதத்திற்
கூறிடுஞானசாதனமாகக்கொளுமுத்தூளனபுண்டரத்தை
மாறுடனிகழும்வாதனைபாவவாதனையாவுமானிடர்க்கு
வேறடும்பரமாத்துவிதஞானத்தைவிலக்கிடும்விரோதிவிண்ணவரே.

இ-ள். ஏறுடைச்சிவனை- இடபவாகனத்தையுடைய உருத்திரனையும், திருநெடுமாலை - திருமகளையுடையமகாவிஷ்ணுவையும், இகழும்வாதனையும் - நிந்திக்கும்வாசனையும், வேதத்தில்-வேதங்களில், கூறிடும்-சொல்லுகின்ற,ஞானசாதனமாக-ஞானத்திற்குச்சாதனமாக, கொளும்- அங்கீகரிக்கின்ற, உத்தூளனபுண்டரத்தை-(விபூதி) யுத்தூளனந் திரிபுண்டரமிவற்றை, மாறுடன்- விரோதத்துடனே, இகழும்வாதனை- நிந்தித்திடும்வாசனையும், பாவவாதனையாவும்-பாவசம்பந்தமான வாசனைகளனைத்தும், விண்ணவரே- தேவர்களே, மானிடர்க்கு -மனிதர்களுக்கு, வேறடும்- துவிதத்தைநாசஞ்செய்கின்ற, பரமாத்துவிதஞானத்தை - மேம்பாடுள்ளஅத்துவிதவிஞ்ஞானத்தை, விலக்கிடும்-நீக்குகின்ற, விரோதி-விரோதிகளாகும். எ-று. (சூ௨)

அவதாரிகை.

ஞானப்பிரதிபந்தகவாசனையை நீக்கி முமுட்சுவானவன் பரமாத்துவித ஞானியாவனெனவும், வேதங்கூறிய இந்த அத்துவிதஞான சொரூபப்பிரமத்தின் மகிமையை என்னாலுரைக்கவொண்ணாதெனவும் கூறுகின்றார்.

வேறு.

ஆதலால்வீடதனிலாசையுள்ளோனதின்மிகவுந்தாற்பரியனாகிமுன்
ன, மோதுவாதனைகளெல்லாமிகந்தெப்போது முற்றபரமாத்துவித
ஞானியாவன், வேதவேதாந்தங்களுணாக்கப்பட்ட மேலானவத்துவி
தஞானமாகு, நாதனும்பிரமத்தைநவிலலாமோ நாமெனைத்திருபத
ல்லானுகத்திரே.

இ-ள். ஆதலால் - ஆகையால், வீடதனில் - மோக்ஷத்தில், ஆசையுள்ளோன் - இச்சையுடையவன், அதில் - அந்தப்பரமாத்துவிதத்தில், மிகவுந்தாற்பரியனாகி - மிகவுங்கருத்துள்ளவனாகி, முன்னமோது - முன்சொன்ன,

வாதனைகளெல்லாம் — வாசனைகளனைத்தையும், இகந்து-விட்டு, எப்போதும்-எக்காலத்தும், உற்ற - பொருந்துகின்ற, பரமாத்துவிதஞானியாவன் - பரமாத்துவிதஞானமுடையவனுவான், வேதவேதாந்தங்கள் - வேதங்களாலும் வேதாந்தங்களாலும், உரைக்கப்பட்ட - சொல்லப்பட்ட, மேலானஅத்துவித ஞானமாகும்— உயர்வான அத்துவிதஞான சொரூபமாகிய, நாதனும்பிரமத்தை - பரமசிவமான பிரமத்தின்சுபாவத்தை, நாகத்தீர் - விண்ணேர்களே, நாமௌனத்திருப்பதல்லால் - நாம் சும்மாவிருக்கவேண்டுவதன்றி, நவிலலாமோ-சொல்லப்படுமோ. எ - று. (சுங)

அவதாரிகை.

இதனைக் களங்கமில்லாத வேதவேதாந்தியர்களே சொல்லவல்லவர்களெனக்கூறுகின்ருர்.

வேறு.

ஓதியதோடமெல்லாமொழிந்துளராகியுற்ற
வேதவேதாந்தந்தன்னின்மிகநிட்டையுடையநல்லோர்
யாதுதம்மிதயத்துள்ளாமிரண்டிலாஞானமத்தைப்
போதகஞ்செய்யத்தக்கோராவர்கள்புரையற்ருர்க்கே.

இ - ள். ஓதியதோடமெல்லாம் - (முன்பு) கூறியகுற்றமனைத்தும், ஒழிந்துளராகியுற்ற-நீங்கினவர்களாயிருக்கின்ற, வேதவேதாந்தந்தன்னில்-வேதத்திலும் வேதாந்தத்திலும் (விளங்கியபிரமத்தில்), மிகநிட்டையுடைய-மிகவும்நிஷ்டையுடைய, நல்லோர்-மகான்கள், யாது - எது, தம்மியத்துள்ளாம்-தங்கள் மனத்துட்பொருந்துகின்ற, இரண்டிலா - துவிதமில்லாத, ஞானம்- ஞானமோ, அத்தை - அதனை, புரையற்ருர்க்கே - குற்றமில்லாதவர்களுக்கே, போதகஞ்செய்ய - உபதேசஞ்செய்ய, தக்கோராவர்கள் - தகுந்தவராவர்கள். எ - று. (சுச)

அவதாரிகை.

ஆசிரியர் மனமிரங்கித் திருவருளாலொரு தரம்பார்த்தபோதேயுண்டாகும்பரமாத்துவிதஞானமகிமையை நான்உங்களுக்கு மொழிந்தேனென்று கூறுகின்ருர்.

சுரரிலுத்தமரோயெல்லாத்துக்கமுந் தொலைப்பதாகிப்
பரிவொடொண்குரவன்பார்த்தபொழுதிலேபரமானந்தப்
பொருவிலாச்சிவரூபத்தையடைவித்துப்புரணமாக்கும்
பெரியவத்துவிதஞானமுங்கட்குப்பேசலானேம்.

இ - ள். சுரரிலுத்தமரோ - தேவர்களிலுயர்ந்தவர்களே, எல்லாத்துக்கமும் - சகலதுக்கங்களையும், தொலைப்பதாகி - ஒழிப்பதாகி, பரிவொடு - அன்புடன், ஒண்குரவன் - ஞானகுருவானவன், பார்த்தபொழுதிலே - (ஒருதர

ங்கிருபாதிருஷ்டியால்) கடாட்சித்தகாலத்திற்றுனே, பொருவிலா - ஒப்பில்லாத, பரமானந்த - பிரமானந்த, சிவரூபத்தை - சிவசொரூபத்தை, அடைவித்து - அடையப்பண்ணி, புரணமாக்கும் - பூரணமாகச்செய்கின்ற, பெரியவத்துவிதஞானம் - பரமாத்துவிதஞானத்தை, உங்கட்கு - உங்களுக்கு, பேசலானேம்- சொல்லலானேம். எ - று. (சுடு)

நான்காமத்தியாயமுற்றிற்று.

ஆக-திருவிருத்தம். - கசுரு.

சிவாயபரமகுரவேநம:

---

திருச்சிற்றம்பலம்.

ஐந்தாவது.

சாந்தோக்கியவுபநிடததாற்பரியமுரைத்தவத்தியாயம்.

அத்தியாயவவதாரிகை.

சாமவேதத்தின்மற்றெருசாகையான உபநிடதமும் பிரமான்ம ஏகத்துவத்தையே கூறுகின்றதென்று இரண்டத்தியாயங்களாலுங் கூறுவான்றொடங்கி நிஷ்பிரபஞ்சமாகிய அத்துவிதியப்பிரமத்தை பிரத்தியகான்மசொரூபமாக வுபதேசித்தற்குக் காரியப்பிரபஞ்சங் காரணப்பிரமத்திற்கு வேறில்லாதது பற்றி ஏக வஸ்துவின்விஞ்ஞானத்தினல் அனைத்தின்விஞ்ஞானமுண்டாகுமென்று பிரதிக்கினைசெய்து திருட்டாந்தத்துடன் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்ற சுருதியின்றாற்பரியத்தைக் கூறுகின்றார்.

மறைப்பதாய்மிகவுமுன்னேர்மடிவிலாப்பொருளைக்காட்டுஞ்
சிறப்புடையுபதேசத்தைச்செப்புவனுங்கட்கெல்லா
மிறப்பிலாதரத்தினேடுமிசைந்திதுகேண்மினென்றான்
பிறப்பனமுழுதுஞ்செய்யும்பீடுடைமலரின்மேலோன்.

இ - ள். பிறப்பனமுழுதும் -உற்பவியாநின்றவனைத்தினையும், செய்யும் - சிருஷ்டிக்கப்பட்ட, பீடுடை - பெருமையையுடைய, மலரின்மேலோன் - தாமரைப்பூவில் வீற்றிராநின்றபிரமதேவனானவன், முன்னேர்- முதியோர்களால், மிகவும்மறைப்பதாய்-மிகவும் (ரகசியமாக) மறைக்கத்தக்கதாயிருக்கின்ற, மடிவிலாப்பொருளை - அழிவில்லாதபொருளை, காட்டும்- (விளங்கக்) காட்டுகின்ற, சிறப்புடையுபதேசத்தை - மேன்மையுடைய அத்துவிதஉபதேசத்தை, உங்கட்கெல்லாம், உங்களுக்கெல்லாம், செப்புவன்-சொல்லுகின்றேன், இறப்பிலாதரத்தினேடும் - அழிவில்லாதஅன்பினேடும், இசைந்து - இணங்கி, இது - இதனை, கேண்மினென்றான் - கேளுங்களென்றான். எ - று.

ப - ம். உபதேசத்தாலேயே அடையப்படுவதனுல் மிகவும் ரகசியமென்பார்,“மறைப்பதாய்” எனமுர். (க)

அவதாரிகை.

ஏகவிஞ்ஞானத்தால் எல்லாம்அறியப்படுமென்று பிரதிக்கினைசெய்து கூறுகின்முர்.

வேறு.

யாதொன்றிருந்தபடிகேட்கக்கேளாமுழுதுங்கேட்டனவாம்
யாதொன்றிருந்தபடிபார்க்கப்பாராவெவையும்பார்த்தனவாம்
யாதொன்றிருந்தபடியறியவறியாவெல்லாமறிந்தனவாம்
யாதொன்றந்தவுபதேசமறிகவறிவுமிகவுடையீர்.

இ-ள். மிகஅறிவு உடையீர்-மிகவும்அறிவுடையதேவர்களே, யாதொன்று-யாதொருபொருளை, இருந்தபடி--உள்ளபடி, கேட்க - கேட்க, கேளா முழுதும்-கேட்கப்படாத அனைத்தும், கேட்டனவாம்-கேட்டதுகளாகுமோ, யாதொனறு-யாதொருபொருளை, இருந்தபடி-உள்ளபடி, பார்க்க-மனனஞ்செய்ய, பாரா எவையும் - மனனப்படாத காரியப்பொருளனைத்தும், பார்த்தனவாம் - மனனஞ்செய்ததுகளாகுமோ, யாதொன்று - யாதொருபொருளை, இருந்தபடி -உள்ளபடி, அறிய - உணர, அறியா எல்லாம் - அறியப்படாத அனைத்தும், அறிந்தனவாம் - அறியப்பட்டனவாகுமோ, யாதொன்று அந்த உபதேசம் - யாதொரு அந்த உபதேசத்தை, அறிக-நீங்கள் அறியுங்கள். எ - று.

ப - ம். காரணமான சத்தருபப்பிரமத்தை உபநிடதமகா வாக்கியங்களாற் சிரவணஞ்செய்யில்என்பார், “யாதொன்றிருந்தபடி கேட்க” எனவும், காரியமான ஜகமனைத்தும் ஞானத்துக்கவிடயமாயிருந்திடினும் தனக்குக்காரணமான பிரமத்துக்கு வேருயிலாததனுற் பிரமவிடயமான சிரவணஞானத்தால் விஷயீகரிக்கப்படுமென்பார், “கேளாமுழுதங்கேட்டனவாம்” எனவும்,காரியமான ஜகமெல்லாம் ஞானத்தால் அறியப்படாவிடினும் காரணப்பிரமத்துக்கு வேறில்லாததனுற் காரணமாகவேநிச்சயிக்கப்படுமென்பார், “எல்லாமறிந்தனவாம்” எனவும், கூறினுர். (உ)

அவதாரிகை.

பிரமவஸ்துவையறிந்தமாத்திரத்தில் இதரங்கள் எங்ஙனமறிந்ததாகுமென்னுஞ்சங்கைக்குக் காரியஜகங் காரணப்பிரமத்திற்கு வேறில்லையென்றுதிருஷ்டாந்தங்களால் சமாதானங் கூறுகின்முர்.

வேறு.

மண்ணதோர்திரளைகாணவனைத்தகாரியங்களந்த
மண்ணில்வேறிலாதெக்காலும்வருவதேயாதலால்வே
றெண்ணிடுநாமரூபமிசைவுறுதாகுமென்று
மண்ணிதேயுள்ளதென்றும்வானவர்க்கயன்முன்சொன்னுன்.

இ - ள். மண்ணது . மண்ணினுடைய, ஓர்திரளை - ஒருபிண்டத்தை, காண - பார்க்க, வனைந்தகாரியங்கள் - வெவ்வேறாகச்செய்தகடமுதலானவைகளும், அந்தமண்ணில் வேறுஇலாது - அந்தமண்ணைக்காட்டிலும் பின்னமாக இல்லாமல், எக்காலும் - எக்காலத்திலும், வருவது - அறியவருவது, ஆதலால் - ஆகையால், வேறுஎண்ணிடும் - பின்னமாகக்கருதுகின்ற, நாமரூபம்-நாமரூபங்கள், இசைவுறுதாகுமென்றும்-பொருந்தாததாகுமென்றும், மண்ணிதேயுள்ளதென்றும்- இந்தமிருத்திகையே சுபாவமாயிருக்கின்றதென்றும், வானவர்க்கு - தேவர்களுக்கு, அயன் - நான்முகனானவன், முன்சொன்னான் - முன்புகூறினான. எ - று.

ப - ம். நிச்சயப்பட்டிருக்கின்ற காரணமானமண் இடைவிடாதிருத்தலால் கடமுதலியகாரியங்களுக்குச் சொரூபலாபமில்லையென்பார், "வனைந்தகாரியங்களந்தமண்ணில்வேறிலாது" என்றுகூறினார். (௩)

இதுவுமது.

உலகமோர்மணியிரும்பாமுகிர்சிவியொன்றுகாண
உலகமெல்லாமுமாயவுருவமுமிரும்புமற்றே
அலகில்காரணத்தினோடுகாரியம்வேறிலாமை
பலபடவறியும்வண்ணம்பகர்ந்தனன்படைக்குநாதன்.

இ - ள். ஓர் உலகமணி - ஒரு உலோக மணியையும், இரும்பாம்-இரும்புரூபமாகிய, உகிர் சிவி ஒன்று- நகஞ்செதுக்கும் கத்தி ஒன்றையும், காண-பார்க்குங்கால், எல்லாமுமாயவுருவமும்-சகலாபரணங்களுமாகிய ரூபமும், ஒன்றுலகம் - உலோகமொன்றேயாகும், இரும்பும் அற்றே- இரும்பும் அத்தன்மையேயாகும், அலகில் - அளவில்லாத, காரணத்தினோடு - காரணத்தோடு, காரியம்வேறிலாமை - காரியங்கள் பின்னமில்லாததன்மையை, பலபடவறியும் வண்ணம் - பலவிதமாகவறியும்படி, படைக்குநாதன்-சிருட்டிசெய்யும் பிரமாவானவன், பகர்ந்தனன் - சொன்னான். எ - று. (௪)

அவதாரிகை.

காரணமாகிய பிரமத்திற்குக் காரியஜகம்வேறில்லையென்றால் இந்தஜகம்விசேடமில்லாததாகுமாதலால் அகத்தியம் ஜகம்பிரம பின்னமென்றுஅங்கீகரிக்கவேண்டுமென்று சங்கித்து காரியங்காரணபின்னமேயன்றிப் பின்னமுமல்ல பின்னாபின்னமுமல்லவெனக்கூறி, பின்பு காரியம்பின்னமென்னில் சத்தாகவா அசத்தாகவா சதசத்தாகவா எனவிகற்பித்துக் கூறுகின்றார்.

காரியமெல்லாமுள்ளகாரணம்வேறுமன்று
காரியமொருகால்வேறாய்வேறன்றியிருப்பதன்று
காரியங்காரணத்தின்வேறென்றுகருதிலந்தக்
காரியஞ்சத்தசத்தோசதசத்தாய்வேறோவென்றான்.

இ - ள். காரியமெல்லாம் - காரியங்களனைத்தும், உள்ளகாரணம்-தன்க்கபின்னமாயிருக்கின்றகாரணந்தான், வேறுமன்று-பின்னமுமல்ல, காரியம்-காரியமானது, ஒருகால்வேருய் வேறன்றி - ஒருகாலத்தில் பின்னுபின்னமாகவும், இருப்பதன்று - இருப்பதல்ல, காரியம் - காரியமானது, காரணத்தின் வேறென்று - காரணத்தைக்காட்டிலும்பின்னமென்று, கருதில் - எண்ணினுல், அந்தக்காரியம் - அந்தக்காரியமானது, சத்து - சத்தாகப்பின்னமோ, அசத்தோ - அசத்தாகப்பின்னமோ, சதசத்தாவேருவென்ருன் - சதசத்தாகப்பின்னமோவென்ருன். எ - று. (ரு)

அவதாரிகை.

சத்தாகப்பின்னமென்னில் அக்காரியத்தின் சத்தை காரணத்தினதுசத்தையா வேரு எனவிகற்பித்துக் கூறுகின்ருர்.

சத்தாயேவேறதென்னிற்காரணசத்தைதானே
பொய்த்தாயகாரியத்தின்சத்தைதான்புகலில்வேரு
யொத்தேதானிற்பதேதென் றுரைத்தனனுலகமெல்லாம்
வைத்தாயுமறைகளோதுமலர்மிசைமன்னும்வானேன்.

இ - ள். சத்தாயே - சத்துருபமாகவே, [illegible]தென்னில் - பின்னமென்ருல், பொய்த்தாய - பொய்ம்மையாகிய, காரியத்தின்சத்தைதான் - காரியத்தினுடையசத்தையானது, புகலில் - சொல்லுங்கால், காரணசத்தைதானே - காரணசத்தைதானே, வேரு - அன்னியமோ, ஒத்தே - (உங்களுக்கு)ப்பொருந்தி, நிற்பதேதென்று - நிற்கின்றதெதுவென்று, உலகமெல்லாம் - எல்லாவுலகங்களையும், வைத்து - சிருஷ்டித்து, ஆயுமறைகளோதும் - ஆராய்த்தக்க நான்குவேதங்களையுமுரைசெய்யாநின்ற, மலர்மிசைமன்னும் - தாமரைமலரில் வீற்றிருக்கும், வானேன் - பிரமதேவனுனவன், உரைத்தனன் - சொன்னுன். எ - று. (சு)

அவதாரிகை.

காரணசத்தையேகாரியசத்தையென்றபக்ஷத்தாற் காரியமசத்தேயாகின்றதென்றுகூறுகின்ருர்.

காரணசத்தைதா[illegible]யென்றிடில்வேறுசொன்ன
காரியசத்தை[illegible]ல் [illegible]யாயிடுமுன்புசொன்ன
காரணசத்[illegible]ாகுமெ[illegible]ான்றேயானபினந்தச்சத்தைக்
கோதொ[illegible]த்துச்[illegible]தமுண்டாம்படியெங்ஙனுமையினென்ருன்.

இ - ள். காரணசத்தைதானேயென்றிடில் - காரணசத்தைதானேகாரியசத்தையெனில், வேறுசொன்ன - பின்னமாகச்சொல்லிய, காரியசத்தை - காரியசத்தையானது, இல்லையாயிடும் - இல்லாததாய்விடும், முன்புசொன்ன - முற்கூறிய, காரணசத்தையொன்றேயானபின் - காரியசத்தையானது கார

ணசத்தையாகவே சித்தித்தபின்பு, அந்தச்சத்தைக்கு-அந்தக்காரியசத்தைக்கு,
ஓது - சொல்லுகின்ற, ஒருபேதமுண்டாம்படியெங்ஙன் - ஒருபேதமுண்டா
கும்விதம்எவ்வாறு, உரைமினென்றான்-சொல்லுங்களென்றான். எ - று.

ப - ம். காரணசத்தையேயன்றிக்காரியசத்தைவேறில்லாததனாற் காரிய
ங்காரணபின்னமேயாகின்றதென்பார், "அந்தச்சத்தைக்கோதொரு பேதமு
ண்டாம்படியெங்ஙனுரைமின்" என்றார். (எ)

## அவதாரிகை.

சத்தை ஏகமாயினுங் காரணத்துக்குக்காரியம்வேறாகவனுபவிக்கப்படுகி
ன்றதெனச்சங்கிக்கக் காரணசத்தையே காரியசத்தையென அங்கீகரித்தத
னால் தன்னியல்பாலேயே காரியம் அசத்தாகுமாதலாற் காரியம்பின்னமாகிச்
சத்தென்பது வாக்குமாத்திரந்தானெனக்கூறுகின்றார்.

சத்தைதானொன்றாநின்றதாயினுங்காரியங்க
ளொத்தபேர் வேறுபாட்டாலுள்ளகாரணத்தில்வேறே
லித்தகைத்தானவார்த்தையியம்புபேரளவேயானால்
வைத்தகாரியமுண்டென்னும்வார்த்தையுமசத்தேயாகும்.

இ - ள். சத்தைதான்-காரணசத்தைகாரியசத்தையிரண்டும், ஒன்றாநின்
றதாயினும் - ஏகத்தன்மையாகநின்றதானாலும், காரியங்கள் - காரியங்கள், ஒ
த்த - பொருந்திய, பேர்வேறுபாட்டால் - பெயர்வேற்றுமைகொள்ளப்படுத
லால், உள்ளகாரணத்தில்-இயல்பாயுள்ளகாரணத்தைக்காட்டிலும், வேறேல்-
பின்னமென்னில், இத்தகைத்தானவார்த்தை-இத்தன்மையுடையஉங்கள்சொல்
லானது, இயம்புபேரளவேயானால - சொல்லுகின்றநாமமாத்திரமேயாகுமா
னால், வைத்தகாரியமுண்டென்னும்வார்த்தையும் - வைக்கப்பட்டகாரியமா
னதுஉண்டென்கின்றசொல்லும், அசத்தேயாகும் - அசத்தேயாய்விடும். எ-று

## அவதாரிகை.

முற்கூறியஅசத்துத்தன்மையை விவரித்துக்கூறுகின்றார்.

சத்தையில்லாதபோதுகாரியமில்லையாகு
மித்தன்மைக்காரியத்துக்கிலாமையேயிசைவதானா
லத்தன்மைச்சத்ததாகக்காரியம்பின்னமென்[illegible]காரிய
கொத்திடாதுரைத்தவார்த்தையென்றுமின்றாகுமேக் கூ

இ - ள். (ஆகையால்), காரியம் - காரியமானது, சத்தையில்லாதபோ
து - சத்தையில்லாதகாலத்தில், இல்லையாகும் - இல்லாததாய்விடும், இத்தன்
மைக்காரியத்துக்கு - இந்தத்தன்மையுடையகாரியத்திற்கு, இலாமையே -இல்
லாமைதானே, இசைவதானால் - பொருந்துவதானால், காரியம் - காரியமான
து, அத்தன்மைச்சத்ததாக- முன்கூறிய சுபாவமுள்ளசத்தையையுடையதாக,

பின்னமென்று-வேறென்று, இங்கு-இவ்விடத்தில், ஒத்திடாது - பொருந்திடாமல், உரைத்தவார்த்தை - சொன்னசொல்லானது, என்றும் - எக்காலத்திலும், இன்றாகும் - இல்லாததாகும். எ - று.

ப - ம். சத்தையில்லாதகாரியம சத்தாகாது. ஒன்றினுடைய சத்தையால் மற்றொன்றுசத்தாகலாமென்றால், நரசிருங்கமுஞ் சத்தாகுமென்றுபிரசங்கிக்குமென்பார், "அத்தன்மைச்சத்ததாகக்காரியம் பின்னமென்றிங்கொத்திடாதுரைத்தவார்த்தை" எனவும், இந்தப்பிரகாரமிந்தப்பக்ஷத்திற் காரியமசத்தாகில் சத்தென்ற வசனம் பொருளுடைய தன்றென்பார், "என்றுமின்றுகுமன்றே" எனவுங்கூறினார். (௬)

அவதாரிகை.

காரியசத்தை காரணசத்தையன்று வேறென்ற பக்ஷத்தைக்கண்டிக்கவேண்டி, அந்தச்சத்தை வேறெனில் சத்தாகவேறா அசத்தாகவேறாவென்று விகற்பித்துக் கூறுகின்றார்.

காரணசத்தையேயக்காரியசத்தையின்று
வேறொருசத்தையுண்டேயென்றிடில்வேறுசொன்ன
காரியசத்தையுள்ளகாரணசத்தையோடு
கூறியசத்தாய்க்கொண்டோவசத்தாயோநிற்பதென்றான்.

இ - ள். காரணசத்தையே - காரணசத்தைதானே, அக்காரியசத்தையின்று - அந்தக்காரியசத்தையென்பதில்லை, வேறொருசத்தை-காரியத்துக்குவேறாகவொருசத்தையானது, உண்டேயென்றிடில்-இருக்கின்றதேயென்று சொல்லிடில், வேறுசொன்ன-வேறாகச்சொல்லிய, காரியசத்தை-காரியசத்தையானது, உள்ளகாரணசத்தையோடு - இயல்பாயுள்ளகாரணசத்தையுடன், கூறியசத்தாய்க்கொண்டோ - சொல்லுகின்றசத்துருபமாகவோ, அசத்தாயோ-அசத்துருபமாகவோ, நிற்பதென்றான்-பின்னமாக நிற்கின்றதென்றான். எ-று.

அவதாரிகை.

விகற்பிக்கப்பட்ட அந்தவிரண்டுங்கூடாது. ஏனெனில் சத்துருபமாகப் பின்னமெனிற் சத்தாகியசொரூபம் இரண்டு சத்தைக்கும் ஏகமாயிருப்பதனால் பேதமில்லாதனவாகி யிரண்டுமொருசத்தையேயாகுமெனவும், அசத்துருபமாகவேறென்னில் அசத்தானதுபற்றி சத்தையேயாகாது சசவிடாணம்போல்அசத்தேயாகுமெனவும், சத்காரியபக்ஷத்தை நிராகரித்து, அசத்தாகிக்காரியங்காரணத்துக்கு வேறென்றபக்ஷத்தை நிராகரித்துக்கூறுகின்றார்.

வேறு.

சத்தாக்கொண்டேவேறென்னிலொன்றேசத்தையிரண்டாகா
சத்தாயன்றிக்காரணத்தோடாகிவேறுநிற்குமெனிற்
சத்தாயிதுதானிலாமையினலசத்தேயாகுங்காரியம
சத்தேயுளதாச்செயமாட்டாதென்றுமலடிமகன்போல.

இ-ள். (காரியமானது) சத்தாக்கொண்டே- சத்துருபமாககொண்டு, வேறென்னில்-பின்னமென்றால், சத்தை-(காரணகாரியங்களின்) சத்தை, ஒன்றே- ஒன்றாகவேசித்திக்கும், இரண்டாகா - பின்னமாகாது, சத்தாயன்றி- (காரியசத்தையானது) அசத்தாக, காரணத்தோடாகி வேறுநிற்குமெனில் - காரணத்தோடு பின்னமாகி நிற்பதென்னில், சத்தாயிதுதானிலாமையினால்- இந்தக்காரியசத்தையானது சத்தாகவில்லாத தன்மையினால், அசத்தேயாகும் -சத்தையில்லாததாகும், காரியம்அசத்தேல்-காரியமானது அசத்துருபமாகிப்பின்னமாகுமெனில், மலடிமகன்போல - வந்தியாபுத்திரனைப்போல, என்றும் - எக்காலத்திலும், உளதாச்செயமாட்டாது - (அதுகாரியத்தை) யிருப்பதாகச்செய்யமாட்டாது. எ - று.

ப-ம். முன்னில்லாத காரியத்துக்கு சத்தையோடுஞ் சம்பந்தமே உற்பத்தியெனப்பிறர்களங்கீகரித்திருப்பதனால், அந்த நீதிபற்றி மலடிமைந்தனும் ஒரு வஸ்துவுக்குக்காரியமாகலாம் அதுவோவுலகத்தில்லை யாகையால் அசத்தாய்க்காரியங்காரணத்திற்கு வெறுகாதென்பார், "காரியமசத்தேலுளதாச்செயமாட்டாதென்று மலடிமகன்போல" என்றார். (௧௧)

அவதாரிகை.

பிரத்துவம்ஸாபாவம்போல் அசத்துக்கேன் காரியத்தன்மை கிடையாதென்றுசங்கிக்க பிரத்துவம்ஸமுங்காரியமாகாதென்றுகூறுகின்றார்.

வேறு.

காரியமொருக்காலுண்டாமொன்றினலழிவதில்லை
காரியந்தனக்குற்பத்தியிலாமையாலில்லாவொன்றுங்
காரியந்தானென்றோடேநண்ணுமென்றுரைத்தல்கூடா
பாருமினென்றுவானோர்க்குரைத்தனன்பதுமமேலோன்.

இ - ள். காரியமொருக்காலுண்டாம் - காரியமானதுஒருகாலத்திலுற்பத்தியாகும், ஒன்றினலழிவதில்லை - ஒன்றினாலும் நசிப்பதில்லையெனில், காரியந்தனக்குற்பத்தி இலாமையால்- அந்தக்காரியத்திற்குற்பத்தி யென்பதில்லாமையேசொருபமாதலால் (காரியமாகாது), இல்லாவொன்றுங்காரியந்தான்- அசத்தாகியவொருகாரியந்தானும், ஒன்றோடு- ஒருகாரகத்தோடு, நண்ணுமென்றுரைத்தல்கூடா - சம்பந்திக்குமென்றுகூறுதல்பொருந்தாது, பாருமினென்று - பாருங்களென்று, பதுமமேலோன் - தாமரைமலரின்மேல்வீற்றிருக்கின்றபிரமதேவனானவன், வானோர்க்குரைத்தனன் - தேவர்களுக்குக்கூறினான். எ - று.

ப-ம். ஆதியுள்ளதாயும் அந்தமில்லாததாயுமுள்ளது பிரத்துவம்ஸாபாவமென்பார், "காரியமொருக்காலுண்டாமொன்றினலழிவதில்லை" எனவும், கர்த்தா கரணம் காரகம்இவற்றின்சம்பந்தமுடைய கடாதிகளுக்கே ஜனிக்கிரியைகாணப்படுகின்றது, சசவிஷாணம்போல் தருமமில்லாதஅசத்தாம்பிரத்து

வம்ஸத்துக்கு அங்ஙனம் சனிக்கிரியைகிடையாது. தருமத்துக்கு ஆச்ரயமாயின் பாவவத்துவெனப்பிரசங்கிக்குமாதலால் அதற்குக்காரியத்தன்மைகிடையாதென்பார், "இல்லாவொன்றுங்காரியந்தானென்றேயே ரண்ணுமென்றுரைத்தல்கூடா" எனவுங்கூறினர். (௪௨)

அவதாரிகை.

முன்னமேகாரகசம்பந்தமில்லாததாகக்கூறியதனால் அசற்குஜநிக்கிரியைகிடையாது. அதனால் காரியத்தன்மையில்லையெனவும், பிரத்துவம்ஸம் அசத்தாயினும் வந்திமகன்போலஅத்தியந்தம்அசத்தல்ல விசேடமுளதாதலாற் காரியமாகலாமென்றசங்கையை அனுவதித்துங்கூறுகின்றார்.

இன்னதோர்படியிருக்கு மெனப்படாவிலாமையேபோ
லன்னதேயாதலாலேயாவது மிலதேயாகுஞ்
சொன்னவிவ்விலாமைதானிங்கசத்தெனத்தோற்றினும்
பின்னையும் விசேடமொன்றுண்டென்னவே பேசுவீரேல்.

இ - ள். இன்னதோர்படியிருக்குமெனப்படா-இவ்வண்ணமாயிருக்கின்றதெனக்கூறத்தகாத, இலாமையேபோல் - சூனியம்போல், அன்னதேயாதலாலே- (பிரத்துவம்ஸாபாவமும்) நிரூபிக்கத்தகாததனால், ஆவதுமிலதேயாகும்- (அது) உற்பத்திவியாபாரமுமில்லாததேயாகும், சொன்னவிவ்விலாமைதான்-முனனுரைத்த இந்தப்பிரத்துவம்ஸாபாவமானது, இங்கு - இவ்விடத்தில், அசத்தெனத்தோற்றினும் - அசத்தென்று காணப்பட்டாலும், பின்னையும் - மறுபடியும், விசேடமொன்றுண்டென்ன - ஒருவிசேஷ மிருக்கின்றதென்று, பெசுவீரெல் - சொல்லுவீர்களானால். எ - று. (௪௩)

அவதாரிகை.

நீர்கூறியவிசேடம்யாது காரகசம்பந்தமா அல்லதுஜனிக்கிரியாச்ரயத்துவமா சத்தாசம்பந்தமா எனறுவிகற்பித்து முற்கூறிய காரகசம்பந்தங்கண்டிக்கப்பட்டிருப்பதனால் அது இங்குசித்தியாதென்பதுபற்றி இக்காரகசம்பந்தம் விசேடமுள்ளதெனறபக்ஷத்தைக் கண்டித்துக்கூறுகின்றார்.

இதற்குநீர்சொன்னவேறேதியைந்திடுசம்பந்தந்தா
னதற்கொருகாரகத்தாலென்னில் வேறமைவதில்லை
யொதுக்கமில்லாததொன்றேவிசேடமாயிருக்குமென்னு
மதற்குவேறொன்றுமில்லையாதலாற்கூடாதென்றும்.

இ - ள். இதற்கு - (அசத்தாகிய) இந்தக்காரியத்திற்கு, நீர்சொன்ன- நீர்சொல்லிய, வேறேது - விசேடமாகியவேற்றுமை யாது, அசற்கு- அந்தக்காரியத்திற்கு, இயைந்திடுசம்பந்தந்தான் - பொருந்தியசம்பந்தமானது, ஒருகாரகத்தால்-ஒருகருவியால், என்னில்-உண்டென்றால், வேறமைவதில்லை- (அந்த) விசேடமானதுபொருந்துவதின்றாகும், ஒதுக்கமில்லாததொன்றே - பிரிவுபடா

தசம்பந்தமொன்றுதானே, விசேடமாயிருக்குமென்னும்அதற்கு - விசேடமா கப்பொருந்துமென்பதற்கு, வேறொன்றுமில்லை - விசேடமொன்றுமில்லை, ஆத லால் - ஆகையால், என்றும் - எக்காலத்தும், கூடாது - ஒவ்வாது. எ-று.

ப - ம். விசேஷமில்லாதஅசத்துக்குக் காரகசம்பந்தமொப்பினுல் வந் திமகனுக்கும்அந்தச்சம்பந்தத்தாற் காரியப்படுகைவரலாமென்பார், "அதற்க் கொருகாரகத்தாலென்னில்வேறமைவதில்லை" எனவும், முற்கூறியதூஷணம் நீக்குதற்கு அவசியமேதேனுமொருவிசேஷத்தோடு விசேஷித்திடில் காரகசம் பந்தங்கூறத்தகும் அவ்விசேடமும்இச்சம்பந்தமேதானென்னில் தன்னையேவி சேஷணமாயுடையவிசேஷியத்தல் தான் இருத்தலென்ற ஆன்மாச்ரயமெனுந் தூஷணம்நேரிடும். சம்பந்தத்துக்கன்னியம்விசேடமெனினும் யாதேனுமொன் றுடன்விசேஷிக்கப்படில்உளதாகும் அவ்விசேடமும் முற்கூறியசம்பந்தமா அ ன்னியமாஎனில் மூன்றும்விசேடம்வரும் முதலாவதுஅன்யோன்யாசிரயதூ ஷணம் இரண்டாவது நாலாவதுவிசேடமொப்பாவிடில் சக்கிரகாபத்திதூஷ ணம் ஒப்பினுலனவஸ்தை ஆதலால் அசத்தாகியகாரியத்துக்குக்காரகசம்பந்த லக்ஷணமாகிய விசேடம் நிரூபிக்கத்தகாதென்பார், 'ஒதுக்கமில்லாததொன் றேவிசேடமாயிருக்குமென்னு மதற்கு வேறொன்றுமில்லையாதலாற்கூடாதெ ன்றும்" எனவுங்கூறினர். (௧௬)

அவதாரிகை.

ஜனிக்கிரியைக்கு ஆசிரயமாயிருத்தலேவிசேடமெனினும் முற்கூறியதூ ஷணமனைத்தும் நேரிடும் அவைகளையொருவராலும் பரிகரிக்கக்கூடாதென இரண்டாம்விகற்பத்தைக்கண்டித்துக்கூறுகின்றார்.

காரணத்தோடுகூடல் வேறெனிலதுதன்னாலும்
காரணந்தானேயாகுமிதினின்றுங்கருதிச்சொன்ன
காரியம்பிறக்குமென்றவிதுகொண்டுவேறுசொல்லிற்
பாருமின்குற்றமுன்போற்பரிகரிப்பாருமில்லை.

இ - ள். காரணத்தோடுகூடல் - சத்தாகியகாரணவஸ்துவினுடன்அசத் தாகியகாரியம் விசேடமாகப்பொருந்துகின்றது, வேறெனில் - முற்கூறியசம் பந்தத்திற்குப்பின்னமென்றால், அதுதன்னாலும் - அத்தன்மையினாலும், கார ணந்தானேயாகும்- காரியத்தையிட்டயாதேனுமொருகாரணந்தானேயாகும், இதினின்றும் - இந்நீதியில்நின்றும், கருதிச்சொன்ன - ஆலோசித்துச்சொல் லிய, காரியம்பிறக்குமென்ற - காரியத்தின் ஜனிக்கிரியாச்ரயத்துவமென்ற, இதுகொண்டு - இத்தன்மையைக்கொண்டு, வேறுசொல்லில்-முற்கூறியவிசே டம் வேறென்றுசொன்னால், பாருமின்-பாருங்கள், முன்போல் குற்றம் - மு ன்போற்குற்றமாகும், பரிகரிப்பாருமில்லை-இதனை நிவிர்த்திசெய்பவருமில்லை. எ - று.

ப-ம். ஜனிக்கிரியைக்காசிரயமாயிருக்கையெனு மிலக்கணமுடையவி சேஷமும் யாதேனுமொன்றோடு விசேஷிக்கப்படுபொருட்டே சித்திக்கவேண

டும் இல்லாவிடில் நரவிஷாணமும் விசேஷமுடையதெனவாகும். ஆதலால் அவ்விசேடமுமிந்தஜனிக்கிரியாசிரயத்தன்மைதானு அல்லது வேரு இது வேயெனில் முன்சொன்ன ஆன்மாசிரயமுதலியவை திரும்பிவருமென்பார், "காரியம்பிறக்குமென்ற விதுகொண்டு வேறுசொல்லிற், பாருமின்குற்றம் முன்போற்பரிகரிப்பாருமில்லை" என்ருர். (கடு)

அவதாரிகை.

சத்தாசம்பந்தமே விசேஷமென்ற மூன்ரும்விகற்பமுங்கூடாதென்று அசத்தாகிக்காரியங்காரணத்துக்குப் பின்னமென்றபக்ஷத்தைக்கண்டித்துச் சதசத்தாகிக் காரியம் பின்னமென்றதுவுங் கூடாதென்றுகூறுகின்ருர்.

இரண்டுக்குமொன்றேசத்தை யெனுமிதுவேறேயென்னிற்
றிரண்டிடுங்குற்றமெல்லாஞ் செறிதனிச்சயமெப்போதுந்
திரண்டகாரியம்சத்தேயாதலாற்சதசத்தென்னி
லிரண்டிற்குமுரைத்தகுற்றமிசைந்திடுமியல்பினுலே.

இ-ள். இரண்டுக்கும்- காரியகாரண மிரண்டினுக்கும், ஒன்றேசத்தையெனும்-சத்தையொன்றேயெனப்படும், இதுவேறேயென்னில் -(சத்தா சம்பந்தமான) இது விசேடமென்னில், திரண்டிடுங்குற்றமெல்லாம்- கூட்டமாகியகுற்றமெல்லாம், எப்போதும்- எக்காலத்தும், (முன்போல்), செறிதனிச்சயம்-சேருவதுதிண்ணமாகும், ஆதலால் திரண்டகாரியமசத்தே - ஆகையால் கூடியகாரியம் அசத்தேயாகும், (காரியமானது), சதசத்தென்னில்-சதசத்தாகப்பின்னமென்னில், இயல்பினுல் - இத்தன்மையினுல், இரண்டிற்குமுரைத்தகுற்றம் - (முன்னமே சத்தாகவுமசத்தாகவும் பின்னமென்று) விரண்டிற்குஞ்சொன்னதோஷம்,இசைந்திடும்-பொருந்திவிடும். எ-று. (கசு)

அவதாரிகை.

காரியம்பின்னுபின்னரூபமாகியுள்ளதென்றபக்ஷமுங்கூடாதென்றுகண்டித்துக்காரணத்துக்கபேதமாயின்காரியம் விவகரிக்கப்படுங்காரியகாரணமுதலியபேதத்தோற்றத்துக்கென்னகதியென்று சங்கித்துக்கூறுகின்ருர்.

உண்மையிற்பேதமின்றியிருந்தேயும்பேதமென்னல்
வெண்மையேசெய்தரூபவியாபாரந்தோற்றங்கேடு
பண்வயினிவற்ருற்கொள்ளும்பயனுமரூபம்வேறு
முண்மையிலெல்லாம்பொய்யாலுண்டாகிப்மொலியுமன்றே.

இ-ள். உண்மையில்-மெய்யாக, பேதமின்றி -அபேதமாயும், பேதம்-பேதமாயும், இருந்தேயும் என்னல் - இருந்தபொருந்துமென்றுசொல்லுதல், வெண்மையே - அறிவின்மையேயாகும், (இவ்வாருகாரியங்காரணபின்னமெனச்சாதிக்கப்படுதலால), செய்தரூபவியாபாரம் - இயற்றியரூபவியாபாரம், தோற்றம் - உற்பத்தி, கேடு - நாசம், பண்வயின் - செய்யுமிடம், இவற்ருற்

கொள்ளும்பயன்- இவைகளாற்கொள்கின்றபயன், நாமரூபம்-நாமரூபம், வேறும்-இன்னமும், உண்மையில் எல்லாம் - பரமார்த்தசொரூபத்தில் அனைத்தும், பொய்யால் - பொய்யினல், உண்டாகிப்பொலியும் - உண்டாகிச்சித்திக்கும். எ - று.

ப - ம். பாவாபாவங்களுக்கு ஏகத்தன்மைகூடாததனுற் பேதபக்ஷத்திற்கூறியதூஷணம் வருமாதலால் பின்னுபின்னங்காரியமென்னும்பக்ஷம் மிகவுஞ்சித்திக்சாதென்பார், "உண்மையிற்பேதமின்றியிருந்தேயும் பேதமென்னல் வெண்மையே" என்றுர். (கஎ)

அவதாரிகை.

இந்தப்பிரகாரங் காரியமென்பதுகாரணமேதானெனச்சாதித்து இவ்விடயத்திற் காரியமாகிய நாமரூபவிகாரம் வாக்குமாத்திரமேதானெனவும் விகாரமாகிய காரியம் வாக்குமாத்திரமாயுளதெனில் அசத்தாகும். சத்துஅசத்து இரண்டும் விரோதமுடையதாதலால் அதற்குக்காரணமாகிய சத்தாம்பிரமத்தோடு வேறின்மையெங்ஙனங்கூடுமென்ற சங்கைக்குச்சமாதானமாகத் தோற்றுதல்மாத்திரமானதுபற்றிக் கூடுமெனவுங் கூறுகின்றுர்.

வேறு.

எல்லாவிகாரங்களும்வாக்காலென்றுமுண்டென்றுரைப்பதுவும்
சொல்லாமளவேயெவ்விடத்துந்தோன்றுமென்றதுண்மையதே
யல்லாவிகாரமறிவொழியவனைத்தும்பொய்யேவிகாரத்துக்
கில்லாதாகுமுண்மைபிறிதில்லாதாகுமாதலினல்.

இ - ள். வாக்கால் - சொல்லால், எல்லாவிகாரங்களும்- சகலவிகாரங்களும், என்றும்-எக்காலத்தும், உண்டென்றுரைப்பதுவும்-இருக்கின்றதெனச்சொலவதுவும், சொல்லாமளவே-வாக்குமாத்திரமேதான், எவ்விடத்தும்-எந்தவிடத்திலும், தோன்றுமென்றது-அவ்விகாரம் பிராதீதிமாத்திரமாயுளதென்பது, உண்மையதேயல்ல- சத்தியமேயல்ல, அறிவொழிய - காரணமாகிய அறிவைத்தவிர, விகாரம்- காரியவருக்கங்கள், அனைத்தும்பொய்யே - எல்லாமித்தையே, ஆதலினல் - ஆகையால், இல்லாதாகும்- (சொரூப) மில்லாததாகிய, விகாரத்துக்கு - அந்தவிகாரங்களுக்கு, உண்மை - சத்தியத்தன்மை, பிறிதில்லாதாகும்- (காரணசொரூபத்திற்கு) வேறில்லாததாகும். எ - று.

ப -ம். காரியமானது பிரத்துவம்ஸாவஸ்தையிலிருப்பதுபோற்றுனிருக்குங்காலத்திலுங் காரணமாத்திரமாகச் சேஷிக்கின்றது தோன்ற, "விகாரமறிவொழியவனைத்தும் பொய்யே" எனவும், காரியமிரண்டுருபமுடையதாகும் அவற்றிற்பெருத்தவயிறுமுதலிய ஆகாரவிசேடம் பிராதீதிகமெனுமுருவமொன்றுகும் அங்ஙனமே யிடைவிடாமலுள்ளமிருத்தாகிய வுருவமொன்றுகும் அங்ஙனமாயின் பிராதீதிகவுருவமாகக்காரியம் சத்தியமேதானென்பார்"தோன்றுமென்றதுண்மையதேயல்ல" எனவுங்கூறினுர். விகாரத்துக்கில்லாதாகு

மூண்மையெனவே காரணமான மண்ணுருவாகச் சத்தியமென்பது பெறப்பட்டது. (கஅ)

அவதாரிகை.

காரியசம்பந்தமுடைய காரணரூபமொன்று காரணரூபமொன்று எனில் அத்துவித காரணத்தன்மைக்கு விரோதநேரிடுமென்ற சங்கைக்குச்சமாதானங் கூறுகின்றார்.

வேறு.

காரணமதனாலன்றிக்காரிய முளவாய்த்தோன்றா
காரணமொழியவேறு காரியமின்மையாலே
காரியமனைத்தினுக்குங் காரணமதுவே யுண்மை
யேரதாவிரண்டும்வேறென்றியம்பிடலியல்பின்றாமால்.

இ-ள். காரணமொழிய-காரணமன்றி, வேறு-அன்னியமாக, காரியமின்மையால் - காரியங்களில்லாததனால், காரணமதனாலன்றி - காரணத்தைத்விர, காரியமுளவாய்த்தோன்றா- காரியங்களிருக்கின்றனவாகத்தோன்றுவாகும், காரியமனைத்தினுக்கும் - சகலகாரியங்களுக்கும், காரணமதுவே - காரணமே, உண்மை - சத்தியமாகும், ஏரதா - அழகாக, இரண்டும் - காரணகாரியமிரண்டும், வேறென்றியம்பிடல் - பின்னமென்றுசொல்லுவது, இயல்பின்றாம்-தகுதியின்மையாகும். எ-று. (கக)

அ-கை. இங்ஙனங்கூறியபொருளில் மிருத்தேசத்தியமென்றது முதலிய காரணமாத்திரசத்தியத்தன்மையை நிரூபிக்குஞ்சுருதியின்பொருளைக் கூறுகின்றார்.

வேறு.

ஆமன்றெனநினையீரலதன்பின்வழியறிவீர்
நாமுன்சொனமுதல்காரணமறியமுழுதறிவாஞ்
சேமம்படமிகவுந்தெளிவுறுவீரிதுவென்றே
தாமந்தருமலர்மேலுறை தலைவன்னுரைதருமால்.

இ-ள். நாமுன்சொன - யாமுன்புசொல்லிய, முதல்காரணமறிய- முதன்மைக்காரணமாம்பிரமத்தையறிந்திடில், முழுதறிவாம் - சருவஞ்ஞானமாகும், இது-இதனை, அன்பின்வழியறிவீரலது - (நீங்கள்) பிரேமாபத்தியுடனறிவீர்களேயன்றி, ஆமன்றெனநினையீர் - ஆகுமாகாதென்றுகருதமாட்டீர்கள், (ஆதலால்), சேமம்பட-இன்பமுண்டாகும்படி, மிகவுந்தெளிவுறுவீர் -மிகவுநிச்சமுசயமாகவறிவீர்கள், என்று - என்று, தாமந்தரு - விளக்கத்தைத்தருகின்ற, மலர்மேலுறைதலைவன் - தாமரைப்பூவில்வீற்றிருக்கும் பிரமதேவனானவன், உரைதரும் - சொல்கின்றான். எ-று.

ப-ம். உலகத்தில் மிருத்துமுதலியகாரணங்களறியப்படின் அதற்கு வேறில்லாததாக அதன்காரியமான கடசராவமுதலியவை காரணரூபமாக

அறியப்படுதலாற் சருவசககாரணமான சத்தாகியபிரமஞானத்தால் அதன்கா ரியமானவனைத்துங்காரணசொருபமாகவே யறியப்படுமென்பார், "நாமுன் சொன்முதல்காரணமறிய முழுதறிவாம்" என்றார். (உ0)

அவதாரிகை.

காரணஞானத்தாற் காரியமறியப்படினுங் காரணமனேகமாதலால் ஏக காரணஞானமாத்திரத்தாலறியக்கூடாததனால் எங்ஙனம் ஒன்றையறிந்தது பற்றி அனைத்துமறிந்ததாகுமென்றசங்கைச்குச்சமாதானங்கூறுகின்றார்.

கூறும்பொருள் விரிவென்றிட லறியாமையின் முழுதும்
வேறும்மல வேறாடுடனாய்நின்றதுமலதான்
றேறும்படி யுளகாரணமொன்றே யுளதெனலால்
வேறென்றிடு பேதமிலதாமெங்கணும்வினையால்.

இ - ள். கூறும்பொருள்-(இப்போது) சொல்லியபொருள், விரிவென்றி டல் - நானாவென்றுசொல்லுதல், முழுதும் அறியாமையின்-முழுதும்அறியா மையினாலேதான், (காரணமானது), வேறும்மல - பின்னமுமல்ல, வேறாடு டனாய் நின்றதுமல - பின்னாபின்னமாக நிற்கின்றதுமல்ல, தான்தேறும்படி யுளகாரணம்-தான்தெளியும்படியுள்ளகாரணமானது,ஒன்றேயுளதெனலால்- ஏகமாகவேயிருக்கின்றதெனச்சொல்லலால், வினையால்-தொழிலால், வேறெ ன்றிடு - பின்னமென்கிற, பேதம் - பேதமானது, இலதாமெங்கணும்- எவ்விட த்திலுமில்லாததாகும். எ - று. (உக)

அவதாரிகை.

பின்னங்களாகக்கடபடங்களனுபவிக்கப்படப் பேதமெங்ஙனமில்லாததா குமென்ற சங்கைக்குச் சமாதானங் கூறுகின்றார்.

அயலொன்றிடுபொருளுமதன்பிரிவும்மறிவரிதா
மியல்பின்கணதறியும்பொழுதிதுதான்மிகும்வேறு
மயலென்றது வறியிற்றருமியின்ஞானமுமாகும்
முயலும் பலபேதம்மெனமொழிகின்றதுமரிதே.

இ - ள். அயலொன்றிடு பொருளும் - பேதம்பொருந்திய தருமியாகிய பொருளும், அதன்பிரிவும்அறிவரிதாம் - தருமியினது தருமமாகியபேதமும் அறிதற்கரிதாகும், இயல்பின்கணதறியும்பொழுது- உண்மையாகத் தருமியை யறியும்பொழுது, வேறுமிதுதான்மிகும்-பேதமானஇந்தப்பொருள் அதிகமாக உண்டாகும், அயலென்றதுவறியில் - பேதமென்கின்ற தறியுங்கால், தருமி யின்ஞானமுமாகும் - தருமியினுடைய ஞானமுமுண்டாகும், (ஆகையால்), முயலும்பலபேதம்மென மொழிகின்றதுமரிதே - முயற்சி செய்கின்றபலபே தமுண்டென்று சொல்லுவதற்கரிதாகும். எ - று.

கருத்து. பிரத்தியட்சமாகியபேதமெங்ஙனமித்தையாகுமெனில் தருமிப் பிரதியோகியின்ஞானத்தைமுன்னிட்டுப்பேதஞானஞ்சித்திக்கவேண்டும் பேத மாகஅறியப்பட்டவைகளுக்கே தருமிப்பிரதியோகித்தன்மையுளதாகும், இங் ஙனமாயின் தருமியாகியபின்னவஸ்துவின்ஞானஞ்சித்தித்துப் பேதஞானஞ் சித்திக்கும் பேதஞானஞ்சித்தித்திடிற் பின்னவஸ்துவாகியதருமிஞானஞ்சித்தி ப்பதாகும் இஃது அன்னியோன்னியாசிரயதூஷணமாதலாற் பேதமுள்ள தென்பது அவிவேகத்தாலென்றறிக. (உஉ)

அ-கை. முற்கூறியபடி பேதமுமின்றி பேதாபேதமுமின்றி காரண மொன்றேதானிருக்கின்றதெனக்கூறுகின்றார்.

பெதநெறியோரிலிலதாகுமதனாலே
பேதமொடபேதம்மதுபேசல் பிழையேயா
மேதமிலதாயெங்கணுமொன்றாயொழிவில்லா
தியாதொன்றதுமுதல்காரணமெனுமாமலர் மிசையோன்.

இ-ள். ஓரில் - ஆராயுங்கால், பேதநெறி- பேதமார்க்கம், இலதாகும்- இல்லாததாகும், அதனால் - அத்தன்மையினால், பேதமொடபேதம்மது- பேதா பேதமென்பதை, பேசல் - நிருபித்தல், பிழையேயாம் - குற்றமேயாகும, ஏதமிலதாய் - துன்பமில்லாததாய், எங்கணுமொன்றாய் - எவ்விடத்திலும் ஓரேபொருளாய், ஒழிவில்லாதியாதொன்று - அழியாதிருக்கின்றதெதுவோ, அது-அதுவே, முதல்காரணமெனும் -ஆதிகாரணமென்று சொல்லுவான், மா மலர் மிசையோன்-பெரியதாமரைமலரின் மேலிருக்கும் பிரமதேவன். எ-று.

ப-ம். காரணருபபேதமில்லாததனாலும் ஸஜதீய விஜாதீயசுகதபேத மில்லாததனாலும்காரணமத்துவிதமாகிஒன்றேதானுளதென்பார், "ஏதமிலதா யெங்கணுமொன்றாயொழிவில்லாதியாதொன்றதுமுதல்காரணம்" என்றார்.()

அ-கை. உலகில் கடாதிகாரியங்களிடத்தில் உபாதானம் நிமித்தமிவ்வி ரண்டும்வேறாகக்காணப்படுதலால் அத்துவிதப்பிரமம் நிமித்தமாயின் உபாதா னமின்றிக்காரியமுண்டா[illegible] உபாதானமாயின் நிமித்தமாகாதெனில் அதற் கிரண்டு தன்மையுமுண்[illegible]க்கூறுகின்றார்.

மண்ணும்வனைவானும்வனைபவையும்பிறிதாயே
யெண்ணும்மளவறிவின்மையிலிவனைப்பெறுமிதுவுங்
கண்ணென்றிடவருகாரணமொன்றாயமலமதா
யெண்ணும்மறிவுருவையிசையாநிற்பதிவ்விடையே.

இ-ள். மண்ணும்-மிருத்திகையாகிய உபாதான காரணமும்,வனைவானும்- குலாலனாகிய நிமித்தகாரணமும், வனைபவையும்-செய்யப்பட்டகடாதிகளும், பிறிதாயே - பேதமாகவே, எண்ணுமளவு-நினையுங்கால், இதுவும் - இந்தமண்

னும், அறிவின்மையில் - அசேதனமாகலின், இவனைப்பெறும் - குலாலனைய டையாநிற்கும், இவ்விடை - இவ்விடத்தில், கண்ணென்றிட வருகாரணம்- இருக்கென்னும்படிவருகின்றகாரணமானது, ஒன்றாய் - அத்துவிதமாயும், அமலமதாய் - சுத்தமாயும், எண்ணும் அறிவுருவை - கருதுகின்ற சைதன்னிய ரூபத்தை, இசையாநிற்பது- பொருந்திநிற்கின்றது. எ - று.

கருத்து. பலவாகப் பவிப்போமென்றுபார்த்தானென்றசுருதியினாற் பலவாகப்பவித்தலின் உபாதானத்தன்மையும் பார்த்தமையின் நிமித்தத்தன்மையும் அத்துவிதவஸ்துவுக்குக் காணப்படுதலால் நிமித்தமும் உபாதானமும் அதுதானேயென்றறிக. (உச)

இதுவுமது.

வனைகின்றவனெனக்காரணமாஞ்சேதனம்வேறாய்
நினையும்படியிலதாதலினிலையாயுளதறிவே
யனகாரணமறிவாயினும்வனைவானிகரன்றாம்
நினைமண்ணொடுநிகரானவைதனையேகொடுசெயுமால்.

இ - ள். வனைகின்றவனென - செய்பவனாகிய குலாலனைப்போலவே, காரணமாஞ்சேதனம் - காரணமாகியசேதனத்தை, வேறாய் நினையும்படியில தாதலின்-வேறாக எண்ணும்பரிசில்லாததாகையால், நிலையாயுளது - திரமாகவிருப்பது, அறிவே - ஞானமேதான், அனகாரணம் - அத்தன்மைத்தாகிய காரணமானது, அறிவாயினும் - சேதனமாயினும், வனைவானிகரன்றாம் - குலாலன்போலன்றாகும், நினைமண்ணொடு - கருதப்படுமெண்ணினோடு, நிகரானவை - சமானமாயுள்ள உபாதானகாரணங்களாகவும், தனையேகொடுசெயுமால்-தன்னையேகொண்டு சிருட்டிசெய்யாநிற்கும். எ - று. (உரு)

அ-கை. விகாரமில்லாத அசங்கமாஞ் சத்தரூபப்பிரமத்திற்கு இவ்வித காரணத்தன்மையெங்ஙனங்கூடும், மாயையாற்கூடுமெனில் அதனால் துவிதமாகிவிடுமென்றசங்கைக்குச்சமாதானங்கூறுகின்றார்.

வேறு.

தோன்றலாலசித்துமாகித்தமத்தோடுகலந்துநின்றே
யான்றவம்முனிகள்பண்ணுமனனத்தாலளப்பொண்ணாதாய்ச்
சான்றதாயெங்குநின்ற சங்கரனுடைத்தாயொன்றா
யின்றிடுமரியவெல்லாமித்தன்மைத்தெனவொன்றுண்டு.

இ - ள். தோன்றலால்- விவகாரமாத்திரத்தாற்றோன்றுதலால், அசித்துமாகி - அசித்துரூபியாயும், தமத்தோடு - தமோரூபத்துடன், கலந்து நின்று - பொருந்திநின்று, ஆன்றவம்முனிகள்-அறிவினையுடைய அந்தமுனிவர்கள்,பண்ணுமனனத்தால் - செய்யும் மனனத்தினால், அளப்பொண்ணாதாய் - அளக்கக்கூடாததாயும், சான்றதாயெங்குநின்ற-சாக்ஷியாகவேயெவ்விடத்தும் பிரகாசிக்காநின்ற, சங்கரனுடைத்தாய்- சங்கரசம்பந்தமுடையதாயும், ஒன்றாய்-

ஒருபொருளாயும்உள்ள, அரியவெல்லாம் - உற்பத்திசெய்தற்கரியவனைத்தையும், இத்தன்மைத்தென - இப்பரிசினையுடையதென்னும்படி, ஈன்றிடும் - சிருட்டிசெய்கின்ற, ஒன்றுண்டு - (மாயையென்னும்) ஒருசக்தியிருக்கின்றது. எ - று.

ப - ம். தோற்றமேசரீரமாகிய ஜடசுபாவததை, "தோன்றலால சித்துமாகி" எனவும், சுயம்பிரகாசப் பிரமசுபாவத்தை மறைப்பதுபோலிருத்தலின், "தமத்தோடுகலந்திரின்றே" எனவும், பிரதானதத்துவத்தை நிரூபிக்கும் வல்லமையுடைய சாங்கியர்களாலும் சத்து அசத்து சதசத்து என்றதுமுதலிய சருவப்பிரகாரங்களாலும் நிருணயிக்கக்கூடாமையின், "ஆன்றவம்முனிகள்பண்ணுமனனத்தால் அளப்பொண்ணாதாய்" எனவும், மாயையனிர்வசனீயமாதலிற் சத்தாகிவேறுயில்லாததனாற் றுவிதமாகாதென்பார்," சங்கரனுடைத்தாய்" எனவும், சிருஷ்டிக்கக்கூடாதவனைத்தையுஞ்சிருஷ்டிக்கும் வல்லமையுடைய ஒருமாயாசத்தி உளதென்பார், "ஈன்றிடுமரியவெல்லாமித்தன்மைத்தெனவொன்றுண்டு" எனவுங்கூறினர். (உசு)

அ-கை. இவ்வண்ணம்அத்துவிதம்பிரமமென்று சாதித்து, விஞ்ஞானமாமானந்தசொரூபமுடையதுபிரமமென்றசுருதியினால்சத்தென்றுங்கூறுகின்றார்.

காரணமேவிமாயைபடைத்தளித்தழிப்பதாகுங்
காரணஞ்சத்தாஞ்சித்தாயிருத்தலாலென்றுகொண்டே
பூரணமாகியுள்ளபொருளினைச்சுரர்கள் கேட்ப
வாரணமுரைத்தவாதியருளினனறியும்வண்ணம்.

இ - ள். பூரணமாகியுள்ள - பரிபூரணமாயுள்ள, பொருளினை - வஸ்துவை, சுரர்கள் - தேவர்கள், கேட்ப - (பிரமாவினிடத்திற்) கேட்க, காரணம் - காரணவஸ்துவானது, மாயைமேவி - (தன்னிற்கற்பிக்கப்பட்ட) அந்தமாயையோடுபொருந்தி, படைத்து - (சகலத்தையுஞ்) சிருட்டித்து, அளித்து - காத்து, அழிப்பதாகும் - சங்கரிஞ்செய்கின்றதாகும், காரணம் - காரணசொரூபமானது, சித்தாயிருத்தலால் - சித்தாகவிருப்பதனால், சத்தாம் - சத்தாகும், என்றுகொண்டு - என்றுகருதி, அறியும்வண்ணம் - அத்தேவர்களுணரும்படி, ஆரணமுரைத்தவாதி - வேதத்தையருளிய பிரமதேவனானவன், அருளினன் - சொன்னான். எ - று.

ப - ம். இவ்விதமாயாதாதான்மியஞ் சத்துருபப்பிரமத்திலத்தியாசிக்கப்பட்டிருப்பதனால் அதன்சத்துவ ரஜோ தமோ குணங்களாகிய உபாதிகளின்பேதத்தால் நிர்விகாரியாகிய அத்துவிதீயப்பிரமத்திற்குச் சிருட்டிகருத்திருத்துவ முதலியன கூடுமென்பார், "காரணமேவிமாயை படைத்தளித்தழிப்பதாகும்" என்றார். (உஎ)

அ-கை. இவ்விஷயத்தில் வியாப்திகூறுகின்றார்.

உண்மைசித்தினுக்கேயுள்ளதசித்தெனும்பழுதைப்பாம்பிங்
கெண்மையினிலாதவண்ணமிசையுமுங்கட்குமேற்கக
கண்ணெனமுழுதுநின்றகாரணமொன்றேசத்தா
யெண்ணிடிலென்றுமுள்ளதிச்சகமுனஞ்சத்தாமால்.

இ-ள். உண்மை - இருக்குந்தன்மை, சித்தினுக்கே - சித்தொன்றினுக்கே, உள்ளது - இருக்கின்றது, அசித்தெனும் - சடமென்று சொல்லப்பட்ட, பழுதைப்பாம்பு - இரச்சுசற்பம், இங்கு - இவ்விடத்தில், எண்மையில் - எண்ணிடில், இலாதவண்ணம் - இல்லாதவாறு, உங்கட்குமேற்க - உங்களுக்குஞ் சமாதானமாகும்படி, இசையும் - பொருந்தும், எண்ணிடில் - கருதில், கண்ணெனமுழுதுநின்ற - திருக்குசொரூபமாகவெங்கும்வியாபித்த, காரணமொன்றே - காரணசொரூபமொன்று தானே, சத்தாய் - சத்தாகி, என்றுமுள்ளது - எக்காலத்து மிருக்கின்றது, இச்சகம் - இந்தவுலகமெல்லாம், முனஞ்சத்தாம் - சிருட்டிக்கு முன்சத்தாகும். எ - று.

ப - ம். ஜடப்பிரபஞ்சப்பிரதீதிநாசங்களுக்குச் சாக்ஷியா யெக்காலத்தினுமுள்ளதாதலால் அதிட்டானமாகியசித்ரூபப்பிரமத்துக்கு எப்போதுஞ்சத்தியத்தன்மையேயோக்கியமாகுமென்பார்,"உண்மைசித்தினுக்கே உள்ளது" எனவும், சித்ரூபத்துக்கேன் அசத்தியத்துவங்கூடாதெனின் எது சத்துவிலக்ஷணமோ அதுசித்தாகாதாகையால் இரச்சுவிலாரோபிதமாகியசற்பத்துக்கே அசத்துவங்கூடுவதுபோல்மாயைமுதலியபிரபஞ்சத்துக்கே அசத்தியத்துவங்கூடுமேயன்றி அதிஷ்டானப்பிரமத்துக்கசத்தியத்துவங்கூடாது. எங்ஙனமெனில் மித்தையானது அசித்ரூபத்தால் வியாபிக்கப்பட்டதாகக் காணப்படுவதனுல் அந்தஅசித்ரூபமானது சித்ரூபமான உலககாரணத்தினின்றும் நீங்கித் தனக்குவியாப்பியமாகிய மித்தியாத்துவத்தையும்நீக்கிவைக்கின்றதென்பார், "அசித்தெனும்பழுதைப்பாம்பிங்கெண்மையினிலாதவண்ணமிசையும்" எனவும், சகத்காரணம் அத்துவிதமாயும் சத்தாயுமிருத்தலால் நாமரூபமாகத்தோற்றுகின்ற காரியசகமெல்லாம் சிருட்டிக்குமுன்நாமரூபமாயில்லாமல் சத்தானகாரணவான்மரூபமாகவேயிருந்ததென்பார்,"இச்சகமுனஞ்சத்தாம்" என்வுங்கூறினுர். (உ அ)

அ-கை. இந்தப்பிரகாரஞ் சற்காரணவாதத்தைத்துதித்து அதனையுறுதிசெய்யும்பொருட்டு சூன்யவாதியின்கொள்கையான அசற்காரணபக்ஷத்தைக்கூறி அதனை அஃதொன்றே அல்லவாவென்றதுமுதல் எங்ஙனம் சத்தினின்றுஅசத்துண்டாகுமென்றதுவரைக்குமுள்ளவாக்கியத்தாற்கண்டிக்குஞ் சுருதியின் பொருளையுங்கூறுகின்ருர்.

அறியாதாரசத்தாய் முன்புகாரணமுளதாய்த்தென்பர்
நெறியாவிவ்வசத்துண்டாக்குங்காரணமாகாதென்றும்
பிறியாதகாரியங்களிதினின்றும் பிறக்குமென்னில்
வறிதாயமலடிமைந்தன் காரணமக்கட்கெல்லாம்.

இ-ள். அறியாதார் - உணராதவர்கள், முன்பு - சிருட்டிக்குமுன், அசத்தாய் - அசத்தாக, காரணமுளதாய்த்தென்பர் - காரணமுள்ளதாயிற் றென்பார்கள், நெறியால் - முறைமையால், இவ்வசத்து -இந்தஅசத்தானது, என்றும் - எக்காலத்தும், உண்டாக்குங்காரணமாகாது - உற்பத்திசெய்யுங் காரணமாகாது, பிறியாதகாரியங்கள் - காரணத்துக்கபின்னமாகியகாரியவ ஸ்துக்கள், இதினின்றும்பிறக்குமென்னில் - இந்தஅசத்தில் நின்றுமுற்பவிக்கு மென்றால், வறிதாய - வீணாகிய, மலடிமைந்தன் - வந்தியாபுத்திரனும், மக்க ட்கெல்லாம் - எல்லாமானிடர்களுக்கும், காரணம் - காரணமாவான். எ- று.

ப-ம். நசித்தபீசத்தினின்றும் அங்குரமுதலிய காரியோற்பத்திகாண ப்படுதலாற் காரணங்கெடாமற்காரியமுண்டாவதில்லை, அபாவத்துக்கே கார ணத்தன்மை உளதாகும். இங்ஙனம்போல் உலககாரணமும் அசத்ரூபமே தானென்பார்கள் அசத்வாதியர்கள். இறந்ததேவதத்தனுக்குப்புத்திரவுற்பாத னசத்தியில்லாததுபோல் நசித்தகாரணத்துக்குக் காரியஜனனசத்தி கிடையா ததனாலும் அங்குரமுதலியகாரியங்களுண்டாகுங்காலத்தும் பீசமுதலியகார ணங்களினிருப்புமுதலாம் விசேடங்களாகிய காரணாவயவங்களுக்கு இடைவி டாத இருப்புக்காண்பதனாலும், அசத்து காரணத்தன்மை பொருந்தாததுப ற்றி அவ்வசத்காரணவாதிகள் பிராந்தர்களென்பார், "அறியாதாரசத்தாய் முன்பு காரணமுளதாய்த்தென்பர்" எனவும், சருவப்பிரகாரத்தாலும் நிரூபி க்கத்தகாதவசத்துக்குக் காரணத்தன்மையை இலக்கணமாகவுடைய பாவ ரூபதருமாசிரயத்தன்மை கூடாததனாலும் அங்ஙனமாசிரயத்தன்மை கூடின் வந்திமகனுமசத்தானதுபற்றி விசேடமில்லாததனால் அனைத்துக்குங்காரண மாகலாமெனவருமாதலால் அசத்து காரணமாகாதென்பார் "பிறியாதகாரிய ங்களிதினின்றும் பிறக்குமென்னில் வறிதாயமலடிமைந்தன் காரணமக்கட் கெல்லாம்" எனவுங்கூறினார். (உ௯)

அ-கை. உலகிற்கு மூலகாரணம் அசத்தாயிருந்திடினுந் தன்சத்தியாலத ற்குக்காரணத்தன்மை கூடலாமென்றபக்ஷத்தைத்தூஷிக்கவேண்டி யனுவதித் துக்கூறுகின்றார்.

அசத்துத்தன்சத்தியாலேயாவுக்குமுதலாமென்னி
லசத்துக்குச்சத்திகூடாதாமசத்தாதலாலே
யசத்தலாவித்தினின்றுமங்குரந்தோன்றலாலே
யசத்திற்கஃதின்றுஞ்சத்தேயாவையுமாவதென்றும்.

இ-ள். அசத்து - அசத்தானது, தன்சத்தியாலே- தனதுசத்தியினால், யாவுக்கும் - சகலங்களுக்கும், முதலாமென்னில்-காரணமாகுமென்னில், அ சத்துக்கு - அந்தஅசத்தினுக்கு, சத்திகூடாதாம் - வல்லமைசேராதாகும், (ஏனென்னில்), அசத்தாதலால் - அபாவரூபமாதலால், அசத்தலாவித்தினின் றும்-சத்தாகியவித்தினின்றும், அங்குரந்தோன்றலாலே- முளையுண்டாதலால்,

அசத்திற்கு - அசத்தாகியவித்திற்கு, அஃதின்றும் - முளையுண்டாகுந்தன்மை இல்லாததாகும், (ஆகையால்), சத்தே - சத்தொன்றே, என்றும் - எக்காலத்தும், யாவையுமாவது - காரணம் அனைத்துமாகின்றது. எ - று.

ப - ம். அங்குரமுதலியகாரியஜனனசத்தியுஞ் சத்துருபப்பீசத்துக்கே அன்வயவியதிரேகங்களாற்காணப்படுதலாற் பிரத்தியக்ஷவிரோதமாகலின் அசத்துக்குச் சத்திகற்பனம் பொருந்தாதென்பார், "அசத்திற்கஃதின்றும்" என்றார். (௩0)

அ-கை. அதனை மூன்று விதமாக விகற்பித்துக் கண்டனங்கூறுகின்றார்.

அசத்தின்கண்ணுளதாஞ்சத்தி சத்தாயோவசத்தாக்கொண்டோ
வசத்துடன்சத்தாய்க்கொண்டோவாய்நின்றவாறதென்னை
யசத்தினையுளதாஞ்சத்தியாசிரித்திடுவதென்னி
லசத்தாயமலடிமைந்தனத்தகுசத்தனுவான்.

இ - ள். அசத்தின்கண்ணுளதாஞ்சத்தி - அசத்தினிடத்திலிருக்கின்ற சத்தியானது, சத்தாயோ - சத்தாகவோ, அசத்தாக்கொண்டோ - அசத்தாகவோ, அசத்துடன்சத்தாய்க்கொண்டோ - சதசத்தாகவோ, ஆய்நின்றவாறதென்னை - இவைகளிலெதுவாகிநிற்கின்றது, அசத்தினை - அசத்தாகியகாரணத்தை, உளதாஞ்சத்தி-சத்தாகிய சத்தியானது, ஆசிரித்திடுவதென்னில் - ஆசிரயிக்கின்றதென்னில், அசத்தாய மலடிமைந்தன்- அசத்தாகிய வந்தியாபுத்திரனும், அத்தகுசத்தனுவான் - அத்தன்மைத்தாய சத்தியையுடையவனுவான். எ - று. (௩க)

இதுவுமது.

அசத்தின்றன்சத்திதானுமசத்தாயேநிற்பதென்னி
லிசைத்திடுங்காரியங்களியாவையுமியற்றாதென்று
மசத்தோடேமலடிமைந்தனுக்குவதிலாமையேபோ
லசத்தோடேசத்தேயென்னிலாயிடுமிரண்டின்குற்றம்.

இ - ள். அசத்தின்றன் சத்திதானும் - அசத்தினுடைய சத்தியானது, அசத்தாயேநிற்பதென்னில் - அசத்தாகியே நிற்கின்றதென்றால், மலடிமைந்தன் வந்தியாபுத்திரன், அசத்தோடே - அசத்துடன்பொருந்தி, ஆக்குவதிலாமையேபோல் - ஒருபொருளையுற்பத்திசெய்வதில்லாததுபோல், இசைத்திடும் - சொல்லுகின்ற, காரியங்களியாவையும் - தொழில்களனைத்தையும், என்றும் - எக்காலத்தும், இயற்றாது- செய்யமாட்டாது, அசத்தோடேசத்தேயென்னில்- (அச்சத்தியானது) சதசத்தென்னில், இரண்டின்குற்றம் ஆயிடும்- முன்சொல்லிய இரண்டுகுற்றங்களுமுண்டாகிவிடும். எ - று. (௩உ)

அ-கை. கூறியபிரகாரம் அசத்தைக்காரணமென்பது ஊகமில்லாப்புலம்பலாமெனக்கூறுகின்றார்.

அசத்துத்தன்சத்தியாலுங்காரணமாகாதானு
லசத்துமுன்புளதென்றேதற்கருத்தமுமில்லையேயா
மசத்தலாதாகுமொன்றேயனைத்திற்குமுதலதாகு
மசத்துளதாகுமென்றலழிந்திடும்வார்த்தையன்றே.

இ-ள். அசத்து - அசத்தானது, தன்சத்தியாலும் - தனதுசத்தியினுலும், காரணமாகாதானல் - காரணமாகாதாயின், அசத்து - அசத்தானது, முன்பு - சிருட்டிக்குமுன்பு, உளதென்றேதற்கு - இருந்ததென்று சொல்லுதற்கு, அருத்தமுமில்லையேயாம் - பொருளில்லாததாகும், (ஆகையால்), அசத்தலாதாகுமொன்றே - அசத்தல்லாத சத்து ஒன்றே, அனைத்திற்குமுதலதாகும் - சகலங்களுக்குங் காரணமாகும், அசத்துளதாகுமென்றல் - (சிருட்டிக்குமுன்பு) அசத்திருந்ததாகச்சொல்லுதல், அழிந்திடும்வார்த்தை - நிலையாதவார்த்தையாகும். எ-று. (கூகூ)

அ-கை. பூருவகற்பம்போலுலகமெல்லாஞ் சத்தாகியகாரணத்தாலுதித்தனவென்றுகூறுகின்றார்.

பூதத்தாலுளதாயுள்ளபுவனங்களுயிர்கண்முன்போன்
றோதத்தானரியசத்தாலுதித்ததென்றுணரும்வண்ணம்
வேதத்தான்முழுதுஞ்சொன்னவடிவினைவிளங்குமாற்று
லோதத்தான்றொடங்கலுற்றானுயர்தருசுரர்கட்கெல்லாம்.

இ-ள். பூதத்தாலுளதாயுள்ள - பஞ்சபூதங்களாற் பொருந்துவனவாயுள்ள, புவனங்கள் - உலகங்களும், உயிர்கள் - சீவர்களும், முன்போன்று - பூருவகற்பம்போல், ஓதத்தானரியசத்தால் - சொல்லுதற்கரிதாகியசத்தினுலே, உதித்ததென்று - உண்டாகியதென்று, உணரும்வண்ணம் - அறியும்படி, வேதத்தான்முழுதுஞ்சொன்ன - சுருதியினுல் முழுதுஞ்சொல்லிய, வடிவினை - சொருபத்தை, விளங்குமாற்றால் - விளங்கும்படியாக, உயர்தரு - பெருமைபொருந்திய, சுரர்கட்கெல்லாம் - தேவரனைவர்களுக்கும், ஓதத்தான்றொடங்கலுற்றான் - தான்சொல்லத்தொடங்கினன். எ-று. (கூச)

அ-கை. அசத்து காரணமாகாததனுற் சத்தேகாரணமாகுஞ் சிருட்டிக்குமுன்சகமனைத்துங் காரணசன்மாத்திரமாயிருந்ததென்ற சுருதியின்பொருளைக்கூறுகின்றார்.

வேறு.

எல்லாமுண்டாவதற்குமுன்னேதோன்றுமித்தனைக்குங்காரணமாஞ்சத்தேயாகு, மில்லாதமுதன்முடிவையுடைத்தாயொன்றாயிருக்குமிதுவென்றுமுளவியல்பிற்றாகி, நில்லாதவுலகனைத்துமுன்புசெய்தநெறியதனையுடைத்தாகிநிமலமாகிச், சொல்லாலுமளப்பரிதாய்த்தன்னதுண்மை சுருதிமுடிவதனுலுந்தொடரொணுதாய்.

இ-ள். உண்டாவதற்குமுன்னே-சிருட்டிக்குமுன்னமே, எல்லாம்-உலகமெல்லாம், தோன்றுமித்தனைக்குங்காரணமாஞ்சத்தேயாகும்- தோற்றுகின்றவிவ்வளவுவிகாரத்திற்குங்காரணமாகியசன்மாத்திரமேயாகும்,இல்லாதமுதன்முடிவையுடைத்தாய் - ஆதியுமந்தமுமில்லாததன்மையையுடையதாயும், ஒன்றுயிருக்குமிது -அத்துவிதமாயுமிருக்கின்ற இந்தக்காரணமானது, என்றுமுளவியல்பிற்றுகி - எக்காலத்துமிருக்கின்றசுபாவமுடையதாகி, நில்லாதவுலகனைத்தும் - நிலையாயிராதவுலகமெல்லாம், முன்புசெய்த - பூருவகற்பத்திற்செய்த, நெறியதனையுடைத்தாகி - சம்ஸ்காரவிதத்தையுடையதாகி, நிமலமாகி - நின்மலமாகி, சொல்லாலுமளப்பரிதாய் - வாக்கினுலளவிடுதற்கரிதாகி, தன்னதன்மை - தன்னுடைய மெய்ம்மையை, சுருதிமுடிவதனுலும் - வேதாந்தங்களாலும், தொடரொணுதாய் - தொடரமுடியாததாகி. எ - று.

ப-ம். அதீதகற்பத்திலொடுங்கிய பிரபஞ்சத்தாலுண்டாகிய வாசனையோடும் அவ்வனுபவத்தாற்றேன்றிய சம்ஸ்காரத்தோடும் கூடியதென்பார், "முன்புசெய்த நெறியதனையுடைத்தாகி" என்றுர். (௩ட)

அ-கை. கூறியபடி யேகவத்துவிஞ்ஞானத்தாற் சருவவத்துவின்ஞானத்தைப்பிரதிக்கினைசெய்து அதனைநிரூபிக்கவேண்டி மிருத்துமுதலியதிருட்டாந்தங்களாற் காரியத்துக்குக் காரணத்தின்வேறின்மைசாதித்து அவ்வேகமுமாகியவத்தெது, எந்தவத்துவின்ஞானத்தாலனைத்துமறியப்படுகின்றதென்று சங்கித்து, சிருட்டிக்குமுன்னமிச்சகஞ்சன்மாத்திரமாயிருந்ததென்றுசத்தாகியஅத்துவிதீயப்பிரமம் முற்கவிகளாலுபதேசிக்கப்பட்டது. சகம்பிரமகாரியமாயின் அச்சகத்தின் காரணவிஞ்ஞானத்தாற் சகமனைத்துமறியப்பட்டதாகுமென்றபிப்பிராயங்கொண்டு சகத்தைப்பிரமகாரியமாகக்கூறவேண்டி அதினின்றுஞ்சிருட்டி சுருதியிற்கூறப்படுகின்றது, அதுவெங்ஙனமெனில் பலசீவர்களாகப்பவிப்போமென்றந்தப்பிரமம்பார்த்ததென்றது முதலானவை. அந்தச்சுருதியின்பொருளைக்கூறுகின்றுர்.

வேறு.

காலமுங்கன்மந்தானும்பரிபாகமானவாற்றுல்
ஞாலமுண்டாக்குநல்லகுணத்தினைக்கலந்துநிற்கும்
பாலதொன்றில்லாவிந்தச்சத்திமான்படைத்தற்காக
யேலவேயெல்லாமாவோமென்றுகொண்டிசைந்துபார்த்தான்.

இ-ள். காலமுங்கன்மந்தானும் - காலமுங்கருமமும், பரிபாகமானவாற்றுல் - பரிபக்குவமானவிதத்தினுல், ஞாலமுண்டாக்கும் - உலகைச்சிருட்டிசெய்யும்' நல்லகுணத்தினை - சத்துவவிருத்தியை, கலந்துநிற்கும்-சேர்ந்துநிற்கும், பாலதொன்றில்லா - (உண்மையி) லொருகுணமுந்தன்னிடத்திலில்லாத, இந்தச்சத்திமான் - இந்தச்சத்தியையுடையவன், படைத்தற்காக - சிருட்டிசெய்வதற்காக, ஏலவே - (பூருவகற்பத்திலுள்ள வாசனையாலுண்டானசம்ஸ்காரவியல்பினுக்) கேற்கவே, எல்லாமாவோமென்றுகொண்டு- நாம்அனைத்து

மாகப்பவிப்போமென்றுட்கொண்டு, இலைசந்துபார்த்தான்-சம்மதித்துநோக்கி னன். எ - று.

ப-ம். காலத்தாற்செய்யப்பட்டபிராணிகளின் புண்ணியபாபபலங்களைக் கொடுக்கும் முயற்சியையுடையகருமபரிபாகத்தாலென்பார்," காலமுங்கன்ம ந்தானும் பரிபாகமானவாற்றால்" எனவும், அந்தக்கரணத்துக்கு உபாதானமா கியசத்துவபரிணமரூபமாயுஞ் சிருஷ்டிக்கத்தக்க பிரபஞ்சவிடயமாயுமிருக்கி ன்ற விருத்தியைக்கலந்தென்பார், "நல்லகுணத்தினைக்கலந்து" எனவும், நிருவிகாரமாயும் நிரவயவமாயுமுள்ள சித்துருபவான்மாவுக்குப் பலவாகப் பவிக்குந்தன்மைகூடாததனாற் சாங்கியர்களொப்பியபிரதானமே அதற்கு யோக்கியமாகும் அஃதேபலவாகப்பவிப்போமென்ற சுருதிவாக்கியத்தாற் கூறப்படுகின்றதென்னில், அங்ஙனங்கூடாது. அசேதனமாயின் அதற்குப்பார் வையில்லாமையின் அதனாலேயே வாதராயணரும் சுருதியிலீக்ஷிக்கின்றதாக க்காணப்படுவதனாற் பிரதானஞ் சுருதிகூறியகாரணமாகாதென்று சூத்திரஞ் செய்தருளினர், எங்ஙனம் பிரமத்துக்கு வெகுவாகுந்தன்மைகூடுமெனின் மு க்குணரூபமாயையினாற் கூடும். இங்ஙனமாயினும், மாயைசுதந்திரமாகக்கார ணமென்பது வேதமூலமாகாதென்பார், "பாலதொன்றில்லாவிந்தச்சத்திமா ன்" எனவும், வேறானவுபாதானத்தினபேக்ஷையின்றி, தன்சொரூபத்தாலே யேவெகுவிதஜகத்தாய்ப்பவித்ததென்பார், "ஏலவே யெல்லாமாவோமென்று கொண்டு" எனவுங்கூறினார். (கூசு)

அ - கை. சந்தோகசாகையில் தேயுமுதலியவற்றிற்கே யுற்பத்திகூறப்ப ட்டது ஆகாயத்திற்கும்வாயுவுக்கும் உற்பத்திகூறவில்லை ஆயினுந்தைத்திரீயத் திலவைகளுக்குமுற்பத்திகூறப்பட்டிருக்கின்றமையின்குணோபசங்காரநியாய த்தால் இவ்விடத்து அதனையுஞ்சேர்த்துச் சிருட்டியைநிரூபிக்கின்றார்.

பார்த்தபின்முன்னாகாயம்வாயுவைப்படைத்துப்பின்பு
தீத்தனையப்பைச்செய்தேயனமெனச்சொல்லப்பட்ட
பூத்தனையுளதாய்ச்செய்தகாரணமாகாவீசன்
வாய்த்தநுண்பூதமைந்தாய்வகுத்தவாறியம்பக்கேண்மின்.

இ - ள். பார்த்தபின் - (பலவாவோமென்று) பார்த்தபின்பு, முன் - முன்னாக, ஆகாயம் - விண்ணையும், வாயுவை - காற்றையும், படைத்து - சிரு ட்டித்து, பின்பு - பிறகு, தீத்தனை - தீயையும், அப்பை - சலத்தையும், செ ய்து - உண்டாக்கி, அனமெனச்சொல்லப்பட்ட - அன்னமென்று (சுருதியிற்) சொல்லப்பட்ட, பூத்தனையுளதாய்ச்செய்து - பிருதிவியையுஞ்சிருட்டித்து, அகாரணமாகாவீசன் - காரணவஸ்துவானவீச்சுரன், வாய்த்த - பொருந்திய, நுண்பூதம் - அபஞ்சீகிருதபஞ்சபூதத்தை, ஐந்தாய் - பஞ்சீகிருதமாக, வகு த்தவாறு - பிரித்ததன்மையை, இயம்பக்கேண்மின் - சொல்லக்கேளுங்கள். எ - று.

ப - ம். சந்தோகசுருதியின்விசாரணையானவிவ்விடத்தில் மற்றொருசுருதியிற்சொல்லிய விரண்டுபூதங்களின்சிருட்டியைவிருத்தமாயெங்ஙனங்கூறலாமெனில் சமானவித்தைகளைக்கூறும்பின்னசுருதிகளில் வித்தியாகுணங்களொன்றிலதிகமாயும் ஒன்றிற்குறைவாயுமிருந்திடில் அதிககுணங்களை இல்லாததிற்சேர்க்கவதிகாரம்பெற்றகுணோபசங்காரமெனும்நியாயத்தால் தைத்திரீயகசந்தோகசுருதிகளிற் பூதசிருட்டிசமானமானதனாலும் அவ்வாறேவாதராயணரும் இதனால்வாயுவுரைசெய்யப்பட்டானென்ற அதிகரணங்களால் ஆகாசம்வாயு இவற்றினுற்பத்தியைநிருணயித்திருப்பதனாலுங்கூடுமென்பார், "முன்னாகாயம்வாயுவைப்படைத்து" எனவும், சுருதியில்தேயுஅப்புஅன்னம் இவைகளைச்சிருட்டித்தானென்றதில் அன்னமென்பதுபிருதிவியெனத்தெரியத்தக்கதென்றும் அங்ஙனமேபிருதிவியானது அதிகாரமாகியமறுசத்தங்களில் நின்றென்றவியாச சூத்திரமுண்டென்றுந்தெரிவிப்பார், "பின்புதித்தனையப்பைச்செய்தேயனமெனச்சொல்லப்பட்டபூத்தனையுளதாய்ச்செய்து"எனவுங் கூறினர். (கஎ)

அ - கை. சுருதியில் தேயுமுதலியசிருட்டிக்குப்பின்பு திருவிருத்கரணமானதுகூறப்பட்டிருக்கின்றது. அவைகளினெவ்வோரங்கிசத்தையுமூன்றங்கிசமுடையதாகச்செய்ததெனவு மிருக்கின்றது, ஆயினும் பூதசிருட்டியில் ஆகாயத்திற்கும்வாயுவிற்கு முபசங்காரத்தாலுற்பத்திகூறப்பட்டது பஞ்சீகரணத்திற்குபலக்ஷணமாதலினதனைக்கூறுகின்றார்.

வேறு.

தன்மாத்திரைகளைந்தினையுமோரொன்றிரண்டாய்ப்பகுத்தொன்றை
நன்னாலாக்கித்தன்பாதியொழிந்தநாலினுடன்கூட்டி
யின்னேயலாதவைந்நான்கிலியல்பிற்கூட்டவானுதி
பின்னேதூலபூதமெனப்பிறக்குமெனவேபெயர்த்துரைத்தான்.

இ - ள். தன்மாத்திரைகளைந்தினையும் - தன்மாத்திரைகளாகியபூதங்களைந்தினையும், ஓரொன்றிரண்டாய்ப்பகுத்து - ஒவ்வொன்றை யிரண்டாகப்பங்கிட்டு, ஒன்றை - (அவைகளிலைந்தங்கிசங்களை எடுத்துஅவ்வங்கிசங்களுக்குள்) ஒவ்வொன்றை, நன்னாலாக்கி - நன்னான்காகச்செய்து, தன்பாதியொழிந்த - தனதுபாதியாகியஐந்துநீங்கிய, நாலினுடன்கூட்டி - ஒருபூதத்தினது நான்கு பாகத்தோடுமற்றைப்பூதங்களின்பதினாறு பாகத்தையுஞ்சேர்த்து, இன்னே - இத்தன்மையவாய், அலாத - ஒழிந்த, ஐந்நான்கில் - இருபதங்கிசங்களினால், வானுதி - அபஞ்சீகிர்தபஞ்சபூதங்களை, இயல்பிற்கூட்ட - இவ்வியல்பாகப் பஞ்சீகரணஞ்செய்ய, பின்னே - அதன்பின்பு, தூலபூதமென - தூலபூதமாக, பிறக்குமெனவே - உண்டாகுமென்று, பெயர்த்துரைத்தான் - திரும்பவுங் கூறினன். எ - று. (கஅ)

அ - கை. பஞ்சீகரணத்தின்பின்பு செய்யுஞ்சிருட்டியைக்கூறுகின்றார்.

வேறு.

அறியாமைவடிவாயுள்ளபுவனங்களமைத்துப்பின்பு
பிறியாதகன்மந்தன்னின்வசத்தினலுயிர்கட்கெல்லாஞ்
செறிவாயகாலபாகமானபின்னீசன்முனே
பிறிவாகுநான்குயோனிபிறந்திடும்வகையேசெய்யும்.

இ - ள். அறியாமைவடிவாயுள்ள - அஞ்ஞானரூபமாயுள்ள, புவனங்களமைத்து - உலங்கங்களையுண்டாக்கி, பின்பு - பிறகு, பிறியாத - நீங்காத, கன்மந்தன்னின்வசத்தினல - கன்மத்தினதுவசத்தால், உயிர்கட்கெல்லாம் - எல்லாப்பிராணிகளுக்கும், செறிவாய - பொருத்தமாகிய, காலபாகமானபின் - காலம்பரிபக்குவமாகியபின்பு, ஈசன்முனே - ஈச்சுரன்முனே, பிறிவாகும் - வேருகிய, நான்குயோனி - (அண்டஜம் ஜராயுஜம் சுவேதஜம் உற்பிஜமென்னும்) நான்குயோனிகளாக, பிறந்திடும்வகையேசெய்யும் - உண்டாகும்படியேசிருட்டிப்பான். எ - று. (௩௧)

அ - கை. சுவேதஜமானவுகைமுதலியன அண்டஜத்திலடங்குமென்ற அபிப்பிராயத்தால் சுருதியிற்கூறப்பட்டமூவகைச் சீவராசியினுற்பத்தியை முற்கவியில்நான்காகவித்தரித்துக்கூறி இந்தக்கவியிலந்தத்தேவதையிந்தமூன்றுதேவதைகளையுஞ் சீவான்மசொருபத்தாற்புகுந்து நாமரூபங்களைச்செய்ததென்றசுருதியின் பொருளைக்கூறுகின்முர்.

ஈசனுமிறைவனெத்தவறிவினலெங்குமாகிப்
பேசிடுநாமரூபமுன்புபோற்பிறக்கச்செய்தான்
மாசிலாச்சகத்துத்தானேயுளதுபோலிசைந்திட்டாலு
மீசனையொழியவேறுநிற்பதொன்றில்லையென்றும்.

இ - ள். ஈசனுமிறைவன் - பரமேச்சுரனுகியபதியானவன், ஒத்தவறிவினல் - ஒரேதன்மையாகிய (தனது) அறிவினல், எங்குமாகி - எல்லாவிடத்திலுமனுப்பிரவேசித்து, பேசிடும் - (வெவ்வேருகச்) சொல்லுகின்ற, நாமரூபம் - நாமரூபங்களை, முன்புபோல் - முந்தியகறபம்போல, பிறக்கச்செய்தான் - உண்டாகச்செய்தான், மாசிலா - குற்றமில்லாத, சகத்து - சகத்தானது, தானேயுளதுபோல் - தானேசத்தியம்போல், இசைந்திட்டாலும் - பொருந்தினலும், ஈசனையொழிய - அந்தஈசனைத்தவிர, என்றும் - எக்காலத்தும், வேறு-வேருக, நிற்பதொன்றில்லை - ஒருசகமும்நிற்பதில்லை. எ - று.

ப - ம். ஜலதரங்கபுற்புதமுதலியவற்றிற்சூரியபிம்பம்போற் சகத்தின் காரணமாகியபிரமமே பிரமனிந்திரன்முதலியவெல்லாருடலினுஞ் சித்ரூபமாகவேயனுப்பிரவேசித்துமுந்தியகற்பத்திலுள்ளபடி நாமரூபங்களையுண்டாக்கினுனென்பார்,“ ஈசனுமிறைவனெத்தவறிவினலெங்குமாகிப் பேசிடுநாமரூபமுன்புபோற்பிறக்கச்செய்தான்” என்முர். (௩௦)

அ-கை. முன்புமண்முதலியதிருட்டாந்தங்களால் காரியத்துக்குக்காரணத்தின்வேறின்மைகூறி திரும்பவுமதனைத்திடப்படுத்தவேண்டித் திருவிருத்கிருதநூலபூதத்திற்கு அஃதில்லாதகாரணபூதங்களானதேயு அப்பு பூமி இவற்றின்மாத்திரமானதன்மை சுருதியில்அக்கினிமுதலியநான்குதிருட்டாந்தங்களாற்கூறப்பட்டது அவற்றைக்கூறுகின்றார்.

அனலினிற்சிவந்தமேனியானதவ்வொளியேயாகு
மனல்வயின்வெண்மையப்பாங்கருமைபூமியின்றன்கூறு
மெனுமிவைமூன்றுமன்றியீண்டனலென்பதில்லை
யனலெனும்விகாரம்வார்த்தையாவதேயன்றியில்லை.

இ-ள். அனலினிற்சிவந்தமேனியானது-அக்கினியினிடத்திற் சிவந்தவடிவந்தோற்றுகின்றது, அவ்வொளியேயாகும் - அந்தச்சூக்குமபூதத்தின்பிரகாசமேயாகும், அனல்வயின்வெண்மை - அக்கினியினிடத்திற்றோற்றுகின்ற வெண்ணிறம், அப்பாம் - சலத்தின்பாகமாகும், கருமை - கருநிறம், பூமியின்றன்கூறும் - பிருதிவியின்பாகமாகும், எனும் - என்றுசொல்லுகின்ற, இவைமூன்றுமன்றி - இவைமூன்றனையுந்தவிர, ஈண்டனலென்பதில்லை - இவ்விடத்திலக்கினியென்பதுவேறில்லை, அனலெனும்விகாரம் - அக்கினியென்னும்வேற்றுமை, வார்த்தையாவதேயன்றி - வாசாரம்பணமாத்திரமேயல்லாமல், இல்லை - வேறில்லை. எ-று.

ப-ம். பஞ்சீகரிக்கப்பட்டபூதகாரியமாகியஇச்சகம் பரமார்த்தம்போலத்தோற்றினுங் காரணசூக்குமபூதத்தைத்தவிரவேறில்லையென்பதெங்ஙனங்கூடுமெனில் திரிவிருத்கிருதபூதகாரியங்களாகிய அக்கினிமுதலியவற்றிற்குச் செம்மைவெண்மைகருமையான மூன்றுநிறந்தோற்றுகின்றன, அவற்றுள் காரியவன்னியின்சிவப்பு திருவிருத்கரிக்கப்படாதசூக்குமதேயுவினுருவமென்பார், "அனலினிற்சிவந்தமேனியானதவ்வொளியேயாகும்" எனவும், ஒன்றினுருவமற்றொன்றின்றன்மையாதலால் அக்கினியென்னுந்தருமி ஏனில்லாததாகுமெனில் இம்மூன்றுருவங்களேசேர்ந்தக்கினிமுதலியபதத்தாற் பொருளாகவிவகரிகப்படுகின்றனவன்றி உருவத்திற்கு வேறாக ஒருதத்துவமில்லையென்பார், "மூன்றுமன்றியீண்டனலென்பதில்லை" எனவும், தகனமும்பக்குவமுஞ்செய்யும் வல்லமையுடைய அக்கினிமுதலியபொருளையெங்ஙனம் நிஷேதிக்கத்தகுமெனில் காரணபூதத்திரயத்துக்குவேறாகிய அக்கினிமுதலியபெயருடைய விகாரசம்பந்தவிசேடமும் வார்த்தைமாத்திரமேயன்றி உண்மையில்லையென்பார், "அனலெனும்விகாரம்வார்த்தையாவதேயன்றியில்லை" எனவுங்கூறினர் (சக)

அ-கை. ஆதித்தனுஞ் சந்திரனும் மின்னலும் அம்மூன்றுருவங்களைக்காட்டியும் வேறுகாணுகதனாற் சூக்குமபூதத்தைத்தவிர இல்லையென்றுகூறுகின்றார்.

ஆதித்தனிரத்தவன்னமானதவ்வொளியதாகு
மாதித்தனிடத்துவெண்மையப்பினதாகுநின்று
பேதித்தகறுப்புப்பூமியுடையதிம்மூன்றுமன்றி
யாதித்தனென்றுவேறிங்கில்லையென்றறிமினென்றும்.

இ - ள். ஆதித்தனிரத்தவன்னமானது - சூரியனுடையசிவந்தநிறமானதவும், அவ்வொளியதாகும் - அந்த அக்கினியின் பிரகாசமேயாகும், ஆதித்தனிடத்துவெண்மை - சூரியனிடத்துள்ளவெண்ணிறமும், அப்பினதாகும் - சலத்தின்பாகமாகும், நின்றுபேதித்தகறுப்பு - அவனிடத்தில் நின்றுபேதமாகத்தோற்றுகின்றகருநிறமும், பூமியுடையது - பிருதிவியினுடையதாகும், இம்மூன்றுமன்றி - இம்மூவகையுமன்றி, இங்கு - இவ்விடத்தில், ஆதித்தனென்று - சூரியனென்னொருவன், வேறு - வேறாக, என்றும் - எக்காலத்தும், இல்லையென்றறிமின் - இல்லையென்றுணருங்கள். எ - று. (சஉ)

இதுவுமது.

அறிவொடுவிவேகமில்லாராதலாலவர்களாலே
பிறிதரவிரவியென்றுபேசிடப்பட்டதென்று
மறிகனல்ப்ருதிவி நீரென்றுனவிம்மூன்றுமன்றிப்
பிறிதுசந்திரனைமின்னைப்பேசிடல்பிழையேயன்றோ.

இ - ள். அறிவொடுவிவேகமில்லாராதலால் - அறிவுடன்பகுத்தறிவுமில்லாதவர்களாதலால், அவர்களால் - அப்புத்தியில்லாதவர்களால், பிறிதர - வேறாக, இரவியென்று - சூரியனிருக்கின்றானென்று, பேசிடப்பட்டது - கூறப்பட்டது, என்றும் - எக்காலத்தும், அறிகனல் - அறியப்பட்டவக்கினி, ப்ருதிவி - மண், நீர் - சலம், என்றுன இம்மூன்றுமன்றி - எனவாகிய இந்தமும்மையுமன்றி, பிறிது - வேறு, சந்திரனை - மதியையும், மின்னை - மின்னலையும், பேசிடல் - (பேதமாகச்) சொல்லுதல், பிழையேயன்றோ - குற்றமேயல்லவா. எ - று.

கருத்து. காரியமனைத்துங்காரணத்திற்குவேறென்றல்பிராந்தியென்றறிக.

அ-கை. சுருதியில்ஆதித்தன்முதலியவற்றின் சிவப்பாகியவுருவமென்றதாதியாகக்கூறியபொருளை மற்றவிஷயங்களிலுந்தெரியக்கூறுகின்றார்.

வேறு.

பூதம்புவனஞ்சுவர்வேறுகுடம்போலும்பொருளாயுளவாகுமெலாப்
பேதம்பிரமமொழியவிலையாற்பேர்வற்றிடநின்றதுதானதுவே
யோதுஞ்சனனம்பலவாதனையாலுடலம்முதலாகியவெளியினிலே
பேதம்படநானெனவேயறியும்பெயராமயலாயிடுமெங்கணுமே.

இ - ள். பூதம் - பஞ்சபூதங்களும், புவனம் - உலகங்களும், சுவர் - சுவரும், வேறுகுடம் - வேறானகடங்களும், போலும் - இவைக்குநிகராக,

பொருளாயுளவாகும் - பொருளாகவிருக்கின்ற, எலாப்பேதம் - சகலபேதங்களும், பிரமமொழிய - பிரமத்தைத்தவிர, இலை-இன்றாகும், பேர்வற்றிட - பெயருதலில்லாமல், நின்றதுதானதுவே- நின்றதந்தப்பிரமமேதான், ஓதும் - சொல்லுகின்ற, சனனம்பலவாதனையால் - அனேகசன்மவாதனையால், எங்கணும் - எவ்விடத்தும், உடலம்முதலாகியவெளியினில் - தேகமுதலாகிய திரிசியங்களில், பேதம்பட - பேதம்பொருந்த, நானெனவேயறியும் - நானென்றறிகின்ற, பெயராமயலாயிடும் - நீங்காதவஞ்ஞானமுண்டாய்விடும். எ - று.

ப - ம். எப்படியக்கினி முதலியவைகள் காரணமானசூக்குமபூதத்தைத்தவிரவேறில்லையோ அப்படியே பூதபவுதிகமானசகலஜகமும் காரணப்பிரமத்தைத்தவிரவேறில்லை எப்போதுஞ்சத்தாகியபிரமமேயுள்ளதென்பார், "எலாப்பேதம்பிரமமொழியவிலையாற் பேர்வற்றிடநின்றதுதானதுவே" எனவும், பிரமம் பரமார்த்தமாயின் அஃதுநீயென்று பிரமத்தோடைக் கியமாமேக சொருபனுகச்சீவன் பினபுகூறத்தக்கவனுதலால் அச்சீவனும் பரமார்த்தனுவான் அங்ஙனமாயின்அவனுடைய அகம்பிரதீதிஅசத்தியங்களாகியதேகாதிகளில் நான்மானிடனென்றுவருகின்றதே அஃதெங்ஙனங்கூடுமெனில் சென்றஜன்மங்களிலுள்ள பிராந்தியாலுண்டாகியவாசனுமூலமாக இத்தேகாதிகளினும்நானென்ற பிராந்தியுண்டாகும் அதுவுமனுதியானதுபற்றிஅனவத்தையென்னுந் தூஷணமில்லாததாகுமென்பார், "சனனம்பலவாசனையாலுடலம்முதலாகியவெளியினிலே பேதம்படநானெனவேயறியும்பெயராமயலாயிடுமெங்கணுமே" எனவுங்கூறினர். (சுச)

அ-கை. புசித்தஅன்னமானதென்றுதொடங்கி தயிரில் நின்வஞ்சோமயாஜியேயென்று முடிந்தசுருதியினல் மனம்வாக்குப் பிராணன் மாங்கிசம் இரத்தம் மச்சை யிவைமுதலாகியசரீரஞ் சடமானபூதத்திரயத்தின்காரியமாதலாற் சடமாகும் அஃதுசைதன்னியகோசரமாகிய அகம்பிரத்தியத்துக்கு விடயமாகாதெனக்கூறப்பட்டிருக்கின்றது. அதனைச்சங்கிரகமாகக்கூறுகின்றார்.

ஊனிந்திரியாதிகளானவெலாமோருங்கணினுனெனலாகியிடா
வானம்முதலாகியபூதமதால்வரவின்படியேவளர்வுற்றுளதா
லானம்மணிநிலைமையுஞ்சுவர்தானுகும்மனுநீர்கொடளித்திடல்போ
லூனுங்கரணங்களுமுண்பவையாலுளதாய்வளருமெனவேயுணர்மின்

இ - ள். ஊன் - தேகம், இந்திரியாதிகளானவெலாம் - இந்திரியங்கள் முதலானவனைத்தும், வானம்முதலாகியபூதமதால்- விண்முதலியவைம்பூதங்களால், வரவின்படியே- உற்பத்தியானவாறே, வளர்வுற்றுளதால் - விருத்தியடைந்திருத்தலினல், ஓருங்கணில் - ஆலோசிக்குமிடத்தில், நானெனலாகியிடா-அகம்பதமென்னுமான்மவஸ்துவாகாது, அம் - சலத்தினுலும், மணி

னுல் - மண்ணினுலும், அமையுஞ்சுவர்தான் -பொருந்தியசுவரை, ஆரும்மனு நீர்கொடு - உண்டாகின்றமண்ணையுஞ்சலத்தையுங்கொண்டு, அளித்திடல்போல் - காப்பதுபோல், ஊனுங்கரணங்களும் - தேகமுமிந்திரியங்களும், உண்பவையால் - புசிக்கின்றபூதங்களால், உளதாய் - உள்ளனவாகி, வளருமெனவே - விருத்தியாகுமென்றே, உணர்மின்-அறியுங்கள். எ - று.

கருத்து. தாய்தந்தையிருவரும்புசித்தபூதங்களின்காரியமாதலாலுந்தன்னுற்புசிக்கப்பட்டதேயு அப்பு அன்னமென்னுமிலக்கணமுடைய பூதங்களின்தூலமத்திமசூக்குமாம்சங்களால்விருத்தியாதலாலும் எவைகளைதனுல்விருத்தியடைகின்றனவோ அவைகளதில்நின்றுமுற்பத்தியுடையனவாதலாலுந் தேகமுதலியவைகளகம்பதபாகிகளாகாதெனவாம். (சரு)

அ - கை. உரைசெய்யப்பட்டசுருதியின்பலிதார்த்தத்தைக்கூறுகின்றார்.

ஊனுதிகளாயதிரட்சியிலேயொளியாவணநானெனதென்றுகொடே
நானேநுகர்வேனவையென்றுணருநானுவறிவானவைவிட்டிவையிற்
ருனேமுதல்கண்டிவையித்தனையிற்சலியாவறிவாகியதன்மையிலே
நானேயதுவென்றிடுநல்லறிவோர்நாடார்பிறிதென்பதுநாடொறுமே

இ - ள். ஊனுதிகளாயதிரட்சியிலே - தேகமுதலாகியகூட்டங்களில், ஒளியாவணம் - மறைவுபடாதபடி, நானெனதென்றுகொடே - நானெனதென்றுகருத்துட்கொண்டு, அவை - அந்தவிஷயாதிகளை, நானே - யானே, நுகர்வேன் - புசிக்கின்றேன், என்றுணரும் - என்றறிகின்ற, நானுவறிவானவைவிட்டு - பலவிதமாகியபேதஞானத்தைவிடுத்து, இவையிற்றுனே - இந்தத்தேகாதிகளிற்றுனே, முதல்கண்டு-காரணத்தைக்கருதிப்பார்த்து, இவையித்தனையில்-இவையெல்லாவற்றினும், சலியாவறிவாகியதன்மையிலே-அசைவில்லாத ஞானசொரூபமாகியசுபாவத்திலிருந்து, நானேயதுவென்றிடும் - நானேயந்தப்பிரமமென்கின்ற,நல்லறிவோர் - நல்லஞானிகள், நாடொறும் - நாள்தோறும், பிறிதென்பது-துவிதமென்பதை, நாடார்-விரும்பமாட்டார்கள். எ - று.

கருத்து. யாதொருகாரணத்தாற்றேகேந்திரியாதிகள் தேயு அப்பு அன்னங்களாகியபூதகாரியமாதல்பற்றி வாக்குமாத்திரங்களாயும் அனுத்மப்பொருள்களாயுமிருக்கின்றன அதனுல் அவற்றில்நானென்னும்புத்தியைநீக்கிக்கூடத்தனுகியசிதான்மாவிலகம்புத்தியைச்செய்யத்தக்கதென்றறிக. (சசு)

அ-கை. தேயு அப்பு அன்னமிவைகளுக்குவிலக்ஷணங்களாகியதேகேந்திரியமனமுதலியவைகளெங்ஙனம்பூதகாரியங்களாகுமெனில், தயிருக்குவிலக்ஷணமாகியநெய்போலாகுமென்றுதாகரித்தசுருதியின்பொருளைக்கூறுகின்றார்.

வேறு.

கடையப்படுதயிரிற்றிரணெய்போன்மனமுதலா
மிடையிற்செயுமியல்வேறிலையுளபூதமதிடையே

யடையத்திரளுருவிற்செலுமதிவிட்டறிவுருவா
மடையப்பிறிதிலமெய்ப்பொருளதுநானெனவறிவீர்.

இ-ள். கடையப்படுதயிரில் - கடையப்படுகின்றதயிரினிடத்தில், திரணெய்போல் - கூடுகின்றநெய்யைப்போல, மனமுதலாம் - (பஞ்சபூதங்களினின்று) மனமுதலானவைகளுண்டாகும், இடையிற்செயுமியல்வேறிலை - (இதுவன்றி) நடுவிலுற்பத்திசெய்யுமிலக்கணம்வேறில்லை, உளபூதமதிடையே - பொருந்தியபூதத்தினிடத்திலும், திரளுருவில் - பவுதிகங்களினும், அடைய - சேர, செலுமதிவிட்டு - செல்கின்றபுத்தியைவிடுத்து, அடைய - எல்லாம், அறிவுருவாம் - ஞானசொரூபமேயாகும், பிறிதில - வேறில்லை, மெய்ப்பொருளது - அந்தஉண்மையானவஸ்துவை, நானெனவறிவீர் - நானென்றுணருங்கள். எ-று.

ப-ம். தேயு அப்பு அன்னமிவைகள் உதராக்கினியாலுண்டாகியபாகவிசேடத்தால் தேகேந்திரியமனோரூபங்களாகப்பரிணமிக்கின்றதுகளென்பார், "மனமுதலாம்" எனவும், கூறினார்.

கருத்து. தயிர்நெய்த்திருட்டாந்தத்தாற் றேகமுதலியனபவுதிகமென்று சாதித்ததுபற்றி முற்கூறியதேகாதிகளினின்றும்பின்னமாகியவான்மநிட்டை குற்றமில்லாததென்றறிக. (சுஎ)

அ-கை. காரியங்களாகியவாக்குப்பிராணனிவைகளுக்குப்பவுதிகத்தன்மையுள்ளதாயினும் மனம் நித்தியமெனவைசேடிகர்கள்கூறுவதனால் அஃதெங்ஙனம்பவுதிகமாகுமென்றுசங்கித்தபுத்திரனுக்குப் பதினாறுகலையென்றதுமுதல்மனம்அன்னமயமென்றதீறாகியசுருதிவாக்கியங்களின்படி பதினாறுதினமுணவில்லாததனால்மனஞ்சுருங்கிஅப்பியாசித்தசாத்திரம்விளங்காமல்உணவினால்மனம்விருத்தியடைந்தபின்பு சாத்திரம்விளக்கமுற்றதனால் மனம் அன்னமயமென்றுபதேசித்தபிதாவின்றாற்பரியத்தை மேல்வருஞ்செய்யுட்களாற் கூறுகின்றார்.

வேறு.

அன்னத்தானிறைவிலானுக்கறிவுதோன்றுமையாலு
மன்னகாரியமேபுத்தியாதனிச்சயமதானு
லன்னத்தாலுண்டாமந்தப்புத்தியைத்தவிர்த்துநாளு
முன்னுவானெங்குங்காணுமறிவுநானென்றெப்போதும்.

இ-ள். அன்னத்தால் - அன்னத்தினால், நிறைவிலானுக்கு - நிறைவில்லாதசுவேதகேதுவுக்கு, அறிவுதோன்றாமையாலும் - நூலறிவுவிளங்காததனாலும், அன்னகாரியமே - அன்னத்தின்காரியமே, புத்தியாதல் - மனமாகுதல், நிச்சயமதானால் - உறுதியானால், அன்னத்தாலுண்டாம் - அன்னத்தினாலுற்பத்தியாகிய, அந்தப்புத்தியை - அந்தமனத்தை, நாளும் - எந்நாளும், தவிர்த்து - நீக்கி, எங்குங்காணும் - சர்வசாட்சியான, அறிவு - ஞானசொரூபமே, நானென்று - அகம்பொருளென்று, எப்போதும் - எக்காலத்தும், உன்னுவான் - நினைக்கக்கடவன். எ-று. (சஅ)

வேறு.

தேகேந்திரியாதிகளாகுந்திரட்சியினை நானெனதென்றே
போகாநின்றபுத்தியினைவிட்டுத்தானுயிருந்துளதா
யாகாதெல்லாமாகியிடுமறிவாஞ்சித்திலியாதொருகா
லேகாவொன்றுயடங்கியிடுமவன்றனியல்பையியம்பிடுவாம்.

இ - ள். தேகேந்திரியாதிகளாகும் - உடல்பொறிகள்முதலான, திரட்சியினை - கூட்டங்களை, நானெனதென்றே - நானென்னுடையதென்றே, போகாநின்ற - செல்கின்ற, புத்தியினை - புந்தியை, விட்டு - விடுத்து, தானுயிருந்துளதாய் - அகம்பதப்பொருளாயிருக்கின்றதாய், ஆகாதெல்லாமாகியிடும் - நிஷேதவஸ்துக்களனைத்துமாய்விளங்கும், அறிவாஞ்சித்தில் - ஞானசொரூபமானசித்தில், யாதொருகால் - யாதொருகாலத்தில், ஏகா ஒன்றுயடங்கியிடு மவன்றன் - சென்றுஅத்துவிதமாகத்தாதான்மியத்தையடைகின்றவனது, இயல்பை - சுபாவத்தை, இயம்பிடுவாம் - சொல்லுவாம். எ - று. (சுக)

வேறு.

அப்போதுசுகதுக்கங்களாதியாச்சொல்லப்பட்ட
எப்பாயவிகாரமெல்லா மறியாதுதன்னைத்தானே
மெய்ப்பாடாய்நுகராநின்றேன்விளங்கவவ்விடத்தேகாணுந்
தப்பாதுதானுய் நின்றசுகத்தினைத்தடையொன்றின்றி.

இ - ள். அப்போது - அக்காலத்தில், சுகதுக்கங்களாதியாச்சொல்லப்பட்ட - இன்பதுன்பமுதலாகச் சொல்கின்ற, எய்ப்பாயவிகாரமெல்லாம் - தளர்ச்சியாகிய விகாரமனைத்தையும், அறியாது - உணராமல், தன்னைத்தானே - தொம்பதார்த்தனுகிய தன்னையே, மெய்ப்பாடாய் - உண்மையாக, நுகராநின்றேன் - அனுபவிப்பவன், விளங்க - விளங்கும்படி, அவ்விடத்தே - அந்தப்பிரமத்தினிடத்திலேயே, தப்பாது தானுய்நின்ற - தானுகத்தவருதிருக்கின்ற, சுகத்தினை - பரமசுகத்தை, தடையொன்றின்றி - ஒருதடையுமில்லாமல், காணும் - காண்பான். எ - று. (௫0)

ஆதலாலறிவுள்ளோர்களழிந்திடுமுடலேயாதி
சேர்தருபுத்திதன்னைச்செலவிட்டுத்தெளியும்வண்ணந்
தீதிலாதெவையுங்காணுந்திகழ்தருசித்தின்கண்ணே
யேதிலாமதியைநானென்றிடுமின்களிசைந்தெப்போதும்.

இ - ள். ஆதலால் - ஆகையால், அறிவுள்ளோர்கள் - உணர்வுள்ளவர்கள், அழிந்திடும் - நசிக்கின்ற, உடலேயாதி - தேகாதிகளில், சேர்தருபுத்திதன்னை - சேர்கின்றபுத்தியை, செலவிட்டு - போகவிடுத்து, தெளியும்வண்ணம் - தெளியும்படி, தீதிலாது - குற்றமில்லாமல், எவையுங்காணும் - சகலத்தையும்பார்க்கின்ற, திகழ்தருசித்தின்கண்ணே - பிரகாசம்பொருந்தியசித்தி

னிடத்தே,] இசைந்தெப்போதும் - இயைவுற்றெக்காலத்தும், ஏதிலாமதியை-குற்றமில்லாதமதியை, நானென்றிடுமின்கள்-நானேன்று வையுங்கள். எ-று.

அ-கை. மனமுதலியவைகள் அநாத்மாவாதலாலவைகளைவிட்டுக்கூடத்தவான்மாவினிடத்திலகம்புத்திசெய்யவேண்டும், அவ்வாறுபுத்திசெய்யுங்கால் எப்பொழுது அதிலிலயிக்கின்றானோ அப்பொழுதுதுவிதமில்லாததனால் ஆன்மசுகசொருபமாகின்றானென்று முற்கவிகளாலத்துவிதியப்பிரமமொன்றேயுள்ளதென்றுபிரதிக்கினைசெய்து, தேயுஅப்பு அன்னமென்னும் பூதங்களும் அவைகளினின்றுமுற்பன்னமாகியபவுதிகமானபோக்கியவத்துவும் போகாதாரமாகியசரீரங்களும் போகவுபகரணங்களாகியவிந்திரியங்களும் காரியங்களாதல்பற்றி வாக்குமாத்திரங்களாகிப்பிரதியோகிபேதமில்லாததனால் அத்துவிதப்பிரதிக்கினுபங்கமில்லையென்றத்தியாயத்தின்முன்பாகமுரைசெய்யப்பட்டது. அங்ஙனமாயினும்புசிக்கின்றவான்மாக்கள்நித்தியர்களாதலால்அந்தப்பிரதியோகிபேதத்தால் அத்துவிதப்பிரதிஞ்ஞாபங்கம்வருமென்றசங்கையைநிராகரிப்பதற்கு உத்தரபாகமானது உத்தாலகனாருணியென்றது முதலானசுருதிகளால் போக்கியவஸ்துப்போற்புசிக்கின்றவான்மா கற்பிதனன்று பரமார்த்தனேதான். ஆயினும் அந்தப்பிரதியோகி பேதத்தாலத்துவிதப்பிரதிக்கினுபங்கம் நேரிடாது. அவன்பிரமசொருபமானதுபற்றிப்பேதமில்லாததனாலென்று கூறப்பட்டது. அஃதெங்ஙனமெனில் இவன்குக்குமன் இவன்மயமேஇவ்வனைத்தும் அஃதுசத்தியம் அவனேயான்மா அதுநீயாகின்றாய் சுவேதகேதுவேயென்பனவாம், அவற்றின்பொருளைக் கூறுகின்றார்.

காண்பவன்றானேயாகுங்காண்பவையென்றயாவுங்
காண்பவன்றன்னில்வேறொன்றின்மையிற்றனையேகாணும்
பூண்பதொன்றின்றிநின்ற பூரணமது நீயென்ற
மாண்டவார்த்தைக்குமுள்ளபொருளிதின்மற்றொன்றில்லை.

இ-ள். காண்பவையென்றயாவும் - திரிசியங்களாகக்கூறியவனைத்தும், காண்பவன்றானேயாகும் - திருஷ்டாவேயாகும், காண்பவன் - (அந்தத்) திருட்டாவானவன், தன்னில்வேறொன்றின்மையில் - தன்னைத்தவிரவேறொருபொருளில்லாததனால், தனையேகாணும் - தன்னையேகாண்கின்றான், பூண்பதொன்றின்றிநின்ற - அணியத்தக்கவேறொருபொருளில்லாதுநிற்கின்ற, பூரணமது - அகண்டமான அந்தப்பிரமமே, நீயென்ற - நீயென்கின்ற, மாண்டவார்த்தைக்கும் - மாட்சிமையுடைய வாக்கியத்திற்கும், [illegible]பொருள் - பொருந்தியபொருளாகும், இதில்மற்றொன்றில்லை - இவ்விஷயத்தில்வேறொருபொருளில்லை. எ-று.

ப-ம். எது சற்பம்அதுஇரச்சுவேதான் எதுரசதம்அது சுத்தியேதானென்பதுபோல் பாதாசாமானாதிகரணியமாகப்பிரமத்திலாரோபிதமாதலாலனைத்துமதற்குவேறின்மையிறபிரமமேதானென்பார், "காண்பவன்றானேயாகுங்

காண்பவையென்றயாவுங் காண்பவன்றன்னில் வேறென்றின்மையில்" என்ருர், தொஞ்சத்தார்த்தனுகிய ஜீவனும் பரமார்த்தமாகப்பிரமசொருபனேய னறித்திரிசியம்போல் கற்பிதனன்றென்பார், "பூரணமது நீ" என்ருர். (ருஉ)

அ - கை. நீயென்னுஞ்சத்தந்திரிசியப்பொருளைத்தரும். அகமென்னுஞ் சத்தம்பிரத்தியக்குப்பொருளைத்தரும். இவைகள் பின்னுர்த்தங்களுடையன வாதலால் குறில்நெடில்போல்விரோதிகளாகும். இங்ஙனமாயின் மற்ருெரு சுருதியில்நான்பிரமமாகின்றேனெனப்பிரத்தியகான்மாவிற்குப் பிரமத்துவ ங்கூறப்பட்டிருக்க இவ்விடத்திலஃது நீயாகின்ருயெனப்பராக்குவத்துவுக்கு எங்ஙனம்பிரமத்துவங் கூடுமென்று சங்கித்துக்கூறுகின்ருர்.

வேறு.

நீயென்கின்றவார்த்தைக்கும்பொருளாயென்றுநிற்பதுவே
நானென்கின்றவாசகத்தின்பொருளாய்நின்றுநாடுவது
நானென்கின்றவாசகத்தின்பொருளாய்நாடிநிற்பதுவே
நீயென்கின்றவாசகத்தினிற்கும்பொருளுநிலைபெறவே.

இ - ள். நீயென்கின்றவார்த்தைக்கும் - அதுநீயென்னும்வாக்கியத்திற்கும், பொருளாயென்றுநிற்பதுவே -இலக்கியப்பொருளாகவெப்போதும்நிற்பதுதானே, நானென்கின்றவாசகத்தின் - அகமென்னுஞ்சொல்லினது, பொருளாய் - இலக்கியப்பொருளாக, நின்றுநாடுவது - நின்றுவிளங்குகின்றது, நானென்கின்றவாசகத்தின் - அகமென்னுஞ்சொல்லினது, பொருளாய்நாடிநிற்பதுவே - அருத்தமாகவிளங்கிநிற்பதுவே, நீயென்கின்றவாசகத்தில் - நீயென்னுஞ்சொல்லில், நிலைபெற - திரமாக, நிற்கும்பொருளும் - நிற்கின்றபொருளுமாம். எ - று.

கருத்து. தேவதத்தனொருவனே புத்திரனுற்பிதாவெனவும் பிதாவினுல் மகனெனவும்கூறத்தக்கவனெனினும் தகப்பன்மகனென்றசத்தங்களாற்சொல்லப்படுந்தேவதத்தனது சொருபம்பேதிக்காது அப்பேதமும் விவகரிக்கின்றவனதுநிபந்தனமேயன்றி விவகரிக்கத்தக்கதென்னும் நிபந்தனமில்லாததுபோல் பிரமத்தைத் தானுகவனுபவிக்குமவத்தையில் நான்பிரமமெனவும்அவ்வைக்கியமே அன்னியன்பொருட்டுப்போதிக்கத்தக்கதாகி அதுநீயெனவுமுபதேசிக்கப்படலால் இரண்டுவாக்கியமுஞ்சமானமாகியபொருளுடையதுபற்றிவிரோதமின்றென்றறிக. (ருங)

அ - கை. அதுநீயாகின்ருய் நான்பிரமமாகின்றேன்என்றஇவைகளுக்கு விரோதம்வேண்டா நீநானென்னுஞ்சொற்களால் அஞ்ஞானியானஜீவனென்னுஞ்சமுசாரியும் அஃதென்றபிரமபதத்தாலசமுசாரியாய்முற்றுமுணர்ந்தவீச்சுரனுங்கூறப்படுகின்ருன், எங்ஙனமீசனேடுசீவனுக்கைக்கியங்கூடுமென்றுசங்கித்துக்கூறுகின்ருர்.

வேறு.

சொல்லியவிரண்டினாலுஞ்சுட்டிடப்பட்டுமேலா
வெல்லையில்பொருள்களானதியாவுக்குமுன்னேதோன்றி
நல்லதோரறிவாயுள்ளதியாதொன்றதென்னும்வார்த்தைக்
கெல்லையாம்பொருளுந்தானேயெனுமிதிலையமில்லை.

இ-ள். சொல்லியவிரண்டினாலும்- முன்சொல்லியநீநானென்னுமிரண்டுவாக்கியங்களாலும், மேலா - மேன்மையாக, சுட்டிடப்பட்டு - குறிக்கப்பட்டு, எல்லையில் - அளவற்ற, பொருள்களானதியாவுக்கும் - பொருள்களாகியவனைத்திற்கும், முன்னேதோன்றி-முன்னேவிளங்கி, நல்லதோரறிவாயுள்ளது - ஒப்பில்லாதநல்லபிரஞ்ஞானகனமாயுள்ளது, யாதொன்று - யாதொன்றுண்டோ, தானே - அதுவே, அதென்னும்வார்த்தைக்கு - தற்பதத்திற்கு, எல்லையாம்- முடிவாகிய, பொருளும்-இலக்கியப்பொருளும், எனுமிதிலையமில்லை - என்றுசொல்லுமிவ்வார்த்தையிலையமில்லை. எ-று.

கருத்து. சத்தியஞானானந்தமாகக்கூறிய அகண்டமாயும் அத்துவிதீயமாயும் ஏகமாயும் முதல்முடிவில்லாததாயும் உள்ளதேஉண்மையானவத்துவாகும், முக்குணங்களையுடையஅனாதியானபிரகிருதிதத்துவம் தத்துவஞானத்தால்நீங்குவதனால் அந்தமுள்ளதாய்மித்தையாய்க்கற்பிதமாதலால் வத்துத்தன்மையில்லாததாகும், அதுஇரண்டுபிரிவுடையதாகும் அவற்றுள் இராசததாமசகுணங்களில்லாதசுத்தசத்துவமாத்திரமாகியவொருபாகம் மாயையென்றுசொல்லப்படும், அவ்விரண்டுகுணங்களால் அவமானிக்கப்பட்ட மலினசத்துவமானமற்றொருபாகம்அவித்தையெனப்படும், அவற்றுள் மாயாசத்துவாங்கிசத்திற்பிரதிவிம்பித்தபரமான்மா அம்மாயையைத்தன்வசஞ்செய்தசருவக்கியசருவேசனென்றுசொல்லப்படுவான், அவித்தியாமலினசத்துவாங்கிசத்திற்பிரதிவிம்பித்தஅவ்வீசனே அவ்வவித்தையால்வசீகரிக்கப்பட்டு சுதந்தரமில்லாதவனாயும் பொக்தாவாயுஞ் சமுசாரியாயுமுள்ளஜீவனென்றுசொல்லப்படுவான், அந்தப்பரமான்மாவே தமப்பிரதானப்பிரகிருதியுபாதிகனாய் பூதபௌதிகப்பிரபஞ்ச விலக்கணமுடையபோக்கியரூபமாகவிருக்கின்றான், தமப்பிரதானப்பிரகிருதியுபாதிகனானதுபற்றிச் சகத்திற்குபாதானமாகவும் விசுத்தசத்துவப்பிரகிருதியுபாதியாற் சகத்திற்குநிமித்தமாகவும் அபின்னநிமித்தவுபாதானமாதலாற் சுருதியிற்சன்மாத்திரமாகவே இச்சகஞ்சிருட்டிக்குமுன்னிருந்ததென்றதில் அஃது பார்த்ததென்றவாக்கியத்தால் நிமித்தத்தன்மையும் பலவாகப்பவிப்போமென்றதனாற் காரியரூபமாகவிவர்த்திப்பதுபற்றி உபாதானத்தன்மையும்பிரசித்தம். அஃதிங்குபிரகிருதமாதலால் அதுநீயாகின்றாயென்றவாக்கியத்திற் பிரகிருதத்தைஆலோசியாநின்ற அஃதென்னுஞ்சத்தத்தாற்கூறப்படுகின்றது அவித்தியோபாதியுடையசகலசீவர்களும் முன்னிராநின்றசுவேதகேதுவைநிமித்தீகரித்து உத்தாலனென்னும்பிதாவினால் நீயென்னுஞ்சத்தத்தாற்கூறப்படுகின்றார்கள், அஃதுநீயென்றசத்தங்களின் வாச்சியப்பொருள்களாகிய மா

யாவித்தியோபாதியுடையசைதன்னியங்களுக்கு மிகவுமொன்றுக்கொன்றுவி லக்ஷணமுண்டாதல்பற்றித் தாதான்மியவிரோதமாதலால் அதுநீயென்றசத் தங்களால் மாயைஅவித்தைஇவைகளின்விபாகத்தை நீக்கி இரண்டிடத்துமி டைவிடாமலிருக்கின்றவேகமாகியசைதன்னியத்தைமாத்திர மிலக்ஷிப்பிக்கின்ற தென்றறிக. (ருச)

அ-கை. சிதங்கிசத்தில் தாதான்மியவிரோதமில்லாவிடினும் நீநானெ ன்றசத்தங்களுக்கு அஃதென்றபதத்தின்வாச்சியார்த்தத்தோடு தாதான்மிய விரோதமுளதென்னில் அவ்விரோதம்மெய்யெனினும் இவ்விடத்திற்சொல்லப் பட்டதல்லவென்று கூறுகின்றார்.

வேறு.

உடம்பாதிகளில்வேறாகிநீநானென்னுமுறையாலே
திடம்பாடாகச்சொலுமிந்தச்சித்தாயுள்ளபொருளிடையே
யடங்காததுவென்றிடும்வார்த்தைக்கருத்தமுடம்பதெனச்சுருதி
தொடர்ந்தேதத்தொமசியென்றேசொல்லுமாறின்றெனவுரைத்தான்

இ-ள். உடம்பாதிகளில்-தேகேந்திரியாதிகளில், வேறாகி - பின்னமாகி, நீநானென்னுமுறையாலே-நீநானென்கின்றவாக்கியங்களால், திடம்பாடாகச் சொலும் - உறுதிப்பாடாகச்சொல்லுகின்ற, இந்தச்சித்தாயுள்ளபொருளிடை யே-கேவலஞ்சைதன்னியமாகியவிந்தப்பொருளிடத்தே, அடங்காது- அடங் காமல், அதுவென்றிடும்வார்த்தைக்கு - அதுவென்னுஞ்சொல்லுக்கு, அருத்த முடம்பதென-பொருளுடம்பென்று, சுருதிதொடர்ந்தே - சுருதியானதுதொ டர்ந்து, தத்தொமசியென்றே-அதுநீயாகின்றாயென்று,சொல்லுமாறின்றெனர் தற்பதத்தினைக்கியத்தைச்சொல்லும்நெறியில்லையென்று, உரைத்தான் - செ ன்னான். எ - று.

கருத்து. இங்கு சுருதியாற்சமுசாரித்தன்மைக்குச்சருவக்கியத்தன்மை கூறப்படவில்லையென்றறிக. (ருரு)

அ-கை. நீயென்றசத்தத்தாற் சமுசாரித்துவமுதலியவைசொல்லப்பட வில்லையென்று கூறுகின்றார்.

வேறு.

தற்பதப்பொருளாயுள்ளவறிவொடேகூடுதற்கு
நிற்பதொன்றிலையாய்ச்சொல்லப்பட்டகாயாதிவிட்டு
மெய்ப்படத்துரியத்தோடேயேகனாய்வேறிலாத
சிற்பொருடனையேதத்தொமசியெனச்செப்புமன்றே.

இ-ள். தற்பதப்பொருளாயுள்ள - தற்பதத்தினருத்தமான, அறிவொ டே-ஞானத்தினுடன், கூடுதற்கு - பொருந்துவதற்கு, நிற்பதொன்றிலையாய் - நிலையாய்நிற்பதொன்றுமில்லாததாக, சொல்லப்பட்ட- கூறப்பட்ட, காயாதி

விட்டு - தேகாதிகளைவிடுத்து, மெய்ப்பட - உண்மையாக, துரியத்தோடே - சேஷித்ததுரியத்தினேடு, ஏகனய்-அத்துவிதனய், வேறிலாத- தனக்குப்பின்னமில்லாத, சிற்பொருடனேயே - சிற்சுபாவத்தையே, தத்தொமசியென - தத்துவமசியென்று, செப்பும் - தற்பதத்தில் தொம்பதவைககியத்தைச்சுருதியானதுசொல்லுகின்றது. எ - று.

கருத்து. சமானமாகக்கூறப்பட்டமறுபதங்களுக்குச் சமானுதிகரணத்தன்மையில்வரும்விரோதமேவிவக்ஷிக்காமைக்குக்காரணமென்றறிக. (ருசு)

அ - கை. நீநானென்றசத்தார்த்தத்திற்கூறப்பட்டபொருளை அஃதென்றசத்தத்தின்பொருளிலும் இசையக்கூறுகின்றூர்.

வேறு.

அதுவென்றுரைசெய்பொருளாமதிலும்நீயென்றுரைசெய்பொருளாமிதிலும், மதிபண்ணிடவேறதுவாகியிடுமறிவாதியகாரணமன்றியிலே, யெதுவொன்றுமிலாதவையாவையுமாமிதுவென்றிடுகேவலசித்தினேயே, யதுநீயெனும்வாய்மொழியாமதனலறியும்படிசொன்னதிவ்வாரணமே.

இ-ள். அதுவென்றுரைசெய்பொருளாமதிலும்-அதுவென்றுசொல்லும்பதத்தினதுபொருளிலும், நீயென்றுரைசெய்பொருளாமிதிலும் - நீயென்றுசொலலும் பதப்பொருளிடத்தும், மதிபண்ணிட - கருதுங்கால், வேறதுவாகியிடும்-பின்னமாயிராநின்ற, அறிவாதிய- சருவக்கியத்துவமுதலிய, காரணமான்றியில்-காரணத்தையல்லாமல், எதுவொன்றுமிலாது-யாதொருதிரிசியப்பொருளுமில்லாமல், அவையாவையுமாம்- அந்தத்திரிசியப்பொருளனைத்துமாகிய, இதுவென்றிடு-இதுவென்றபரோக்ஷீகரிக்கின்ற, கேவலசித்தினேயே-திரிபுடியில்லாதசிற்சொருபத்தையே, அது நீயெனும்வாய்மொழியாமதனல்-அது நீயென்னும் வாக்கியத்தினல், இவ்வாரணம்-இந்தவேதம், அறியும்படிசொன்னது-உணரும்படிபுகன்றது. எ-று.

கருத்து. அதுவென்றபதத்தின் வாச்சியப்பொருளாகிய ஜகத்தின்காரணத்தன்மை சருவக்கியத்தன்மை இவைமுதலானவற்றினேடும் விருத்தமாகி விசேடணமாயிருக்கின்ற நீயென்னும்பதத்தின்வாச்சியமான சமுசாரித்தன்மைமுதலியன எப்படிவிவக்ஷிக்கவில்லையோ அப்படியே நீயென்னும்பதவாச்சியமான சமுசாரித்தன்மையோடு விருத்தமாகிய அஃதென்னும்பதத்தின் வாச்சியமானசகத்தின்காரணத்தன்மை சருவக்கியத்தன்மை இவைமுதலியனவும்விவக்ஷிக்கப்படவில்லை. விருத்தமான அவைகளை நீக்கி விசேடியமாகிய சின்மாத்திரத்தை லக்ஷியப்படுத்தி நீயென்றதின்பொருளோடும் ஐக்கியத்தைச்சுருதிகூறுகின்றதென்றுணர்க. (ருள)

அ- கை. விருத்தாங்கிசத்தைப்பரிகரிக்குங்காற் பெறப்படும் வாக்கியத்தின்பொருளைக்கூறுகின்றூர்.

வேறு.

தத்துவமென்றவார்த்தையிரண்டுக்கும்பொருளதாகிச்
சித்துமெய்யாகிநின்றதிகழ்பரமொன்றுந்தன்மை
தற்பரந்தன்னினாலேசித்திக்குமென்பதேயிங்
கப்படிவாக்கியத்தினருத்தமேயாகுமன்றே.

இ-ள். தத்துவமென்றவார்த்தையிரண்டுக்கும் - அதுநீயென்னுமிரண்டுசொற்களுக்கும், பொருளதாகி - பொருளாயும், சித்துமெய்யாகிநின்ற - சித்ருவாயும்நின்ற, திகழ்பரம்-பிரகாசிக்கும்பரமான்மா, ஒன்றுந்தன்மை- ஏகமாகியசுபாவம், தற்பரந்தன்னினாலே - தானானசுபாவத்தினால், சித்திக்குமென்பதே - நிலைக்குமென்பதுவே, இங்கு - இவ்விடத்தில், அப்படி - அவ்வண்ணம், வாக்கியத்தின் - வாக்கியத்தினது, அருத்தமேயாகும் - பொருளாகும். எ-று.

கருத்து. அதுநீயென்றசத்தங்களுக்குச் சகலவுபாதிகளுமற்றசின்மாத்திரமானலக்ஷியப்பொருள் பரமான்மாவே. ஞானமாயுமானந்தமாயுமுள்ளது பிரமமென்றசுருதியினால் அதற்குமூன்றுவிதபரிச்சேதமுமில்லாததனால் எது இயல்பாகவேயுள்ளஏகத்தன்மையோ அவ்வபேதமே இவ்விடத்தில் அதுநீயாகின்றாயென்னும்வாக்கியத்தாற்கூறப்படுகின்றதேயன்றிச் சீவன்பிரமமிவைகளில் ஒன்றேடுமற்றொன்றிற்கு முன்னில்லாதஏகத்தன்மைபோதிக்கவில்லையென்றறிக. (ருஅ)

அ-கை. இரதசம்பந்தத்தாற் செம்புதங்கமாவதுபோல் பரமார்த்தமாகப்பின்னாய்ஸம்ஸாரியானஜீவனுக்கே ஈசனதுஅனுக்கிரகத்தால் தாதான்மியங்கூடுவதனாலத்தாதான்மியம்ஏனைப்பக்கூடாதென்றுசங்கித்துக்கூறுகின்றார்

இப்படியன்றிவேறாயிருந்துளபொருடானியாதொன்
றப்பொருள்வாக்கியத்தினருத்தமன்றாகுமொன்றா
மெய்ப்படுபொருளின்ஞானமுளதாகாவாக்கியத்தாற்
செப்பிடும்வார்த்தைதன்னிலறிவின்மைசிதைத்தல்செய்யும்.

இ-ள். இப்படியன்றி - இவ்வாறன்றி, வேறாயிருந்துள - பின்னமாகவிராநின்ற, பொருடானியாதொன்று - யாதொருபொருளுண்டோ, அப்பொருள் - அந்தப்பொருளானது, வாக்கியத்தினருத்தமன்றாகும் - வாக்கியார்த்தமாகாது, வாக்கியத்தால் - (அந்த) வாக்கியத்தினால், ஒன்றாம் - ஏகமாகிய, மெய்ப்படுபொருளின்ஞானம் - உண்மைப்பொருளினுணர்வு, உளதாகா - இல்லை,(அவ்வாக்கியமானஅவித்தையால்) செப்பிடும்வார்த்தைதன்னில்-சொல்லும்விவகாரத்திலிருக்கின்ற, அறிவின்மைசிதைத்தல்செய்யும் - அஞ்ஞானத்தைநாசஞ்செய்யும். எ-று.

ப-ம். விசேஷணவிசேஷியரூபமாயாவது சம்பந்தரூபமாயாவது ஜீவப்பிரமங்களுக்கு ஐக்கியஞ்சொல்லுவது வாக்கியத்தின்பொருளாகாது. உண்

மையாகவேபின்னங்களாயின் அவைகளினன்னியோன்னியாபாவத்திற்கு ஆதியந்தமில்லாததுபற்றித் தாதான்மியங்கூடாததனுலென்பார், "இப்படியன்றிவேருயிருந்துளபொருடானியாதொன் றப்பொருள்வாக்கியத்தினருத்தமன்ருகும்" எனவும், சுயம்பிரகாசப்பிரமத்தின்சொரூபமான ஏகத்தன்மையும் இவ்விதமென்றுவாக்கியத்தாற்போதிக்கப்படில் சுயம்பிரகாசத்தன்மைகுன்றுமெனில் வாக்கியம் ஏகத்தன்மைக்குவிடயமாகிய ஞானத்தையுண்டாகச் செய்யவில்லை, செய்யாமையால் வாக்கியம்பிரயோசனமில்லாததாமெனில் தன்னுலுண்டாகும்பிரமான்மவிடயமானமனேவிருத்தியால் அஞ்ஞானம்நீங்குதலின் வாக்கியம்பிரயோசனமுடையதென்பார், "ஒன்ருமெய்ப்படுபொருளின்ஞானமுளதாகாவாக்கியத்தாற் செப்பிடும்வார்த்தைதன்னிலறிவின்மைசிதைத்தல்செய்யும்" எனவுங்கூறினர். (ருக)

அ - கை. ஏகத்துவஞானத்தில் வாக்கியத்திற்குவியாபாரமில்லாவிடில் பிரமாணத்திற்கு விஷயமாகாததனுல் நரவிஷாணம்போல் அது அசத்தாகுமென்று சங்கித்துக்கூறுகின்ருர்.

வேறு.

அறியாமையினையழிவித்துக்கொண்டேயிந்தவாக்கியந்தான்
பிறியாதொன்ருமறிவினையுண்டாக்காதென்றுபேசுங்காற்
செறிவாயுண்மையுருவாகுஞ்சித்தினெளியைத்தவிர்த்துண்டா
மறியாமையதொன்றெனவில்லையாகுமுண்மையுறியுங்கால்.

இ - ள். இந்தவாக்கியந்தான்- இந்தவாக்கியமானது, அறியாமையினை- அஞ்ஞானத்தை, அழிவித்துக்கொண்டே - நாசஞ்செய்வித்துக்கொண்டு, பிறியாது-வேறுபாடின்றி, ஒன்ருமறிவினை-ஏகமாகியஞானத்தை,உண்டாக்காதென்று-உண்டுபண்ணுதென்று, பேசுங்கால் -சொல்லுங்கால், செறிவாய்- (எங்கும்) நிறைந்ததாகி, உண்மையுருவாகும் - சத்தியசொரூபமாகிய, சித்தினெளியைத்தவிர்த்து-சிற்பிரகாசத்தையன்றி, உண்டாம் -உண்டாகின்ற, அறியாமையது-அஞ்ஞானமானது,ஒன்றென-ஒருபொருளென்பதற்கு,உண்மையறியுங்கால்- உண்மையை யாலோசிக்குமிடத்தில், இல்லையாகும்-இன்ரும். எ-று.

கருத்து. அன்னியவஸ்துவாற்பிரகாசமுறும் வஸ்துவுக்கேபிரமாணத்திற்கவிஷயநிமித்தத்தால்அசத்தின்றன்மையுள்ளதாகும். ஏகத்துவஞானமோவெனில் சுயம்பிரகாசசித்திற்குவேருகவில்லாததனுல் எப்பொழுதும்பிரகாசிக்கின்றதாதலின் முற்கூறியதூஷணமில்லாததாகும். ஆதலால் வாக்கியம் ஆவரணஞ்ஞானநிவர்த்தியிலுபயோகமேயன்றி சொரூபப்பிரகாசத்திலின்றென்றுணர்க. (சுo)

அ - கை. அஞ்ஞானம் அசத்தாயின் நிவிர்த்திகூடாது. பிரமத்திற்கபேதமாயின் அதற்கும் நிவிர்த்திசொல்லப்படுமாதலாற் பிரமபின்னமாகஅஞ்ஞா

ன்மென்னும் வஸ்து அங்கிகரிக்கவேண்டும். அங்ஙனமாயின் துவிதமாய் விடு மென்றுசங்கித்துக் கூறுகின்றார்.

நோக்குமிடத்துவாக்கியத்தானுண்ணிதாயபரத்தொளியை
நீக்கிநிற்குமறியாமையென்பதில்லையாதலினு
லாக்கமில்லாவறிவின்மையழிப்பதென்றுங்கூடாது
தாக்கதின்றியொன்றாதறன்னாற்கூடுந்தன்மையதே.

இ - ள். வாக்கியத்தால் - வாக்கியத்தினால், நோக்குமிடத்து - ஆலோசிக்குமிடத்தில், நுண்ணிதாய - நுட்பமாகிய, பரத்தொளியை - ஞானப்பிரகாசத்தை, நீக்கிநிற்கும் - ஒழித்துநிற்கின்ற, அறியாமையென்பது - அஞ்ஞானமென்பது, இல்லை - இன்றாகும், ஆதலினால் - ஆகையால், ஆக்கமில்லாவறிவின்மை - உண்டாகாதஅஞ்ஞானத்தை, அழிப்பது என்றுங்கூடாது-நீக்குவதெக்காலத்தும்பொருந்தாது, தாக்கதின்றி - விரோதமின்றி, ஒன்றாதல் - ஏகத்தன்மையாதல், தன்னாற்கூடுந்தன்மையதே - தானாகவேபொருந்துந்தன்மையுடையது. எ - று.

கருத்து. பிரகாசவிரோதியான இருள்போல் சிற்பிரகாசவிரோதியான அஞ்ஞானத்திற்குச் சொரூபமில்லாததனால் பரமார்த்தமாயில்லை. சிற்சொரூபத்தில் முந்திய ஸம்ஸ்காரவசத்தால் அத்தியாசிக்கப்பட்டு வித்தையால்நிவிர்த்திக்கப்படுகின்றமையின் விவகாரதிருஷ்டியால் வாக்கியம் அஞ்ஞானத்தை நீக்குமென்றுணர்க. (சுக)

அ-கை. கடபடாதிவிஷயகமான மற்றையவிருத்திகள்போல் தனதஞ்ஞானத்தை நிவிர்த்திசெய்விக்கின்ற வாக்கியத்தாலுண்டாம் பிரமான்மவிஷயமான அந்தக்கரணவிருத்தி யாது அதற்குத்தனதுவிஷயமானபிரகாசமேன் கூடாதென்று சங்கித்துக்கூறுகின்றார்.

பிரமாணங்களானவைதான்பேதமில்லாதொருபொருளைத்
திரமாயிதுவென்றிடமாட்டாசெல்லாதாமிங்காதலினு
லுரைமாத்திரமாயியாவையினுமுளவஞ்ஞானமதுதானும்
பரமாமொளியேயாகியிடும்பார்க்கிலுண்மைப்பரிசிதுவே.

இ - ள். பிரமாணங்களானவைதான்-எல்லாப்பிரமாணங்களும், பேதமில்லாதொருபொருளை - பேதமில்லாமல் ஒப்பற்றபிரமத்தை, திரமாயிதுவென்றிடமாட்டா - உறுதியாகஇதுவென்றுகுறிக்கமாட்டாவாம், (ஏனெனில்), செல்லாதாமிங்கு - இந்தச்சொருபத்தினிடத்திற்செல்லாதாகும், ஆதலினால்-ஆதலால், உரைமாத்திரமாய் - வாசகமாத்திரமாய், யாவையினுமுள - அனைத்தினுமுள்ள, அஞ்ஞானமதுதானும் - அஞ்ஞானமென்பதூஉம், பரமாமொளியே யாகியிடும் - பரமாகிய இந்தவஸ்துமாத்திரமாகவேயாகும், பார்க்கில்-நோக்குங்கால், உண்மைப்பரிசிதுவே - உண்மையானதன்மையிதுவே. எ-று

கருத்து. சூரியப்பிரகாசத்தில் தீபப்பிரகாசம்போல் சாக்ஷியாற்பிரகாசிக்கத்தக்க பிரமாணங்கள் சொப்பிரகாசசிதான்மாவினிடத்து சத்தியில்லாதனவாமெனவும், சுத்தியிலத்தியாசிக்கப்பட்ட வெள்ளிபோல் வாக்கியத்தாலுண்டாகிய வித்தையால் நிவர்த்திக்கத்தக்கவஞ்ஞானமும் பிரமத்திலத்தியாசிக்கப்பட்டது பற்றிப் பிரமமேயாதலால் விவகாரத்தினும் அஞ்ஞானம் இன்றெனவுமறிக. (சூஉ)

அ-கை. விவகாரபலத்தால் அஞ்ஞானத்துக்குச் சற்பாவமேனங்கீகரிக்கக்கூடாதென்று சங்கித்துக்கூறுகின்றார்.

வேறு.

அறியாமையென்றுவேறாமதுதானுமறிவினுண்மை
பிறியாதுநுண்மைகாணுமளவினிலுளதுசத்தே
யறியாமைசத்தசத்தேயாகியவிரண்டின்மேலா
மறிவானத்தோன்றலுனுமறிவினதொளியேயாமால்.

இ-ள். நுண்மைகாணுமளவினில்-சூக்ஷுமமாய்ப்பார்க்குங்காலத்தில், அறியாமையென்று-அஞ்ஞானமென்று, வேறாமதுதானும் - வேறாகப்பொருந்துகின்றவதுவும், அறிவினுண்மைபிறியாது - அறிவினுண்மைக்குவேறாகாது, உளதுசத்தே-சத்தேயழிவற்றிருக்கின்றது, அறியாமை - அஞ்ஞானமானது, சத்தசத்தேயாகியவிரண்டின்-சதசத்தாகியவிரண்டிற்கும், மேலாம்-அப்புறப்பட்டதாகுமென்னில், அறிவானத்தோன்றல்தானும்-உணர்வினுலர்ந்தவிளங்குதலும், அறிவினதொளியேயாம்-பிரமத்தின்விளங்குதலேயாகும். எ-று.

கருத்து. சத்தரூபமானவஸ்துவுக்கேசற்பாவமன்றிச் சத்துக்குவேறானவஸ்துவுக்குச் சற்பாவமில்லையெனவும், கடமிருக்கின்றதுபடமிருக்கின்றதென்றுசற்பாவமனுபவிக்கப்படுகின்றதெனில் அதிஷ்டானத்திலுள்ளசத்துவமே ஆரோபிக்கப்படுபொருளில் தோற்றுகின்றதெனவும், தோற்றமும்அழிவும்மற்றொன்றாற் கூடாததனாற் சதசத்துவிலக்ஷணமாகவஞ்ஞானம் ஒப்பத்தக்கதெனில அந்தவிவகாரமும் அந்தவந்தத்தன்மையைநிரூபித்திடினதனைப்பெருமையாலாமன்றி அப்படிப்பொருளுண்டென்பதின்றெனவும், இத்தன்மைத்து இப்பொருள்என்றுவிளங்கிடினன்றோ அது சதசத்விலக்ஷணமென்னும்விவகாரங்கூடும் விளங்காவிடில் கூடாது, அஞ்ஞானமில்லாதகேவலம்பிரமமேவிளங்குகின்றது. அஞ்ஞானத்திற்கு விளக்கமில்லையெனவுங்கொள்க. (சூங)

அ-கை. அஞ்ஞானத்திற்குச்சுயம்விளக்கம்வேண்டா பானரூபப்பிரமசம்பந்தவசத்தாலஞ்ஞானம் ஏன்விளங்காதென்றுசங்கித்துக்கூறுகின்றார்.

தோன்றுகூட்டரவினூலேதோற்றிடும் பொருள்கட்கெல்லா
மூன்றிடுமுண்மையுண்டேலதுவுள்ளபரமேயாகுந்
தோன்றுவதுளதுபாராதொழியில்வேறுண்மையென்னிற்
றோன்றியவுருவுமுண்டாய்த்தோன்றலாற்பரமேயன்றே.

இ-ள். தோன்று- விளங்காநின்ற, கூட்டரவினாலே - (கூடஸ்தனது) சம்பந்தத்தினாலே, தோன்றிடும்பொருள்கட்கெல்லாம்-பிரதிதியாகியவஞ்ஞானத்திற்கும் அதன்காரியமானவெல்லாப்பொருள்களுக்கும், ஊன்றிடும்-நிலைப்படுத்துகின்ற, உண்மையுண்டேல்- சற்பாவவிளக்கமுண்டானால், அதுஉள்ள பரமேயாகும்- அந்தஉண்மையுஞ் சத்தாயுள்ள பிரமமேயாகும்,தோன்றுவது ளது - விளங்குகின்றதேயிருக்கின்றதாதலால், பாராதொழியில் - விசாரித்துப்பாராவிடில், வேறுஉண்மையென்னில்-ஆரோபிதசற்பாவமுண்டென்றால், தோன்றியவுருவும் - அப்படித்தோன்றியரூபமும், உண்டாய்த்தோன்றலால் - உண்டாகிவிளங்குவதனால், பரமே - பிரமசொரூபமே. எ - று.

ப-ம். சம்பந்தமானது இரண்டுசம்பந்தியை யபேக்ஷித்தலாற் பிரமம்போல் அஞ்ஞானமுஞ்சொரூபசற்பாவமுடையதென்று அவசியமங்கீகரிக்கத்தக்கது. அச்சற்பாவமும்அதிஷ்டானப்பிரமத்துள்ளதாதலால்அந்தஸத்தையன்றி அதற்கன்னியமாயஞ்ஞானமென்பதில்லாமையால் இரண்டுசம்பந்திகளில்லாததனாற் சம்பந்தமென்பது நிரூபிக்கத்தகாதென்பார், "தோன்றுகூட்டரவினாலேதோற்றிடும்பொருள்கட்கெல்லா மூன்றிடுமுண்மையுண்டேலதுவுள்ளபரமேயாகும்" எனவும், பிரமம்போலஞ்ஞானத்திற்குப்பரமார்த்தசற்பாவமின்றெனினும் ஆரோபிதசற்பாவமுண்மையினால் சம்பந்தமென்கூடாதெனில் விசாரிக்காதவளவில் அழகியசொரூபமுடைய அத்தியாசிக்கப்பட்டஅஞ்ஞானம் அதன்காரியமிவற்றிற்கு அதிஷ்டானப்பிரமமேசொரூபமன்றி வேறுசொந்தமாய்ச்சொரூபமில்லையென்பார், "பாராதொழியில்வேறுண்மையென்னிற் றோன்றியவுருவுமுண்டாய்த்தோன்றலாற்பரமே" எனவுங்கூறினார்.()

அ-கை. பிரமத்திற்கே உருவம் மற்றையதற்கில்லையென்று கூறுகின்றார்.

உருவமாயொளிர்வதுள்ளபிரமமேவேறொன்றில்லை
யுருவமாயுண்மையின்மையாதலின்வேறினுக்கு
முருவமுண்டென்றுசொல்லப்பார்த்திடில்வேறொன்றாய
வுருவத்தாற்றோன்றுரூபமுண்மையிற்பரமேயாகும்.

இ-ள். உருவமாய் - உருவமாகி, ஒளிர்வது - பிரகாசிப்பது, உள்ள பிரமமே - சத்தாயுள்ளபிரமசொரூபமேயாகும், வேறொன்றில்லை -மற்றொன்றில்லை, உருவமாய் - உருவமாக, உண்மை - இருக்குந்தன்மை, இன்மையாதலில் - இல்லாமையால், வேறினுக்கும்-இதரவஸ்துவுக்கும், உருவமுண்டென்று - ரூபமுண்டென்று, சொல்லப்பார்த்திடில் - சொல்லஆலோசித்தால், வேறொன்றாய - இதரமாகிய, உருவத்தாற்றோன்றுரூபம்-உருவத்தினாற்றோன்றுகின்றரூபமானது, உண்மையில் - மெய்ம்மையில், பரமேயாகும்- பிரமமேயாகும். எ - று.

கருத்து. நிரூபிக்கத்தக்கரூபம் பிரமபின்னவஸ்துவுக்குளதேல் அந்தரூபமும்பிரமரூபமே இரண்டிற்கும் ரூபமொன்றாகிப்பேதமில்லாமையினென்க.()

அ-கை. இவ்வாறுருபமாத்திரத்தாற்றானேபேதஞ்சித்தியாவிடிற் பிரமரூபத்துக்குவேறானரூபத்தால் அஞ்ஞானத்துக்குமுருவமுண்டென்றசங்கையைக்கண்டிக்கவேண்டி மூன்றுவிதமாய்விகற்பித்துக்கூறுகின்றார்.

அன்னியத்தினுக்குச்சொன்னவுருவுவேறுருவினாலா
மென்னிலப்பரந்தானன்றாமெனுமுருவந்தான்றானே
யுன்னியபரத்தினோடுபின்னமோவபின்னமாயோ
சொன்னவிவ்விரண்டுங்கூடியுள்ளதோசொல்லுமென்றான்.

இ-ள். அன்னியத்தினுக்கு - இதரவஸ்துவுக்கு, 'சொன்னவுருவு-சொன்னரூபமானது, வேறுருவினாலாமென்னில் - வேறுருவத்தாலாகுமென்றால், அப்பரந்தான் அன்றாமெனுமுருவம் - அந்தப்பிரமரூபம்அல்லவென்னுமுருவமானது, தான்றானேயுன்னிய - தான்மாத்திரமாய்க்கருதிய, பரத்தினோடு- பிரமத்தினுடன், பின்னமோ - பின்னமாகவோ, அபின்னமாயோ - அபின்னமாகவோ, சொன்ன - சொல்லிய, இவ்விரண்டுங்கூடியுள்ளதோ- இந்தஇரண்டுங்கூடியுள்ளபின்னாபின்னமாகவோ, சொல்லுமென்றான்-சொல்லுங்களென்றான். எ-று. (௬௬)

அ-கை. விகற்பித்தஅம்மூன்றிற்குந்தூஷணங்கூறுகின்றார்.

பின்னமென்றுரைக்கிலந்தவுருவின்வேறாகையாலே
சொன்னதுமருவேயாகுந்தற்பதஞ்சொல்லுங்காலை
பின்னமன்றென்னிற்றானேயாயிடும்பின்னாபின்ன
மென்னின்முன்சொன்னகுற்றமிரண்டும்வந்திசையுமென்க.

இ-ள். பின்னமென்றுரைக்கில் - பின்னமென்றுசொல்லில், அந்தவுருவின் - அந்தரூபத்தைக்காட்டிலும், வேறாகையாலே- வேறாதலாலே, சொன்னதும் - (இங்ஙனஞ்) சொல்லியதும், அருவேயாகும்- உருவமில்லாததாகும், சொல்லுங்காலை - சொல்லுங்காலத்தில், பின்னமன்றென்னில் - அபின்னமென்னில், தற்பதம் - தற்பதமாகிய, தானேயாயிடும் - அந்தரூபமாகவேயாகிவிடும், பின்னாபின்னமென்னில் - பின்னாபின்னமென்றுசொல்லில், முன்சொன்ன - முற்கூறிய, குற்றமிரண்டும் - இரண்டுகுற்றமும், வந்திசையுமென்க - வந்துபொருந்துமென்றுஅறிக. எ-று.

"சொன்னதமருவே" யென்றமையால், நிரூபிக்கயோக்கியமானபிரமசொரூபத்திற்குப் பின்னமாதலால் நரசிருங்கம் ஒக்குமெனவும், "தானேயாயிடும்" என்றமையால், அஞ்ஞானத்திற்கு வேறானசொரூபலாபமில்லையெனவும்பெறப்பட்டது. (௬௭)

அ-கை. அநிரூபிதரூபமாகச்சற்பாவம்யாதொன்று பிரதிக்கினைசெய்யப்பட்டதோ அஃது இந்தப்பிரகாரத்தால் வாக்குமாத்திரந்தானென்றுகூறுகின்றார்.

பாராதபடியினாலேபரத்தினில்வேறதாக
நேராயொன்ருகித்தோன்றுநெறிசொலில்வார்த்தையேயா
மேராயோர்பயனுமில்லஞ்ஞானமுமெக்காலத்தும்
பேராதுவிளங்குகின்றபிரமமேபிறிதொன்றில்லை.

இ-ள். பாராதபடியினாலே - சிந்தித்துப்பாராததன்மையினாலே, பரத்தினில் - பிரமத்தினின்றும், வேறதாக - வேற்றுமையாக, நேராயொன்ருகி- நேர்மையான ஒருபொருளாகி, தோன்றுநெறி - விளங்குகின்றமார்க்கமும், சொலில்- நிரூபிக்குங்கால், வார்த்தையேயாம்-சொல்லளவேயாகும், ஏராய்- அழகாக, ஓர்பயனும் - ஒருபிரயோசனமும், இல் - இல்லாத, அஞ்ஞானமும் - அறியாமையும், எக்காலத்தும் - எப்பொழுதும், பேராதுவிளங்குகின்ற - நீங்காமல்விளங்குகின்ற, பிரமமே - பிரமமேயாகும், பிறிதொன்றில்லை - (அதைத்தவிர) அஞ்ஞானமென்று ஒருவஸ்து இல்லை. எ - று. (சுஅ)

அ- கை. அஞ்ஞானத்திற்குச்சொந்தமாகப் பானலாபமில்லாததனுல் வியாவகாரிக அஞ்ஞானமும் பிரமமேதானென்று யாதொன்று பிரதிக்ஞை செய்யப்பட்டதோ அதுவேஉறுதியென்றுகூறுகின்ருர்.

எல்லாமஞ்ஞானத்தாலே தோன்றிடுமென்றருனு
மில்லாதோவென்னில்வேருயறிவின்மையிலாமையாலே
யில்லாவஞ்ஞானமத்தின்காரியமிரண்டுமூன
மில்லாதபிரமந்தானேயெனுமிதென்னறிவேயென்ருன்.

இ-ள். எல்லாம் - யாவும், அஞ்ஞானத்தாலே - அஞ்ஞானத்தினுலே, தோன்றிடுமென்றருனும் - தோன்றிடுமென்று சொல்லுதலும், இல்லாதோ வென்னில் - இல்லையோவென்ருல், வேருய் - வேருக, அறிவின்மை - அஞ்ஞானமானது, இலாமையாலே- இல்லாததனுல், இல்லாஅஞ்ஞானம்-இல்லாத அஞ்ஞானம், அத்தின்காரியம் - அந்தஅஞ்ஞானத்தின்காரியமான ஜகம், இரண்டும் - இவ்விரண்டும், ஊனமில்லாத - அழிவில்லாத, பிரமந்தானேயெனுமிது - பிரமமேயென்னுமிந்தத்தாற்பரியமே, என்னறிவென்ருன் - என்கருத்தென்ருன். எ - று. (சுக)

அ- கை. இந்தச்சகலஜகமும் அஞ்ஞானகாரியமென்ற வசனமுங்கேவலஞ்சத்தமாத்திரந்தான் அதற்குப்பொருளில்லை அதிஷ்டானபரமசிவசொருபத்திற்கு வேருகவஞ்ஞானம் நிரூபிக்கத்தகாததனுல் அஞ்ஞனமும்அஞ்ஞானகாரியமனைத்தும் பிரமசொருபமே வேறில்லையென்றவிஷயத்திற் சுருதியைஅனுவதித்துக் கூறுகின்ருர்.

இப்படியெல்லாமாகியிருந்ததேபரமேயென்ன
மெய்ப்படியேயாயுள்ளசுருதிதான் விளங்கச்சொன்ன

அப்பொருடற்பாவத்தாலாவதேயென்றுகொண்டு
செப்பிடுஞ்சுரர்கட்கெல்லாந்திகழொளிமலரின்மேலோன்.

இ - ள். இப்படி - இவ்வண்ணம், எல்லாமாகியிருந்ததே-அனைத்துமாகியிருந்ததுவே, பரமேயென்ன-பிரமசொருபமென்று யாருஞ்சொல்ல, மெய்ப்படியேயாயுள்ள - உண்மைநிலையாகவேயிருக்கின்ற, சுருதிதான் - வேதங்கள், விளங்கச்சொன்ன - தெளியவுரைத்த, அப்பொருள்-அந்தப்பொருள், தற்பாவத்தால் - தன்சுபாவத்தினால், ஆவதேயென்றுகொண்டு-ஆகின்றதென்றபிப்பிராயங்கொண்டு, சுரர்கட்கெல்லாம் - தேவர்கட்கெல்லாம், திகழொளிமலரின்மேலோன் - பிரகாசியாநின்ற தாமரைப்பூவிலெழுந்தருளியிருக்கின்ற பிரமதேவன், செப்பிடும் - சொல்வான். எ - று. (எ0)

அ - கை. கிரியாகாரகபலரூபமானபிரபஞ்சத்தினதுபேதத்தையுஞ்சுருதியேபிரதிபாதிக்கின்றது. ஆன்மாவினிடத்தினின்றும் ஆகாயமுண்டாயிற்று சோதிஷ்டோமத்தால் சுவர்க்கவிச்சையுடையோன் யஜிக்கத்தக்கது என்றது முதலியவை. இவ்வாறாயின் அனைத்தும்பிரமசொருபமென்றல் பொருந்ாதென்றுசங்கித்துக்கூறுகின்றார்.

கேட்பவனுடையசித்தம்பரிபாகமிலாதேகொண்டு
மீட்சியாய்வசமதின்றிவேதமோரிடத்திலோர்காற்
காட்சியதுளதுபோலப்பரத்தினையொழிந்துவேறு
மாட்சியிலொன்றுண்டாகவகுத்துரைசெய்ததன்றே.

இ - ள். கேட்பவனுடையசித்தம் - சிரவணம்பண்ணுகின்றவனுடையசித்தமானது, பரிபாகமிலாதேகொண்டு -பரிபாகமில்லாததுகொண்டு, வேதம்-வேதமானது,மீட்சியாய்வசமதின்றி-தன்வசமில்லாமல்த்திரும்பி,ஓரிடத்தில்-ஒருஇடத்தில், ஓர்கால் - ஒருகாலத்தில், அப்பரத்தினையொழிந்து- அந்தப்பிரமத்தைத்தவிர்த்து, காட்சியதுளதுபோல- திரிசியமானசகமிருக்கின்றதுபோல, வேறு - வேறான, மாட்சியில் - பெருமையில்லாத, ஒன்றுண்டாக - ஒரெண்ணமுண்டாக, வகுத்து - பகுத்து, உரைசெய்தது- சொல்லியது. எ-று. ()

வேறு.

இத்தாலித்தைச்சாதிப்பதென்றறீர்த்தமாடென்ற
லொத்தொவ்வாதுவேறுபடத்தோன்றுமுலகமென்றுரைத்தல்
வைத்தேபாவபுண்ணியமும்வன்னச்சிரமங்களுமிவற்றோ
டொத்தேநின்றோர்சரிதைகளுமுரைக்கும்வேறுமுள்ளனவும்.

இ - ள். இத்தால் - இந்தச்சாதனத்தினால், இத்தைச்சாதிப்பதென்றல்-இதனைச்சாதிப்பதென்பதும், தீர்த்தமாடென்றல் - தீர்த்தங்களில்முழுகென்பதும், ஒத்தொவ்வாது - ஒருதன்மையாகப்பொருந்தாமல், வேறுபடத்தோன்றுமுலகமென்றுரைத்தல்- உலகங்கள்பலவிசித்திரங்களாகத்தோன்றுமென்று

ரைப்பதும், வைத்தே - நிலைபெறவைத்தே, பாவபுண்ணியமும்-பாவபுண்ணியங்களும், வன்னாச்சிரமங்களும்-வருணாச்சிரமங்களும், இவற்றோடு - இவைகளோடு, ஒத்தேநின்றோர்சரிதைகளும்- பொருந்திநின்றவர்களது சரித்திரங்களும், உரைக்கும்வேறுமுள்ளனவும்-கூறுகின்றமற்றுமுள்ளவனைத்தும். எ-று.

வேறு.

சுகமொடுதுக்கம்பூதம்பௌதிகமிதுவேயென்றல்
சகமுடைத்தாயசத்தைவேறென்றதகைமைதானு
மகமறிவென்றுநின்றவறிவினில்வேறியாவுந்
தகவுளவுண்மையென்றேசாற்றிடுந்தன்மைதானும்.

இ-ள். சுகமொடுதுக்கம்- இன்பத்தோடுதுன்பம், பூதம்பௌதிகம்-பூதங்கள்பௌதிகங்கள், இதுவேயென்றல் - இதுவேயென்பதும், சகமுடைத்தாயசத்தை - உலகத்தையுடையதாகியசத்தையை, வேறென்றதகைமைதானும் - வேறெனக்கூறுநின்றபண்பும், அகம் - அகம்பதமான, அறிவென்றுநின்ற-ஞானமென்றுநிற்கின்ற, அறிவினில் - கூடஸ்தனிடத்தில், வேறியாவும் - வேறாகத்தோன்றப்பட்டவனைத்தும், தகவுளவுண்மையென்று - பெருமையுடைய உண்மைப்பொருளென்று, சாற்றிடுந்தன்மைதானும் -சொல்லுகின்றதன்மையும். எ-று. (௭௫)

வேறு.

எல்லாம்பொய்யேயென்பதுவுமாயைக்குண்மையியம்புவது
மில்லாமாயையிதனாலேயியலும்பந்தம்விடுகளு
மெல்லாமாகுங்குருமதமுமிவனையடைவோன்றன்மதமுஞ்
சொல்லாலளப்பிலாவிச்சையிருக்கும்படிசொல்லுகைதானும்.

இ-ள். எல்லாம்பொய்யேயென்பதுவும் - சகலமுமித்தையேயென்பதுவும், மாயைக்குண்மையியம்புவதும் - மாயைக்குச்சத்தியத்தன்மைகூறுவதும், இல்லாமாயையிதனாலே - சொரூபமில்லாதஇந்தமாயையால், இயலும்பந்தம் - பொருந்தாநின்றபந்தமும், விடுகளும் - மோக்ஷங்களும், எல்லாமாகும்- அனைத்துமாகிய, குருமதமும் - குருவென்னும் அபிப்பிராயமும், இவனையடைவோன்றன்மதமும் - இந்தக்குருவைவழிபடுவோன்றனது அபிப்பிராயமும், சொல்லாலளப்பிலாவிச்சை - வாக்கால்அளக்கமுடியாதபிரமவித்தையும், இருக்கும்படிசொல்லுகைதானும் - இருக்கும்படியாகச்சொல்லுகின்றதுவும். எ-று. (௭௬)

ஓதுகின்றநூல்பலவுமுரைக்குந்தர்க்கமுள்ளனவும்
பேதித்துளதாமிகவுமெனப்பேணிச்சுருங்கச்சொல்லுகையு
மேதமின்றியித்தனையும்பரத்தின்வேறென்றியம்புவது
நீதியாகவுளவெவையுநின்றேநிகழ்த்துமாமறைதான்.

இ - ள். ஓதுகின்றநூல்பலவும் - சொல்லாகின்றசாத்திரங்களனைத்தும், உரைக்குந்தர்க்கமுள்ளனவும் - கூறுகின்றதருக்கங்களாயுள்ள நூல்களனைத்தும், பேதித்துளதாமிகவுமென - மிகவும்பேதித்திருக்கின்றனவென்று, பேணி - கருதி, சுருங்கசசொல்லுகையும் - சுருங்கஉரைக்குந்தன்மையும், ஏதமின்றி - குற்றமில்லாமல், இத்தனையும் - இவ்வளவும், பரத்தின் - பிரமத்திடைத்தில், வேறென்றியம்புவதும் - வேறென்றுசொல்லுவதும், நீதியாகவுளவெவையும் - இந்தநீதியாகவுள்ளவனைத்தையும், நின்றேநிகழ்த்துமாமறைதான் - பெருமைபொருந்தியவேதமானதுநின்றுசொல்லுகின்றது. எ - று.

பரமாயுள்ளமறைதானேபாகமானோரறிவுக்குத்
தரமாயடையும்பரிசாகச்சாற்றியவர்கட்கிதமாகத்
திரமாயுள்ளமழுங்குறினுஞ்சிறிதேயெல்லாவிரதம்போ
லுரமாய்த்தானிப்படியென்றேயுபதேசித்ததுண்மையினால்.

இ - ள். பரமாயுள்ள - உயர்வாயிருக்கின்ற, மறைதானே - வேதமே, பாகமானோரறிவுக்குத்தரமாய் - அதிகாரிகளின்சித்தபரிபாகத்துக்குத்தகுதியாக, அடையும்பரிசாக- அடையுந்தன்மையாக, சாற்றி - உபதேசித்து, அவர்கட்கிதமாக - அவர்களுக்கு இதமாகும்படி, திரமாய் - திரமாக, உள்ளமழுங்குறினும் - உள்ளத்தின்கண்வருத்தமுறினும், சிறிதே - கொஞ்சங்கொஞ்சமாக, எல்லாவிரதம் - சகலவிரதங்களையும், உரமாய்த்தான் - திண்ணமாக, இப்படியென்று - இந்தப்பிரகாரமென்றே, உபதேசித்தது - உபதேசஞ்செய்தது, உண்மையினால் - மெய்மையினால். எ - று. (எசு)

சாதனமாகுஞ்சதுட்டையங்கள்சமைந்தவந்தத்தன்மையர்க்கு
நீதியாகவருமறைதானின்றேயிவர்களறியும்வணம்
பூதமாயும்புவனங்கள்பிறவுமாகியிருந்ததுவு
மேதமில்லாதொன்றாயபரமேயென்றேயியம்பினதால்.

இ - ள். சாதனமாகும்-சாதனமாகின்ற, சதுட்டையங்கள்-நான்குகளும், சமைந்த - சமைந்திராநின்ற, அந்தத்தன்மையர்க்கு -அந்தத்தன்மையுடையவதிகாரிகளுக்கு, நீதியாக - ஒழுங்காக, அருமறைதானின்று - அரியவேதமானதுநின்று, இவர்களறியும்வணம் - இவர்களறியும்படி, பூதமாயும் - பூதங்களாயும், புவனங்கள் - ஜகமாயும், பிறவுமாகியிருந்ததுவும்- நானுவாயுமிருக்கின்றவனைத்தையும், ஏதமில்லாது - குற்றமில்லாமல், ஒன்றாய - ஏகமாகிய, பரமேயென்றேஇயம்பினது - பிரமசொரூபமென்றேசொல்லியது. எ - று.

கருத்து. இவ்வான்மசொரூபமே இவ்வனைத்துமென்றசுருதி பொருளின்சுபாவத்தன்மையினால் நேராயிருக்கின்றபொருளைநிரூபித்தற்குப்பிரவர்த்தித்தது. இப்பொருள்பக்குவமில்லாதசித்தமுடையவர்களாலடையத்தகாததனால்அவரவாகள்சித்தபரிபாகானுகுணமாகப்பேதச்சுருதியானதுசாத்தியசாதன

பமுதலியலக்ஷணஜகத்தின்விசித்திரத்தன்மையைப்பிரதிபாதிக்கின்றதேயன்றி பரமார்த்தமாகவில்லை. கேட்பவனதுசித்தபாகானுகுணமாகப் பூருவகாண்டத்தில் அக்கினிஹோத்திரமுதலியதருமங்களைக்கிரமமாகவுபதேசித்து அவைகளாற்பரிபக்குவமுடையசித்தமுள்ளவர்களுக்குச் சகுணோபாசனைமுதலியவற்றையுபதேசித்ததனாலடைந்த ஏகாக்கிரசித்தமுடையவுத்தமாதிகாரிகளுக்கு இந்தப்பிரகாரஞ்சோபானக்கிரமமாக இவ்வான்மசொரூபமே இச்சகலமுமென்றுசுருதிஅத்துவிதீயப்பிரமவத்துவையடையச்செய்கின்றதென்றுணர்க. ()

அ - கை. அனுசந்தானப் பிரகாரத்தைக்கூறுகின்றார்.

வேறு.

சகமொடுசீவனீசன்சார்ந்துளவிகாரமின்றிச்
சுகமுடைச்சத்தாய்ச்சித்தாய்த்துகளின்றிநுண்ணிதாகி
யகமெனுமுரைக்குள்ளாயறிவரிதாகியொன்றுந்
தகவுடைப்பிரமந்தன்னினொருமையைமறைகள்சாற்றும்.

இ - ள். சகமொடு - சகத்தோடு, சீவனீசன் - சீவனென்றுமீசனென்றும், சார்ந்துள - பொருந்தியிருக்கின்ற, விகாரமின்றி - விசித்திரமாம்விகாரமின்றி, சுகமுடைச்சத்தாய் - சுகமுடையசத்தாயும், சித்தாய் - சித்தாயும், துகளின்றி - குற்றமின்றி, நுண்ணிதாகி - சூக்ஷமமாகியும், அகமெனுமுரைகட்குள்ளாய் - அகமென்னும் வார்த்தைகளுக்கு ஆந்தரப்பொருளாயும், அறிவரிதாகி - அறிதற்கரியதாகியும், ஒன்றும் - ஒருபொருளாகும், தகவுடைப்பிரமந்தன்னின் - தகுதியுடையபிரமத்தினது, ஒருமையை - ஏகசுபாவத்தை, மறைகள் - வேதங்கள், சாற்றும் - சொல்லும். எ - று. (எஅ)

வேறு.

ஈசன்சகமோடுளசீவனதாமியாவும்பரரூபமதென்றுகொடே
நேசமதனாலுளதாகியதன்னிறையுமறிவானதியாததுதான்
மாசொன்றதிலாதபரம்பொருளுமயலொன்றறியாதவபேதமது
மேதம்மொழிவேதனமாவதுவுமென்றம்மலரோனுமியம்பினனால்.

இ - ள். ஈசன் - ஈச்சுரன், சகமோடுள - சகத்தோடுள்ள, சீவனதாம் - சீவனுடையதாய, இயாவும் - மாயைஅஞ்ஞானமுதலியயாவும், பரரூபமதென்றுகொடே - பிரமசொரூபமேயென்றுகொண்டு, நேசமதனால் - அன்பினால், உளதாகிய - இருக்கின்றதாகிய, தன்னிறையுமறிவானது - தனது பூரணமான ஞானமானது, யாது - எது, அதுதான் - அந்தஞானமே, மாசொன்றதிலாத - ஒருகுற்றமுமில்லாத, பரம்பொருளும் - பிரமவஸ்துவும், மயலொன்றறியாத - ஒருமயக்கமுமறியாத, அபேதமதும் - அபேதமும், ஏதம்மொழி - குற்றநீங்கிய, வேதனமாவதுவும் - ஞானமாவதுவும், என்று - என்று, அம்மலரோனும் - அந்தப்பிரமாவும், இயம்பினன் - சொன்னான். எ - று.

கருத்து. போக்கியபோக்திருபோகப்பிரசரூபமானவிப்பிரபஞ்சமனைத்தும் விசுத்தப்பிரமமேதானென்னும் பரிபூரணப்பிரமசொருபஞானமே அத்துவிதஞானமென்றுணர்க. (எக)

இத்தன்மையொழிந்துளதாமறிவேயாதொன்றறியாமையையெய்தியதே, மெய்த்தன்மையதாயறிபோதினுமேவேருயறிகின்றவிடந்தனிலு, மத்தன்மையில்வேறுபடாததிலோரையம்மிலையாசறகின்றதுதான், சித்தொன்றியறிந்திடுமெவ்வறிவே சேர்தற்கரிதாயிடுமெங்கணுமே.

இ-ள். இத்தன்மை-இவ்விதமானஞானத்தை, ஒழிந்து-நீங்கி, உளதாமறிவு-இருக்கின்றதானஞானம், யாதொன்று-யாதொன்றுண்டோஅது, அறியாமையை - அஞ்ஞானத்தை, எய்தியதே - பற்றியதேயாகும், மெய்த்தன்மையதாயறிபோதினும்-யதார்த்தசுபாவமாய் விசாரித்தறியுங்காலத்தினும், வேருய் - மாறுபாடாக, அறிகின்றவிடந்தனிலும் - உணர்கின்றவிடத்திலும், அத்தன்மையில் - ஏகமானஅந்தப்பிரஞ்ஞானசுபாவத்தில், வேறுபடாது - மாறுபடமாட்டாது, அதிலோரையம்மிலை- அதிலொருசந்தேகமுமில்லை, ஆசறகின்றதுதான் - குற்றமறகிற்கின்றதாகும், சித்தொன்றி-சித்தைச்சார்ந்து, அறிந்திடும் - அறியப்பட்ட, அவ்வறிவே - அந்தஞானமே, எங்கணும் - எவ்விடத்தும், சேர்தற்கு - அடைவதற்கு, அரிதாயிடும் - அரியதாகும். எ - று.

ப - ம். சருவான்மஞானத்திற்குவேருக நான்வேறுபிரமம்வேறென்னும் ஞானம் அஞ்ஞானமேதான், சுருதியும் எவன்தான்வேறு தேவதைவேறென்று தனக்குப்பின்னமாக அந்தத்தேவதையையுபாசிக்கின்ருன் அவனறிந்தவனன்று பசுவேதானென்றுகூறிற்றென்பார், "இத்தன்மையொழிந்துளதாமறிவே யாதொன்றறியாமையையெய்தியதே" எனவும், நிருவிசேஷப்பிரமான்ம ஐக்கியசாக்ஷாத்காரமானது வருணச்சிரமதன்மங்களால்மகிழ்வுற்றபரமேச்சுரப்பிரசாதத்தாலேயே அடையத்தக்கதாதலால் "சித்தொன்றியறிந்திடுமவ்வறிவைச் சேர்தற்கரிதாயிடுமெங்கணுமே, என்றுங்கூறினார். (அ0)

அ - கை. பானம்யாவும் சிவசொருபமென்று கூறுகின்ருர்.

வேறு.

எப்படிப்பொருள்களெல்லாமிதுவிதுவென்றேயென்றுஞ்
செப்பிடவுண்மையாகத்திகழ்தரும்வேறுபாட்டா
லப்படிச்சிவனேயந்தப்பொருள்களினுண்மையாகி
மெய்ப்படவிளங்குகின்ருன்வேருருபொருளன்ருமால்.

இ - ள். எப்படி - எவ்வாறு, பொருள்களெல்லாம் - வஸ்துக்களனைத்தும், என்றும்இதுவிதுவென்றே - எக்காலத்தும் இதுவிதுவென்று, செப்பிட - சொல்லும்படி, வேறுபாட்டால் - வித்தியாசத்தால், உண்மையாக- சுபாவமாக, திகழ்தரும் - விளங்காநிற்கும், அப்படி - அவ்வாறு, சிவனே - பரம

சிவனே, அந்தப்பொருள்களின் - அந்தவத்துக்களின், உண்மையாகி - சுபாவமாகி, மெய்ப்பட - மெய்ம்மையாக, விளங்குகின்றான் - பிரகாசிக்கின்றான், வேறொருபொருளன்றாம் - மற்றொருபொருளன்றாகும். எ - று.

கருத்து. அதிஷ்டானஸ்புரணசத்துவமே ஆரோபிக்கத்தக்கதருமமாக விளங்குகின்றதென்றறிக. (அ௬)

அ - கை. அச்சொருபானுசந்தானத்தைக்கூறுகின்றார்.

யாதொருபடியிப்போதம்பொருடொறும்விளங்குமந்நேர்
தீதிலாச்சிவன்றன்சத்தியாயதேபிறிதொன்றன்று
லேதமில்சத்தியின்னேயிசைந்திடவறிதலேயாம்
போதமுமிறந்துதோன்றும்பொருளொன்றாயறியும்வண்ணம்.

இ - ள். யாதொருபடி - யாதொருதன்மையாக, இப்போதம்-இந்தஞானம், பொருடொறும் - பொருள்கடோறும், விளங்கும் - விளங்குகின்றதோ, அந்நேர் - அப்படியே, தீதிலா - தீங்கில்லாத, சிவன்றன் - சிவனுடைய, சத்தியாயதே - சத்தையென்னுஞ்சத்தியேயாகியதுதான், பிறிதொன்றன்று - வேறொன்றல்ல, ஏதமில் - குற்றமற்ற, சத்தி - சத்தையை, இன்னே - இத்தன்மையாக, இசைந்திட - பொருந்த, அறிதலே - அறிவதே, போதமுமிறந்துதோன்றும் - சீவபோதமும்நசித்துவிளங்குகின்ற, பொருள் - பொருளை, ஒன்றாய் - ஏகமாக, அறியும்வண்ணம் - உணருந்தன்மை, ஆம் - ஆகும். எ - று.

கருத்து. கடம்விளங்குகின்றது படம்விளங்குகின்றதென்றது முதலியவற்றில் எந்த எந்தப்பிரகாரமாகயாதொருசித்தினொளியிடைவிடாமல் விளங்குகின்றது அஃதே அந்தவந்தவிஷயாங்கிசத்தைநீக்கில் சாக்ஷாத்பரமேச்சுரசொருபமாயுள்ளசமுசயவிபரீதமற்றவனுசந்தானமான பரமாத்துவிதவிஞ்ஞானமென்றறிக. (அ௨)

அ - கை. இவ்வாறு அனுசந்தானிப்பவனுக்குப் பாகியமானசகலவியாபாரமும் பரமேச்வரசிந்தனமாகுமென்று கூறுகின்றார்.

யாதொருபடியினாலேயாவையுந்தோன்றுமத்தை
யோதியபரமேயாகவுண்மையாவறிந்தானியாவ
னேதமிலீசன்றன்னையியல்பினாலெளிதாம்வண்ணம்
பூதனுமவனேமிக்கபூசனைசெய்யாநின்றான்.

இ - ள். யாதொருபடியினாலே - எந்தத்தன்மையினாலே, யாவையும் - அனைத்தும், தோன்றும் - விளங்குகின்றதோ, அத்தை - அதனை, ஓதிய - சொல்லிய, பரமேயாக - பிரமமேயாக, உண்மையா - மெய்மையாக, அறிந்தானியாவன் - அறிந்தவனெவனோ, பூதனுமவனே - பரிசுத்தனாகியஅவனே, ஏதமி

ல்-குற்றமில்லாத, ஈசன்றன்னை- மஹாதேவனை, இயல்பினுல்-சுபாவத்தினுல், எளிதாம்வண்ணம் - சுலபமாகும்படி, மிக்கபூசனைசெய்யாநின்றான்- மிகுந்த பூசனைசெய்கின்றவன். எ - று.

கருத்து. யாதொருவத்துவானது கண்செவி முதலியபிரமாணங்களால் விளக்குகின்றது அவ்வனைத்தையுமிடைவிடாமல் வியாபித்துவிளங்காநின்ற பானரூபபரமசிவனே தானென்று எந்தஎந்தப்பிரகாரமாக அனுசந்தானிக்கின்றானோ அந்தயோகி யெத்தனமின்றிவாக்குக்காயமுதலியவைகளாற்செய்யத்தக்க பரமேச்சுரபசனத்தையே செய்கின்றானேயன்றி யுலகவிவகாரத்தைச் செய்யவில்லை யென்றறிக. (அ௫)

எப்படிப்புத்திநானுவுருவமாயிலங்குந்தன்னு
ளப்படிஃறிவேயாகவனுபவித்திடுதலேயாஞ்
செப்பிடவரிதாயுள்ளதிகழொளியாகுந்தன்னை
மெய்ப்படவேறின்றின்றிவிளைத்திடும்பூசைதானே.

இ - ள். எப்படி - எவ்வண்ணம், புத்தி-மதி, நானுவுருவமாயிலங்கும்- நானாரூபமாகவிளங்குகின்றதோ, தன்னுள்-தன்னுள், அப்படி- அவ்வண்ணம், அறிவேயாக - ஞானசொரூபமேயாக, அனுபவித்திடுதலே - அனுபவித்திடுவதே, செப்பிடவரிதாயுள்ள - சொல்லவரியதாயிருக்கின்ற, திகழொளியாகுந் தன்னை-தானாகவிளங்குகின்ற சிவசொரூபத்தை, மெய்ப்பட-மெய்ம்மையாக, வேறின்றின்றி-பின்னமில்லாமல், விளைத்திடும் - செய்யாநின்ற, பூசைதானே - பூசனையே, ஆம் - ஆகும். எ - று.

கருத்து. எந்தவெந்தப்பிரகாரமாய்ப் புருடனதுமதியானது எந்தஎந்த வத்துக்களிற்சஞ்சலமாசப்பவிக்கின்றதோ அந்தஅந்தப்பிரகாரமாகச்சகலத்தினும் பானரூபமாகியசிவனை அனுசந்தானிக்கின்றவன் மானசபூசையேசெய்கின்றானென்றுணர்க. (அ௬)

அ - கை. இந்தச்சருவான்மஞானத்தை அன்வயவியதிரேகங்களாற்கூறுகின்றார்.

போதமதாகித்தோன்றும்பொருளெலாஞ்சிவனேயாக
வேதமிலறிவாற்காண்பானெவனவனுண்மைகண்டான்
தீதிலாச்சிவனன்றென்றுசிறிதொன்றைச்சிந்தைசெய்வோன்
பேதமாமருளின்மேயபித்தனென்றறியலாவான்.

இ - ள். போதமதாகித்தோன்றும் - அறிவுரூபமாய்விளங்கும், பொருளெலாம் - வஸ்துக்களனைத்தையும், சிவனேயாக - சிவசொரூபமேயாக, ஏதமில் - குற்றமற்ற, அறிவாற்காண்பான் - அறிவினுற்காண்பவன், எவன் - எவனோ, அவன் - அவனே, உண்மை - யதார்த்தசொரூபத்தை, கண்டான் - கண்டவனுவான், தீதிலா - தீங்கில்லாத, சிவன் அன்றென்று - சிவசொரூப

மல்லவென்று, சிறிது - கிஞ்சித்தாயினும், ஒன்றை - ஒருபொருளை, சிந்தை செய்வோன் - கருதுகின்றவன், பேதமாம் - பேதமாகிய, மருளில்-மயக்கத்தில், மேய - பொருந்திய, பித்தனென்று - பிராந்தனென்று, அறியலாவான்-எல்லாராலுமறியப்படுவான். எ - று. (அ௫)

சிவனிதுவன்றேயென்றுசிறிதொன்றைச்சிந்தைசெய்யு
மவனறிவுடையோர்தம்பாலதமனென்றறியப்பட்டா
னுவமையொன்றில்லாவீசன்றனையிகழ்ந்தொழுகுவானும்
பவமதிலென்றுமேவும்பசுவெனப்படுகின்றானும்.

இ - ள். இது - இந்தப்பொருள், சிவன்- பரமசிவன், அன்றேயென்று-அல்லவென்று, சிறிது - சிறிதாயினும், ஒன்றை - ஒருபொருளை, சிந்தைசெய்யுமவன் - குறிக்கின்றவன், அறிவுடையோர்தம்பால் - ஞானவான்களிடத்தில, அதமனென்றறியப்பட்டான்-இழிந்தவனென்றறியப்பட்டவன், உவமையொன்றில்லாவீசன்றனை-தனக்குவமையாக ஒன்றுமில்லாதவீசனை, இகழ்ந்தொழுகுவானும் - நிந்தித்துநடப்பவனும், பவமதில் - ஜனனத்தில், என்றும் - எக்காலத்தும், மேவும்-பொருந்தும், பசுவெனப்படுகின்றானும்-சீவனெனப்படுகின்றவனும் அவனே. எ - று. (அசு)

வேறு.

எல்லாமுஞ்சிவரூபமாகத்தோன்றுமியாவனுக்குத்தன்னியல்பாலவனேமிக்க, சொல்லாலுமளப்பரியானவன்றனிச்சை சுருதியினாற்றுணிந்துரைத்தசரிதைதானும், பல்லோருமவனையருச்சனைசெய்தேத்தப் பரரூபந்தனக்கேநற்பூசையாகு, நில்லாதவவிச்சையினைநீங்கியுள்ளநிற்குணனுமிவனாகுநினையுங்காலே.

இ - ள். யாவனுக்கு - எவனுக்கு, தன்னியல்பால் - தனதியல்பால், எல்லாமும் - சகலமும், சிவரூபமாகத்தோன்றும்- சிவசொரூபமாகவிளங்குகின்றதோ, அவனே - அவனே, மிக்கசொல்லாலும் - மிகுந்தவசனத்தினாலும், அளப்பரியான் - அளத்தற்கரியவன், அவன்றனிச்சை - அவனுடையவிச்சையே, சுருதியினால் - வேதத்தால், துணிந்துரைத்த - நிச்சயமாய்ச்சொன்ன, சரிதைதானும் - நடத்தையும், பல்லோரும் - பலரும், அவனை - அவனை, அருச்சனைசெய்தேத்த-பூசித்துத்துதிக்கில், பரரூபந்தனக்கே- பிரமசொரூபத்துக்கே, நற்பூசையாகும் - நல்லபூசனைசெய்ததாகும், நில்லாத - நிலையில்லாத, அவிச்சையினை - அவித்தையை, நீங்கியுள்ள-நீங்கியிருக்கின்ற, நிற்குணனும்-குணரகிதனும், நினையுங்கால் - கருதுங்கால், இவனாகும்-இவனேயாகும். எ - று.

அ-கை. ஞானிக்குச்சருவான்மஞானமேசிவார்ச்சனையென்றுகூறுகின்றார்.

வேறு.

எப்பொருள்களுந்தானாகியிலங்கிடுமறிவாமீச
னப்படிவிளங்குகின்றதறிதலேயவன்றனக்கு

மெய்ப்படுபூசைவேறோர்செயலினலன்றிமெய்யே
யிப்படிஞானந்தன்னாலிறைஞ்சிடப்படுவானீசன்.

இ - ள். எப்பொருள்களுந்தானுகி - எந்தவத்துக்களுந்தானுகவே, இல ங்கிடும் - விளங்காநின்ற, அறிவாமீசன் - அறிவாகியஈசன், அப்படி-அவ்வண் ணம், விளங்குகின்றது - விளங்குகின்றதன்மையை, அறிதலே - அறிவதுவே, அவன்றனக்கு - அவ்வீசனுக்கு, மெய்ப்படுபூசை - மெய்ம்மையானபூசனையா ம், மெய்யே - மெய்யாகவே, வேறோர்செயலினலன்றி - மற்றொருசெயலினு லல்லாமல், இப்படி - இவ்விதம், ஞானந்தன்னால்-ஞானத்தினுல், ஈசன் - பர மசிவன், இறைஞ்சிடப்படுவான் - பூசிக்கப்படுவான். எ - று. (அஅ)

அ - கை. மற்றொருநெறியாலநுசந்தானங்கூறுகின்றார்.

வேறு.

சகரூபமாயவதில்வேறிலாதுவிளையாடுதெய்வமதுதான்
சுகரூபமாயதனையேபகுத்துவிளையாடியுண்டலதனை
யகமாயையின்றியறிகின்றபோதமுளதாகிநிற்குமதுவே
தகநாளுமோதுமறிவாவதென்றுசதுராননன்சொறருமால்.

இ - ள். சகரூபமாயவதில்வேறிலாது - செகதாகாரமாகிய அதில்நின் றும்வேறில்லாமல், விளையாடுதெய்வமதுதான் - விளையாடுகின்றஆன்மதேவ தையானது, சுகரூபமாய-ஆனந்தரூபமாகிய, தனையேபகுத்துவிளையாடி- தன் னைத்தானேபிரித்துவிளையாடி, உண்டலதனை - புசித்தலுஞ்சகதாகாரமானவத னையேயாகும், அகமாயையின்றி-மனத்தின்கண்மாயையில்லாமல், அறிகின்ற- உணர்கின்ற, போதமுளதாகி-ஞானமிருக்கின்றதாகி, நிற்குமதுவே-நிற்கின்ற அதுவே, தகநாளுமோதும் - பொருந்தும்படிஎக்காலத்துங்கூறப்பட்ட, அறி வாவதென்று-ஞானமேயாகின்றதென்று, சதுராননன் - பிரமதேவன், சொ ல்தரும்-சொல்லுகின்றான். எ-று.

கருத்து. இந்தவான்மதேவதையானது தன்னைஆசிரயித்திருக்குமாயாவ சத்தால் லீலையினுல்புசிக்கத்தக்கதாயும் புசிக்கின்றதாயும் போகத்தைக்கொ டுப்பதாயுமுள்ளஜகரூபமாய்ப்பவித்து அங்ஙனமே அத்தேவதைலீலையினாற்பு சிக்கப்படுவதாகவிருக்கின்றதன்னையே புசிக்கின்றவனுமானதன்னாற்புசிக்கின் றதென்க. (அகூ)

வேறு.

ஆனதாகாத்தெய்வமதேபடையும்விடயமிந்தியமாய்த்
தானுமாகித்தனைத்தன்னாற்றானேநுகருந்தன்மையது
ஊனமாகுஞாதாதியொழிந்தேயுள்ளவறிவதனாற்
றானேயாகக்கண்டிடுதெல்சத்தாயுள்ளபூசையதே.

இ - ள். ஆனதாகாத்தெய்வமதே-உற்பத்தியாகாத ஆன்மதேவதையே, அடையுமவிடயம் - அடையப்பட்டவிடயமாயும், இந்தியமாய்த்தானும் - இந்

திரியமாயும், ஆகி - ஆகி, தனை - விஷயமாகியதன்னை, தன்னாற்றானே - பெர் றிவடிவாகியதன்னாலேயே, நுகருந்தன்மையது - புசிக்கின்றதன்மையையு டையதாகும், ஊனமாகும் - ஈனமாகும், ஞாதாதியொழிந்தேயுள்ள - ஞா துருஞேயம்ஞானமில்லாததாயுள்ள, அறிவதனால் -சுயம்பிரஞ்ஞையினால், தா னேயாகக்கண்டிடுதல்-தன்சொரூபமாய்ப்பார்த்தல், சத்தாயுள்ளபூசையதே - உண்மையானபூசையாகும். எ - று.

கருத்து. விவகாரசமயத்திலிந்திரியங்களால்அபிவியத்தியுடையபானத் தாற்சத்தப்பரிசமுதலியவிஷயாகாரமாகியும் அதனதிஷ்டானமாகியுமுள்ள் பானத்தைக் கிரீடையாற்புசிக்கின்றதென யாதொருவனுசந்தானம் அஃதேய த்துவிதவிஞ்ஞானமென்க. (கம)

அ - கை. இவ்வத்துவிதஞானமே துக்கநிவிர்த்திக்கேதுவென்கின்றார்.

வேறு.

பிறப்பிறப்பாயதுக்கம்பிறித்திடலுளதாயென்று
மிறப்பிலாவீசன்செய்யுமருளினாலிசைவதாகி
மறப்புடைப்பாவகத்தின்வரும்பொருளன்றாய்மேலா
யிறப்பதாம்பேதமோர்காலியைந்திடாப்பொருளிதன்றே.

இ - ள். பிறப்பிறப்பாயதுக்கம் - சனனமரணமாகியதுக்கத்தை, பிறித் திடலுளதாய் - நீக்குந்தன்மையுளதாய், என்றும்- எக்காலத்தும், இறப்பிலா- நாசமில்லாத, ஈசன்செய்யுமருளினால் - சிவபிரான்செய்யும்பிரசாதத்தினால், இசைவதாகி - பொருந்துவதாகி, மறப்புடை - மறதியையுடைய, பாவகத்தி ன்வரும்பொருளன்றாய் - பாவனையிலெய்தும்பொருளன்றாகி, மேலாய்-உயர் வாகி, இறப்பதாம்பேதம் - அழிவதாகியபேதம், ஓர்கால் - ஒருகாலத்தும், இ யைந்திடாப்பொருள்-பொருந்தாதபொருளாயுள்ளது,இது-இதுவாகும். எ-று

கருத்து. பாவனையாலுண்டாகியஞானம் இறந்தபுத்திரனது சாக்ஷாத்கா ரம்போற் பிரமாணமில்லாததனால் பாவனையில்லாதஞானமே புருஷார்த்த சாதனமெனவாம். ஸ்ரீஆசாரியரும் - பாவனையாலுண்டாகியபலன்யாது கன் மத்தின்பலன்யாது அவை ஸ்திரமுடையனவல்ல. எவ்வாறெனில் வேசிமாதர் சங்கம்போலாமென அருளிச்செய்ததுஉங்காண்க. (கக)

அ-கை. ஞானிகளுக்கு விவகாரசமயத்தினும்பிரமான்மசுபாவம்விளங் குகின்றதாயின் பிறர்களுக்குமஃதேன்விளங்கவில்லையெனக்கூறுகின்றார்.

ஆதித்தனொளியைக்கூகையறிந்துகண்டிடாமைபோலு
நீதிக்கணறியுநாட்டமவிச்சையான்மறைந்துளோர்க்கு
மேதக்கட்கிசையாதெங்குமியாவையுமாகிநின்ற
சோதிக்கண்ணொளியுமாங்கேதோன்றிடாதாகுமன்றே.

இ - ள். ஆதித்தனொளியை - சூரியனதுபிரகாசத்தை, கூகை - கோட்டான், அறிந்தகண்டிடாமைபோலும் - அறிந்துகாணாததன்மையைப்போலும், நீதிக்கண் - நீதியினிடத்தில், அறியுநாட்டம் - உணரும்நேத்திரம், அவிச்சையால் - அறியாமையால், மறைந்துளோர்க்கும் - மறைந்தவர்களுக்கும், ஏதக்கட்கிசையாது - அவர்களதுகுற்றமுடையகண்ணுக்குப்பிரகாசிக்காமல், எங்கும் - எவ்விடத்திலும், இயாவையுமாகின்ற - எல்லாமாகின்ற, சோதிக்கண்ணொளியும் - சோதியாகித்திருக்காகிய பிரமத்தினுடைய பிரகாசமும், ஆங்கே - அவ்வாறே, தோன்றிடாதாகும் - தோன்றாததாகவேபவிக்கும். எ-று.

கருத்து. சூரியப்பிரகாசமானது மானிடர்முதலோர்களுக்குப்பிரகாசிப்பதாயினும் கூகைக்குப்பிரகாசிக்காததுபோல் விவகாரத்தினும் ஞானிகளுக்குச்சுலபமாகிய அத்துவிதசொரூபம் அஞ்ஞர்களானமானிடர்களுக்குப்பிரகாசிக்கவில்லையெனவாம். (கூஉ)

அ-கை. ஞானிக்குமாத்திரம் அஃதெங்ஙனம்விளங்கத்தகுமெனக்கூறுகின்றார்.

ஈசன்றனருளினாலுமிசைந்தவாதரத்தினாலு
மாசதுதீர்தலாலுமருள்பவன்பார்வையாலும்
பேசிடும்பாவகன்மபுண்ணியமிரண்டுமொத்தாற்
பாசமாம்படலம்போக்கும்பரம்பொருடிகழுமன்றே.

இ-ள். ஈசன்றன் - உருத்திரமூர்த்தியினது, அருளினாலும் - பிரசாதத்தினாலும், இசைந்த - பொருந்திய, ஆதரத்தினாலும் - பக்தியினாலும், ஆசதுதீர்தலாலும் - குற்றமானதுநீங்குதலாலும், அருள்பவன் - தேசிகனது, பார்வையாலும் - கிருபாதிருஷ்டியாலும், பேசிடும் - சொல்லுகின்ற, பாவகன்மபுண்ணியம் இரண்டும் - பாவபுண்ணியமென்னுங்கன்மங்கள் இரண்டும், ஒத்தால் - சமானமாயின், பாசமாம்படலம் - பாசமாகியகூட்டங்களை, போக்கும் - நீக்குகின்ற, பரம்பொருள் - பிரமஞானமானது, திகழும் - பிரகாசிக்கும். எ - று.

ப - ம். ஈச்வரப்பிரசாதமுதலியகாரணங்களால் தருமாதருமரூபங்களாகியகருமங்கள் தங்களதுபலத்தோடும்புசிக்கப்பட்டு சமமாகுங்காற் பக்குவசித்தமுடையவனுக்கு நிராவரணமான அத்துவிதவஸ்து பிரகாசிக்கின்றதென்பார், "பாவகன்மபுண்ணியமிரண்டுமொத்தாற் பாசமாம்படலம்போக்கும் பரம்பொருடிகழுமன்றே" என்றார். (கூங)

அ-கை. இந்தப்பொருளினிச்சயத்திற்சுருதியையுதாகரித்துக்கூறுகின்றார்.

சுத்தமாயென்றுமுள்ளசுருதிதானருளினாலே
யித்தன்மைத்தாகும்ஞானமென்றுகொண்டிசையும்வண்ணம்
பத்தராயுள்ளார்க்கேயப்பலபடியாகப்பல்கா
லுய்த்துநோய்கழியும்வண்ணமுள்ளவாறுரைத்ததன்றே.

இ - ள். சுத்தமாய்-பரிசுத்தமாய், என்றுமுள்ள-எக்காலத்திலுமுள்ள, சுருதிதான் - வேதமானது, அருளினாலே - கருணையினாலே, இத்தன்மைத்தா ஞானமென்றுகொண்டு - ஞானமானது இத்தன்மையுடையதாகுமென்று கொண்டு, இசையும்வண்ணம் - பொருந்துந்தன்மை, பத்தராயுள்ளார்க்கே ய - பத்திமான்களாயுள்ளவர்களுக்கியைந்திட, பலபடியாக - பலவிதமாக, பல்கால் - பலதரமும், உய்த்து - உணரும்படிசெலுத்தி, நோய்கழியும்வண் ணம் - ஜெனனமாகிய துன்பம்நீங்கும்படி, உள்ளவாறு - உள்ளபடி, உரை த்தது - சொல்லியது. எ - று.

கருத்து. பிரமான்ம ஏகத்துவலக்ஷணமுடையவாக்கியப்பொருள் அடி க்கடி உபநியாசஞ்செய்யப்படினும் இவ்வாக்கியப்பொருளையே திரும்பவும் அன்னைபோலிதத்தைச்செய்கின்றதாகிய குற்றமில்லாதசாந்தோக்கியச்சுருதி யானது சமுசாரலக்ஷணமானமகத்தான ஆயாசத்தைஅடைந்து துன்புறுகின் றமானிடர்களுக்கு அனேகவிதங்களால் வருஞ்சங்கைகளைநிராகரித்து அடிக்க டியுபதேசிக்கின்றது. அஃதெங்ஙனமெனில் சுழுத்திஉத்கிராந்திமுதலிய அவஸ் தைகளில் எந்தரூபத்தைச்சீவனடைகின்றானோ அச்சொரூபமானபிரமம் நீ ஆகின்றாய்என்றுபிதாவினாலுபதேசிக்கப்பட்ட சுவேதகேதுசங்கிக்கின்றான். சுழுத்தியிற்சத்தையடைந்தவர்களானபிரஜைகள் அந்தப்பிரமான்மத்தன்மை யையேனறியவில்லையென! வண்டுகளால் மதுவாகச்சேர்க்கப்பட்ட நாநாவிரு க்ஷபுஷ்பரஸஸமுதாயம்போல் பிரித்திடக்கூடாமையாற் சுழுத்திமுதலியவற் றிலடையப்பட்டிருந்திடினும் பிரமம்அறியப்படவில்லையென்றுஅச்சங்கையை நிராகரித்து, முற்கூறியபொருளையே திரும்பவுமுபதேசித்திடச் சுழுத்திமுத லிய வற்றிற்கரணங்களில்லாமையினால் அறியப்படவில்லை எழுந்தபின்பிரமத் தினின்றும் நானெழுந்திருந்தேனென்றுஏனறிகின்றாரில்லையென்றுசங்கிக்க, மேகங்களாற்சமுத்திரத்தினின்றுமுண்டுபெய்யவருவனவாயும் திரும்பவுஞ்ச முத்திரத்தை அடைவனவாயுமுள்ள நதிகள் சுவையின்வேறுபாட்டாற்சமு த்திரத்தினின்றும்வந்தனவென்றுஞ் சமுத்திரத்தின் ஜலமென்றும்அறியப் படாதனபோற் பிரமத்தினின்றுமெழுந்திருந்தஸம்ஸாரிகளுக்குப்பிரமவிலக்ஷ ணத்தன்மையிருப்பதனால் நாம்பிரமரூபமாக விருந்தெழுந்திருந்தோமென்று ஞானம் வரவில்லையென்றதனைப்பரிகரித்து முற்கூறியவாக்கியமேயுபதேசிக்க ப்பட்டது. சுழுத்தியிற்கரணங்களில்லாதிருக்குமளவிற்சமுத்திரத்தினலைமுத லியனபோற் சீவனழிவானென்றுசங்கிக்க மரமானது பரசுமுதலியவைக ளாற் சேதிக்கப்படினும் இரதம்பெருகுவதுபற்றிஜீவனோடுங்கூடியதெனக் கொள்வதுபோற் சுழுத்தியடைந்ததேகத்திலுமிரத்தங்காண்பதனாற் சீவனழி யவில்லையென்றதைப்பரிகரித்து முற்கூறியபொருளேஸ்தாபிக்கப்பட, நுட்ப மாய பிரமத்தினின்றுந் தூலசகத்தினுற்பத்தியெப்படிக்கூடுமென! சூக்குமமா ன ஆலம்வித்தினின்றும் அம்மரத்தினுற்பத்திபோற்கூடுமென்றுஅதனைநிராகரி த்துபதேசிக்க, ஜகத்தின்மூலகாரணமானபிரமம்ஏதனாற்காணப்படவில்லையெ ன? நீரிலிருக்குமுப்பின்கனம் பார்வைபரிசமிவைகளாலறியப்படாவிடினும்ர சனையாலுப்பினிருக்கைநிச்சயப்படுவதுபோற்கண்முதலிய வற்றிற்குத் திரிசிய

ப்படாவிடினுங் காரியலிங்கத்தினாலிருக்கின்றதென்றுகூற, பிரமசாக்ஷாத்கா ரத்தில் எதுஉபாயமென்றுசங்கித்துக் காந்தாரதேசத்தினின்றுங் காட்டிற்றி ருடர்களாற்கண்ணைக்கட்டிவிடப்பட்ட புருஷனுக்குநேத்திரபந்தத்தைநீக்கிக் காந்தாரதேசத்தையடையச்செய்யுமுபதேசம்போல ஆசாரியர்செய்யப்பட் டவுபதேசத்தாற் பிரமசாக்ஷாத்காரம் அவித்தியாநிவிர்த்திஇரண்டு முண்டா குமென்றுகூறப்பட்டது. அந்தவித்துவான் எவ்விதமாய்ப்பிரமத்தையடைகி ன்றானெனில், மனமுதலியனலயித்திடுங்கால்ஞானதீபத்தாற் பிரகாசிக்கப் பட்டபிரமத்தையே அடைகின்றானன்றி அர்ச்சிராதிமார்க்கங்களையபேக்ஷிக்க வில்லை அந்தவித்துவான் வேறொருதேகத்தையுங்கிரகிக்கின்றானில்லை. இறப்ப வனும்மோக்ஷமடைபவனும் பிரமத்தையடைபவர்களென்னில் வித்துவானும வித்துவானைப்போலேஜனிக்கமாட்டானென்று சங்கிக்க, திருடினவன் திரு டாதவனிருவர்களும் மழுவேந்திச்சத்தியஞ்செய்யுங்கால் இருவர்கையினும ழுவின்சம்பந்தஞ்சமானமாயிருந்திடினும் திருடாதவன் தகிக்கப்படான் திரு டினவன்தகிக்கப்படுகின்றான் இவ்வாறு வித்துவானுக்கும்அவித்துவானுக்கும் அந்தியகாலஞ்சமானமாக இருந்திடினுஞ் சத்தியப்பிரமத்தில்அபிப்பிராயமு டையவன் திரும்பவுந்தேகத்தையடையமாட்டான். பொய்யானதேகமுதலி யவற்றிலகம்புத்தியுடையவன் திரும்பவுஞ்சரீரத்தையடைகின்றானெனவிந்த ப்பிரசாரம் ஒன்பதுபரியாயங்களால் அச்சங்கையைநிராகரித்து அதுநீயாகி ன்றாயென்றவாக்கியத்தால் முற்கூறிய பிரமான்மஐக்கியமானது சுருதியினா ல்நிலைசெய்யப்பட்டதெனவாம். (௬௪)

அ-கை. அப்பியாசமென்பதுதாற்பரியலிங்கமாதலாற் பலதரமப்பியா சிக்கப்பட்டபிரமான்மவைக்கியலக்ஷணமுடையபொருளேசுருதியின்தாற்பரி யத்தாலடையத்தக்கதேயன்றிவெறில்லையெனக்கூறுகின்றார்.

வேறு.

சிவனேயுள்ளான்பிறிதில்லையென்றுதிரமாயறிவதுவே
பவமேயொழிக்கும்பரமார்த்தம்பகருநெறிதானதுவாகும்
அவமேயிதனையொழிந்துளதாமவைதானிதனையடைதற்குத்
தவமேமுதலாஞ்சரிதைகளைச்சாற்றுகின்றதன்மையவே.

இ-ள். சிவனேயுள்ளான் - (எப்பொழுதும்) சிவனொருவனேயுள்ளவ ன், பிறிதில்லையென்று - வேறில்லையென்று, திரமாய் - உறுதியாய், அறிவது வே - அறிகின்றதுவே, பவமேயொழிக்கும் - ஜனனமரணத்தைக்கெடுக்கின் ற, பரமார்த்தம் - பாரமார்த்திகமாகியசித்தாந்தமாகும், பகருநெறிதான் - சொல்லுமார்க்கமும், அதுவாகும் - அதுவேயாகும், இதனைஒழிந்துளதாமவை தான் - இதனைஒழித்துள்ளமற்றநூல்களானவைகள், அவமே - வீணேயாகு ம், இதனையடைதற்கு - இப்பரம்பொருளையடைவதற்கு, தவமேமுதலாஞ்ச ரிதைகளை - தவமுதலாகியசரிதைகளை, சாற்றுகின்றதன்மைய - சொல்லுகின்ற தன்மையுடையனவாம். எ - று. (௬௫)

அ - கை. இதுவேவேதப்பொருளென்றுசபதங்கூறுகின்றார்.

வேறு.

ஆதரவுடையீர்கேண்மினருமறைப்பொருளீதென்றே
யோதலாலுவமையில்லாப்பொருளிதிலையமுண்டேற்
றீதறமழுவைக்காய்ச்சிச்செங்கையிலிடுவேனென்று
ணாதனுயுலகமெல்லாம்படைக்குநான்முகனுயுள்ளோன்.

இ - ள். நாதனுய் - நாயகனுகி, உலகமெல்லாம் - உலகமனைத்தையும், படைக்கும் - சிருஷ்டிசெய்யும், நான்முகனுயுள்ளோன் - சதுர்முகனுகவிருக்கின்றபிரமதேவன், ஆதரவுடையீர்- அன்புடையதேவர்களே, கேண்மின்- கேளுங்கள், அருமறைப்பொருள்-அரியவேதார்த்தம், ஈதென்றே-இந்தப்பொருளென்றே, ஓதலால்- (நானிப்பொழுது) கூறுதலினுல், உவமையில்லாப்பொருளிதில் - உவமையற்றபொருளாகியவிதில், ஐயமுண்டேல் - (இன்னமுங்களுக்குச்) சந்தேகமிருக்குமாகில், தீதற - குற்றமற, மழுவைக்காய்ச்சி - மழுவை (அக்கினியிற்) காயச்செய்து, செங்கையில் எனதுசெவ்வியகையில், இடுவேனென்றான் - தாங்குவேனென்றுசொன்னுன். எ - று.

பத்தராயுள்ளீர்கேண்மின்பகர்ந்தவேதத்தினர்த்த
மித்தகைத்தாகும்வேறொன்றில்லையாமிதனிலுங்கள்
சித்தநம்புதலுண்டாகச்செப்பினேமாணைமூன்றே
டத்தனூர்பாதந்தொட்டேயென் றனனலரின்மேலோன்.

இ - ள், அலரின்மேலோன்- மலரின்மேல்வீற்றிருக்கின்றபிரமதேவன், பத்தராயுள்ளீர்கேண்மின் - சிவபெருமானுக்குஅன்புடையவராயிருக்கின்றதேவர்களேகேளுங்கள், பகர்ந்தவேதத்தினர்த்தம்- இப்போதுகூறியவேதத்தின்றாற்பரியம், இத்தகைத்தாகும்- இத்தகுதியையுடையதேயாகும், வேறொன்றில்லையாம் - வேறொருபொருளின்றாகும், இதனில் - இந்தத்தாற்பரியத்தில், உங்கள்சித்தம் - உங்களுடையசித்தத்திற்கு, நம்புதலுண்டாக - நம்பிக்கையுண்டாகும்படி, அத்தனூர்பாதந்தொட்டே- சிவபெருமானதுதிருவடிகளைப்பற்றிக்கொண்டே, ஆணைமூன்றோடு-மூன்றுதாஞ்சத்தியத்தோடு, செப்பினேம்- சொன்னேம், என்றனன் - என்றுகூறினுன். எ - று. (கஎ)

அ - கை. நான்மாத்திரமிந்தப்பிரகாரஞ்சொல்லுகின்றேனென்பதில்லை நான்கூறியவிந்தப்பொருளில் பரமசிவமுமிவ்விடத்தில்வந்துங்களுக்குவிசுவாசத்தைஉண்டுபண்ணுவாரெனக்கூறுகின்றார்.

அன்பராயுள்ளீர்கெண்மினறிவித்தபொருண்மெய்யன்றே
லென்சிரமிற்றுவிழ்வதென்றனனிதுவுமன்றி
யின்பமேயளிக்குமீசனிவ்விடந்தன்னில்வந்து
தன்பெருங்கருணையாலுந்தளர்வறப்பண்ணுகின்றான்.

இ-ள். அன்பராயுள்ளீர் - பத்திமான்களாகியசுரோத்தமர்களே, கேண்மின் - கேளுங்கள், அறிவித்தபொருள் - (ஞானிப்பொழுதுங்கட்கு) அறிவித்தஉண்மைப்பொருளானது, மெய்யன்றேல்-உண்மையில்லாவிடில், என்சிரம் - எனதுதலை, இற்றுவீழ்வதென்றனன் - அற்றுவீழக்கடவதென்றுசொன்னான், இதுவுமன்றி - இதுவுமல்லாமல், இன்பமேயளிக்கும் - (சகலவுயிர்களுக்கும்) இன்பத்தையேகொடுக்கும், ஈசன்-சிவபெருமானார், இவ்விடந்தன்னில் - இந்தவிடத்தில், வந்து - எழுந்தருளி, தன்பெருங்கருணையாலும் - தனது அளவற்றதிருவருளினாலும், தளர்வற - சந்தேகமாகியதளர்ச்சிநீங்கும்படி, பண்ணுகின்றான் - செய்தருள்கின்றார். எ - று. (சுஅ)

இவ்வணமுரைத்துப்பின்னையாவர்க்குமன்பாயுள்ளோன்
செய்வணமொழிந்தேயீசன்றிருவடிசிந்தைசெய்து
மெய்வணமிழந்துதாழ்ந்துபணிந்துமெய்ப்பத்தியாலே
யவ்வணமாகித்தன்னையழிந்தனனயனுமையன்.

ள். இவ்வணமுரைத்து - இந்தப்பிரகாரமாகச்சொல்லி, பின்னை - பின்பு, யாவர்க்கும் - சகலருக்கும், அன்பாயுள்ளோன் - பிரியமாயிருக்கின்றவன், செய்வணமொழிந்து - செய்யும்வண்ணம்நீங்கி, ஈசன்றிருவடி - சிவபெருமானுடையதிருவடிகளை, சிந்தைசெய்து - சிந்தித்து, மெய்வணமிழந்து-உடலின்றன்மைமறந்து, தாழ்ந்துபணிந்து-தாழ்ந்துவணங்கி, மெய்ப்பத்தியாலே - உண்மையாகியபக்தியினால், அவ்வணமாகி - அவ்வாறேயாகி, அயனுமையன் - பிரமதேவனாகியதேசிகன், தன்னையழிந்தனன் - தன்னைமறந்தவனாயினான். எ - று. (ககூ)

அப்பொழுதளவிலாதவருளுருவாயவீசன்
செப்பிடுமூவரேத்துந்திருவுருவுடையசோதி
யொப்பிலாமதியஞ்சூடியுமையொருகூறனாகி
யிப்படிவானோர்காணும்படியுளவியல்பின்வந்தான்.

இ-ள். அப்பொழுது - அந்தச்சமயத்தில், அளவிலாத - அளப்பதற்கரிதாகிய, அருளுருவாயவீசன்-கருணைவடிவாகியமஹாதேவரும், செப்பிடும்-கூறப்பட்ட, மூவரேத்தும் - திரிமூர்த்திகளாலேவணங்கத்தக்க, திருவுருவுடையசோதி - திருவுருவுடையஜோதியானவரும், ஒப்பிலா - நிகரற்ற, மதியஞ்சூடி - சந்திரனைத்தரித்தவருமாகியசிவபெருமானார், உமையொருகூறனாகி-ஒருபாகத்திற்பார்வதியையுடையவராகி, இப்படி-இவ்வாறு, வானோர்காணும்படி-தேவர்கள்தரிசிக்கும்படி, உளவியல்பின்வந்தான்-உள்ளசுபாவமாகஆவிர்ப்பவித்தார். எ - று. (௧00)

நீடொளிமணிகள்சேர்த்திகிரிமலமாயோங்கியெங்கும்
பீடுடைத்தாமநாற்றிப்பிறங்கரிமிசையதாக

வாடகமதனினலேயமரராலமைக்கப்பட்ட
பீடம்வந்திட்டதாங்கேயிருந்தனன்பெயராதீசன்.

இ - ள். நீடொளிமணிகள் சேர்த்தி - நீண்டபிரகாசத்தையுடையவிரத்தினங்களைப்பதித்து, நிம்லமாயோங்கியெங்கும் - எவ்விடத்திலுங்களங்கமறப்பிரக்காசிக்கின்ற, பீடுடை - பெருமைபொருந்திய, தாமநாற்றி - மாலைகள் தூக்கி, பிறங்கரிமிசையதாக - உயர்ந்தசிங்கத்தின்மேலாக, ஆடகமதனினலே - சுவர்ணத்தினலே, அமரரால் - தேவர்களால், அமைக்கப்பட்ட - இயற்றப்பட்ட, பீடம் - ஆசனமானது, வந்திட்டது - வந்துசேர்ந்தது, ஆங்கே - அவ்விடத்தில், ஈசன் - பரமசிவமூர்த்தியானவர், பெயராது - அகலாமல், இருந்தனன் - இருந்தருளினர். எ - று. (கoக)

அளவிலாவொளியதாயவரனெழுந்தருளலுன்னித்
துளபமாலுலகமியாவுமளிப்பவனுவகையோடுங்
களமதார்கறைசேர்நாதன்கழலடிநினைந்தப்போதே
யுளநெகிழ்ந்துருகிவொல்லைவந்தனனுணர்வின்மிக்கோன்.

இ - ள். அளவிலா - எல்லையில்லாத, ஒளியதாய - பிரகாசமாகிய, அரனெழுந்தருளலுன்னி-சிவபிரானரெழுந்தருளுதலைக்கருதி,உலகமியாவும்-சகலவுலகங்களையும், அளிப்பவன் - காப்பவனும், உணர்வின்மிக்கோன் - அறிவின்மேம்பட்டவனுமாகிய, துளபமால் - துளசிமாலையையுடையமாயவன், உவகையோடும் - சந்தோஷத்தோடும், களமதார்கறைசேர்நாதன் - விடம்பொருந்தியகறுத்தகண்டத்தையுடையநாயகனது,கழலடி-வீரமணியைப்பூண்டபாததாமரையை, நினைந்தப்போதே - நினைத்தக்காலத்தே, உளநெகிழ்ந்துருகி -மனநெகிழ்ந்துருகி, ஒல்லைவந்தனன் - விரைவின்வந்தான். எ - று. (கoஉ)

நித்தராயுள்ளவானோர்நிறைமலர்மாரிமேன்மே
லுய்த்தனர்மிக்கவன்பாலுரைத்தனர்துதிகளெல்லாம்
பத்தர்வேதங்கள்சொன்னபடியிலேபணிந்துவாழ்த்தி
யித்தன்மைத்தாயவேறுஞ்செய்தனரிறைவன்காண.

இ - ள். நித்தராயுள்ள-அழிவற்றவர்களாயிருக்கின்ற, வானோர்- தேவர்கள், நிறைமலர்மாரி - நிறைந்தபுட்பவருஷங்களை, மேன்மேல்- மேன்மேலும், உய்த்தனர் - பொழிந்தார்கள், துதிகளெல்லாம் - தோத்திரங்களெல்லாம், மிக்கவன்பால் - மிகுந்தஅன்பினல், உரைத்தனர்-சொன்னர்கள், பத்தர்-அடியவர்களாகியவிவர்கள், வேதங்கள்சொன்னபடியிலே - சுருதிகள்கூறியபடியே, பணிந்துவாழ்த்தி - வணங்கித்துதித்து, இத்தன்மைத்தாயவேறும்-இந்தத்தன்மையுடையதாகியபிறவும், இறைவன்காண -அதிபராகியமகாதேவர்காணும்படி, செய்தனர்- செய்தார்கள். எ - று. (கoங)

கடுகியுமுயர்ந்துந்தாழ்ந்துங்காளங்கள்பலமுன்னூதப்
படகமோடிடக்கைசல்லிமத்தளம்பலவாசிப்பத்

துடிகுழல்வீணைதாளம்வலம்புரிதொடர்ந்தேயார்ப்பக்
குடமுழாமுரசுபேரிகுசலராயினர்கொண்டார்த்தார்.

இ - ள். கடுகியும் - விரைவாயும், உயர்ந்தும் - உச்சமாயும், தாழ்ந்தும்- மிருதுவாயும், காளங்கள்பலமுன்னூத - திருச்சின்னங்களநேகந்திருமுன்பு ஊத, படகமோடு - தம்பட்டத்தோடு, இடக்கை - டக்கை, சல்லி-சல்லரி, மத்தளம் - தண்ணுமை, பலவாசிப்ப - அனேகங்கள்வாசிக்க, துடி - உடுக்கும், குழல் - புல்லாங்குழலும், வீணை - வீணையும், தாளம் - கைத்தாளங்களும், வலம்புரி - வலம்புரிச்சங்கமும், தொடர்ந்தேயார்ப்ப-ஒன்றோடொன்றுகலந்துமுழங்க, குடமுழா - குடமுழாவும், முரசு - முரசும், பேரி - பேரிகையும், குசலராயினர்- (அததில்) மிகுந்தவல்லமையுடையவர்கள், கொண்டார்த்தார் - கொண்டுமுழக்கினார்கள். எ - று. (கoச)

வானவர்பாடவாடமங்கையர்மரைகள்வீச
வானவாகவிகளானாராசிதோத்திரங்கள்சொல்ல
வீனமிலீசன்பாதபங்கயநினைந்துநோக்கு
மோனமாயிருந்தார்வேறுமுனிகளோர்செயலதின்றி.

இ - ள். வானவர் - தேவர்கள், பாட - பாடவும், மங்கையர் - தேவதாசிகள், ஆட - நடனஞ்செய்யவும், மரைகள்வீச-கவரிகள்வீசவும், ஆனவா- தங்களாலானவாறு, கவிகளானார் - கவிகளானவர்கள், ஆசி - ஆசீர்வாதங்களும், தோத்திரங்கள் - துதிகளும், சொல்ல - சொல்லவும், வேறு - சிலவிடத்தில், ஈனமில் - இழிவில்லாத, ஈசன் - உமைபாகரது, பாதபங்கயநினைந்துநோக்கும் - திருவடித்தாமரையைநினைந்துபார்க்கின்ற, முனிகள் - முனிவர்கள், ஓர்செயலதின்றி - யாதொருபிரவிர்த்தியுமில்லாமல், மோனமாயிருந்தார் - மௌனமாயிருந்தார்கள். எ - று. (கoரு)

அன்பிலம்முனிகளெல்லாமதிசயமாகிநின்றார்
பின்புளோர்தலையாலாடும்பெருமையையுடையரானா
ரென்புநைந்துருகிநெக்கங்கியாவருந்தாமேதம்மில்
வன்பெருங்கைகளாலுங்குத்தினர்வானோரெல்லாம.

இ - ள். அன்பில் - அன்பினால், அம்முனிகளெல்லாம் - அந்தமுனிவர்களெல்லாரும், அதிசயமாகிநின்றார் - அதிசயமடைந்துநின்றார்கள், பின்புளோர் - பின்புநிற்கின்றவர்கள், தலையாலாடும்பெருமையையுடையரானார்- தலையால்நிருத்தஞ்செய்யும் பெருமையையுடையவரானார்கள், என்புநைந்துருகிநெக்கு - எலும்புநைந்துருகிக்குழைந்து, அங்கு - அவ்விடத்தில், யாவரும் - முனிவர்களெல்லாரும், வானோரெல்லாம் - சகலதேவர்களும், தாமேதம்மில் - தாங்களேதங்களுக்குள்ளாக, வன்பெருங்கைகளாலும் - வலிமையுடைய பெரியகைகளாலும், குத்தினர்-குத்திக்கொண்டார்கள். எ - று. (கoசு)

தலையினுன்முட்டிமேலுந்தாள்களாலுதைத்துக்கைகள்
பலவினுலடித்துத்தண்டிற்கயிறதுபூட்டிவானோர்
சிலவர்தாஞ்சிலவர்தம்மைச்சிவிகையிற்பொறுத்தார்வேறு
குலவியோர்குதிரைதன்னிற் கொடுசென்றுசிலர்மேல்வைத்தார்.

இ-ள். தலையினுன்முட்டி - தலையினுலே (ஒருவருக்கொருவர்) முட்டியும், மேலும் - பின்னும், தாள்களாலுதைத்து - கால்களினுலேஉதைத்தும், கைகள்பலவினுலடித்து - பல கைகளாலடித்தும், தண்டிற்கயிறதுபூட்டி- தடிகளிற்கயிறுகளைப்பூட்டி, வானோர்சிலவர்தாம் - சிலதேவர்கள், சிலவர்தம்மை - சிலர்களை, சிவிகையில் - பல்லக்குகளைப்போல, பொறுத்தார் - தாங்கினுர்கள், வேறு குலவியோர்குதிரைதன்னிற்கொடுசென்று- வேருகச் (சிலர்களைக்) கொண்டாடி ஓர்குதிரையைப்போலத்தங்கண்மேல்வைத்துக்கொண்டு சென்று, சிலர்மேல்வைத்தார் - சிலதேவர்கள்மேல்வைத்தார்கள். எ-று. ()

வேறு.

ஓடினுர்சிலவரொக்கநின்றவர்களொருவரோடொருவர்தழுவினுர்
கூடியொண்புடைவைமேலெறிந்துசிலர்கொண்டுகொண்டுவிளையாடி
ரோடிவந்துபிரியத்திஞேடொருவரொருவருச்சியைமுகந்தன (ஞ
ராடினுர்கள்சிலரன்பினுலறிவதொன்றிலாதபடியாகவே.

இ-ள். சிலவர்-சிலர்கள், ஓடினுர்-ஓடினுர்கள், ஒக்கநின்றவர்கள்-கூடநின்றவர்கள், ஒருவரோடொருவர்- ஒருவர்களோடொருவர்கள், தழுவினுர்-தழுவிக்கொண்டார்கள், கூடி- (ஒன்று) கூடி, ஒண்புடைவை-அழகாகியவத்திரங்களை, மேலெறிந்து சிலர்கொண்டுகொண்டு-சிலர்கள்பலதரம்உயரவெறிந்துகொண்டு, விளையாடினுர் - விளையாடினுர்கள், ஓடிவந்து-ஓடிவந்து, பிரியத்திஞேடு - அன்பிஞேடு, ஒருவரொருவர் - ஒருவருக்கொருவர், உச்சியைமுகந்தனர்- சிரசைமுகந்துகொண்டார்கள், சிலர் - சிலர்கள், அன்பினுல் -பத்தியினுலே, அறிவதொன்று - அறியத்தக்கதொன்றும், இலாதபடியாகவே - இல்லாதபடியாகவே, ஆடினுர்கள் - கூத்தாடினுர்கள். எ-று. (கoஅ)

வேறு.

உமையோடுகூடியுளனுயவீசனெழியாததேவர்செயல்கண்
டமையாதவன்புமிகவாகியங்கையருளோடமைக்கவயன்மா
லிமையோர்களோடுமுனியாயினோர்களிடர்தீரும்வண்ணமருளா
லமையாதவங்கணதுவைத்தல்கண்டனர்கள்பெற்றுநின்றவணேவோர்.

இ-ள். உமையோடுகூடி - பார்வதிசமேதராகி, உளனுயவீசன் - இருக்கின்ற சிவபெருமான், ஒழியாத - நீங்காத, தேவர்செயல்கண்டு - தேவர்களதுசெயலைக்கண்டு, அமையாதவன்பு - (ஒருநாளும்) அமையாதவன்பு, மிகவாகி - மிகுந்து, அங்கையருளோடமைக்க - கருணையினுலழகியதிருக்கைய

மைத்தருளலும், அயன் - பிரமதேவனும், மால் - திருமாலும், இமையோர்களோடு - தேவர்களோடு, முனியாயினோர்கள் - முனிவரானவர்களும், இடர் திரும்வண்ணம் - துன்பம்நீங்கும்படி, அருளால் - திருவருளால், அமையாத- அடங்காத, அங்கணதுவைத்தல் - அழகியதிருக்கண்ணோக்கம்வைத்தலே, கண்டனர்கள் - கண்டார்கள், பெற்றுநின்றவனைவோர் - அத்திருக்கண்ணோக்கம் பெற்றுநின்ற சகலர்களும். எ-று. (க0க)

வேறு.

சத்தியமாகிவேதமொன்றுமேயளவையாகு
மித்தன்மைப்பொருளையெல்லாவுலகருமறியும்வண்ண
நித்தராமன்பரேத்துநிறைந்தமெய்க்கருணையீசன்
மெய்த்தகுபொருளீதென்றேவிளம்பிடல்செய்யலுற்றான்.

இ-ள். சத்தியமாகி - உண்மையாகி, வேதமொன்றுமே - வேதமொன்றுமாத்திரமே, அளவையாகும் - பிரமாணமாகும், இத்தன்மைப்பொருளை- இத்தன்மையையுடையபொருளை, எல்லாவுலகரும் - சகலவுலகத்தவர்களும், அறியும்வண்ணம்- அறியும்படி, நித்தராமன்பர்- அழிவில்லாதபத்திமான்கள், ஏத்தும் - துதிக்கும், நிறைந்த - நிறைவுற்ற, மெய்க்கருணையீசன் - உண்மையாகியகருணையையுடையசிவபெருமான், மெய்த்தகுபொருள் - உண்மையுடைய வேதார்த்தமானது, ஈதென்றே - இதுதானென்றே, விளம்பிடல்செய்யலுற்றான் - உரைசெய்யத்திருவாய் மலர்ந்தருளினார். எ-று (கக0)

அ-கை. போத்திருபோக்கியவிலக்கணமுடைய பிரபஞ்சமனைத்துக்கும் அத்துவிதியப்பிரமான்ம வைக்கியமேசுருதியின்பொருளெனப்பிரமதேவனுக்குகூறியது சத்தியந்தானெனப் பரமசிவமூர்த்தியானவர் தமது சார்வான்மியத்தைக்கூறுகின்றார்.

வேறு.

உலகமியாவுமுயிர்பலவுநானேசிறிதும்வேறில்லை
யலகிலறிவாலாய்ந்திடினுமாயாவிடத்துமருத்தமிதே
திலகமாயமறைதுணிந்துதிகழ்த்தும்பொருளுமிதுவென்ற
னிலகுந்தன்மையனுபவமுமிதிலோரையமுளதன்றால்.

இ-ள். உலகமியாவும் - எல்லாவுலகங்களும் - உயிர்பலவும் - எல்லாவுயிர்களும், நானே - நானே, சிறிதும்வேறில்லை - (என்னைத்தவிர) கிஞ்சித்துமன்னியமாயில்லை, அலகிலறிவால் - அளவில்லாதமகிமையையுடையவறிவினால், ஆய்ந்திடினும் - ஆராய்ந்திடினும், ஆயாவிடத்தும்-ஆராய்ச்சிசெய்யாவிடத்தும், அருத்தமிதே - இதுவேஅருத்தமாகும், திலகமாய - மேன்மையான, மறை-வேதம், துணிந்து - நிச்சயித்து, திகழ்த்தும்பொருளும்- விளக்குமருத்தமும், இது - இதுவே, என்றன் - என்னுடைய, இலகுந்தன்மையனுபவமும்-

விளங்குந்தன்மையுடையஅநுபவமும் (இதுவே), இதில் - இதில், ஓரையம் - ஒருசந்தேகமும், உளதன்று - இருக்கின்றதன்று. எ-று.

ப-ம். விசாரதிசையிலிரச்சுவின்சத்துவத்திற் சற்பதாரைபோல் அத்தியாசிக்கப்பட்டவஞ்ஞானம்அதன்காரியமிவைதன்னிடத்திலிலயிப்பதுகொண்டுகிஞ்சித்தேனுந்தனக்குவேறில்லை கற்பிதவத்துவின்நாசமதிட்டானமாத்திரமாகச்சேஷிப்பதாகலின், அச்சகமனைத்துமில்லை நானேதானெனவாதையிற்சாமானாதிகரணியமாகுமென்பார், "உலகமியாவுமுயிர்பலவுநானேசிறிதும்வேறில்லை யலகிலறிவாலாய்ந்திடினும்" எனவும், விசாரமில்லாததிசையினும் ஆரோபிதமானது அதிட்டானத்திற்குவேறாயில்லாததனால் தோற்றுகின்றசகமும்நானேதானெனச்சமுசர்க்கத்திற்சாமானாதிகரணியமென்பார்," ஆயாவிடத்துமருத்தமிதே" எனவும், இவ்வனைத்துமென்பதியாது அவ்வனைத்தும்இவ்வான்மாவேதானெனச்சுருதியிற்காண்பதனால் வேதத்திற்குந்தாற்பரியத்தாலடையத்தக்கபொருளிதுவேதானென்பார், "திலகமாயமறைதணிந்து திகழ்த்தும்பொருளுமிது" எனவுங்கூறினர்.　(ககக)

அ-கை. அவனேதான் கீழிலும் மேலிலுமென்றுசனற்குமாரநாரதசம்வாதத்திற்பூமாவித்தையிற்கூறப்பட்ட அதன்பொருளைப்பிராசங்கிகமாயிவ்விடத்திற்கூறுகின்றார்.

அப்பாலாகியெவர்கட்குமதுவேயெனநிற்கின்றேனு
னிப்பாலாகிக்காண்பொருள்களெல்லாமாகியுள்ளேனுன்
மெய்ப்பாலுயிர்களியாவையுமாய்விளங்கிமிகவுநின்றேனு
னொப்பேயிலையாமுபாதிபலவாகியெங்குமுள்ளேனுன்.

இ-ள். அப்பாலாகி - பரோக்ஷமாகி, எவர்கட்கும் - எத்தன்மையானவர்களுக்கும், அதுவேயெனநிற்கின்றேனுன் - அதுவேயென்னும்படிநிற்கின்றவனும்நானே, இப்பாலாகி-அபரோக்ஷமாகி, காண்பொருள்களெல்லாமாகி-திரிசியங்களனைத்துமாகி, உள்ளேனுன் - இருக்கின்றவனும்நானே, மெய்ப்பாலுயிர்கள் - உடலினிடத்துள்ளவுயிர்கள், இயாவையுமாய் -சகலமுமாகி, விளங்கிமிகவுநின்றேனுன் - மிகவும்விளக்கமுற்றுநின்றவனும்நானே, ஒப்பேயிலையாம் - உவமானமேயில்லாததாகிய, உபாதிபலவாகி-நானாவிதவுபாதிகளாகி, எங்குமுள்ளேனுன் - எவ்விடத்துமுள்ளவனும்நானே. எ-று.　(ககஉ)

பூதமாகிப்பொருள்பலவாய்ப்புணர்ந்துநின்றுங்காப்பவனுன்
பேதமாகிப்பேதித்தும்பேதமில்லாப்பெற்றியனுன்
சோதியாகுமிரவிமதியாகித்தோன்றுகின்றேனுன்
வேதமாகியுள்ளேனுன்விளங்கும்புராணமாவேனுன்.

இ-ள். பூதமாகி - பூதங்களாகி, பொருள்பலவாய்-பலவகைப்பொருளாகி, புணர்ந்துநின்றும்-கலந்துநின்றும், காப்பவனுன்-காப்பவனும்நானே,

பேதமாகிப்பேதித்தும் - பற்பலபேதங்களாகிப்பேதித்தும், பேதமில்லா - பின்னமில்லாத, பெற்றியனுன் - தகுதியையுடையவனும்நானே, சோதியாகும் -பிரகாசமாகும், இரவிமதியாகி-சூரியசந்திரராகி, தோன்றுகின்றேனுன்- தோன்றுகின்றவனும்நானே, வேதமாகியுள்ளேனுன்-வேதங்களாயுமுள்ளவனும்நானே, விளங்கும்புராணமாவேனுன் - விளங்குகின்றபுராணங்களாகஆனவனும்நானே. எ - று. (கசந)

கூறுமோசைபலவவைநானவற்றிற்குலவும்பொருளவைநா
னுறுசமயமாயவற்றினருத்தமாகிநிற்பேனுன்
வேறென்றறியும்பொருள்களுமாய்வேருய்விளங்குகின்றேனு
னுறுஞ்சிந்தையழிந்தொன்றுமறிவாலறியுமறிவுநான்.

இ - ள். கூறுமோசை - சொல்லுஞ்சத்தங்கள், பல - பலவகைகளாகும், அவை - அவையனைத்தும், நான் - நானே, அவற்றில் - அந்தச்சத்தங்களில், குலவும் - விளங்கும், பொருளவைநான்- பொருள்களும்நானே, ஆறுசமயமாய் - அறுவகைச்சமயமுமாகி, அவற்றினருத்தமாகிநிற்பேனுன் - அவற்றின்பொருள்களுமாகிநிற்பவனும்நானே, வேறென்றறியும்- பின்னமாகவறிகின்ற, பொருள்களுமாய்-பதார்த்தங்களாயும், வேருய்விளங்குகின்றேனுன் - அன்னியமாயும்பிரகாசிக்கின்றவனும்நானே, ஆறுஞ்சிந்தையழிந்து - தணிந்தசிந்தைநசித்து, ஒன்றுமறிவாலறியும் - ஏகமாகியஞானத்தினுலறியும், அறிவுநான் - ஞானமும்நானே. எ - று. (கசச)

தோன்றுகின்றவொளியவைநான்றொடர்ந்தேசெறியுமிருளதுநா
னூன்றங்கமைந்தோருளமேவியறிவாய்நின்றேயறிபவனு
னூன்றும்பொருள்கண்மேலோடுமுணர்வாவதுநானுணர்பவனுன்
சான்றங்காகியெப்பொட்குஞ்சலியாதென்றுநிற்பவனுன்.

இ - ள். தோன்றுகின்ற - தோற்றுகின்ற, ஒளியவைநான் - பிரகாசங்களும்நானே, தொடர்ந்தேசெறியும் -தொடர்ந்துநெருங்குகின்ற, இருளவைநான் - அந்தகாரங்களும்நானே, ஊன்றங்கமைந்தோருளமேவி - உணர்வுபொருந்தினவர்கள் மனத்தையடைந்து அவ்விடத்தில், அறிவாய்நின்றே - ஞானமாகநின்றே,அறிபவனுன்- அறிபவனும்நானே, ஊன்றும்பொருள்கள்மேலோடும்- நிலைபெற்றபொருள்கள் மேற்செல்லுகின்ற, உணர்வாவதும் - அறிவாவதும், நான் - நானே, உணர்பவனுன் - (அவைகளை) அறிபவனும்நானே, எப்பொருட்கும் - சகலவத்துக்களுக்கும், சான்றங்காகி - அவ்விடத்திற்சாக்ஷியாகி, சலியாது - அசையாமல், என்றும் - எக்காலத்தும், நிற்பவனுன் - நிற்கின்றவனும்நானே. எ - று. (கசடு)

பாடுமிசையாயவ்விசையின்பயனுயறிந்துநிற்பவனுன்
கூடுங்கந்தம்பலவாயுங்கொள்வானுயுமுள்ளேனுன்

காடுங்கல்லுமலைபலவுங்கடமும்படமுமாவேனா
னீடும்பொருளாயெவ்விடத்துநிறைந்தவொளியாய்நிகழ்பவனான்.

இ - ள். பாடுமிசையாய் - பாடுகின்றகானமாயும், அவ்விசையின் - அந்தக்கானத்தின், பயனாய் - பலமாயும், அறிந்துநிற்பவனான் - அறிந்துநிற்கின்றவனும்நானே, கூடுங்கந்தம்பலவாயும்-கூடும்பலவாசனைகளாயும், கொள்வானாயும் (அவற்றைக்) கிரகிப்பவனாயும், உள்ளேனான்-இருக்கின்றவனும்நானே, காடும்-வனங்களும், கல்லும்- கற்களும், மலைபலவும்- பலகிரிகளும், கடமும்-குடங்களும், படமும்-படங்களும், ஆவேனான்-நானேயாகின்றேன், நீடும்பொருளாய்-பலபதார்த்தங்களாய், எவ்விடத்தும் - எல்லாவிடங்களிலும், நிறைந்தவொளியாய்-பூரணமாகியபிரகாசமாய், நிகழ்பவனான்-விளங்குகின்றவனும்நானே. எ-று. (ககசு)

அளவையோடங்கறிவானுமறியும்பொருளுமாவேனா
னுளவஞ்ஞானஞானமெனவுரைக்குமுண்மைப்பொருளவைநான்
விளையுங்கன்மசுகதுக்கமேவுங்காலமாவேனா
னுளமதாரவுணர்கின்றசுவையாறாகியுள்ளேனான்.

இ - ள். அளவையோடு - பிரமாணங்களோடு, அங்கு - அவ்விடத்தில், அறிவானும் - ஞாதாவும், அறியும்பொருளும் - ஞேயங்களும், ஆவேனான் - நானேயாவேன், உளவஞ்ஞானம் - பொருந்தியஅறியாமையும், ஞானம்-அறிவும், எனவுரைக்கும் - என்றுசொல்லப்படும், உண்மைப்பொருளவைநான்- உண்மையாகியபொருள்களும்நானே, விளையும் - உண்டாகும், கன்மசுகதுக்கம்-சுகதுக்ககருமங்கள், மேவுங்காலம் - அனுபவிக்கப்பொருந்துங்காலமும், ஆவேனான் - ஆகின்றவனும்நானே, உளமதார- உள்ளத்திற்பொருந்த, உணர்கின்ற - அறிகின்ற, சுவையாறாகி-அறுசுவைகளாகி, உள்ளேனான் - இருக்கின்றவனும்நானே. எ - று. (ககஎ)

தேவரெல்லாமாவேனான்றிகழுநரராயுள்ளேனான்
யாவரேனுங்கருவாகியிடுதற்கிசைந்தேயிருப்பவனான்
பாவபேதபுண்ணியங்கள்பலன்கள்சுவர்க்கமாவேனான்
மேவியடையும்புத்தியுநான்வீழுநிரயமாவேனான்.

இ - ள். தேவரெல்லாமாவேனான்- சகலதேவர்களாயுமாகின்றவனும்நானே, திகழுநரராயுள்ளேனான்-விளங்குகின்றமனிதராகவுறுபவனும்நானே, யாவரேனும்- யாவரானாலும், கருவாகியிடுதற்கு-கருவுருவாவதற்கு, இசைந்தே-(அவர்கள்மனோசங்கற்பத்தின்படி) இயைவுற்று, இருப்பவனான்-இருப்பவனும்நானே, பாவபேதபுண்ணியங்கள் - பாவபுண்ணியபேதங்களும், பலன்கள்-அவற்றின்பலன்களும், சுவர்க்கம் - சுவர்க்கமும், ஆவேனான் - நானேயாவேன், மேவி - விரும்பி, அடையும் - அடைகின்ற, புத்தியுநான்-புத்தியும்நானே, வீழும்- வீழ்கின்ற, நிரயமாவேனான்-நரகமும்நானேயாவேன். எ-று. (ககஅ)

கரணம்பன்னான்காவேனான்சரணியாயகாரணனான்
சரணந்தருதேசிகனாகித்தன்னுளடங்குந்தன்மையனான்
புரணந்திகழ்பேரொளியோவாப்போதமாயபூரணனான்
கரணங்கடந்தவெனையென்றுங்காண்பார்காணப்படுவேனான்.

இ-ள். கரணம்பன்னான்காவேன்-சொல்லுகின்றநான்குகரணங்களுநானேயாவேன், கரணியாயகாரணனான்-அக்கரணங்களையுடையகாரணனானசீவனும்நானே, சரணந்தரும்- திருவடிசூட்டும், தேசிகனாகி-குருவாயும், தன்னுளடங்கும் - தன்னிடத்தடங்குகின்ற, தன்மையனான்-இயல்பையுடையசீடனாயுமிருப்பவனும்நானே, புரணந்திகழ் - பூரணமாய்விளங்கும், பேரொளியோவா- உயர்ந்தபிரகாசமாறுபடாத, போதமாய - ஞானமாகிய, பூரணனான் - பரிபூரணனும் நானே, கரணங்கடந்த - அந்தக்கரணபாவனையைக்கடந்துநின்ற, எனையென்றுங்காண்பார் - என்னைஎக்காலத்துங்காண்பவர்களுக்கு, காணப்படுவேனான் - காணப்படுபவனும்நானே. எ - று. (ககக)

நாதமாகிமந்திரங்கணானாவாகியுள்ளேனான்
பேதமாகிநினைந்திருந்துபேணுந்தியானமாவேனா
னோதலாகுமவத்தைபலவொன்றாயறிவாயுள்ளேனா
னேதமில்லாவெப்பொருட்குமுள்ளேயிலங்கியிடுபவனான்.

இ-ள். நாதமாகி - ஒலியாகி, மந்திரங்கணானாவாகி - நானாவிதமந்திரங்களாகி, உள்ளேனான் - உள்ளவனும்நானே, பேதமாகி - பற்பலபேதங்களாகி, நினைந்திருந்து-கருதியிருந்து, பேணும்-விரும்புகின்ற, தியானமாவேனான்-தியானமும்நானேயாகின்றேன், ஓதலாகும் - சொல்லப்படும், அவத்தைபல-அவத்தைகள்பலவாயும், ஒன்றாய் - ஒன்றாயும், அறிவாய் - அறிவாயும், உள்ளேனான் - உள்ளவனும்நானே, ஏதமில்லா- குற்றமில்லாத, எப்பொருட்கும்- எவ்வகைவஸ்துக்களுக்கும், உள்ளே - உள்ளாக, இலங்கியிடுபவனான் - விளங்குபவனும் நானே. எ - று. (கஉ0)

யாதொன்றருத்தமுண்டில்லையென்னுமுரைகளிரண்டினுக்கும்
யாதொன்றருத்தந்தோன்றுமென்றுந்தோன்றாதென்றுஞ்சொல்லுத
தீதொன்றின்றியிவையனைத்துந்திகழுமென்றனுருவென்றே [ற்குந்
யோதுமையமோரிடத்துமுளதன்றுண்மையுரைக்குங்கால்.

இ - ள். உண்டில்லையென்னும் - இருக்கின்றதெனவுமில்லையெனவும் சொல்லுகின்ற, உரைகளிரண்டினுக்கும் - இருவகைச்சத்தார்த்தங்களுக்கும், யாதொன்றருத்தம் - யாதொன்றுபொருளோ (அதுவும்), தோன்றுமென்றும்- தோற்றுமென்றும், தோன்றாதென்றும் - தோற்றாதென்றும், சொல்லுதற்கும் - உரைப்பதற்கும், யாதொன்றருத்தம்-யாதொன்றுபொருளோ (அது

வும்), நீதொன்றின்றி - ஒருநீங்குமின்றி, இவையனைத்தும் - இவைகளனைத்தும், நிகழும் - விளங்குகின்ற, என்றனுருவென்றே -எனதுவடிவமென்றே, ஓதும்-(வேதங்களெல்லாம்) சொல்லும், உண்மையுரைக்குங்கால் - சத்தியமாய்ச்சொல்லுங்கால், ஐயம்-சந்தேகமானது, ஓரிடத்தும்-ஒருவிடத்தும், உளதன்று - உளதன்றாகும். எ - று. (கஉக)

வேறு.

யாதினைநித்தமுள்ளபுத்தமேசுத்தமென்றிங்
கோதிடுமறைதானென்றனுண்மையேநிகழும்வண்ணந்
தீதினையொழிந்தவந்தப்பூரணமதுவேயாமென்
றோதிடுமெய்யேயிங்கோரையமுமுள்ளதன்றே.

இ - ள். யாதினை - எந்தவத்துவை, நித்தமுள்ள - நித்தியமாயுள்ள, புத்தமே - பரிபூரணஞானமென்றும், சுத்தமென்று - பரிசுத்தமென்றும், இங்கு - இவ்விடத்தில், என்றனுண்மையேநிகழும்வண்ணம் - என்னுடையவுண்மைவிளங்கும்படி, ஓதிடுமறை - வேதஞ்சொல்லும், தீதினையொழிந்த-தீதில்லாத, அந்தப்பூரணமதுவே - அந்தப்பூரணவத்துவே, யாமென்று - நாமென்று, ஓதிடும் - சொல்லுங்கள், மெய்யே - இதுசத்தியமே, இங்கு- இங்ஙனம், ஓரையமுமுள்ளதன்று - ஒருசந்தேகமுமில்லை. எ - று. (கஉஉ)

அகமெனவறியப்பட்டுநிற்கின்றபொருளுமாகித்
தகைமையிலிதமென்றுன்னத்தக்கவிப்பொருளுமாகிச்
சுகமுடைச்சற்சித்தாமென்னுருவமேதோன்றுமென்று
மிகவுரைசெய்யலுற்றான்வேறுருவிலாதவண்ணம்.

இ - ள். அகமெனவறியப்பட்டு - நானென்றுணரப்பட்டு, நிற்கின்ற பொருளுமாகி - இருக்கின்றபுசிப்பவனாகியும், தகைமையில் - பெருமையாக, இதமென்றுன்னத்தக்க - இதுவென்றுகருதத்தக்க, இப்பொருளுமாகி - இந்தப்போக்கியப்பொருளாகியும், சுகமுடை-பிரமானந்தமுடைய, சற்சித்தாமென்னுருவமே - சத்துச்சித்தாகியவென்னுடைய சொருபமே, தோன்றுமென்று - விளங்குமென்று, வேறுருவிலாதவண்ணம்- அன்னியப்பொருளொன்றுமில்லாதவண்ணம், மிகவுரைசெய்யலுற்றான் - சிவபெருமானார்மிகவுந்திருவாய்மலர்ந்தருள்செய்கின்றார். எ - று. (கஉங)

அ-கை. எனதுநிச்சயமிந்தப்பிரகாரமாதலினாலே ஸார்வான்மியத்தைப்பிரதிபாதிக்குஞ்சுருதியும் அதன்பொருளைச்சொல்லுகின்றபிரமதேவருஞ்சத்தியவாதிகள் தானெக்கூறுகின்றார்.

வேறு.

நானேமுழுதுமெனையொழியநாடிற்சிறிதும்வேறில்லை
யானபொருளையருமறைதானறையும்படியானதனாலும்

யானுமிசைத்தபடியாலுமிதுவேதிட்மாயுளபொருடா
னூனமின்றிநான்முகனுமுரைத்ததுங்கட்குண்மையதே.

இ - ள். நானேமுழுதும் - நானேயனைத்தும், நாடில் -ஆராயில், எனை யொழிய - என்னைத்தவிர, சிறிதும் -கிஞ்சித்தும், வேறில்லை-அன்னியமில்லை, அருமறைதான் - அருமையாகியவேதங்களும், ஆனபொருளை - (அப்படி) யானபொருளையே, அறையும்படியானதனாலும்-சொல்லுகின்றதன்மையையுடையனவாதலாலும், யானுமிசைத்தபடியாலும் - நாமும்அருள்செய்ததன்மையினாலும், இதுவே- இதுவே, திடமாயுள்ளபொருடான்-நிச்சயமாயுள்ளபொருளோாகும, ஊனமின்றி-குறைபாடின்றி, நான்முகனும் - பிரமாவும், உங்கட்கு - உங்களுக்கு, உரைத்தது - உபதேசித்ததுவும், உண்மையதே - மெய்ம்மைதான். எ - று. (கஉச)

வேறு.

இப்பொருளையப்பட்டோரிறப்பர்கள்கணத்தின்மெய்யே
மெய்ப்படுபொருளையென்றும்விடுதனிச்சயமதாகும்
இப்பொருளையமின்றியறிந்தவன்பவபாசத்தை
மெய்ப்படவொழிந்துமேலாமொளியினையடையுமன்றே.

இ - ள். இப்பொருள் - இந்தப்பொருளில், ஐயப்பட்டோர் - சந்தேகமுற்றவர்கள், இறப்பர்கள்கணத்தில் - ஒருகணத்திலழிவார்கள், மெய்யே - இதுசத்தியமே, மெய்ப்படுபொருளை - அபரோக்ஷசாக்ஷாத்காரப்பொருளை, என்றும் - எக்காலத்தும், விடுதல்-விட்டுவிடுதலும், நிச்சயமதாகும்-உண்மையாகும், இப்பொருள் - இந்தவத்துநிச்சயத்தை, ஐயமின்றி - சந்தேமில்லாமல், அறிந்தவன் - உணர்ந்தவன், பவபாசத்தை - சனனமரணமாகியபாசத்தை, மெய்ப்பட - உண்மையாக, ஒழிந்து - நீங்கி, மேலாமொளியினை - அபரோக்ஷசாக்ஷாத்காரசுபாவத்தை, அடையும் - அடைவான். எ - று. (கஉரு)

பாசமோசகனுமீசன்பகர்ந்தருள்செய்துதன்னை
நேசமோடயன்மாறம்மைநீடுறத்தழுவிக்கொண்டு
ஆசிலாவமரர்தம்மையருட்கண்ணுலமைத்துநோக்கிச்
சோதியானந்தவெள்ளச்சுகருபராமினென்றான்.

இ - ள். பாசமோசகனுமீசன் - (இந்தப்பிரகாரமாக) சமுசாரமோசகனுகியசிவபெருமான், தன்னை - தனதுமகிமையை, பகர்ந்தருள்செய்து - திருவாய்மலர்ந்தருளிச்செய்து, நேசமோடு- பிரியத்தோடு, அயன்மால்தம்மை- பிரமாவையும் திருமாலையும், நீடுறத்தழுவிக்கொண்டு - நன்றாகஆலிங்கனஞ்செய்துகொண்டு, ஆசிலா - குற்றமற்ற, அமரர்தம்மை - தேவர்களை, அருட்கண்ணுலமைத்துநோக்கி - தயாதிருட்டியாற்பார்த்து, சோதியானந்தவெள்ள- விளங்கும்பிரமானந்தவெள்ளமாகிய, சுகருபராமினென்றான் - சுகருபமுடையவராவீர்களென்றருள்செய்தார். எ - று. (கஉசு)

சாந்தமெய்க்கருணைமேனிச்சம்புவையமரரெல்லா
மாய்ந்தபேரன்பினலேயடியிணைமலர்கடம்மே
லேய்ந்தமாமலருநீருமிலையொடுபலமுங்கைக்கொண்
டாந்தனையிறைஞ்சியேத்தியருச்சனைசெய்துநின்றார்.

இ-ள். (இவ்வண்ணந்திருவருள்செய்த) சாந்தமெய்க்கருணைமேனி-சாந்தமும்மெய்த்திருவருளுமேதிருமேனியாகவுடைய, சம்புவை -மகாதேவரை, அமரரெல்லாம் - தேவர்களெல்லாரும், ஆய்ந்த-ஆராய்ந்தறிந்த, பேரன்பினலே-மேன்மையாகியபத்தியினலே, அடியிணைமலர்கடம்மேல்-உபயபாதபங்கயங்களின்மீது, ஏய்ந்த - இயைவாகிய, மாமலரும் - உயர்ந்தபுஷ்பங்களும், நீரும்-தீர்த்தங்களும், இலையொடு - பத்திரங்களோடு, பலமும்-கனிவர்க்கங்களும், கைக்கொண்டு - கையிற்கொண்டு, ஆந்தனை - தங்களால்ஆனமட்டும், இறைஞ்சி-வணங்கி, ஏத்தி - துதித்து, அருச்சனைசெய்துநின்றார் - அருச்சித்துநின்றார்கள். எ - று. (கஉள)

வேறு

உலகமியாவுமளந்தருளுமுலப்பில்கீர்த்திநாரணனு
மிலகுந்தனதுகாரணமாமீசன்பாதபங்கயத்தைத்
தலையின்மிசையேவைத்தருளித்தரியாவன்பாற்றானழிந்தான்
மலரின்மிசையோனவ்வடிகள்மறந்தேதன்னைவைத்திருந்தான்.

இ - ள். உலகமியாவும் - சகலசகங்களையும் ,அளந்தருளும், அளந்தருளிய, உலப்பில் - கெடுதலில்லாத, கீர்த்தி - கீர்த்தியையுடைய, நாரணனும் - திருமாலும், இலகும்- விளங்கும், தனதுகாரணமாம்-தனக்குக்காரணனாகிய, ஈசன் - உமாபதியினது, பாதபங்கயத்தை - திருவடித்தாமரைகளை, தலையின் மிசையே - சிரசின்மீதே, வைத்தருளி - வைத்துக்கொண்டு, தரியாவன்பால்-தாங்கற்கரியவன்பினல், தானழிந்தான் - தன்னைத்தானேமறந்தான், மலரின் மிசையோன் - பங்கயாசனனாகியபிரமாவும், அவ்வடிகள் - (விட்டுணுவைப் போல) அவ்வுமாபதியினதுதிருவடிகளை, வைத்து -தலைகளில்வைத்துக்கொண்டு,தன்னை - தன்னை, மறந்தே - மறந்து, இருந்தான் - இருந்தான். எ - று. ()

வேறு.

தேவர்க்குந்தேவனாய பெருமான்றன்கழல்செறிந்த
யாவர்க்கும்பாசநீக்கியெடுத்திடலியல்பாயுள்ளான்
மூவர்க்குந்தெரியாவுண்மைப்பொருளானதற்பாவத்தை
யாவர்க்குந்தெரியும்வண்ணமின்பக்கூத்தாடலுற்றான்.

இ - ள். தேவர்க்கும்-தேவர்களுக்கும், தேவனாய - தேவராகிய, பெருமான் - மகாதேவரும், தன்கழல்செறிந்த - தமதுதிருவடிமுன்னெருங்கிநின்ற, யாவர்க்கும் - சகலருக்கும், பாசநீக்கி - பவபாசங்களையொழித்து, எடுத்திடல் - கரையேற்றுந்தன்மையை, இயல்பாயுள்ளான் - இயற்கையாகவுடை

யவருமாகியஎம்பிரானுர், மூவர்க்குந்தெரியா-திரிமூர்த்திகளுக்குந்தெரியாத, உண்மைப்பொருளான- எதார்த்தவத்துவாகிய, தற்பாவத்தை - தனதுசுயஞ் சொருபத்தை, யாவர்க்கும் - சகலருக்கும், தெரியும்வண்ணம் - தெரியும்படி, இன்பக்கூத்தாடலுற்ருன்- ஆனந்தநடனஞ்செய்தருளத்தொடங்கினுர். எ-று.

வேறு.

மேலாயருள்சேராகரமாய்வேறென்றிடுதற்கரியவளுங்
கோலாவளவில்பேரன்பாற்கூத்தன்றனையேபார்த்தருளிக்
காலாலாட்டனக்கியையக்கையாற்ருளக்கதிசெய்ய
மாலேமுதலாம்வானேர்கள்வலவர்மகிழ்வாலாடினரால்.

இ-ள். மேலாய் - மேன்மையாயும், அருள்சேராகரமாய்- கருணையெல்லாஞ்சேருதற்குறைவிடமாயும், வேறென்றிடுதற்கரியவளும்- (சங்கரருக்கு) வேறென்றுசொல்லுதற்கருமையானவளாயும் விளங்குகின்றசங்கரியும், கோலா - சூழ்ந்து, அளவில்பேரன்பால் - அளவில்லாதபேரன்பினுல், கூத்தன்றனையேபார்த்தருளி - ஆனந்தநடராஜமூர்த்தியாகியதனது பதியையே பார்த்துக்கொண்டு, காலாலாடனக்கியைய - (அவரது) திருப்பாதத்தாற்செய்யும் நடனத்துக்கேற்க, கையாற்ருளக்கதிசெய்ய-திருக்கைகளாலேதாளம்போட, மாலேமுதலாம் - விட்டுணுமுதலாகிய, வானேர்கள் - தேவர்கள், வலவர் - இன்னுமுள்ளசமர்த்தர்களனைவரும், மகிழ்வால் - ஆனந்தத்தால், ஆடினர் - திருத்தஞ்செய்தார்கள். எ - று. (கரு௦)

பேரானந்தக்கடலாயபெருமான்வணங்குந்தேவர்பிரான்
பாராவெல்லாவமரரையும்பரிந்துள்ளுவகைகூர்ந்தெவர்க்குந்
தீராவின்பமளித்தருளித்தெரிவையொருபாலுடனுகி
யாராலறியாவறிவுருவோனுங்கேயறிவிற்கரந்தனனுல்.

இ-ள். பேரானந்தக்கடலாய - ஞானனந்தக்கடலாகிய, பெருமான் - பெம்மானுகியும், வணங்குந்தேவர்பிரான் - வணங்குகின்றதேவர்களுக்கெல்லாந்அதிபராயுமெழுந்தருளியமகாதேவர், எல்லாவமரரையும் - சகலதேவர்களையும், பரிந்து - பரிவாகி, உள்ளுவகைகூர்ந்து - திருவுளத்திற்சந்தோஷமுற்று, பாரா - கடாக்ஷித்தருளி, எவர்க்கும் - அத்தேவரனைவர்கட்கும், தீராவின்பமளித்தருளி - நீங்காதபேரானந்தத்தைக்கொடுத்தருளி, தெரிவையொருபாலுடனுகி - ஒருபாகத்திற்பார்வதிதேவியோடுங்கூடினவராய், ஆராலறியாவறிவுருவோன் - யாராலுமறியாதஞானசொருபரானவர், ஆங்கே - அவ்விடத்தில், அறிவில் - சிதாகாயத்தில், கரந்தனன் - மறைந்தருளினுர். எ - று. (கருக)

அரியுமயனையணைத்துக்கொண்டமரர்முனிவர்தமையெல்லாந்
தெரியவன்பான்மிகநோக்கிச்சித்தங்களிகூர்ந்துளமகிழ்வா

னுரியவுலகந்தணியினுமாவுலப்பில்பெருஞ்சீர்வைகுண்டத்
தரிவைமலர்மேலவளோடுமரவினணைமேலமர்ந்தனனால்.

இ-ள். அரியும் - விட்டுணுவும், அயனை - பிரமாவை, அணைத்துக்கொண்டு - ஆலிங்கனஞ்செய்துகொண்டு, அமரர் - தேவர்களையும், முனிவர்தமையெல்லாம்-முனிவர்களெல்லாரையும், தெரிய-தெரியும்படி, அன்பால்மிகநோக்கி - தயையினால்மிகவுங்கடாக்ஷித்து, சித்தம் - உள்ளத்தில், களிகூர்ந்துள - மிகுந்துள்ள, மகிழ்வால் - சந்தோஷத்தினால், உரியவுலகம்-இந்திராதிதேவர்களுக்குரித்தாகியவுலகம், தணியினும் - அழிந்தாலும், உலப்பில் - கெடுதலில்லாத, மா -அழகிய, பெருஞ்சீர் - பெருஞ்செல்வத்தையுடைய, வைகுண்டத்து - வைகுண்டத்தில், அரிவைமலர்மேலவளோடும் - தேவியாகியதிருமகளோடும், அரவினணைமேல் - சர்ப்பசயனத்தில், அமர்ந்தனன் - இருந்தான். எ - று. (கந௨)

வேறு.

அயனுமீண்டதிசயத்தாலவசமாயழிந்துபின்னும்
பயனுறுமமரர்தம்மைப்பார்த்துமுன்பரிவினாலே
வயமெலாமுளதாய்ச்செய்யுமலர்மிசைமறையினோனுந்
தனதுவாய்திறந்துவார்த்தையுரைத்தனன்றழைக்கும்வண்ணம்.

இ-ள். அயனும் - பிரமாவும், மீண்டு - திரும்பவும், அதிசயத்தால் - பேருவகையால், அவசமாயழிந்து - பரவசமாய்த்தன்னைமறந்து, பின்னும் - திரும்பவும், பயனுறுமமரர்தம்மைப்பார்த்து - ஆன்மப்பிரயோசனமடைந்த தேவர்களைநோக்கி, முன்பரிவினால் - முன்னிருந்தவன்பினால், வயமெலாமுளதாய்ச்செய்யும் - அனைத்துந்தன்வசமுள்ளனவாகப்படைக்கும், மலர்மிசைமறையினோனும் - பங்கயாசனத்தின்மேவியபிரமதேவனும், தனதுவாய்திறந்து-தன்னுடையதிருவாய்மலர்ந்து, தழைக்கும்வண்ணம்-(தேவர்கள்) வாழும்படி, வார்த்தைஉரைத்தனன் - (இந்த) வார்த்தையையுரைசெய்தான். எ-று.

அ - கை. சந்தோகத்தினேழாமத்தியாயத்திற்சனற்குமாரரால்நாரதர்பொருட்டுப்பூமாவித்தையுபதேசிக்கப்பட்டது. அதனைக்கூறவிச்சைநண்ணினவராகி ஆன்மவித்தைக்குவேறுயவித்தைகள் சொருபாஞ்ஞானத்தைநீக்காதென்பதுமாத்திரமன்று பாபக்கிரந்தி அதன்னிமித்தமானசோகமிவைகளுக்குக்காரணங்களாகுமென்றுகூறப்பட்டது. இருக்குவேதமத்தியயனஞ்செய்திருக்கிறேனென்றதுமுதலியவற்றாலதனைக்கூறுகின்றார்.

மானிடரானோரென்றுமோதிடும்விச்சையெல்லா
மூனமாய்ப்பாசபெத்தமாக்கிடுமுண்மையாகத்
தானதாமறிவாம்விச்சையொன்றுமேபாசமான
வினமாமிருளைநீக்குமின்பநற்சோதியொன்றும்.

இ - ள். மானிடரானோர் - மனிதரானவர்கள், என்றும் - எக்காலத்தும், ஓதிடும் - சொல்லுகின்ற, விச்சையெல்லாம் - பரவித்தைக்குவேறாகியசகலவித்தைகளும், ஊனமாய் - ஈனமாய், பாசபெத்தமாக்கிடும் - பவபாசத்திற்கட்டுண்ணச்செய்யும், உண்மையாக - சத்தியமாக, இன்பநற்சோதியொன்றும் - நல்லஆனந்தப்பிரகாசமுடைய, தானதாம் - தானதுவேயாகிய, அறிவாம்விச்சை - அறிவானஆன்மவித்தை, ஒன்றுமே - ஒன்றுமாத்திரமே, பாசமான - பவபாசமான, ஈனமாம் - குறைவாகிய, இருளைநீக்கும் - அந்தகாரத்தை நீக்கிவிடும். எ - று.

ப - ம். விச்சையெல்லாமென்றதனால், வேதங்கூறியவாக்காதிகளினுபாசனைகளும்பெறப்பட்டது. அவ்விடத்துஇச்சைப்பிரகாரங் காமசாரனைகப் பவிக்கின்றனென்ற அந்தவந்தவாக்கியசேடங்களால் ஐஹிகபாரலவுகிகபல சாதனத்தன்மைகாணப்படுவதனால் ஞேயப்பிரமவுபதிஷ்டதத்துக்குப்பின்னங்களானவேதங்கள் ஸாம்ஸாரிகபலத்தைத்தருவனவென்பார், "ஊனமாய்ப்பாசபெத்தமாக்கிடும்" எனவும், சோகத்தைக்கடக்கின்றானான்மவித்தெனச்சுருதியிற்கூறப்பட்டபரவித்தை சமுசாரகாரணமாகியவஞ்ஞானவிருளைக்கெடுக்குமென்பார், "உண்மையாகத்தானதாமறிவாம்விச்சையொன்றுமேபாசமான வீனமாமிருளைநீக்கும்" எனவுங்கூறினர். (கஙச)

அ - கை. மற்றொரு வித்தைக்குச்சமுசாரத்தை நீக்குந்தன்மையேனில்லையெனக்கூறுகின்றார்.

தானாகுமறிவொன்றில்லாதவனுக்குத்துன்பவாழி
தானேயுண்டாவதென்றுந்தான்றனிற்றழைத்துள்ளோர்கட்
கானதெவ்வுருவுமாகியல்லவாமறிவாஞ்சோதி
தானாகும்வீடேயாதல்சங்கையொன்றில்லையன்றே.

இ - ள். தானாகும் - தானாகின்ற, அறிவொன்றில்லாதவனுக்கு - ஆன்மவித்தையொன்றில்லாதவனுக்கு, துன்பஆழி - சோகசமுத்திரமானது, தானேயுண்டாவதென்றும் - எக்காலத்துமியல்பாகவேயுண்டாகின்றது, தான்றனிற்றழைத்துள்ளோர்கட்கு - தன்னிடத்திற்றானாகவேவாழ்ந்திருக்கின்றவர்களுக்கு, ஆனது - நீங்காமல், எவ்வுருவுமாகி - சகலரூபமுமாகி, அல்லவாம் - தன்னில்வேறில்லாமலுமிருக்கின்ற, அறிவாஞ்சோதி - ஞானமாகியபிரகாசமே, தானாகும்வீடேயாதல் - தானாகியமோக்ஷசொரூபமாதலில், சங்கையொன்றில்லை - ஒருசந்தேகமுமில்லை. எ - று.

கருத்து - அஞ்ஞானமேசமுசாரகாரணமாதலால் அனான்மவிஷயங்களானவித்தைகளாலதற்கழிவில்லை ஆன்மாவினதுயதார்த்தஞானத்தாலாவரணவித்தைநீங்கிடில்உபாதானமில்லாததாகிச்சமுசாரரூபமானசோகமுதிக்காததனால் முத்தியுண்டாவதிற்சமுசயமில்லையெனவாம். (கஙரு)

அ-கை. நாமமுதற்பிராணாந்தங்களானதத்துவங்களைப் பரதத்துவத்தி ற்புத்திசெல்லும்பொருட்டுபாயமாகச்சோபானக்கிரமமாயுபதேசித்துப் பூமாவத்துவேஅறியத்தக்கதென்றனவச்சின்னசுசுருபவியாபகனானவான்மாவை யறியத்தக்கவனாகப்பிரதிக்கினைசெய்து எவ்விடத்தில்வேற்றுப்பொருளைப்பார்க்கின்றானில்லையோவென்றசுருதியிற்கூறியபூமாலக்ஷணத்தைக்கூறுகின்றார்.

வேறு.

யாவனொருவன்றனையிகழ்ந்தேயளவில்வேறுபடக்கண்டு
மியாவனொருசொல்வேறுபடக்கேட்டுமறிந்தும்வருகின்றா
னியாவனொருவன்றனக்கென்றுஞ்சிறுமையதுவேபிறப்பிறப்புப்
போவதில்லாக்காரணமுமதுவேயென்றுபுகன்றனனால்.

இ-ள். யாவனொருவன் - எவனொருவன், தனையிகழ்ந்தே-தானாகியபிரமத்தையுதாசீனம்பண்ணி, அளவில் - அளவில்லாத, வேறுபடக்கண்டும் - பின்னபின்னங்களாகப்பார்த்தும், யாவன் - எவன், ஒருசொல் - ஒருசொல்லாயினும், வேறுபடக்கேட்டும் - பின்னமாகக்கேட்டும், அறிந்தும்வருகின்றான் - (அப்படியேவேறுபட) அறிந்தும்வருகின்றவன், யாவன் - எவனோ, ஒருவன்றனக்கு - அந்தஒருவனுக்கு, என்றும்- எக்காலத்தும், அதுவேசிறுமை - அதுவேசிறுமையாகும், பிறப்பிறப்பு-சனனமரணம், போவதில்லாக்காரணமும்- நீங்காதகாரணமும், அதுவேயென்று - அதுவேதானென்று, புகன்றனன் - சொன்னான். எ-று.

கருத்து. பூமாவத்துவுக்குப்பிரதியோகியாக அற்பவத்துவினிலக்கணத்தை எவ்விடத்தன்னியத்தைப்பார்க்கின்றானோவென்றது முதலியவற்றாற்சுருதிபிரமாதிரு பிரமாண பிரமேயவிவகாரமுடையது அநித்தியமென்றுஅறிந்து அடையும் சவுகரியத்தின்பொருட்டதனைமுன்பேகூறியதென்றறிக. (கநகூ)

அருளினாலியாவன்றன்கணிவையில்வேறொன்றுகாணா
தருளினால்வேறுகேளாதறிந்திடாதிருக்கிலஃதே
யருளதாம்பெருமைதானுமழிந்திடாச்சுகமுமெல்லா
விருளிலாவீடுதானுமென்றனனிமையோர்க்கெல்லாம்.

இ-ள். அருளினால்-சிவப்பிரசாதத்தால், இயாவன் - எவன், தன்கண்- ஆன்மாவினிடத்தில், இவையில் - இவைகளில், வேறொன்றுகாணாது - வேறொன்றையுங்காணாமலும், அருளினால் - அந்தப்பிரசாதத்தினால், வேறுகேளாது - வேறொன்றையுங்கேளாமலும், அறிந்திடாது - அறிந்திடாமலும், இருக்கில் - இருந்தால், அஃதே - அதுவே, அருளதாம் - சிவப்பிரசாதமென்னும், பெருமைதானும் - பெருமையும், அழிந்திடாச்சுகமும் - நாசமில்லாதவின்பமும், எல்லாவிருளிலா - ஓரிருளுமில்லாத, வீடுதானும் - மோக்ஷமும், என்றனனிமையோர்க்கெல்லாம் - என்றுதேவர்களுக்கெல்லாங்கூறினான். எ-று.

கருத்து. திரிபுடிவிவகாரமேற்தவத்துவிலில்லையோஅஃதனவச்சின்னபூம சத்தாபிதேயமுடையவான்மாவெனவும், யாதுபூமாவோ அதுவேசுகமென்றசு ருதிவாக்கியத்தின்பொருளானஅபரிச்சின்னவான்மவத்துவேசுகம்நிரதிசயமா னமுத்தியுமெனவும், பரிச்சின்னத்திலொருசுகமும்இல்லை பரிச்சேதத்தாற்ப யமவசியமுண்டாதலாலனவச்சின்னசுகரூபமானவான்மநிட்டையே சம்பாதி க்கத்தக்கதெனவுங்கொள்க. (கஙஎ)

வேறு

யாவரொருவர்தமக்கென்றுஞ்சிறுமையுண்டேற்சுகமிலையா
மோவலில்லாதளவுபடாதொன்றுமறிவாய்நின்றோர்கட்
காவதில்லைபிறப்பிறப்புமழுந்துபோக்குவரவுமிலை
மேவுபந்தம்வீடுமிலையென்றேவிரிஞ்சன்விளம்பினனால்.

இ - ள். யாவரொருவர்தமக்கு - எவர்களுக்கும், என்றும் - எக்கா லத்தும், சிறுமையுண்டேல் - (பேதமென்னுஞ்) சிறுமையுண்டாகில், சுக மிலையாம் - சுகமில்லவேயில்லையாம், ஓவலில்லாது - நீங்குதலில்லாமல், அளவுபடாது - திரிவிதபரிச்சேதமில்லாமல், ஒன்றும் - ஏகமாகிய, அறிவாய் நின்றோர்கட்கு - ஞானசொரூபமாய்நின்றவர்களுக்கு, பிறப்பிறப்பும் - ஜன னமரணங்களும், ஆவதில்லை - உண்டாதலில்லை, அழுந்துபோக்குவரவுமிலை - (துன்பத்துள்) அழுந்தத்தக்கசமாகமமுமில்லை, மேவு - பொருந்துகின்ற, பந் தம் - பந்தமும், வீடும் - மோக்ஷமும், இலையென்றே - இல்லையென்றே, விரி ஞ்சன் - பிரமதேவன், விளம்பினன் - சொன்னான். எ - று.

கருத்து. உள்ளபடிபூமாவத்துஅறியப்படுங்கால்அதிலனைத்துமசொரூ பமாகவேநன்றாயிலயிக்கப்படுகின்றமையின் திரும்பவுத்தானதனைஅடைவதி ன்றென்றுணர்க. (கஙஅ)

அ - கை. அதற்குத்திருட்டாந்தங்கூறுகின்றார்

வேறு.

தன்னிலேயாக்கப்பட்டகனவினிலுலகமெல்லாந்
தன்னுணர்நனவதாகத்தனிலவையடங்குமாபோற்
றன்னிலேதோன்றுமெல்லாப்பொருள்களுந்தானேயானாற்
றன்னிலேதன்னிற்றானேயாமதேதனில்வேறின்றே.

இ - ள். தன்னிலே - தன்னிடத்திலே, ஆக்கப்பட்ட - உண்டாக்கப்பட்ட, கனவினில் - கனவிடத்தில், உலகமெல்லாம் - சகமனைத்தும், தன்னுணர்நனவ தாக - தன்னுடையவுணர்வாகியசாக்கிரமாக, தனில் - தன்னிடத்தில், அவை யடங்குமாபோல் - அவையனைத்துமடங்குந்தன்மைபோல, தன்னிலே - தன் னிடத்திலே, தோன்றும் - உண்டாகும், எல்லாப்பொருள்களும் - சகலவஸ்துக்க ளும், தானேயானால் - தானேயாகில், தன்னிலே - தன்னிடத்திலே, தன்னில்தா

னேயாமது-இயல்பாகத்தானுகவேயாகும், தனில்வேறின்று-தனக்கன்னியமா கயாதொன்றுமில்லை. எ - று.

கருத்து. நெய்யானது அக்கினியின்சேர்க்கையில்லாதகாலத்திற் கடின மாகி அதன்சம்பந்தத்தால் அக்கடினந்தன்னிலிலயிப்பதுபோலப் பிரமமுந் தனதுகோசரமானஞானத்திற்குமுன்பிரபஞ்சமாகிப் பின்பு ஞானத்தால் நிருவிகாரமாகின்றதெனில்விகாரப்படுவதனுல்அநித்தியமாகுமெனவடநூலிற் கூறியவிவ்வுவமையைக்கூறுது அபரிச்சின்னநிருவிகாரப்பிரமவத்துவிற்சொப் பனப்பிரபஞ்சத்தோற்றம்போல் சருவசகங்களுந்தோற்றுதலாற் ரேற்றமே சரீரமாகியவஃது தனதாச்சிரயத்துக்குவிகாரத்தைச்செய்யாதென்பதுகருதி க்கனவுவமைமாத்திரங்கூறினரென்க. (கருக)

அ - கை. சிவபெருமான்திருவருளாலெல்லாங்கூறப்பட்டதென்றுமுடி த்துக்கூறுகின்றார்.

வேறு.

எல்லாப்பொருட்குமேற்சுகமாமிதனையுங்கட்கேயும்வணம்
நல்லாருளங்கொணடராசநாதன்பாதத்தருளாலே
யெல்லாமென்றன்கருணையினுலுரைத்தேனிதன்றன்மேற்கேட்ப
தில்லாவண்ணமினியானுமியம்பவேண்டுவதுமிலதே.

இ - ள். எல்லாப்பொருட்கும் - எல்லாப்பொருள்களினுலுண்டாகுஞ் (சுகத்திற்கும்), மேற்சுகமாம் - மேலானவானந்தமாகிய, இதனை- இந்தப்பொ ருளை, உங்கட்கு - உங்களுக்கு, ஏயும்வணம் - பொருந்துபடி, நல்லார் - மகா ன்களது, உளங்கொள் - திருவுளமேயிடமாகக்கொண்ட, நடராசநாதன் - ஆனந்தநடராஜமூர்த்தியாயெழுந்தளியசிவபெருமானது, பாதத்தருளாலே - திருவடிப்பிரசாதத்தினுல், எல்லாம் - அனைத்தையும், என்றன் - என்னுடைய, கருணையினுல் - அன்பினுல், இதன்றன்மேல்- இதற்குமேலாக, கேட்பதில்லா வண்ணம் - கேட்கவேண்டியதில்லாதபடி, உரைத்தேன் - உபதேசித்தேன், இனியானும் - இதற்குமேல்நானும், இயம்பவேண்டுவதும் - சொல்லவேண்டு வதும், இலது - இல்லை. எ - று. (கச0)

ரு - மத்தியாயமுற்றிற்று. ஆ திருவிருத்தம் - ௩0௬.

---

உ

சிவாயபரமகுரவேநம:

## சு - வது- சாந்தோக்கியவுபநிடததாற்பரிய முரைத்தவத்தியாயம்.

---

அ-கை. இவ்வாறுதேசகாலமுதலிய அவச்சேதமில்லாத அத்துவிதீயசு த்சிற்சுகருபமேபிரமமாகஉபதேசிக்கப்பட்டது. அஃது மந்தபுத்திமான்களால் விரைவாகச்சாட்சாத்தாயறியக்கூடாமையின் இதயபுண்டரீகமத்தியில் சத்

தியகாமத்துவமுதலியகுணமுடையதாக அந்தப்பிரமத்தினுபாசனையைப்பிர மசரியமுதலிய சாதனமுடையமுமுட்சுவுக்குச்சுருதிஉபதேசிக்கின்றது. அத் தகரவித்தையை இவ்விடத்திற் கூறுகின்றார்.

பங்கயாசனத்திலிருந்திடும்பரமன்பழமறைபகர்ந்தவப்பரிசே
சங்கையாகாமற்சங்கரன்றிருவாய்மலர்ந்தநன்பரிசினைத்தானே
யங்குவானவர்கட்களிக்குமாறளித்துமளவிலாவருளினலந்த [ப்பான்
வெங்குமாய்நின்றபொருளைமீண்டுணரு மிடத்தையுந்தெளிவுறவிசை

இ-ள். பங்கயாசனத்தில் - தாமரைத்தவிசில், இருந்திடும் - வீற்றிரு க்கின்ற, பரமன் - பிரமனுனவன், பழமறை - புராதனமாகியவேதம், பகர் ந்தவப்பரிசே- சொல்லியஅந்தப்பிரகாரமே, சங்கையாகாமல்- ஐயமுருமல், சங்கரன் - (தனக்குச்) சிவபெருமான், திருவாய்மலர்ந்த - திருவாய்மலர்ந்த ருளிய, நன்பரிசினைத்தானே- நல்லபண்பினைத்தானே, அங்குவானவர்கட்கு - அவ்விடத்தில்தேவர்களுக்கு, அளிக்குமாறளித்தும் - எவ்வாறுஉதவவேண்டு மோஅவ்வாறுஉதவியும், அளவிலாவருளினல் - அளவில்லாததிருவருளினல், எங்குமாய்நின்ற- எவ்விடத்தும்பூரணமாய்நின்ற, அந்தப்பொருளை - அவ்வஸ் துவை, மீண்டு- திரும்பவும், உணருமிடத்தையும் - அறிகின்றவிடத்தையும், தெளிவுற- தெளியும்படி, இசைப்பான்-சொல்லுகின்றான். எ - று. (க)

வேறு.

புகலநின்றிடுபிரமபுரமெனும்பதியதனில்
தகரபுண்டரிகமெனுமகமிலங்கியதகர
ககனமுண்டதுமறைகள்கருதநின்றுளபிரம
மிகவிரும்புவர்பிறவிவிடவிரைந்துளவிமலர்.

இ-ள். புகலநின்றிடு- சொல்லாநின்ற. பிரமபுரமெனும்பதியதனில் பிரமபுரமென்னுமிச்சரீரத்தில், தகரபுண்டரிகமெனும்- (அற்பபரிணுமமுடை ய) தகரபுண்டரீகமென்கின்ற, அகம்-வீட்டில், இலங்கிய-விளங்குகின்ற, தக ரககனமுண்டு - தகராகாசமுண்டு, அது - அந்தத்தகராகாசமானது, மறை கள் - வேதங்களால், கருதநின்றுள - உணரும்படிநிற்கின்ற, பிரமம்- சச்சி தானந்தமாகியசிவமாகும், (அச்சிவத்தை,) பிறவிவிட - ஜனனநீக்கும்படி, விரைந்துளவிமலர்- தீவரதாமுமுட்சுக்கள், மிகவிரும்புவர் - மிகவும்விரும்பு வார்கள். எ - று.

ப-ம். பிரமத்தைஅபரோக்ஷமாக அடையுந்தலமானது வித்தியாதி காரியின் சரீரமென்பார், "புகலநின்றிடுபிரமபுரமெனும்பதி" எனவும், அற் ப்பரிணுமமான இதயபுண்டரீகத்தால் அவச்சேத்தியமாயிருத்தலால் சர்வக தமாயினுமற்பபரிணுமமாயிருப்பது போன்ற ஆகாயம் இதயபுண்டரீகமத்தி யில் அறியத்தக்கதாகவுபதேசிக்கப்பட்டது. அவ்வாகாயம் ஸத்தியஞானு னந்தமான பரசிவமேதான், வியாஸாசாரிகளும் ஆகாயமந்தலிங்கமானதனு

லென்னுஞ் சூத்திரத்திற்பிரமமென்று கூறினார்கள் - இவ்வாகாயநாமமுடையபரமசிவன் முமுட்சுக்களால் சமதமாதிசாதனத்துடன் கேட்கத்தக்கவன், சிரவணமுதலியசாதனங்களாலுண்டாகிய ஞானத்தால் அபரிச்சின்னனாக அறியத்தக்கவனென்பார், "மறைகள் கருதநின்றுள பிரமமிகவிரும்புவர்" எனவுங்கூறினார். (௨)

அ - கை. சங்கோசமுபாதிசம்பந்தத்தாலன்று ஆன்மாவிற்கு அஃது தேகமுதலியவற்றில் சுபாவமாகக் காணப்படுகின்றதென்றுசங்கித்துக்கூறுகின்றார்.

தெரியிடஞ்சிறிதலதுசிறியதன்றறிவுருவு
பெரிதெனும்படிநினைகபிரமமெங்குமுளதென
வுரியதொன்றுணர்வதுணர்வொழிவதென்பதுவுமுணர்
கரியழிந்துளதொர்பொருள்கழியநின்றதுவுமிலை.

இ-ள். தெரிஇடம்-காணப்படுவதாகியதகரபுண்டரீகம், சிறிதலது-அற்பமேயன்றி, அறிவுருவு- ஞானவடிவான அந்தத்தகராகாசமானது, சிறியதன்று-அற்பமன்று, பெரிதெனும்படிநினைக-பூரணத்தன்மையுடையதென்று உணரக்கடவீர்கள், பிரமம்-சித்ருபமாகியபிரமம், எங்குமுளதெனவுரியது-எவ்விடத்துமிருக்கின்றதென்று சொல்லத்தக்கது, ஒன்றுணர்வது - அறியப்பட்டவொருபொருளையும், உணர்வொழிவதென்பதுவும் - அறியப்படாததென்னும்பொருளையும், உணர்கரி - அறிகின்றசாக்ஷியை, அழிந்துளதொர்பொருள் - அழிந்துண்டாகின்றபொருள்கள், கழியநின்றதுவுமிலை- நீங்கிநிற்கின்றதுமில்லை. எ - று.

ப - ம். சித்ருபனுய்த்தானுன வான்மாவினது ஆவரணஞ்ஞானநீங்கியபின்பு சித்தைவெளிப்படுத்தாநின்றவந்தக்கரணத்தின்பரிச்சேதத்தால் சிவப்புப்படிகம்போல் சிதான்மாவின்கட்பரிச்சேதத்தோற்றமேயன்றி இயல்பன்றென்பார், "தெரியிடஞ்சிறிதலதுசிறியதன்றறிவுருவு" எனவும், உற்பத்திஸ்திதிமுதலியசகலகாலங்களினும் அத்தியாசிக்கப்பட்ட சகலபிரபஞ்சத்திற்குஞ் சித்திலக்கணப்பிரமமேசொருபமாதலாலும் அத்தியஸ்தமானது அதிஷ்டானத்திற்கு வேறில்லாததனுலும் காலம்வத்து இவைகளாலுண்டானபரிச்சேதமில்லாததென்பார், "பெரிதெனும்படிநினைக பிரமமெங்குமுளதெனவுரியதெனவும்" தோற்றுகின்றசகமனைத்தும் ஞானத்திற்குவிடயமானருபமாயும் அப்படியே அஞ்ஞானத்திற்கு விடயமான ருபமாயும் சாக்ஷிசின்மாத்திரனுனவான் மாவால் பிரகாசிக்கின்றமையிற் சிற்பிரகாசத்திற்கு வேறுயோரிடத்துமொன்று மில்லாததனுல் தேசத்தாலுண்டாகிய பரிச்சேதமுமில்லையென்பார் "ஒன்றுணர்வதுணர்வொழிவதென்பதுவு முணர்கரி" எனவுங்கூறினார். (௩)

அ-கை. ஜகமுந்தானேஏன்பிரகாசிக்காதென்றுசங்கித்துக்கூறுகின்றார்.

அறிவின்முன்பலதுசட்டவகிலமுண்டெனநிகழ்வு
பெறுவதன்றறிவினிலைபெறநிகழ்ந்ததுபிறிது
செறிவுரும்பொருளினனிசிறிதெனும்படிநிகழ்த
லிறைவனெங்கணும்விரவியெலையறும்படிநிகழும்.

இ - ள். அறிவின்முன்பலது - ஞானசொரூபமாகியபிரமத்தின்முன்பல்லாமல், சடவகிலம்- சடமானஉலகம், உண்டென - இருக்கின்றதாக, நிகழ்வுபெறுவதன்று - (தானே) விளக்கம்பெறுவதன்று, அறிவினிலைபெறநிகழ்ந்தது - சித்தினலேயேநிலைபெற்றுவிளங்குகின்றது, பிறிதுசெறிவுறும்பொருளின் - அன்னியமாய்க் கலந்துறும்பொருளினல், நனி - மிகவும்(அப்பிரமம்), சிறிதெனும்படி - ஸங்கோசமெனும்படி, நிகழ்தல்- விளங்குதலும், இறைவன்- வியாப்பியமான ஜகத்தை விளங்குவிக்கின்ற) சிவன், எங்கணும்விரவி, எங்கும்வியாபகனகி, எலையறும் படிநிகழும் - எல்லையில்லாதபடிவிளங்குகின்றான். எ - று.

கருத்து. திரிசியமானவஞ்ஞானத்தையும் அதன்காரியமான சகலஜகத்தையும் வியாபித்திருக்கின்றதனுல் சுபாவமாகவியாபகனேபரிச்சேதமோவெனில் அந்தக்கரணமுதலிய வற்ருலென்க. (ச)

அ-கை. இவ்வாறுகூறியபரமசிவத்தின்வியாபகத்தன்மை ஆகாயதிருட்டாந்தத்தாற் கூறுகின்ருர்.

அளவிலம்பரமெவளவறிசிதம்பரமவள
வுளதுவிண்புவியநிலமொளிபதங்கனுடுமதி
துளிதரும்புயன்மின்முதல்சொலவரும்பொருள்களினி
விளைபவென்றிவையிதயவெளியடங்கிடுமடைய.

இ - ள். அளவிலம்பரமெவளவு- அளவில்லாதஆகாயமானது எந்தமட்டும் (வியாபகமாயிருக்கின்றதோ), அறி-அறியாநின்ற, சிதம்பரமவளவுளது- (இதயகமலமத்தியில்) விளங்கியசித்தான தகராகாசமும்அந்தமட்டும் வியாபகமா யிருக்கின்றது, விண்- ஆகாயம், புவி - பூமி, அநிலம் - காற்று, ஒளி - அக்கினி, பதங்கன் - சூரியன், உடு - நக்ஷத்திரம், மதி- சந்திரன, துளிதரும் புயல் - மழைத்துளியைத்தருகின்றமேகம், மின் முதல்சொலவரும் - மின்னல்முதலாகச் சொல்லப்படும், பொருள்கள்-வஸ்துக்களும், இனிவிளைபஎன்றிவை - மேலும்உண்டாவன என்னுமிவைகள், அடைய - எல்லாம், இதயவெளி- தகராகாசத்தில், அடங்கிடும் - ஒடுங்கியிருக்கின்றன. எ - று.

கருத்து. பிரசித்தாகாசசாமியத்தால் சருவகதம்பிரமமென்பதேயன்றி அந்தப்பரிமாணமுடையதன்று. எதனுலாகாயம்பிருதிவி இவைகள்வியாபிக்கப்பட்டிருக்கின்றன வென்னுஞ்சுருதியினுற் பிரமத்திற்குவிண்முதலிய சருவஜகவியாபகத்தன்மை காணப்படுதலாலென்க. (ரு)

அ-கை. ஈசன்சருவவியாபகனே ஜீவனங்ஙனமன்று. தருமாதருமங்களுக்காசிரயனுதலாலென்னில்! கூடத்தவான்மாவேவியாபகஈசன். புண்ணியபாபங்கள் முதலியனஅந்தக்கரணதன்மங்களாதலால்அதற்குவேருகிச்சாக்ஷியானவான்மா அவைகளுக்காசிரயனுகான். புண்ணியபாபசம்பந்தமில்லாததனுல் அதன்காரியமானஜரைமரணமுதலிய அனைத்தும்அச்சாக்ஷிக்கில்லையென்றுகூறுகின்றார்.

இலதெனும்பொருளுமிவனிடையிலங்குதலினிறை
சொலவரும்பொருண்முழுதுநிலவினன் சுழலும்வினை
நலனுமன்றியதுநரைமரணமும்பசியைமுத
லுலகுறுந்துயர்முழுதுமுடையனன்றொருபொழுதும்.

இ - ள். இலதெனும்பொருளும் - இல்லையென்றுசொல்லப்பட்டவஸ்துக்களும், இவனிடை - இந்தஆன்மாவினிடத்தில், இலங்குதலின் - விளங்கலால், இறை- இந்தத் (தகராகாசசொரூபியான) சம்புவானவன், சொலவரும் - சொல்லப்பட்ட, பொருள்முழுதும் - வஸ்துக்களெல்லாவற்றினும், நிலவினன் - பிரகாசிக்கின்றனன், சுழலும்வினைநலனும்- சுழற்றுகின்ற நல்வினையும், அன்றியதும் - தீவினையும், நரை - நரையும், மரணமும் - மரணமும், பசியைமுதல் - பசிமுதலாகிய, உலகுறுந்துயர்முழுதும் - உலகமடையப்பட்டதுன்பங்கள் முழுதும், ஒருபொழுதும் - ஒருகாலத்தும், உடையனன்று - உடையவனல்ல. எ - று. (சு)

அ - கை. இவ்வாறுசகுணநிர்க்குணமானபிரமத்தினதுஞானமே அழிவில்லாதபலத்திற்குக்காரணமாகுமன்றி அக்கினிஹோத்திரமுதலியகருமங்கள் ஆகாதென்றசுருதியின்வாக்கியார்த்தத்தைச்சங்கிரகித்துக்கூறுகின்றார்.

வேறு.

பண்ணியதொழிறருபயன்களியாவையு
மண்ணிடைநுகர்ந்திடமாளுமாறுபோற்
புண்ணியவினைதரும்போகமியாவையும்
விண்ணிடையிருந்தனுபவித்துமீளுமால்.

இ - ள். பண்ணிய - செய்த, தொழில் - கிருஷியாதிகருமங்கள், தரு- கொடுக்கின்ற, பயன்களியாவையும் - பலன்கள்அனைத்தையும், மண்ணிடை - இப்பூமியினிடத்து, நுகர்ந்திட - புசித்திட, மாளுமாறுபோல்- (அப்பலன்கள்) நசிக்கும்விதம்போல், புண்ணியவினை -சற்கருமங்கள், தரும்-கொடுக்கின்ற, போகமியாவையும் - சுவர்க்கபோகமனைத்தையும், விண்ணிடைஇருந்து - பரலோகத்திலிருந்து, அனுபவித்து - புசித்து, மீளும் - அப்போகம்நசித்தவுடன் திரும்புவான். எ - று.

ப - ம். செயப்படுபொருள்கட்கெல்லாம் அனித்தியமென்னும்வியாப்தி

நியமமாதலின், "புண்ணியவினைதருபோகம்யாவையும்விண்ணிடைநுகர்ந்த நுபவித்துமீளும்" என்றார். (எ)

அ - கை. இவ்விடத்தில் ஆன்மாவையறியாமல் கர்மானுஷ்டானஞ்செய்கின்றவன் எவ்வுலகத்துமுள்ளபோகங்களைப்புசிக்கமாட்டான் இவ்விடத்தில் எவன்ஆன்மாவையறிந்துகருமங்களைச்செய்கின்றானோ அவன்சகலவுலகங்களின்போகங்களையும் புசிக்கின்றானென்றசுருதிவாக்கியப்பொருளைக்கூறுகின்றார்.

மெய்யினையுணர்ந்தவர்வினைகளியாவையுஞ்
செய்யினுஞ்செய்திலராவர்தேவர்காள்
துய்யநல்வினைகளேதொகுத்துமற்றையார்
வெய்யகர்மத்தராவிளம்பவேண்டுமே.

இ - ள். தேவர்காள் - தேவர்களே, மெய்யினையுணர்ந்தவர் - உண்மையானதன்னையறிந்தவர்கள், வினைகளியாவையும் - சகலகருமங்களையும், செய்யினும் - செய்தாலும், செய்திலராவர் - செய்யாதவர்களாவார்கள், மற்றையார் - தன்னைப்பரமாகஅறியாதபிறர்கள், துய்ய - பரிசுத்தமாகிய, நல்வினைகளே - சற்கருமங்களையே, தொகுத்தும் - ஒழுங்காகச்செய்தாலும், (அவர்களை),வெய்ய - கொடிதான, கர்மத்தரா - கன்மங்களைச்செய்தவர்களாக, விளம்பவேண்டும் - சொல்லவேண்டும். எ - று.

கருத்து. பிதிர்லோகவிச்சையுடையவனாகின்றானென்றது முதலியசுருதிவாக்கியத்தால் காமவிசேடங்களாகியசகலவுலகங்களினும் வித்துவானுக்கு அக்கன்மபோகங்கள்பவிக்கின்றன. உள்ளத்தின்கண்ணே சத்தியகாமமுதலிய குணங்களாலுபாசிக்கப்பட்டதகரப்பிரமம் நிரதிசியானந்தருபமாதலாற் சருவகாமங்களும் அதன்ஏகதேசமாதலினென்க. (அ)

அ - கை. சத்தோடும்அக்காலத்திலடைந்தவனாகின்றானென்றசுருதியால் சுழுத்தியில்அந்தப்பிரமம்அடையப்படுகின்றதனால்வித்துவான்போல் தூங்கினவனுஞ்சகலகாமங்களையடைந்தவனாக ஏனாகானெனச்சங்கித்துத்திருஷ்டாந்தத்தோடுங்கூறுகின்றார்.

வேறு.

பொற்பொருள்புதைத்தபுவியிற்புலனிலார்போய்
நிற்பினுமிடிப்பர்நனிசித்தமுலகத்தோர்
தற்பொருள்சுழுத்திதனிலுற்றுமதுதானே
யற்பமறிகிற்றிலரயர்ச்சிவலியையோ.

இ - ள். பொற்பொருள் - பொற்பொருளை, புதைத்த - புதைதிருக்கின்ற, புவியில் - பூமியில், புலனிலார் - அறிவில்லாதவர்கள், போய் - சென்று, நிற்பினும் - நின்றாலும், மிடிப்பர் - வறுமையுறுவார்கள், (அதுபோல),

னனி - மிகவும், நித்தம் - நாடோறும், உலகத்தோர் - உலகத்துள்ளவர்கள், தற்பொருள்-பரம்பொருளானது, சுழுத்திதனிலுற்றும்- சுழுத்தியிலிருந்தும், அதுதான் - அதைத்தான், அற்பம் - சிறிதும், அறிகிற்றிலர் - அறிகின்றாரில்லை, ஐயோ - ஐயோ, அயர்ச்சிவலி- (அவர்களது) அஞ்ஞானத்தின்வன்மைதானென்னே. எ - று.

கருத்து. புதையல்இருக்குமிடந்தெரியாதவனிதியடையாததுபோல் சுழுத்தியவத்தையில் சுயம்பிரகாசமானபிரமம் எல்லாப்பிராணிகளாலுமடையப்படினும்அஞ்ஞானவசத்தாலடையாரென்றுணர்க. (௯)

அ- கை. முற்கவியால்அதெப்படிஸுவர்ணநிதியென்றசுருதியின்பொருள்கூறப்பட்டது. இதயசப்தத்தின்பொருளாலுஞ் சருவகதமானபிரமம் இதயமத்தியிலிருக்கின்றதாகஉபதேசித்தசுருதியின்பொருளைக்கூறுகின்றார்.

விதம்படுமுளந்தொறும்விசேடவறிவாயுற்
றிதம்படுதலாலிதயமென்பரிறைதன்னைத்
திதம்படவிவன்றிறமறிந்தவர்கள்சேரும்
பதம்பிரமமல்லதுபகர்ந்திடுதலுண்டோ.

இ- ள். விதம்படும் - தொழில்படுகின்ற, உளந்தொறும்- சகலஇதயங்களிலும், விசேடவறிவாயுற்று - உயர்ந்தஞானசொரூபமாகஇருந்து, இதம்படுதலால் - சுகரூபமாயிருத்தலால், இறைதன்னை - சிவனை, இதயமென்பர்- இதயமென்றுசொல்வார்கள், இவன்றிறம் - இந்தச்சிவனதுதன்மையை, திதம்பட - உறுதியாக, அறிந்தவர்கள் - தெரிந்தவர்கள், சேரும்பதம் - அடையும்பதவி, பிரமமல்லது - பிரமமேயன்றி, பகர்ந்திடுதலுண்டோ - வேறுப்தவியுண்டென்றுசொல்லுவதுண்டுகொலோ, எ - று.

கருத்து. துக்கசம்பந்தமில்லாத பரமானந்தரூபமானபிரமத்தையடைகின்றானென விளங்கலில் இதயமத்தியிலிருக்கின்ற பிரமவிடயமானஞானத்திற்குத் தினந்தோறுமிவ்விதமாகவறிந்தவன் சுவர்க்கத்தை யடைகின்றானென்றுசுருதிகூறியபிரமப் பிராத்தியேபலமென்பதுபெற்றாம். (௧௦)

அ - கை. பின்புயாதொரு இந்தவான்மாவானவன் நன்றாயடைகின்றானென்றசுருதி முதலியவற்றாலுபதேசித்தபிரமத்தை யடையும்பிரகாரத்தைக் கூறுகின்றார்.

சுழுத்தியதனிற்றுயர்துவக்குமுடறன்னின்
றெழுப்பியுளதன்வடிவினுலிறையையெய்துற்
றழுத்தமுறயாவனதுவாகுமவனெங்கு
முழுத்தியுளதற்பரமமாகிமுடிவுற்றான்.

இ - ள். சுழுத்தியதனில் - சுழுத்திகாலத்தில், துயர்துவக்கும் - துன்பக்கயிற்றாற்கட்டுப்படும், உடறன்னின்று - இவ்வுடலினின்றும், எழுப்பியு

ள - எழும்பிய, தன்வடிவினுல் - தனதுயதார்த்தசொரூபமாகக்கொண்டு, இறையை - (பரஞ்சோதிசொரூபமுடைய) பரமசிவத்தை, எய்துற்று - (அபேதமாக) அடைந்து, அழுத்தமுற - அழுத்தமாக, யாவன்- எவன், அதுவாகும்- அச்சிவமாவான், அவன் - அவன், எங்கும் - எவ்விடத்தும், முழுத்தியுள - பூரணமாகவிருக்கின்ற, தற்பரமமாகி-தானனசொரூபமாகவே, முடிவுற்றுன்- மிஞ்சுகின்றுன், எ - று.

கருத்து. தூலசூக்குமசரீரமுதலானவற்றிலுள்ள அபிமானத்தைநீக்கிச் சுழுத்தியவஸ்தையிற் சாக்கிரசொப்பனங்களிலுள்ளவிடையபோகங்களாலுண்டானகலக்கங்களில்லாததனுல் பிரசன்னனுகியசின்மாத்திரசொரூபசாக்ஷியெவனே அவன் தகரப்பிரமவித்தையால் அஞ்ஞானஇலக்கணமுடையகாரணசரீரத்தையும் நீங்கி விகாரசம்பந்தமில்லாதகேவலசைதன்னியப் பிரகாசமானபரசிவசொரூபத்தைத்தானுகவறிந்துஅவித்தையாலுண்டானபரிச்சேதத்தைவிட்டுத்தன்சொரூபமாகவேபிரகாசிக்கின்றுன். இவ்வாறடைதலுங்கண்டத்தின்மணிபோலஞானமாத்திரசாத்தியமேயன்றி ஒரூரினின்றுமற்றேரூரையடைவதுபோலக்கிரியாசாத்தியமன்றென்க. (கக)

அ - கை. இவனே ஆன்மாவென்றுரைத்தானென்றும் அபயமமிர்தமென்றுஞ் சொல்லியசுருதிகளின்பொருளைச்சங்கிரகித்துக்கூறுகின்றூர்.

வேறு.

இதுபரம்பரமமிர்தமபயமென்பதுவுமிது
விதமுறும்பலவுலகும்விரவலின்றியபிரம
பதமிதன்கணிலிரவுபகலடைந்திலமரண
முதயமொன்றிலவிருமைவினைகளொன்றதுவுமில.

இ - ள். இது - இதுவே, பரம்பரம் - உயர்வும், அமிர்தம் - அழிவில்லாததுவும், அபயமென்பதுவும் - பயமில்லாதமோக்ஷசொரூபமென்பதுவும், இது-இதுவே, விதமுறும்பலவுலகும்-பலவிதமானஜகங்களும், விரவலின்றிய- விரவாத, பிரமபதம் - பிரமபதமாகும், இதன்கணில் - இதனிடத்தில், இரவு- இராத்திரியும், பகல் - பகலும், அடைந்தில - அடையாதுற்றன, மரணம் - அழிவும், உதயம் - உற்பத்தியும், ஒன்றில - அடையாதுற்றன, இருமைவினைகள் - சுகதுக்கரூபமானஇருவினைகளும், ஒன்றதுவுமில - ஒன்றுமில்லாதனவாம், எ - று.

ப - ம். எவன்இவ்வாறுபாதிகளின்றிப்பிரகாசிக்கின்றுன் அவனேகூடத்தவான்மாவேறில்லை. இவனுக்குவெருகத்தேகாதிகளுடன்கூடியவன்சோபாதிகனுதலால் அனுன்மாவென்பார், "இதுபரம்பரம்" எனவும், பயத்திற்கேதுவாகியஇரண்டாம்பொருளில்லாமையின், "அபயம்" எனவும், காலதத்துவமுஞ்சொரூபத்திலத்தியாசிக்கப்பட்டதாதலின் பிரமம் மற்றையுற்பத்தியானபிராணிகள்போலிராப்பகல்களை யிலக்கணமாகவுள்ள காலபரிச்சேதமுடை

யதன்றென்பார், "இதன்கணிலிரவுபகலடைந்தில" எனவும், சனனமரணஜ ராமுதலியவைகளுந்தேகதருமங்களாதலால் அதற்குவேருகியசேதுவானவா ன்மாவையடையாதென்பார், "மரணமுதயமொன்றில" எனவுங்கூறினர். ()

அ - கை. இனியாதொருவிவ்வான்மாவென்றுதொடங்கி அனுதாபமில் லாதவனென்றுமுடிந்தசுருதியின்பொருளைக்கூறுகின்றர்.

ஆதலிற்சிலவினையினலடர்ப்பவனுமல
னேதலுற்றிடுபிரமலோகமிப்பரனிவனேர்
சேதுவக்கரையடைஞர்சேர்பவக்கடல்விடுவர்
சாதுயர்ப்படினுமவர்தாமிடர்ப்படுவதிலர்.

இ - ள். ஆதலில் - ஆதலால், (இவ்வான்மா), சிலவினையினல்- சிலகன் மங்களினல், அடர்ப்பவனுமலன் - சம்பந்தப்பட்டவனுமல்லன், ஓதலுற்றி டு - சொல்லாநின்ற, பிரமலோகம் - பிரமலோகமும், இப்பரன் - இந்தஆன் மாவேதான், இவன் - இவனே, ஓர்சேது - ஒருசேதுவாவான், அக்கரையடை ஞர் - அந்தச்சேதுவைஅடையப்பட்டவர்கள், சேர் - சேரப்பட்ட, பவக்கட ல் - பவசமுத்திரத்தை, விடுவர்-விட்டுநீங்குவார்கள், சாதுயர்ப்படினும்-பிரா ணஹானியானதுன்பத்தையடைந்தபோதினும், அவர்தாம்- அவர்கள், இடர்ப் படுவதிலர் - துன்பப்படமாட்டார்கள். எ - று.

ப-ம். அபரோட்சமாகக்காணப்படுதலால் பிரமத்தை, "லோகம்" என்றர்.

இதுவுமது.

வேறு.

செப்பியபொருள்களியாவையுஞ்சென்றுசேர்வுருவகைநின்றசேது
வப்படிப்பட்டாலந்தனுமனந்தனருந்துயருற்றுமுற்றிலனு
மிப்படியிதயாகாசமென்றியம்புமீசனிவ்வுடம்பில்வேருகிக்
கப்புறுநனவுகனவுறக்கத்தைக்கண்டவைகடந்துநிற்கின்றன்.

இ - ள். செப்பியபொருள்கள் - (அந்தவான்மா) பலபிரிவாகச்சொல் லியபொருள்கள், யாவையும் - அனைத்தும், சென்றுசேர்வுருவகை - நசித்து ப்போகாவண்ணம், நின்றசேது-நிலையுற்றுநிற்கின்றசேதுவாவான், அப்படிப்ப ட்டால் - அந்தச்சேதுவான்வான்மாவாகப்பவித்தால், அந்தனும் - குருடனும், அனந்தன் - குருடனுகான், அருந்துயருற்றும்-தாங்கற்கரியதுன்பத்தையடைந் தும், உற்றிலனும்- அடையாதவனுவான், இப்படி- இவ்வண்ணம், இதயாகாச மென்று - தகராகாசமென்று, இயம்புமீசன்-சொல்லப்பட்டஈசன், இவ்வுடம் பில்-இந்தத்தேகத்தைக்காட்டிலும், வேருகி - வேருகி, கப்புறு - முப்பிரிவா கிய, நனவுகனவுறக்கத்தை- சாக்கிரசொப்பனசுழுத்தியை, கண்டு - அறிந்து, அவைகடந்துநிற்கின்றன் - அவைகளைக்கடந்துநிற்கின்றன். எ - று.

ப-ம். சாகரத்திற்குக்கரைபோல சமுசாரசாகரமனுகாமனிற்கும் எல்லை யாய்வருணாச்சிரமமுதலியபேதத்தாற்கிரியாகாரகபலரூபமாகியவெவ்வேறுநி பந்தனையுடையபிரபஞ்சத்தை ஒன்றோடொன்றுசாங்கரியப்பட்டு அழியாமல் தரிக்கின்றானென்பார், "செப்பியபொருள்களியாவையுஞ்சென்றுசேர்வுறுவ கைகின்றசேது" எனவும், பாவசம்பந்தமில்லாது தேகாதிகளுக்குவேறாய்ச்சே துவானபரமான்மவஸ்துவைத்தானாகவடைந்தவன் குருடுமுதலியதருமங்கள் தூலசரீரமுதலியதருமியோடு நீங்கலாலிவற்றோடு சம்பந்தமுறானென்பார், "அப்படிப்பட்டாலந்தனுமனந்தன்" எனவும், தேகமுதலியவைகளும் சாக்கிர முதலியஅவஸ்தைகளும், சடமாய்ச்சாக்ஷியமாதலில்அவைகளுக்கு அன்னிய மாகச்சுயம்பிரகாசசித்துருபனான ஆன்மாவொப்பத்தக்கவனென்பார், "இவ் வுடம்பில்வேறாகிக்கப்புறுரனவுகனவுறக்கத்தைக்கண்டவைகடந்து நிற்கின்றா ன்" எனவுங் கூறினர். (கச)

அ-கை. முந்தியகவியின்மூன்றாமடிவரைக்குந்தகரவித்தியாவிடயப்பிரமத் தை உபதேசித்துஅதன்பின்சாக்கிரமுதலிய அவத்தைகள்தொடாதவந்தப்பி ரமத்தைப்பிரதிபாதிக்கின்ற அக்ஷிபுருஷவித்தையைக்கூறத்தொடங்கி அனான் மவஸ்துவுக்குச்சாட்சியத்தன்மையைக்கூறுகின்றார்:

தற்பரந்தன்னிற்கற்பனையாலேசாக்கிரகனவுறக்கங்க
ளற்புதமாகவிளங்குமல்லதுதானாகவவ்வவத்தைகள்விளங்கா
கற்பனையாகிக்காட்சியாங்கடம்போலுடம்பினைத்தானெனக்கருதிற்
புற்புதவுடம்பாய்ச்செற்றவார்வங்கள்பொருந்துமையுறலினிப்பொருளில்

இ-ள். தற்பரந்தன்னில் - (அத்தகராகாசமான) மகாதேவனிடத்தில்; கற்பனையாலே - அத்தியாசத்தாலே, சாக்கிர- சாக்கிரம், கனவு-சொப்பனம், உறக்கங்கள் - சுழுத்தியென்றமூன்றவஸ்தைகளும், அற்புதமாக-அதிசயமாக, விளங்குமல்லது - விளங்குகின்றதேயல்லாமல், தானாக - தானாக, அவ்வவத் தைகள் - அந்தஅவஸ்தைகள், விளங்கா - விளங்கமாட்டாவாம், கற்பனையா கி - அத்தியாசமாகி, காக்ஷியாம்-தோற்றாநின்ற, கடம்போல்- கடம்போன்ற, உடம்பினை - சரீரத்தை, தானெனக்கருதில் - தானென்றுநினைக்கில் , புற்புத வுடம்பாய் - நீர்க்குமிழிபோன்றவுடம்பாய், செற்றவார்வங்கள் - பிரியாப்பி ரியங்கள், பொருந்தும் - வந்தடையும், ஐயுறல் - சந்தேகப்படவேண்டா, இனி - இனிமேல், பொருளில் - யதார்த்தவஸ்துவில். எ - று.

கருத்து. பிரமசொருபத்திலத்தியாசிக்கப்பட்டசகம் சடமாகும் ஒருகாற் பிரகாசித்து ஒருகாற்பிரகாசியாது அன்னியாதீனப்பிரகாசமுடையதாகலின். சுயம்பிரகாசமெனின் ஆன்மவஸ்துப்போற்சகமும் எப்பொழுதும்விளங்கவே ண்டுதலினற்றன்றெனவும், சரீரத்தோடுங்கூடியவனுக்கேயன்றி இல்லையென் னுஞ்சுருதியால் தேகாபிமானமுடையவனுக்கே சுகதுக்கானுபவலட்சணமு டையசமுசாரமேயன்றித்தேகாதிகளுக்குவேறாகியிருக்கின்றகேவலான்மாவை யறிகின்றவனுக்குச் சமுசாரசம்பந்தமேகிடையாதெனவுங்கொள்க. (கரு)

அ - கை. தகராகாசசத்தத்திற்குப்பிரமமேபொருளென்பதை உறுதிப் படுத்தவேண்டி மற்றொருசுருதியிலுள்ள ஆகாயமேநாமரூபங்களையுண்டாக்கு கின்றதென்னும்வாக்கியத்தின் பொருளைக்கூறுகின்றார்.

உடம்புடனிருந்தேயுடம்பிலாவுண்மையுணர்ந்தவனுளத்தொரு க்காலும், விடம்படுகாமவெகுளிமேவாதுவிளம்பிடும்பொருளெலா ம்விளக்கு, மிடம்படுமிதயாகாசமற்றிதுவேயிறப்பொடுபிறப்பிலதெ ன்றுந், திடம்படும்பிரமமாவதுமான்மாவாவதுந்தேகிகட்கெல்லாம்.

இ - ள். உடம்புடனிருந்தே - (இந்தச்) சரீரத்தோடிருந்தே, உடம்பி லாவுண்மை - சரீரமில்லாதவுண்மையை, உணர்ந்தவன் -அறிந்தவனது, உள த்து - மனத்தில், ஒருக்காலும் - ஒருபொழுதும், விடம்படு -விஷம்போலுண் டாகின்ற, காமவெகுளி -ராகத்துவேஷங்கள், மேவாது - பொருந்ாது, விள ம்பிடும் - சொல்லாநின்ற, பொருளெலாம் - (நாமரூபங்களான) பொருள்கள னைத்தையும், விளக்கும் - உண்டாக்கும், இடம்படும்- விஸ்தாரம்பொருந்திய, இதயாகாசம் - தகராகாசம், இறப்பொடுபிறப்பிலது - சனன்மரணமில்லாத தும், என்றும் - திரிகாலங்களினும், திடம்படு - திடம்பொருந்திய, பிரமமா வதும் - பிரமமாகவிருப்பதும், தேகிகட்கெல்லாம்- சரீரிகட்கெல்லாம், ஆன் மாவாவதும் - ஆன்மசொரூபமாயிருப்பதும், மற்றிதுவே - இந்தத்தகராகாச மேதான். எ - று. (கசு)

அ - கை. அப்பரமான்மவஸ்துவின் பூரணத்தன்மையைக்கூறுகின்றார்.

அப்பரம்பொருளேவேறொருபரமுமாகியதற்பமுமில்லை, யெப் பொருளாயும்விளங்கியும்விளங்காதிருக்கின்றான் றானுமிங்கிறையே, யொப்பரும்பரமனுருத்திரன் சிவனென்றுரைக்கநின்றவனுடைத்தா ன, விப்பெருந்தன்மையிருந்தவாறென்னேயேவராலறியலாமிதனை.

இ - ள். அப்பரம்பொருளே - அந்தவஸ்துவே, வேறொருபரமுமாகிய து-அபரவஸ்துவாயுமிருக்கின்றது, அற்பமுமில்லை - சிறிதேனும்வேறில்லை, எப் பொருளாயும்- (பரம் அபரமென்னும்) சருவரூபமாயும், விளங்கியும்-பிரகாசி த்தும், விளங்காதிருக்கின்றான்றானும் - விளங்காமலிருக்கின்றவனும், இங்கி றையே-இவ்விடத்தில் அந்தப்பரமசிவனே, ஒப்பரும் - உவமைசொல்வதற்கரி ய, பரமன் - சுயம்பிரகாசனென்றும், உருத்திரன் - உருத்திரனென்றும், சிவ னென்று - சிவனென்றும், உரைக்கநின்றவனுடைத்தான - சொல்லாநின்றஇந் தப்பரசிவனுடைய, இப்பெருந்தன்மை - இந்தப்பூரணத்தன்மை, இருந்தவா றென்னே -இருந்தவண்ணந்தானென்னே, இதனை - இத்தன்மையை, எவரால றியலாம் -யாவராலறியலாகும். எ - று. (கஎ)

அ - கை. பிரமம் தனதுகாரியங்களாகியபூதபௌதிகங்களிலிடைவிடா மனிறைவுற்றிருக்கின்றதென்பதைத்தெரிவிப்பதற்காகத் திருட்டாந்தத்துடன் கூறுகின்றார்.

வேறு.

இந்தமகாபூதங்கள்பிரிந்தேயெல்லையிலாநாமங்களையும்பெற்
றந்தவிகாரங்களுநிகழ்போதுமவ்வவையாயேநிகழ்வதுபோன்மற்
றந்தமிலாவொன்றாகியிருந்தேயளவறுபேதப்பலபொருளாயிட்
டெந்தவுபாதிக்குங்கரியாய்நின்றெங்கும்வியாபிக்கும்பரமீசன்.

இ - ள். இந்தமகாபூதங்கள் - இந்தப்பிருதிவிமுதலியநான்குமகாபூத ங்கள், பிரிந்து - கடமுதலியபலபொருளாகப்பிரிந்து, எல்லையிலாநாமங்க ளையும்பெற்று - (தங்கள்விகாரங்களால்) அளவில்லாதபெயர்களையும்பெற்று, அந்தவிகாரங்களும் - அவ்விதவிகாரங்களும், நிகழ்போதும் - விளங்கும்போ தும், அவ்வவையாயே - அவ்வவைகளாகவே, நிகழ்வதுபோல் - விளங்குவ துபோல, பரமீசன் - பரமசிவனானவன், அந்தமிலா - முடிவில்லாத, ஒன்றா கியிருந்தே - ஏகமாகியிருந்தே, அளவறு - அளவில்லாத, பேத - பேதங்களை யுடைய, பலபொருளாயிட்டு - பலபொருள்களாகி, எந்தவுபாதிக்கும் - எவ் வகைப்பட்டவுபாதிகளுக்கும், கரியாய்நின்று - சாக்ஷியாயிருந்து, எங்கும் வியாப்பிக்கும் - எவ்விடத்தும்நிறைந்திருக்கின்றான். எ - று.

ப-ம். பூதங்கள்" என்றமையின்ஆகாசவுவமையுங்கூறப்பட்டதாகலின் எங்குநிறைவுற்றிருக்கினும் பிரமத்திற்கவற்றோடுஞ் சம்பந்தமில்லையென்பது பெற்றாம். (௧அ)

அ - கை. மகாதேவனென்னுநாமதேயபெலத்தினாலும் இவ்வான்மாவுக் குச்சருவான்மபாவத்தைக்கூறுகின்றார்.

பின்னகடாகாயாதிகளாலாகாயமபேதம்பேதமுறாதே
யன்னவனேகாகாரனனேகாகாரவகம்புக்காலுமனைத்தா
மன்னியபேதாகாரமபேதாகாரமுமாய்மாதேவனிரானே
லின்னதெனுமத்தானெனுமாறெனியாவையுமீசானன்பிறிதன்றே.

இ - ள். பின்னகடாகாயாதிகளால்- வேறானகடாகாயமுதலியவற்றால், ஆகாயம் - ஆகாயமானது, அபேதம் - அபேதமேதான், பேதமுறாது - பேதம டையாது, (அதுபோல்),அன்னவனேகாகாரன்- அந்தப்பரமசிவன்அபின்னனா வான், அனேகாகார-பலபின்னங்களாயுள்ள, அகம்புக்காலும் - இதயங்களிற் புகுந்திருந்திடினும், அனைத்தா - அவ்வாறாக, மன்னிய - நிலைபெற்ற, பேதா காரம் - பின்னமாகவும், அபேதாகாரமுமாய் - அபின்னமாகவும், மாதேவனி ரானேல் - மகாதேவனிராவிடில், இன்னதென் - மகாதேவனென்னும், நாமத் தானெனுமாறு - நாமத்தையுடையவனென்னுந்தன்மை, என் - என்னாகும், (ஆகையால்), யாவையும் - அனைத்தும், ஈசானன் - மகாதேவனேயன்றி, பிறி தன்று - வேறல்ல. எ - று.

ப-ம். மகாதேவனென்னும்பெயருடையவன் மகாதேவனேதான். அங்ங

னமில்லாவிடில் மகானுய்ச்சொப்பிரகாசஞனதேவன்மகாதேவனென்றபெயர் எங்ஙனஞ்சித்திக்குமென்பார், "இன்னதெனுமத்தானெனுமாறென்" என்றார். இங்ஙனங்கூறிய ஆகாயதிருஷ்டாந்தத்தால் அபேதமேயுண்மையென்பது பெறப்பட்டது. (கக)

அ-கை: பரமசிவமேயனைத்தினும்பிரகாசிக்கின்றதெனநிச்சயிக்கின்றபுத்தியெதுவோ அஃதுசித்ரூபமானபராசத்தியேதான்வேறில்லையெனக்கூறுகின்றார்.

வேறு.

உளவாகியுமிலவாகியுமுருவாலெவ்வையிலகு
மொளியானவனவனேயவையவையாவொளிர்வுறுவா
னளவாவகைசிவனேயடையவுமானவனெனவே
தெளிவாகியமதியாததுசிவையாவதுதெளிவீர்.

இ-ள்: உளவாகியும் - இருக்கின்றனவாயும், இலவாகியும்-இல்லாதனவாயும்; உருவால் - உருவங்களால், எவ்வை - எவ்வெப்பொருள்கள், இலகும்-விளங்குகின்றனவோ, அவையவையா - அவ்வப்பொருள்களாக, ஒளியானவனவனே - சுயம்பிரகாசஞனஅச்சிவனே, ஒளிர்வுறுவான் - விளங்குவான், அளவாவகை - அளவிடக்கூடாதபடி, சிவனே - அச்சிவனே; அடையவுமானவனென்வே - சருவமுமானவனென்றே, தெளிவாகிய - தெளிந்த; மதியாது - புத்தியெதுவோ, அது - அந்தப்பிரக்ஞையே, சிவையாவது -சிவையாகுந்தன்மையை, தெளிவீர் - உணர்வீர்கள். எ - று: (உo)

அ - கை: எவனுக்கனைத்துஞ்சிவமாகவேபிரகாசிக்கின்றதோ அவனுக்குச்சனனமரணமில்லையெனக்கூறுகின்றார்:

சிவனேயகமெனவேதிகழ்வுறுவானிதமெனநின்
றவனேயுடலதுமாய்நிகழ்பவன்வேறிலையானற்
பவமேததுவிடலேதொருபடியாயுளபரனே
யிவனேகமுமெனவோர்பொழுதிறவாரவர்பிறவார்.

இ - ள். சிவனே - பரமசிவனே, அகமெனவே - நானென்றுசொல்லும்படி, திகழ்வுறுவான் - விளங்குகின்றான், இதமெனநின்று - இதுவென்றுசொல்லும்படிநின்று, உடலதுமாய் - சரீரமுமாகி, அவனே - அப்பரமசிவனே, நிகழ்பவன் - விளங்கப்பட்டவன், வேறிலையானல்-அந்தச்சிவனைத்தவிரவேறொன்றுமில்லையானல், பவமேது - பந்தமேது, அதுவிடலேது - அப்பந்தநீங்கியமுத்தியேது, ஒருபடியாயுள - ஏகசுபாவமாயுள்ள, பரனே - அப்பரமசிவனே, இ - இந்த, அனேகமுமென - எல்லாப்பொருள்களுமென்று, ஓர்பொழுது - உணரும்பொழுதில், இறவார் - மரிக்கமாட்டார்கள், அவர் - அவர்கள், பிறவார் - ஜனிக்கவுமாட்டார்கள். எ - று. (உக)

அ - கை. இந்தமேலானவனுபவம் பரமசிவன்பிரசன்னனாகவிருந்திடிற் கிடைக்குமேயன்றி மற்றொருஉபாயங்களாற்கிடையாதெனச் சிவமகிமை யைக்கூறுகின்றார்.

பரையாமதியுடையாரநுபவமாநிகழ்வதுநா
னுரையாடியபடியேயுளதொளியாய்நிகழ்சிவனார்
வரையாவருளதனால்வருமிதுமாதவமுதலா
நிரையாயிரவழியாலிதுநிகழாதிதுநிகழா.

இ - ள். பரையாமதியுடையார் - மேன்மையாகிய புத்தியையுடைய வர்கள், அனுபவமா - அனுபவமாக, நிகழ்வதும் - விளங்குவதும், நானுரை யாடியபடியே - யானுபதேசித்தபடியே, உளது - இருக்கின்றது, ஒளியா ய்நிகழ்-சுயஞ்சோதியாய்விளங்குகின்ற, சிவனார்-பரமசிவனுடைய, வரையா வருளதனால்- நீக்கத்தகாததிருவருளால், இது - இப்பிரமானுபூதியானது, வரு ம்- வருமேயன்றி, மாதவமுதலாம்- பெருமைபொருந்தியதவமுதலிய, நிரை- ஒழுங்காகிய, ஆயிரவழியால் - பலவழிகளாலும், இதுநிகழாது - இவ்வனு பவம்விளங்காது, இதுநிகழா - இவ்வனுபவம்விளங்காது. எ - று.

எனவே வடநூலிலுள்ளபடி அரியயன்முதற்றேவர்களாலுமிப்பிரமானு பவத்தைக்கொடுத்தற்கரிதென்பதுபெற்றும். (௨௨)

வேறு.

திவகரனெழில்வேறேசிலவொளிதிகழ்வாமோ
வவமுறவிருள்போகாதவனெதிர்நிலையாமோ
சிவதினகரனாலேசெறிபவவிருணேரா
வவனொளிதனின்மானனமரர்களறிவோமோ.

இ-ள். திவகரனெழில்- சூரியனுதயனானால், வேறே-வேறான, சிலவொ ளி-(நக்ஷத்திரமுதலிய) சிலபிரகாசங்கள், திகழ்வாமோ- பிரகாசமாகுமோ, அவமுறவிருள்போகாது- இருள்வீணாகமாய்ந்துபோவதேயன்றி, அவனெதிர்- அச்சூரியன்முன்பு, நிலையாமோ-நிலையாகநிற்குமோ, (அதுபோல்), சிவதின கரனாலே-சிவனென்னுஞ்சூரியனாலே, செறி-நெருங்கிய, பவவிருள்- பந்தமா கியஇருள், நேரா - எதிர்நிற்காமற்போய்விடும், அவனொளிதனில்- அச்சிவன துபிரகாசத்தின்முன்பு, மால்-நாராயணர், நான் - பிரமனாகியநான், அமரர் கள்- (மற்றைத்) தேவர்கள் (எல்லாரும்), அறிவோமோ- பிரகாசமுடையவர் களாக அறியப்படுவோமோ. எ-று. (௨௩)

புரணநல்லறிவாகப்புகலுறுபரமீசன்
சரணிணைதலுமாராதனைபுரிதலுமல்லான்
மரணமதறவேறோர்வழிசொலவிலையானு
லரணமதுறநங்கட்கடையவுமவனன்றே.

இ-ள். புகலுறு - சொல்லப்பட்ட, பரமீசன் - பரமேசனுடைய, சர
ண் - திருவடித்தாமரையை, புரணநல்லறிவாக - விளங்கும் நல்லுணர்வாக,
நினைதலும் - தியானித்தலும், ஆராதனைபுரிதலும்- பூசைசெய்தலும், அல்லா
ல் - அன்றி, மரணமதற - பிறப்பிறப்புநீங்குதற்கு, வேறோர்வழி - மற்றோர்
வழியை, சொலவிலை - சொல்லவில்லை, ஆனால்-இவ்வாறாயின், நங்கட்கு- எங்
களுக்கு, அரணமதற - காப்பாக, அடையவும் - அனைத்தும், அவனன்றோ-
அந்தப்பரமசிவனேயல்லவா. எ-று. (உச)

வேறு.

ஆகமங்கள்பலவுமுரையாடுகின்றதிவனையநு
போகமொன்றிலறியுமறிவாகின்றபுனிதனிவ
னேகனந்தவநுபவமதேயிவன்றன்வடிவதனை
யோகமொன்றவருள்பவனுமோதுகின்றபரமசிவன்.

இ-ள். இவனை - இந்தப்பரமசிவனையே, ஆகமங்கள்பலவும் - வேதா
கமங்களனைத்தும், உரையாடுகின்றது - சொல்லுகின்றது, அநுபோகமொன்
றில் - சுவானுபவமொன்றினால்மாத்திரம், அறியும்- அறியப்படுகின்ற, அறிவா
கின்ற - உணர்வாகின்ற, புனிதன் - புண்ணியசொரூபன், இவன் - இந்தப்
பரமசிவனே, ஏகன் - அத்துவிதன், அந்தஅநுபவமதே- (பிரமநிட்டர்களுடை
ய) வவ்வநுபவமே, இவன்றன்வடிவு-இந்தப்பரமசிவனதுசொரூபம், அதனை-
அச்சொரூபத்தை, யோகமொன்ற - மேன்மைபொருந்த, அருள்பவனும்-அநு
க்கிரகஞ்செய்பவனும், ஓதுகின்ற -வேதங்களாற்சொல்லாநின்ற, பரமசிவன்-
பரமசிவனேதான். எ-று. (உரு)

நானுமந்தவரியமரர்ஞாலமொன்றுநரர்விவித
யோனியிந்தமுழுதுமதனூடெழுந்தசிறுதிவலை
தானொழிந்துசிறிதில்சிவசாகரந்தனிகரரியை
யூனமொன்றுமெனைமொழிவரோர்வொழிந்தவுணர்விலிகள்.

இ-ள். நானும் - நானும், அந்தவரி-அந்தநாராயணரும், அமரர் -தேவ
ர்களும், ஞாலமொன்றுநரர் - பூமியின் கண்ணேபொருந்தியமனிதர்களும்,
விவிதயோனி - நானாவிதயோனிபேதங்களும், இந்தமுழுதும் - இவையனைத்
தும், அதனூடெழுந்த - பரமசிவனென்னுஞ்சாகரத்தூடெழுந்த, சிறுதிவலை
தான்-சிறியதுளியேதான், ஒழிந்து- இதற்குவேறாக, சிறிதில் - அற்பமுமில்லை,
சிவசாகரந்தனிகர் - அந்தச்சிவசாகரத்திற்குச்சமானமாக, அரியை - விட்டுணு
வை, ஊனமொன்றுமெனை - ஈனம்பொருந்தும் என்னையும், ஓர்வொழிந்த -
ஆராய்ச்சியில்லாத, உணர்விலிகள்- அவிவேகிகள், மொழிவர்- கூறுவார்கள்.
எ-று. (உசு)

வேறு.

எறிகதிர்க்குநிகராகின்மின்மினியிறைக்குநேரரியுமெட்டிதா
னறுவிரைக்கொளகில்சந்தொடொக்குமெனினுமப்பரமனோடுநே

றறிவினுக்கறிவிலாமைநேரகிலநாயகற்கொருவர்நேரெனிற்
செறியவுற்றவறியாமையின்செயலிருந்தவாறெனதுசெப்புவேன்.

இ - ள். எறிகதிர்க்கு - பிரகாசிக்கின்றஆதித்தனுக்கு, மின்மினி - மின்மினிப்பூச்சியானது, நிகராகில் - சமானமாயின், இறைக்கு - பரமசிவனுக்கு; அரியும் - விட்டுணுவும், நேர் - சமானமாவன், எட்டிதான் - எட்டிமரமானது, நறுவிரைக்கொள் - நல்லவாசனையையடைந்திருக்கின்ற, அகில்-அகிற்கட்டைக்கும், சந்தொடு- சந்தனக்கட்டைக்கும், ஒக்குமெனில் - நிகராகுமாயின், நானும் - சிருட்டிசெய்யும்யானும், அப்பரமனோடுநேர் - அப்பரமசிவனுக்குச்சமானமாவேன், அகிலநாயகற்கு - சருவலோகாதிபதியாகியமகாதேவனுக்கு, ஒருவர்நேரெனில்-ஒருவர்நேராவர்என்றால்,அறிவினுக்கு-ஞானத்திற்கு,அறிவிலாமைநேர் - அஞ்ஞானமானதுநேராகும், செறியவுற்ற-பொருந்தும்படியிரா நின்ற, அறியாமையின்செயல் - அஞ்ஞானத்தின்செய்கை, இருந்தவாறெனது செப்புவேன் - இருந்தவண்ணமதனையென்னவென்றுசொல்லுவேன். எ - று.

ஓதலுற்றபரனாலனைத்துமுளதாவதப்பரமனொன்றினா
லாதலுற்றிலனனாதிமுற்றுமவனாலெறிப்பததிரேகமா
வேதனத்தவரனைத்துமத்துவிதமாவிழிப்பர்விவிதத்திலே
போதமற்றவர்விழிப்பர்மற்றவர்கள்போதமற்றவர்கள்புல்லியோர்.

இ - ள். ஓதலுற்ற - சொல்லப்பட்ட, பரனால் - பரமசிவனால், அனைத்தும் - யாவும், உளதாவது - இருக்கின்றதாகப்பவிக்கின்றது, அப்பரமன் - அந்தப்பரமசிவன், ஒன்றினால் - மற்றொன்றினால், ஆதலுற்றிலன் - உற்பவிக்கமாட்டான், அனாதி - அனாதியாயுள்ளவன், முற்றும் - ஜகமனைத்தும், அவனாலெறிப்பது - அவனொருவனால்விளங்குகின்றது, அதிரேகமாவேதனத்தவர் - உயர்ந்தஞானக்கண்ணையுடையவர்கள், அனைத்தும் - சருவசகங்களையும், அத்துவிதமாவிழிப்பர் - துவிதமறப்பார்ப்பார்கள், போதமற்றவர்கள் - ஞானக்கண்ணில்லாதவர்கள், விவிதத்திலே - நானாவிதமாகியசகத்திலே, விழிப்பர் - பார்வையைச்செலுத்துவார்கள், அவர்கள் - அவர்கள், போதமற்றவர்கள்- அறிவையிழந்தவர்கள், புல்லியோர்-கீழ்மக்களுமாவார்கள். எ-று. (உஅ)

அ-கை. இவ்வாறு சாந்தோக்கியவுபநிடதப்பொருளனைத்தையுஞ் சிவபெருமானெனக்குபதேசித்தருளியபடி யுங்களுக்குபதேசித்தேனென்றுகூறுகின்றார்.

வேறு.

இதுசகந்தானெனமுனிகழ்தலுண்டேலிவிதமெவர்களுங்காணுமறிவே, யதுபரந்தானெனமுனனுபவந்தானடையிலதுபவந்திருமறிவா, முதியசந்தோகவுபநிடதநின்றேதுபொருண்முழுதுமிங்கிசன்மொழியா, லதிசயந்தானமராணவருங்கூடவழகுறவறைந்தேனருளினால்.

இ-ள், இதுசகந்தானென - இதுஉலகந்தானென்று, முனிகழ்தலுண்டேல் - முன்னிலையாகவிளங்குவதுண்டெனில், இவிதம் - அவ்விதஞானம், எவர்களும் - யாவர்களும், காணும் - (இயல்பாக) அறிகின்ற, அறிவே - ஞானமேயாகும், அது - அச்சகம், பரந்தானென - பிரமமேயென்று, முன்அனுபவந்தானடையில் - முன்னுகஅனுபவம்பொருந்திடில், அது - அவ்வநுபவமே, பவந்தீருமறிவாம் - சமுசாரபந்தம்நீங்குகின்றஞானமாம், முதிய - பழமையான, சந்தோகவுபநிடதம் - சாந்தோக்கியவுபநிடதம், நின்றோதுபொருண்முழுதும் - நின்றுசொல்கின்றதாற்பரியமனைத்தையும், இங்கு - இவ்விடத்தில், ஈசன்மொழியால் - பரமசிவனதுஆக்கினையாலும், அருளினல் - கருணையினலும், அமரரனைவரும் - தேவர்காள் நீங்களனைவர்களும், அதிசயம் - அதிசயத்தை, கூட - அடைய, அழகுற - அழகாக, அறைந்தேன் - சொன்னேன். எ-று.

கருத்து. பிரமவித்தைக்குச் சமுசாரகாரணமாயஅவித்தைநிவிர்த்திமுந்தினபிரயோசனமாம் ஆவரணஅஞ்ஞானநீங்கியபின் தனதுசொரூபமாயிருக்கின்றபிரதிசயானந்தாவிர்ப்பாவமிரண்டாம்பிரயோசனமாம் அவ்விரண்டுஞ்சித்திக்கவேண்டிப் பிரமவித்தையுபதேசிக்கப்பட்டதெனக்கொள்க. (உக)

அ-கை. ஞானக்கண்ணினலன்றியூனக்கண்ணுற் பரமசிவனைப்பார்க்கக்கூடாதென்று ஞானநேத்திரத்தாலமரர்கள்பரசிவனையறியும்படி சூக்குமமானபொருளையுபதேசிக்கின்றூர்.

திண்ணிதாகவிதையத்தைமீளும்வகைசெய்துசிந்தனையெலாமறப்
பண்ணினலறிவிலாமையென்றுவருபாவகத்தையுமொழித்திடக்
கண்ணதாய்நிகழுமக்கணன்றியெதிர்காணுணுதுபிறிதென்னவே
நுண்ணிதானபொருள்சொல்லினனதுமெய்நோக்கினலடையவாக்கினன்

இ-ள், திண்ணிதாக - திண்மையாக, இதையத்தை - இருதயத்தை, மீளும்வகைசெய்து - திரும்பும்விதஞ்செய்து, சிந்தனையெலாம் - கவலைகளையெல்லாம், அறப்பண்ணினல் - ஒழியச்செய்தால், அறிவிலாமையென்றுவரு - அஞ்ஞானமென்றுவராநின்ற, பாவகத்தையும் - பாவனையையும், ஒழித்திட - நீங்குதற்கு, கண்ணதாய்நிகழும் - ஞானநேத்திரமாகப்பிரகாசிக்கும், அக்கணன்றி - அந்தஞானநேத்திரத்தைத்தவிர, எதிர் - நேராக, பிறிது - வேறொன்றால், காணுணுது - பரமசிவனைக்காணக்கூடாது, என்னவே - என்று, ஆக்கினன் - சிருட்டிப்பவனுகியபிரமதேவன், அது - அந்தப்பிரமத்தை, மெய்நோக்கினலடைய - ஞானநேத்திரத்தாலமரர்களடையும்படி, நுண்ணிதானபொருள் - சூக்குமமாகியபொருளை, சொல்லினன் - உரைத்தருளினன். எ-று. (௩௦)

கூ-மத்தியாயஞ்சம்பூரணம். ஆ திருவிருத்தம்-௩௩௩.

---

சிவாயபரமகுரவேநம:

## எ-வது-முண்டகோபநிடததாற்பரிய முரைத்தவத்தியாயம்.

அ-கை. இவ்வாறு மூன்றுவேதங்களினுபநிடதங்களுக்குப் பிரமான்ம ஐக்கியத்தன்மையையுரைசெய்து அதர்வணமுண்டகோபநிடதத்துக்கும் அத் தன்மையைக்கூறுகின்றார்.

நீண்டகேள்வியினாற்கல்வியானெஞ்சானிச்சயித்தறியவொண்ணாத, தூண்டிடாஞானச்சுடர்தனைச்சொருபா னந்தனைத்துரிசறவுளத்தே, மீண்டுகாண்பதுவே விச்சையென்றுரைப்ப தாகவேதொடங்கினன் மெய்போ, லீண்டுலோகங்களிறக்கவுற்பவிக்கவிமைப்பதுவிழிப்பதா மிறையோன்.

இ-ள். நீண்டகேள்வியினால் - விஸ்தாரமானசிரவணத்தினாலும், கல்வியால் - சாஸ்திரப்பயிற்சியினாலும், நெஞ்சால் - மனத்தாலும், நிச்சயித்தறியவொண்ணாத - நிச்சயித்தறியக்கூடாத, தூண்டிடா - தூண்டாத, ஞானச்சுடர்தனை - ஞானவிளக்கை, சொருபானந்தனை - ஆனந்தசொரூபனை, துரிசற - குற்றமற, உளத்தே - உளத்தின்கண்ணே, மீண்டுகாண்பதுவே - திரும்பவும்அறிவதுவே, விச்சையென்றுரைப்பதாகவே-பரவித்தையென்றுசொல்வதாகச்சுருதி, தொடங்கினன் - ஆரம்பஞ்செய்தனன், மெய்போல் - சத்தியம்போல, ஈண்டு - இவ்விடத்தில், லோகங்கள் - சகங்கள், இறக்க - நசிக்கவும், உற்பவிக்க - செனிக்கவும், இமைப்பது - கண்களைமூடுவதும், விழிப்பதாம் - விழிப்பதுமுள்ளவனாகிய, இறையோன் - பிரமதேவன். எ - று. (க)

அ-கை. சுருதியில் அஃதுஅறியப்பட்டமாத்திரத்திலிவ்வனைத்துமறியப்பட்டதாகின்றதென்றதுமுதலியவற்றால் கேள்வியுத்தரங்களாகயாதொருஅதிஷ்டானமான அட்சரப்பிரமஞானத்தாலாரோபிதசகலசெகங்களின்ஞானங்கூறப்பட்டதோஅதனைக்கூறுகின்றார்.

எப்பொருள்களுக்குந்தோற்றமுநிலையுமிறுதியுந்தன்கணேயாகி யொப்பிடவொன்றுமின்றியேயென்று முள்ளதாயுரையுணர்விறந்த, வப்பொருணேரெயறிந்தபோதெல்லாப் பொருள்களுமறிந்ததாமந்த மெய்ப்பொருடானே யெப்பொருள்களுமாய் விளங்கலால்வேறிலாமையினால்.

இ-ள். எப்பொருள்களுக்கும் - சகலவஸ்துக்களுக்கும், தோற்றமும் - உற்பத்தியும், நிலையும் - ஸ்திதியும், இறுதியும் - அழிவும், தன்கணேயாகி-தன்னிடத்தேயுண்டாகியும், ஒப்பிடவொன்றுமின்றி-அதிஷ்டானமாய்உவமைசொல்வதற்குயாதொன்றுமில்லாததுவாயும், என்றுமுள்ளதாய் - எக்காலமுமழி

வற்றிருக்கின்றதாயும், உரையுணர் விறந்தஅப்பொருள்- வாக்குமனங்களுக்க கோசரமாயுமிருக்கின்ற அவ்வக்கரப்பொருளே, நேரேயறிந்தபோது- அபரோக்ஷமாயறிந்தபோது, எல்லாப்பொருள்களும் - சகலவஸ்துக்களும், அறிந்தாம்-அறிந்ததாகும், அந்தமெய்ப்பொருள்தானே - அந்தவக்கரப்பொருள்தானே, எப்பொருள்களுமாய் - எல்லாப்பொருள்களுமாய், விளங்கலால் - விளங்குதலாலும், வேறிலாமையினல் - அப்பொருட்குவேருகயாதொன்று மில்லாமையாலும். எ - று.

ப - ம். சிவசக்திமுதலிய முப்பத்தாறு அபரதத்துவங்களுக்கும் வேருய்விளங்கலின்அழியுஞ்சடங்களானமித்தியாப்பிரபஞ்சங்களுக்குஅழியாதஅக்கரப்பொருளேஅதிஷ்டானமாமென்பார், "எப்பொருள்களுக்குந்தோற்றமுநிலையுமிறுதியுந்தன்கணேயாகி" எனவும்; நிருவிசேடமாதலால்வாக்குமனங்களுக்கவிஷயமென்பார், "உரையுணர்விறந்த வப்பொருள்" எனவும், அவ்வதிஷ்டானமான பிரமமே ஆரோபிதபிரபஞ்சத்துக்குச் சொருபமாதலால் அதிஷ்டானமாகிய சுத்திமுதலியவற்றிற்கு வேருகத்தோற்றியரசதாதிகள் பேதமாகாததுபோலப் பிரமத்திற்குவேருகப்பிரபஞ்சம்பேதமுருதென்பார்,"அந்தமெய்ப்பொருடானேயெப்பொருள்களுமாய்விளங்கலால்வேறிலாமையினல்" எனவுங்கூறினர். (உ)

அ-கை. ஆரம்பித்தவுபநிடதத்தின் விதேயப்பொருளைச் சங்கிரகமாகக் கூறி இவ்விடயத்திலிரண்டுவித்தையறியத்தக்கதெனப் பிரமவித்துக்கள் சொல்லுகின்றார்களென்றதாதியா முபநிடதப்பொருளைக் கூறுகின்றார்.

இங்குநாமறியவேண்டுவதிரண்டு விச்சையவ்விரண்டினுளொன்று
பங்கமாமபரைபரையெனப்படுவதொன்றதிற்பழமறைநாலு
மங்கமாறுண்மையமையிதிகாசமாதிகளபரையாமற்ற [ல்
தெங்குமாய்நின்றதொன்றையாதொன்றுலெய்தலாமதுவிறையருளா

இ - ள். இங்கு - இவ்விடத்தில், நாமறியவேண்டுவது - யாமறியவேண்டியது, இரண்டுவிச்சை - இரண்டுவித்தைகளாகும், அவ்விரண்டினுள் - அந்தஇரண்டுவித்தைகளுள், ஒன்றுபங்கமாமபரை - ஒன்றுகுறைவாகிய அபரவித்தையாகும், பரையெனப்படுவதொன்று - ஒன்றுபரவித்தையெனப்படும், அதில் - அவற்றில், பழமறைநாலும் - அநாதியானநான்குவேதங்களும், அங்கமாறு-(சிக்ஷை கற்பம் வியாகரணம் நிருக்தம் சந்தசு சோதிடம்) என்ற ஆறங்கங்களும், உண்மையமையிதிகாசமாதிகள் - உண்மையமைந்த இதிகாசமுதலியவைகளும், அபரையாம் - அபரவித்தையாகும், மற்றது - பரவித்தையாவது, எங்குமாய்நின்ற தொன்றை - எவ்விடத்தும் பூரணமாகிவிளங்குகின்றவஸ்துவை, இறையருளால் - பரமசிவப்பிரசாதத்தால், யாதொன்றுலெய்தலாம்-யாதொன்றினுலடையலாமோ, அது-அதுவேயாகும். எ-று.

கருத்து. இருக்குவேதமுதலிய சுருதியினுற்கூறப்பட்டயாதொருஅபரவித்தையுண்டோ அஃது அனுத்மவிஷயமாதலால் அத்துவிதீயதத்துவத்தை

ப்பிரதிபாதிக்காது. அங்ஙனமே அவ்வபரவித்தையாலுண்டாகியபுத்திகளும் அக்கினிஹோத்திரமுதலியகர்மவிடையங்களாதலால் அனான்மவிடையங்களாகும். ஆதலின் அபரவித்தைகளேயாமென்க. (ரு)

அ - கை. எதனாலவ்வக்ஷரப் பொருளடையப்படும் அஃதுபரவித்தையென்றசுருதிவாக்கியத்தைக்கூறுகின்றார்.

காணவோருருவுமின்றியேதனக்கோர்கண் செவிமூக்குவாயின்றிப்
பாணிபாதங்களின்றிநுண்ணியதாய்ப்பற்றியபொருளெலாங்கடந்து
தாணுவாயெல்லாந்தோன்றுதற்கிடமாந்தத்துவந்தன்னைத்தன்னாலே
யாணியாயறியுமறிவதுவிச்சையாவதுபிறிதெலாமவிச்சை.

இ- ள். காணவோருருவுமின்றி-பார்ப்பதற்குஒருருபமுமில்லாததாயும், தனக்கு - தனக்கு, ஓர்கண்செவிமூக்குவாயின்றி-ஒருகண்காதுமூக்குவாயிவைகளில்லாததாயும், பாணிபாதங்களின்றி-கைகால்களுமில்லாததாயும், நுண்ணியதாய் - அதிசூக்குமமாயும், பற்றியபொருளெலாங்கடந்து - பற்றுகின்றஎல்லாப்பொருள்களையுங்கடந்து, தாணுவாய் - சிவமாயும், எல்லாம் - ஆகாசமுதலியயாவும், தோன்றுதற்கிடமாம் - தோன்றுதற்கிடமாகியுமுள்ள, தத்துவந்தன்னை-அவ்வக்கரப்பொருளை, தன்னாலே-தன்சுபாவத்தினாலே, ஆணியாய்-மேன்மையாய், அறியும் - அறியப்பட்ட, அறிவது - அறிவே, விச்சையாவது-பரவித்தையாகும், பிறிதெலாம் - மற்றவைகளெல்லாம், அவிச்சை - அபரவித்தையாகும். எ - று.

ப-ம். ஸ்தூலத்தன்மைமுதலியதிரிசியதருமங்களில்லாததாகலின், "காணவோருருவுமின்றி" எனவும், எவன்சருவஞ்ஞன் எவன்சருவவித்தென்னுஞ்சுருதியிற்கண்டசேதனத்தன்மை சீவேசசமுதாயமாயினும் சீவர்கள்போல ஈசனுங் கண் காது முதலியகரணமுடையவனன்றாகலின், "தனக்கோர்கண் செவி மூக்குவாயின்றிப் பாணிபாதங்களின்றி" எனவும், அபஞ்சீகிருதசூக்குமபூதங்களுக்குங்காரணமாய்அவைகளுக்குமதிசயமானசூக்குமமாகலின், "நுண்ணியதாய்"எனவும்,நிரவயவமாகியநிற்குணத்துக் கவயவகுணங்களாலுண்டாகியசலனவியாதியில்லாததென்பார், "தாணுவாய்" எனவும், அதநீயோகின்றுயென்றதுமுதலியவுபநிடதங்களின்மகாவாக்கியங்களாலுண்டாகிய சொருபஞானமெனும்வித்தையால் அவ்வக்ஷரப்பிரமம்சமுசயமின்றியடையப்படுதலாலும் ஆன்மவிடயமான அஞ்ஞானத்தை நிவிர்த்திசெய்தலால் மோட்சசாதனமாதலாலும் அவ்வான்மஞானத்தை "வித்தை" எனவுங்கூறினார். (சு)

அ - கை. இவ்வாறுகூறியகாரணத்தன்மையைத்திருஷ்டாந்தங்களால் நிரூபிக்கின்றார்.

வேறு.

சிலந்தியுமிழ்ந்துவிழுங்குவதெப்படிதேகத்தே
மலந்தருகேசவுரோமமதெப்படிமண்ணிற்கே

பலந்தருமோட்டுியெப்படியப்படியீசன்பா
லலர்ந்ததடங்கல்வெறுங்கனவொக்குமதாயுங்கால்.

இ-ள். சிலந்தி - சிலந்தியானது, உமிழ்ந்து - நூலையுமிழ்ந்து, விழுங்குவது - மறுபடிபுசிப்பது, எப்படி - எவ்வாறே, தேகத்து-உடலில், மலந்தரு-அழுக்கைக்கொடாநின்ற, கேசவுரோமமதெப்படி-சிகைமுதலியவுரோமங்களெவ்வாறே, மண்ணிற்கு - பிருதிவிக்கு, பலந்தரு-பயனைத்தருகின்ற, ஓடதி-தானியமுதலியன, எப்படி-எவ்வாறே, அப்படி -அவ்வாறே, ஈசன்பால்-பரசிவனிடத்திலின்றும், அலர்ந்து - தோன்றி, அது- அவ்வுலகங்கள், அடங்கல் - ஒடுங்குதல், அதாயுங்கால் - அத்தன்மையையாலோசிக்குங்காலத்தில், வெறுங்கனவொக்கும்- வீண்சொப்பனத்துக்குச்சமானமாகும். எ-று.

கருத்து. எப்படிச்சிலந்திமற்றோர்காரணத்தையபேட்சியாமல்தனதுசரீரத்தினின்றுந்தந்துவைவெளிப்படுத்தித்தன்னிடத்திற்றானேஅடக்குகின்றது, தனதுகாரணம்போல் தானியமுதலிய ஓஷதிகள்பிருதிவியிலுண்டாகின்றனவோ, சத்தாகியபுருஷனிடத்தினின்றும் அசத்தாகியகேசவுரோமங்கள்உற்பவிக்கின்றனவோ, அப்படியேமற்றொருகாரணத்தினுதவியின்றி அட்சரப்பிரமத்தினின்றுசலட்சணவிலக்ஷணங்களானசேதனசேதனசெகமனைத்துமுண்டாகின்றதெனவும், அவிக்கிரியமாகியபிரமத்தினின்றுமுண்மையாகவுண்டாயிற்றென்பது கூடாமையாலஃதுமாயாமயமாதலிற் சொப்பனசமானமெனவுங்கொள்க. (௫)

அ-கை. பிமத்தினின்றுஞ்சகம் இவ்வாறுற்பவிக்கின்றதெனக்கூறுகின்றார்.

பன்னுதவத்திரளுற்றபரத்திடையேமுன்ன
மன்னமெழுந்ததினின்றுபிராணன்மனங்கன்மந்
தன்னிலுறும்பலலோகமும்வந்ததுதாவில்லா
வின்னமுதென்றுணர்முத்தியும்வந்ததிதன்கண்ணே.

இ-ள். பன்னு - சொல்லாநின்ற, தவத்திரளுற்ற-தவக்கூட்டம்பொருந்திய, பரத்திடை - பிரமவஸ்துவினிடத்தில், முன்னம் - முன்னாக, அன்னமெழுந்து - அன்னமுண்டாகி, அதினின்று - அதனிடத்திலிருந்து, பிராணன்-(சமஷ்டிப்)பிராணனும், மனம்-மனமும், கன்மம் (வருணச்சிரமாதி) - கருமமும், தன்னிலுறும் - அதிற்பொருந்திய, பலலோகமும் - நானுவுலகங்களும், வந்தது - தோன்றிற்று, தாவில்லா - குறைவில்லாத, இன்னமுதென்றுணர் - இனியவமுதமென்றுணரத்தக்க, முத்தியும் - சொர்க்கபதவியும், இதன்கண்ணே-இந்தப்பிரமத்தினிடத்தே, வந்தது - தோன்றிற்று. எ - று.

ப-ம். பரிபக்குவமுடையபிராணிகளின்கருமவசத்தாலுண்டாகியசிருட்டிக்கத்தக்கபரியாலோசனைரூபமானஞானத்தால் முன்னம்நிருவிகற்பமானபிரமங்கிஞ்சித்துவிகற்பமுடையதாயிற்று. அந்தப்பிரமத்தினின்றுஞ் சமுசாரிக

ளாற்புசிக்கப்படுதலின் அன்னமென்னும் போக்கியப்பிரபஞ்சத்தின்காரணமா ன அவ்வியாகிருதத்துவ முண்டாயிற்றென்பார், "தவத்திரளுற்றபரத்தி டையேமுன்னமன்னமெழுந்தது" எனவும், உண்டாகிய அவ்வியாகிருதத்தி னின்றும் மண் அப்பு காற்று இவைகளின் சம்பந்தத்தால் உச்சூனவஸ்தை யுடைய பீஜத்தினின்றும் அங்குரந்தோன்றுதல்போல் அபஞ்சீகிருதபஞ்ச பூதமும் அதன்காரியமான இலிங்கசரீரமுமான சமட்டியுபாதியுடைய சரு வஞ்ஞுன பிராணனென்னும் இரணியகருப்பனுண்டானனெனவும், அதனு லே அபஞ்சீகிருதபூதங்களின் சத்துவரஜோம்சபரிணுமமான இலிங்கசரீ ரமு முண்டாயிற்றெனவும், அந்தப்பிராணனினின்றும் பஞ்சீகரணேபயோ கியானமனமுண்டாயிற்றெனவும், அம்மனத்தினின்றும் பஞ்சீகிருதபஞ்சபூத ங்களும் அவற்றினின்றும் அண்டங்களும் அவற்றில்நின்றும்பூலோகாதிகளும் அவைகளினின்றும் மானுடர்களுடைய வருணச்சிரமங்களான கருமங்களும் அவற்றில்நின்றும் கற்பகோடிகாலமிருத்தலால் அழியாதமுத்தியென்னும் பல மும் முறையேயுண்டாயிற்றென்பது பெறப்பட்டது. (சு)

அ - கை. கூறியபொருளையுபசங்கிரகிக்கின்றார்-

யாதுமுணர்ந்தெவையுஞ்செயவல்லவனியாரியாவன்
போதமயந்தவமாவுடையன்படிவம்பேரன்
றுதிகளங்கணிகழ்ந்ததடங்கலுநானுவா
யாதிவரும்பிரமங்கனவொக்குமிதாயுங்கால்

இ - ள். யாதமுணர்ந்து - எல்லாவற்றையும்அறிந்து, எவையுஞ்செய- எல்லாவற்றையுஞ்செய்ய, வல்லவனியார் - (வியாவகாரிகபாரமார்த்திக) சர் வஞ்ஞனுள்ளவனெவனே, யாவன் - எவன், போதமயந்தவமாவுடையன் - தவமேஞான மயமாகவுடையவன், அங்கண்-அப்பிரமத்தினிடத்தில், படிவம்- உருவம், பேர்- பெயரும், அன்றுதிகள் - அன்னமுதலியவைகளும், அடங்க லும் - இவையெல்லாம், நாநாவாய் நிகழ்ந்தது- பலவிதமாக உண்டாகிவிளங் குகின்றது, பிரமம் - இரணியகருப்பனெனும் பிரமமும், ஆதிவரும் - முதன் மையாகஉண்டாவன், இதாயுங்கால் - இதனையாலோசிக்குங்கால், கனவொ க்கும் - சொப்பனத்தைநிகரும், எ - று.

கருத்து. எவன் சாமானியமாகவும் விசேடமாகவும் அனைத்தையும் அ றிகின்றானே அவன்சருவக்கியனுதலால் அவனதுதவம் கிருச்சிர சாந்திராய ணமுதலிய விலக்கணமுடைய ஜடத்துவமில்லாதஞானருபமாகும். அத்தவ முடைய அப்பிரமத்தினின்றும் காரியருபமான இரணியகருப்பனென்னும் பெயரையுடையபிரமமும் தேவதத்தன் எஞ்ஞதத்தன் முதலியநாமதேயமும் அதன்அபிதேயருபமான நீலபீத முதலிய ருபமுடையவெல்லாத்திரவியசாதி களும் நெல் யவை முதலான அன்னங்களும் கிரமமாகப் பிரதீதிமாத்திரமாயு ண்டாயிற்றெனக்கொள்க. (எ)

அ - கை. இவ்வாறுபரவித்தியாவிடையமானபிரமத்தைசசொரூபம்தடஸ்தமென்னு மிலக்கணங்களாலுபதேசித்து அந்தப்பிரமஞானம்மோக்ஷசாதனமன்றி வேறுசாதனங்கிடையாது, சுருதி மந்திரங்களில் அபரவித்தியாவிடயமான கருமங்களைச்சொல்லுதல் வைராக்கியத்தையுண்டுபண்ணும்பொருட்டாதலாலஃதுசித்தித்திருத்தலால் அவ்வபரவித்தியாவிடையமான கருமபாகங்களுக்கும் வலிமையில்லாதவோடங்களென்றது முதலானசுருதியினுற்கூறப்பட்டமோட்சசாதனுபாவத்தன்மையைக்கூறுகின்ருர்.

(வேறு)

அக்கரமாகிமெய்மையாயுள்ளவப்பொருளறிந்தபோதல்லா
லெக்கருமங்களாலும்விடில்லையாகமாதிகளியற்றுங்காற்
றுக்கரமாகியனித்தமாய்ப்பேறுஞ்சுருக்கமாயிருக்கமற்றிவற்றைத்
திக்கறியாதேமுயல்பவர்முத்திசெறிந்திடார்மரணமேசெறிவார்.

இ - ள். அக்கரமாகி - அழிவில்லாததாயும், மெய்மையாயுள்ள - சத்தியமாயுமுள்ள, அப்பொருள் - அவ்வஸ்துவை, அறிந்தபோதல்லால் - அறிந்தபோதல்லாமல், எக்கருமங்களாலும் - எந்தக்கருமங்களாலும், வீடில்லை- மோக்ஷமில்லை, யாகமாதிகளியற்றுங்கால் - யாகாதிகள்செய்யுங்காலத்தில், பேறும் - அவைகளாற்பெறுகின்ற சொற்கபதவியும், துக்கரமாகி- கிடையாததாயும், அனித்தமாய்- அனித்தியமாயும், சுருக்கமாய்- அற்பமாயும், இருக்க- இருக்கவும், மற்றிவற்றை - இந்தயாகாதிகளைச்(செய்ய), திக்கறியாதே-திசைதெரியாமல், முயல்பவர் - முயற்சிசெய்பவர்கள், முத்தி-மோக்ஷத்தை, செறிந்திடார் - அடையமாட்டார்கள், மரணமேசெறிவார்- மரணத்தையேஅடைவார்கள். எ - று.

கருத்து. திடமுடைய ஓடமேஅக்கரைசேர்க்கும் மற்றை ஓடமோவெளிற் சமுத்திரத்தின் மத்தியிற் கவிழ்த்துவிடும் அதுபோல் கருமங்கள் நேரானமோக்ஷஏதுவாகாதென்றுணர்க. (அ)

அ - கை. கருமமேபரமபுருஷார்த்தசாதன மென்றெண்ணுகின்றவர்களைநிந்தித்துக்கூறுகின்ருர்.

கருமதற்பரராய்நாங்களேஎல்லாங்கற்றவரென்றிருக்கின்ற
பெருமிதமுடையார்மூடரேபிறவாநெறியையும்பெறுகிலார்பிறவிக்
குருடர்கைப்பற்றிப்போகியகுருடர்குழியிலேகூடவீழ்வதுபோன்
மருவியவினையுந்தாங்களுங்கூடமாய்வதேயன்றிமற்றிலையே.

இ - ள். கருமதற்பரராய்-கர்மநிஷ்டர்களாய், நாங்களே-யாங்களே, எல்லாம் - சாஸ்த்திரங்களனைத்தையும், கற்றவரென்றிருக்கின்ற - படித்தவித்துவான்களென்றிருக்கின்ற, பெருமிதமுடையார்-செருக்குடையார், மூடரே- மூடர்களேதான், பிறவாநெறியையும் - முத்திமார்க்கத்தையும், பெறுகிலார்

பெறமாட்டார்கள், பிறவிக்குருடர்கைப்பற்றி-பிறவிக்குருடருடையகையைப் பிடித்துக்கொண்டு, போகிய-சென்ற, குருடர்-குருடரும், கூட குழியிலே வீழ்வதுபோல் - கூடவேபாழ்ங்கிணற்றில்விழுவதுபோல, மருவியவினையும் - பொருந்தியகருமமும், தாங்களும்- (கர்மாபிமானிகளாகிய) தாங்களும், கூடமாய்வதேயன்றி - ஒன்றாகமடிவதேயன்றி, மற்றிலை- வேறில்லை. எ - று.

ப-ம். சொர்க்கமுதலிய காரியபலங்களுக்குச் சாதனமாகிய கருமங்களை மோட்சசாதனமென வேறுபாடாகக்கொண்டமையின் அக்கருமநிஷ்டர்களை, "மூடர்" என்றார். (கூ)

இதுவுமது. வேறு.

தொலையுநல்வினைப்பயன்றொலைந்தபோதிலே
தலையதுகிழுறவிழுகைதப்புமோ
நிலையுறுமுத்திநேர்படுதனெஞ்சிலே
யலைவறுஞானமுண்டாகிலல்லவோ.

இ - ள். தொலையுநல்வினைப்பயன் - (இவ்வாறு) நல்வினைப்பயனுந்தொலைந்துவிடும், தொலைந்தபோதிலே - (அது) தொலைந்தகாலத்தில், தலையதுகிழுற - (சுவர்க்கமுதலியவுலகங்களினின்றுந்) தலைகீழாக, விழுகைதப்புமோ - வீழ்தல்தப்புங்கொலோ, நெஞ்சிலே - மனத்தின்கண்ணே, அலைவறு - சலனமில்லாத, ஞானமுண்டாகிலல்லவோ - சொரூபஞானமுண்டானாலல்லவோ, நிலையுறுமுத்தி - திரமாகியமோக்ஷம், நேர்படுதல் - பொருந்துவது. எ - று.

அ - கை. இவ்வாறு சுருதிகூறிய அபரவித்தியாவிடயமான கருமவித்தையைக்கூறி, கருமத்தாற்சாதிக்கப்பட்ட உலகங்களைப்பரீட்சித்தென்ற சுருதிகூறிய வைராக்கியத்தைக் கூறுகின்றார்.

சுருதியுமிருதியுஞ்சொன்னவாறுநின்
றிருமையுமனித்தமென்றேதும்விட்டுநற்
குருவினைவழிபடிற்கோதிலாவவ
னருளிடுமழிவறநின்றவப்பொருள்.

இ- ள். சுருதியுமிருதியும்-வேதமும்ஸ்மிருதியும், சொன்னவாறுநின்று- சொல்லியமார்க்கங்களை அனுஷ்டித்து, இருமையும் - இகபரமிரண்டும், அனித்தமென்று - அனித்தியமென்று, ஏதும்விட்டு - அவையனைத்தையும்விடுத்து, நற்குருவினை - சற்குருவை, வழிபடில் - சரணமடைந்தால், கோதிலாவவன் - குற்றமில்லாதஅத்தேசிகர், அழிவறநின்ற - நாசரகிதமான, அப்பொருள் - அந்தப்பரவித்தையை, அருளிடும்- அருள்செய்வார். எ - று. (கக)

அ- கை. முற்கவியினாற் கன்மத்தால்மோட்சங்கிடையாதென்றும் சுரோத்திரியனாகிய பிரமநிஷ்டனான சற்குருவைச்சரணமடையவேண்டுமென்றும் அப்பரமகுரு அவித்தியாவிடயமாகிய சமுசாரபலத்தினின்றும் விரக்த

ஞன அதிகாரியின்பொருட்டுப் பிரமவித்தையைக்கொடுக்கவேண்டுமென்று முபதேசித்த சுருதிவாக்கியத்தைக்கூறி, இப்பொருள் சத்தியமென்றசுருதியி னுற் பிரமத்துக்கேசத்தியத்தன்மை கூடுமாயின்சீவர்களுமதற்குவேறுகவிருக் கின்றார்களென்றுசங்கித்து அவர்களும் பிரமத்துக்குவேறில்லையென உபமா னத்தாற்கூறுகின்றார்.

வேறு.

எங்குநிறைந்தபரத்தினிலோகமெழுந்தழியும்படிதா
னங்கியெழும்பொறிபோலுமகம்புறமாயதுமாயையெனுங்
கங்குல்கடந்துயிருக்குயிராயொருகாலழிவற்றகமா
யங்கபிராணன்மனங்களறுஞ் சிவனுகியவக்கரமே.

இ - ள். எங்குநிறைந்தபரத்தினில் - எவ்விடத்தும் பூரணமாய் நிறை ந்தபிரமத்தினிடத்தில், லோகம் - இவ்வுயிர்கள், எழுந்தழியும்படிதான் - உண் டாகியழியுந்தன்மையானது, அங்கி - அக்கினியினிடத்தில், எழும் - உண்டாகி ன்ற, பொறிபோலும் - பொறிகளைப்போலாகும், அகம்புறமாயதும் - உள்ளு ம்வெளியும்வியாபித்திருப்பதும், மாயையெனும் - மாயையென்றுசொல்லப் பட்ட, கங்குல்கடந்து - அந்தகாரத்தைக்கடந்து, உயிருக்குயிராய் - உயிரினு க்குயிராகி, ஒருகாலழிவற்று - ஒருகாலத்துமழிவில்லாமல், அகமாய் - அகம் பதமாகி, அங்கம் - தேகம், பிராணன் - பிராணன், மனங்கள் - மனம் (புத் தி சித்தம் அகங்காரம்) என்னுமிவைகள், அறும் - இல்லாத, சிவனுகியவக்கர மே - பரமசிவனுகிய அக்ஷரப்பொருளேதான். எ - று.

கருத்து. சுவாலையுடைய அனலினின்றும் உபாதிவசத்தால் தீப்பொறியு ண்டாயினும் அவ்வனலுக்குவேறில்லாததுபோல் சித்தரூபர்களாகிய இச்சீ வர்களும் தேகேந்திரியமுதலிய சீவவிலக்கணமுடைய உபாதியின் வசத் தாற் சித்துருபமாகிய பிரமத்தினின்றுமுற்பன்னர்களாகி உபாதிலயத்தால் ப்பரம சிவமென்னும் அட்சரவஸ்துவினிடத்தே பரிச்சேதமில்லாத மகாகாச த்திற்கடாகாசமுதலியதுபோல் இலயிப்பவர்களாதலில் அச்சிவத்துக்கு வேறி ல்லாதவர்களென்பது தோன்ற, "லோகமெழுந்தழியும்படிதானங்கியெழும் பொறிபோல்" எனவும், தருமாதருமங்களைக்காரணமாகவுடைய சகலச முசாரமாலினியமும் மனத்தைச்சார்ந்ததனுல் அம்மனமில்லாமையின் போ க்கியப்பிரபஞ்சத்துக்குபாதானகாரணமாகிய மாயைக்கும் அதனைப்புசிக் கின்ற சோபாதிகனுகிய சீவனுக்கும் நிருபாதினுகிய ஆன்மாவேறுவானெ ன்பார், "மாயையெனுங்கங்குல்கடந்து யிருக்குயிராய்" எனவுங்கூறினுர்.

வடநூலினிவ்வக்கரத்தினின்றும் பிராணன் மனம் இருவகையிந்திரியங் கள் பஞ்சபூதங்களிவ்வனைத்து முண்டாயிற்றென்று கூறியதெற்றிற்கெனின் உற்பத்திக்கு முன்னிலலாத பிராணன்முதலியவற்றோடும் இவற்றிற்குக்கார ணமாகிய பிரமம் கூடியிராதெனற்பொருட்டாகலினென்க. (கஉ)

வேறு.

அங்கிதலைவாய்விவிதமானமறைபானு
திங்கள்விழியெண்டிசைகளுஞ் செவிகள்வாயு
தங்குமுயிர்தன்னிதயமேசகலமுங்கா
லிங்கவனிசங்கரனிருக்கும்வடிவீதால்.

இ-ள். அங்கி - அக்கினியென்னும் வானுலகு, தலை - சிரமாகும், வாய்- வாக்கு, விவிதமான - பலவிதமான, மறை- வேதங்களாகும், பானு திங்கள்- சந்திரனுஞ் சூரியனும், விழி-கண்களாகும், எண்டிசைகளும்- அஷ்டதிக்குக ளும், செவிகள் - காதுகளாகும், வாயு - காற்று, தங்குமுயிர்- தங்கியிருக் கின்ற பிராணனாகும், தன்னிதயமே - தனதுஇருதயமே. சகலமும்-எல்லாவு லகங்களுமாரும், கால் - பாதங்கள், இங்கு - இவ்விடத்தில், அவனி - பூமியா கும், ஈது - இதுவே, சங்கரன் - பரமசிவன், இருக்கும்வடிவு - இருக்கின்ற சுபாவம். எ - று.

கருத்து. இங்ஙனங்கூறியவடிவுடையவிராட்டும் உபாதிநீங்கிடில் பரசி வனே வேறல்லனென்றறிக. (கரு)

அ-கை. வடநூலில் முற்கூறியசிருட்டியை விரித்துக்கூறுகின்றார்.

அர்க்கன்மதியங்கிமழையாதி மறைநாலு
மிக்குமிகுயாகவிவிதங்களியமானர்
தக்கணைசுராசுரர்மனித்தர்பசுசாதி
யெக்கிருமிகீடமுமெழுஞ்சிவனிடத்தே.

இ-ள். அர்க்கன் - சூரியனும், மதி-சந்திரனும், அங்கி - அக்கினியும், மழையாதி - மழைமுதலாயினவும், மறைநாலும் - நான்குவேதங்களும், மிக் குமிகு - மிகுந்த, யாகவிவிதங்கள் - பலவிதயாகங்களும், இயமானர் - இய மானரும், தக்கணை - தக்ஷிணைகளும், சுராசுரர்-தேவாசுரர்களும், மனித்தர்- மனிதர்களும், பசுசாதி - பசுஜாதிகளும், எக்கிருமிகீடமும் - சகலகிருமிகீ டங்களும், சிவனிடத்தே - சிவனிடத்தில்நின்றும், எழும் - உண்டாகும். எ - று.

கருத்து. சுருதியிற்பஞ்சாக்கினிவித்தையில் துயுலோகம் மழை பிருதிவி புருடன் ஸ்திரி என்னும் ஐந்தக்கினிகளும்உபதேசிக்கப்பட்டுத் துயுலோகாக் கினியினின்று முண்டாகியசோமனிடத்தினின்றும்பர்ஜன்யமுண்டாகி அதினி ன்றும் பிருதிவியிலோடதியுண்டாகி அவைகள்புருடனுகிய அக்கினியிலாகுதி பண்ணப்பட அவ்விதஅன்னரசம்ரேதோருபமாகப்பரிணமித்துப் புருடனு ல்ஸ்திரீயெனும் அக்கினியிலஃதாகுதி செய்யப்பட்டு பிரஜையாகஇவ்வாறு பவித்திடினும் பிரஜைகளனைத்தும் அப்பிரமத்தினின்றும் உண்டாகின்றதென் றுகூறியதுங்காண்க. இவ்வாறுற்பத்தியாகவேண்டுமோனுற் சிருட்டியனுதியா னதுபற்றிப்புண்ணியபாவங்களையுடைய சீவர்கள் தேவ யானம் பிதிர்யான

மென்னுமார்க்கங்களாற்பரலோகத்தையடைந்து முற்கூறியபடிசெனிப்பதில் சந்திரமண்டலத்தைச்சூக்குமவுபாதியாலடைந்தே செனிக்கவேண்டியிருப்பதனுலும் பிதிர்லோகத்தையடைதற்குச்சந்திரனும் துயுலோகத்தையடைதற்குச்சூரியனுஞ் சாதனமாகவிருத்தலாலவர்கள் சமித்தெனவும், துயுலோகமுதலியவற்றையடைந்திடினுஞ் செனிப்பதனுல் அவைகளில் வைராக்கியம்வர வேண்டிச் சிருட்டிமத்தியிற்பஞ்சாக்கினிவித்தையு முபதேசிக்கப்பட்டதெனவுங்கொள்க. (கசு)

இதுவுமது.

மெய்ம்மைவிரதந்தவம்விழுப்பமுதலாகுஞ்
செம்மைதருநல்வினைகள்செய்தனுபவிக்கு
மிம்மைமறுமைப்பயனனைத்துமிறைவன்பாற்
பொய்ம்மையறவேகிகழினுங்கனவுபோலாம்.

இ-ள். மெய்ம்மை - சத்தியம், விரதம் - விரதம், தவம்-தவம், விழுப்பமுதலாகும் - நன்மைமுதலாகிய, செம்மைதரு - செம்மையாகிய, நல்வினைகள்செய்து - சற்கருமங்களைச்செய்து, அனுபவிக்கும் - அனுபவிக்கப்படுகின்ற, இம்மைமறுமைப்பயனனைத்தும் - இகபரமிண்டினது பலம்யாவும், இறைவன்பால்-பரமசிவனிடத்தில், பொய்ம்மையறவேநிகழினும்-மெய்ம்மையாகவே பிரகாசித்திடினும், கனவுபோலாம்-சொப்பனசமானமாகும். எ-று.

கருத்து. இவ்வாறுபிரமத்தினின்றும்பிரபஞ்சமுண்டாயிருக்கினுஞ்சொப்பனசமானமாதலால் அதனுற்செய்யப்படும் பரிச்சேதங்கூடாமையினித்தியமாய்ப்பூரணமாயுள்ளதுபிரமமென்றுணர்க. (கரு)

அ-கை. இவ்வாறுசுருக்கியும் விஸ்தரித்துஞ் சிருட்டியைக்கூறி யக்ஷரசொருபத்தையேநிரூபித்து இச்செகமனைத்தும்புருடனேதானென்ற சுருதியினுல் உண்டாகிய செகம்அப்பரமசிவத்துக்குவேறில்லை யெனஉபதேசித்தபொருளைக்கூறுகின்றார்.

வரக்கடவதெப்பொருளுமுன்புவருமாபோ
லுரைத்தபரனேயடையவாகியொளிர்கின்று
னரிக்குமுனிகட்குமரனுக்குமறிவீதே
யிருக்குமதினையமொருகாலுமிதிலெய்தா.

இ-ள். முன்புவருமாபோல் -முன்உற்பவித்தவாறுபோல், வரக்கடவதெப்பொருளும் - மற்றும் உற்பத்திக்கப்படுகின்றசருவங்களும், உரைத்தபரனே - சொல்லிய சர்வசாட்சியானபரமசிவனே, அடையவாகி - இச்சகலஜகமுமாய், ஒளிர்கின்றுன் - பிரகாசிக்கின்றுன், இருக்குமதின் - அப்படியிருப்பதில், அரிக்கும் - விஷ்ணுவுக்கும், முனிகட்கும்- முனிவர்களுக்கும், அரனுக்கும் - சம்புவுக்கும், அறிவீதே - அறிவுஇதேயல்லவா, இதில் - இவ்

விதநிரூபணத்தில், ஐயமொருகாலுமெய்தா - சமுசயமொருபோதுமடையாதாகும். எ - று.

ப - ம். கூறியபிரகாரம் பிரமதேவன்முதல் ஸ்தம்பம்வரைஜகமனைத்தும் பிரமத்தின்காரியமாதலால் அவ்வனைத்தும்பிரமசொரூபத்திலத்தியாசிக்கப்பட்டதுபற்றி சுத்திரஜதம்போல்மித்தையாகும். உண்மையாகவஸ்துவுக்குவேறில்லை அதிஷ்டானவஸ்துமாத்திரமேதானென்பார், "உரைத்தபரனேயடையவாகியொளிர்கின்றான்" என்றார். (கசு)

அ - கை. சிவஞானமுண்டாவதற்கேதுவைக்கூறுகின்றார்.

வேறு.

மருவிவருமாயைவிடமமயலாலிமனிதர்மாறுதியிடாரு, வெருவுபவவேலைவிழுவரழியாதவிமலசிவஞானவிழிபெறா, ரொருபிரமஞானமொழியவொருகாலிவுததிகரையேறவொணுமதோ, தெருள்செய்சிவஞானம்வருவதிறைதாள்கள்செறியவருசேவைவலியினால்.

இ - ள். மருவிவரும் - பொருந்திவருகின்ற, மாயை - மாயையினுடைய, விடமமயலால்- விஷமமாகியமயக்கத்தினால், இ மனிதர் - இந்தமானுடர்கள், மாறுதியிடாரு - மரணமுதலியதுன்பம்நீங்காத, வெருவு - அஞ்சத்தகுந்த, பவவேலை - பிறவிச்சாகரத்தில், விழுவர் - விழுவார்கள், அழியாத - நாசமில்லாத, விமல - பரிசுத்தமான, சிவஞானவிழி - சிவஞானக்கண்ணை, பெறார் - அடையார்கள், ஒருபிரமஞானம்-ஒப்பற்றபிரமஞானத்தை,ஒழிய-தவிர, ஒருகால் - ஒருகாலத்திலும், இவுததி -இப்பவசமுத்திரத்தின், கரையேறவொணுமதோ - கரையேறக்கூடுமோ, தெருள்செய் - தெளிதலைச்செய்கின்ற, சிவஞானம் - சிவஞானமானது, இறைதாள்கள்-பரமசிவத்தின்பாததாமரைகளை, செறியவரு - இடைவிடாமல்வாராநின்ற, சேவைவலியினால் - தரிசனஞ்செய்கின்றவலிமையினால், வருவது - வருகின்றது. எ - று. (கஎ)

அ - கை. அக்ஷரமென்றுதடஸ்தமாகமுன்புகூறியபரமசிவத்தைத்தானாகக்கூறுகின்றார்.

வேறு.

அக்கரந்தனையிக்குரம்பையிலறியுமாகிலவிச்சையா
மிக்கிரந்திநசிக்குமீசனையெய்தலாமமுதென்பதும்
புக்கிருந்தபிராணனும்மனமாவதும்பரபோதமே
மிக்கிருந்தவுளத்தினோர்விரகாலிதுள்புகமேவுவார்.

இ - ள். இக்குரம்பையில்- இந்தச்சரீரத்திலுள்ளகுகையில் (வைக்கப்பட்டிருக்கின்ற), அக்கரந்தனை - அக்ஷரப்பொருளை, அறியுமாகில் - அபரோக்ஷமாயறிவானாகில், (அவனுக்கு) அவிச்சையாம் - அவித்தையாகிய, இக்கிரந்தி- இந்தமுடிச்சானது, நசிக்கும் - அழியும், ஈசனை - பரமசிவனை, எய்தலாம் -

அடையலாம், அமுதென்பதும்-மோட்சமென்பதும், புக்கிருந்த - உடம்பினுட் புகுந்திருந்த, பிராணனும் - பிராணனென்பதும், மனமாவதும் - மனமென்பதும், பரபோதமே - அக்ஷரப்பொருளேயாகும், மிக்கிருந்த - பெருமையின்மிகுந்திருந்த, உளத்தினோர் - மனத்தையுடையவர்கள், விரகால்- உணர்வினால், இதள்புக - இஃதுளத்திற்புகும்படி, மேவுவார் - பொருந்துவார்கள். எ - று.

கருத்து. குகையென்னும்சத்தத்தின்வாச்சியமான இருதயமத்தியிலிருக்கின்றவான்மாவைத்தானாக அபரோட்சீகரிக்கின்றவன் ஞானத்தால் சமுசாரகாரணமாகிய அஞ்ஞானமென்னும்முடிச்சைக்கிண்டு எதனாலும்வாதையில்லாதசிதேகரசமானபரசிவசொரூபத்தையடைகின்றானெனக்கொள்க. (கஅ)

அ - கை. தியானவிபரத்தைக்கூறுகின்றார்.

தாரம்விற்கணைதானிலக்குளதத்துவந்தவறுதவா
ரார்குறித்தெயவல்லரப்பொருளிற்குளிப்பவரெங்குமாம்
பேரிலக்கெயும்வில்லியப்படிபேசுநற்கணையெங்கணுங்
கூர்முகத்ததிலக்கிலம்புகுளிக்கையையுறல்கூடுமோ.

இ - ள். தாரம் - பிரணவமானது, வில் - வில்லாகவும், தான் - ஆன்மாவானவன், கணை - சரமாகவும், இலக்கு- லக்ஷியம், உள-என்றுமுள்ள, தத்துவம் - பிரமமாகவும் (செய்து), தவறுதவாறு - (பிரமாதத்தால்) தப்பாதபடி, ஆர் - யார், குறித்தெயவல்லர் - குறித்து ஏவவல்லவர்களோ (அவர்கள்), அப்பொருளில் - அந்தலக்ஷியப்பொருளில், குளிப்பவர் - தாதான்மியத்தையடைபவராவார்கள், பேரிலக்கு எங்குமாம் - பெரியலக்ஷியமெங்கும்வியாபகமாகும், எயும்வில்லி - பாணத்தையெய்கின்றவில்லையுடையவனும், அப்படி - அவ்வண்ணமேவியாபகன், பேசுநற்கணை-சொல்லாநின்றநல்லசரமும், எங்கணுங்கூர்முகத்தது - எங்கும் நண்ணியமுகத்தையுடையது, (ஆகையினால்) இலக்கில் - (பிரமமாகிய) லக்ஷியத்தில், அம்பு - (ஆன்மாவாகிய) சரமானது, குளிக்கை - தாதான்மியத்தையடைதலில், ஐயுறல்கூடுமோ - சந்தேகப்படுதல்கூடுங்காலோ. எ - று.

ப -ம். எவ்வாறுலௌகிகமானவில்லு லக்ஷியத்திற்சரஞ்செல்லுதற்குக்காரணமாம் அவ்வாறு லட்சியமாகியபிரமத்திலான்மாவெனுஞ்சரப்பிரவேசத்துக்குக்காரணமாதலாற் பிரணவத்தை, "வில்லு" எனவும், சருவவிருத்திசாட்சியாகியசோபாதிகவான்மாவைக், "கணைதான்" எனவும், பாசநீங்கிடுங்கால் லக்ஷியப்பிரமத்தில்த்தனதுசொரூபமாகவேசரம்போற்சமர்ப்பிக்கத்தக்கவான்மா வில்லுமுதலியசத்திரங்கொண்டுவிடயஆசைமுதலியபிரமாதமில்லாமல் ஏகாக்கிரசித்தத்தாற்பேதிக்கத்தக்கது. அவ்வாறுபேதிக்கில் இலவுகிகசரம்லக்ஷியத்தோடைக்கியப்படுவதுபோல் தேகாதிசாக்ஷிசைதன்னியம்சாக்ஷியஅபிமானபரித்தியாகத்தால் லக்ஷியமானபிரமத்தோடு ஐக்கியத்தையடைந்து சத்துரு

னுகப்பவிக்கின்முனென்பார், "ஊதத்துவந்தவமுதவாமுர்குறித்தெயவல்ல ரப்பொருளிற்குளிப்பவர்" எனவும், இலவுகிகமானசரத்தின்லட்சியம்பரிச்சி ன்னமாகவும் வில்லுளிமுகமாகவும் வில்லாளிஒரிடத்திலுள்ளவனுயுமிருப்ப தனுல் அதற்குலக்ஷியத்தையடைதல்நிர்ணயமில்லை இவ்விடத்தில்அதற்குவில ட்சணமாதலால்லக்ஷியம்பிராப்தமாகுமென்பார், "பேசுநற்கணையெங்கணுங் கூர்முகத்ததிலக்கிலம்புகுளிக்கையையுறல்கூடுமோ" எனவுங்கூறினுர். (கக)

அ - கை. பிரணவத்தாலான்மாவைப்பிரமமாகவறிய வேண்டுமென்ற ஞானம் மற்ருேர்சுருதியிலுமுள்ளதென்றுதெரிவித்து அவ்வக்கரஞ்சுக்குமமாதலாலதனையறிதல்கடினமென்றுகருதித்திரும்பவுமுபதேசிக்கின்முர்.

வேறு.

அரணியோடுத்தராரணியுயிருமமலவோங்காரமுமாக்கிக், கரணி யதியானமாமதனத்தாற்காணுணுவொளியினைக்காண்பர், புரணந ல்லொளியிற்பூதபௌதிகங்கள்பொருந்துயிர்புலன்கண்மற்றெல்லா, மரணுறக்கோவையாகியேகிடக்குமதனையேயறிகுவனறிஞன்.

இ - ள். அரணியோடு - அதராரணியோடு, உத்தராரணி - உத்தராரணியாக, உயிரும்-தானுனஆன்மாவையும், அமல-நின்மலமான, ஓங்காரமும்-பிரணவத்தையும், ஆக்கி-செய்து, கரணிய-செய்யப்பட்ட, தியானமாம்-தியானமாகிய, மதனத்தால்-கடைதலால், காணுணுவொளியினை - அதிரிசியமான தேவனை, காண்பர் - பார்ப்பார்கள், புரணம் - பூரணமாகிய, நல்லொளியில்-நல்லசுயம்பிரகாசத்தில், பூதபௌதிகங்கள் - பஞ்சபூதபாஞ்சபௌதிகங்களும், பொருந்துயிர் - (உடலிற்) பொருந்தியிருக்கின்றபிராணனும், புலன்கள்- ஐம்புலன்களும், மற்றெல்லாம் - பூமிஅந்தரிக்ஷம் சுவர்க்கம் மனமிவையனைத்தும், அரணுற - அழகாக, கோவையாகியேகிடக்கும் - கோக்கப்பட்டிருக்கும், அதனை - அதனை, அறிஞன் - அறிவுடையவன், அறிகுவன் - உணர்வான். எ - று.

கருத்து. எவ்வாறு கீழ்மேலானஅரணிகளால் மதனிக்கில் தாருவின் கண்ணேமிகுருக்குமமான அக்கினியைப்பார்க்கின்முரோ அங்ஙனம் பிரணவத்தால் சாக்கிரமுதலியஅவஸ்தைகளைமுன்னிட்டுக்குறிக்கப்படுவதான பிரமருபமாகஅனுசந்தானிக்கின்றதான் அவ்வப்பியாசத்தாற்சொருபத்தை அபரோக்ஷீகரிக்கின்முனென்பதாம். (உ0)

அ-கை. இவ்வான்மா எவ்விடத்தடையத்தக்கவனெனவும் அச்சொருபமித்தன்மையுடையதெனவுங்கூறுகின்முர்.

பரம்பொருளினையேபாடுவான்வேறுபகருவானலன்பருகமிர்த வரம்பதுவாகுமண்ணின்மற்றிந்தமகிமையேயுள்ளதிப்பிரம புரந்தனிலெதயாகாசமாநிகழ்ந்தெப்பொருள்களுமறிந்தெலாம்வல்ல வுரன்றனைவெறுநல்லானந்தவடிவாயறிந்தவர்மறுபிறப்பறுவார்.

இ - ள். பரம்பொருளினையே - பிரமத்தையே, பாடுவான் - பாடக்க டவன், வேறுபகருவானலன் - இதரங்களைவிவகரிக்கவேமாட்டான், பருகு- பானம்பண்ணப்பட்ட, அமிர்தவரம்பதுவாகும் - அமிர்தமாகியமோட்சத்தின் வரம்பு அப்பொருளேயாகும், மண்ணில்- பூமியின்கண், இந்தமகிமையேயுள் ளது - பிரமத்தினதுஇம்மகிமையேபிரசித்தமாய்விளங்குகின்றது, இப்பிரம புரந்தனில் - இந்தப்பிரமபுரத்தில், இதயாகாசமாகிகழ்ந்து - சிதாகாயமாக விளங்கி, எப்பொருள்களுமறிந்து- எல்லாப்பொருள்களையுமறிந்து, எலாம்வ ல்ல - சருவசக்தியனுகிய, அரன்றனைவெறுநல்லானந்தவடிவாய்- ஈசனைக்கேவ லம்நல்லஆனந்தவடிவாகவே, அறிந்தவர்-உணர்ந்தவர்கள்,மறுபிறப்பறுவார்- மேலெடுக்குஞ்சென்மத்தைநீக்குவார்கள். எ - று. (உக)

அ - கை. அவ்வித்துவானடையும்பலமிவ்வண்ணமெனக்கூறுகின்றூர்.

இதயமாமிந்தவிமலகோசத்தேவிரசமாய்விளங்குநற்பிரமந்
துதையமேவிடுமச்சோதியேயெல்லாச்சோதிக்குஞ்சோதியாவதுவு
மிதயமேநிகழுமிதனைமெய்கண்டவிடத்தின்மற்றிதயநோயெல்லாஞ்
சிதையுமையுறவுந்தீருமெவ்வினையுஞ்செய்யினுஞ்செய்திலனுமால்.

இ - ள். இதயமாம் - (இரண்மயபுரமென்னும்) அந்தக்கரணமாம், இந் தவிமலகோசத்தே - இந்தநின்மலவிருதயகோசத்தில், விரசமாய்விளங்கும் - அவித்தைமுதலியமலமில்லாததாகப்பிரகாசிக்கும், நற்பிரமம் - திரிவிதபரிச் சேதமில்லாதநல்லபரமசிவசொருபமானது, துதையமேவிடும்-நீங்காமற்பெ ருந்திநிற்கும், அச்சோதியே - அவ்விதசொப்பிரகாசமே, எல்லாச்சோதிக்கு ம் - அனல்முதலியவொளிக்கும், சோதியாவதுவும் - பிரகாசிக்கச்செய்யாநி ற்பதுவும், இதயமேநிகழும் - சகலவிருதயங்களிலும்பிரகாசிக்கின்ற, இதனை- காரியகாரணங்களாய்நின்றசிவத்தை, மெய்கண்டவிடத்தில் - உள்ளபடியறி ந்தமாத்திரத்தில், இதயநோயெல்லாம் - இருதயத்திற்கிரந்திபோலிருக்கின்ற வவித்தையின்வாசனையனைத்தும், சிதையும் - நசிக்கும், ஐயுறவுந்தீரும் - சமு சயமுந்தீர்ந்துவிடும், எவ்வினையுஞ்செய்யினும் - எக்கர்மங்களைச்செய்தாலும், செய்திலனும் - செய்யாதவனுவான். எ - று.

ப - ம். பிரமத்தைஅடையக்காரணமாநின்ற விஞ்ஞானப்பிரகாசமுடை யசருவாந்தரமானதகராகாசத்திலென்பார், "இதயமாமிந்தவிமலகோசத்தே" எனவும், வித்தையாலவித்தைநீங்குமளவிற் காரணமில்லாததாகிச்சமுசயம னைத்துநீங்குமென்பார், "ஐயுறவுந்தீரும்" எனவும், அவித்தைசமுசயமிவை களைநீங்கியவிவ்வதிகாரி யிப்பிறப்பினும்முந்தியபிறப்பினுஞ்செய்த மேல்வரு ஞ்சென்மங்களுக்கேதுவாகிய ஆகாமிய சஞ்சிதங்களானகருமங்களையுடைய வனுகிலும் அக்கருமங்களை நீங்கினவனேயென்பார், "எவ்வினையுஞ்செய்யினு ஞ்செய்திலனும்" எனவுங்கூறினூர். (உஉ)

அ-கை, எங்ஙனம் ஒளிக்கொளியாகுமென்றுசங்கித்துக்கூறுகின்றூர்.

வேறு.

இலங்கிரவியிந்துவனருரகைமினெல்லா
நலம்பெறவிளங்குவதுஞானவொளிகொண்டே
புலம்படுமனைத்தையும்விளக்குபரபோதந்
துலங்குவதுதன்னுடையசோதியதனலே.

இ-ள். ஞானவொளிகொண்டே-ஞானப்பிரகாசத்தைக்கொண்டே, இலங்கு-ஒளிர்கின்ற, இரவி-சூரியனும், இந்து-சந்திரனும், அனல் - அக்கினியும், தாரகை - நட்சத்திரங்களும், மின்-மின்னலும், எல்லாம் - அனைத்தும், நலம்பெற- நன்மைபெற, விளங்குவது-பிரகாசிக்கின்றனவாம், புலம்படும் - பஞ்சவிஷயமான, அனைத்தையும் - சகலத்தையும், விளக்குபரபோதம் - பிரகாசிப்பிக்கின்றஞானசொரூபமானது, தன்னுடையசோதியதனுல் - தன்பிரகாசத்தினல், துலங்குவது - பிரகாசிக்கின்றது. எ - று. (உங)

அ - கை. சூரியன்முதலோர்களவ்விடத்துவிளங்காததற்குக்காரணத்தையும் சூரியன்முதலோர்பிரகாசிக்கின்ருர்களென்றசுருதியின்தாற்பரியத்தையும் சித்துருபப்பிரமம் சகத்திற்குக்காரணமாகலின்அனைத்தும்பிரமமெனஉபசங்கரித்துங்கூறுகின்ருர்.

ஓரொளிவிளங்குகிலதூதையுலவாத
சீரொளியில்வேறுசிலதேவர்திகழ்வாரோ
பார்வெளியுமெப்பொருள்களுந்திசைகள்பத்தும்
பேரொளிபெறத்திகழ்பரப்பிரமமேயாம்.

இ-ள். ஓரொளிவிளங்குகிலது-ஒருபிரகாசமும்விளங்கமாட்டாது, ஊதையுலவாதசீரொளியில்- வாயுவுஞ்செல்லாதசிறப்பினையுடைய சிவப்பிரகாசத்தில், வேறுசிலதேவர் -மற்றுமுள்ளசாமானியதேவர்களும், திகழ்வாரோ-பிரகாசிப்பார்களோ, பார் - பூமியும், வெளியும் - ஆகாயமும், எப்பொருள்களும் - எல்லாப்பொருள்களும், திசைகள்பத்தும் - பத்துத்திசைகளும், பேரொளிபெறத்திகழ்- (எல்லாம்)பெரியபிரகாசமடையவிளங்காநின்ற, பரப்பிரமமேயாம்-பரப்பிரமமேயாகும். எ-று. (உச)

அ-கை. சீவேசர்கள் சமுசாரி யசமுசாரிகளாக நிழலும்வெயிலும்போலவேற்றுமையுள்ளவர்கள் எப்படியவர்களுக்கேகத்தன்மைகூடுமென்றுசங்கிக்க, அப்பேதம் மாயையால்வந்ததேயன்றி யுண்மையாவில்லையென்று உவமானத்தால் மறுத்துக்கூறுகின்ருர்.

வேறு

இந்தவுடம்புறைசீவபரங்களெனப்படுமென்னமிரண்
டிந்தவிரண்டிலுமொன்றுவினைப்பயனங்குநுகர்ந்திடுமாங்

தொந்தமறும்பரமொன்றுமுணுதுசொலப்படுபேதமும்வான்
வந்தகடத்திலகப்படுபேதமெனப்படுமாயையினால்.

இ-ள். இந்தவுடம்பு - இந்தவுடம்பினில், உறை-வாசம்பண்ணுகிற, ஜீவபரங்களெனப்படும்-ஜீவேசரென்றுசொல்லப்பட்ட, அன்னமிரண்டு-இரண்டன்னப்பட்சிகளிருக்கின்றன, அந்தவிரண்டிலும் - அந்தவிரண்டுகளிலும், ஒன்று - ஓர்பறவையானது, வினைப்பயன் - தேகத்தில் கர்மபலத்தை, அங்குநுகர்ந்திடுமோம்-அவ்விடத்திற்புசிக்கின்றதாகும், தொந்தமறும்-தொடர்பில்லாத, பரம் - மகேசனெனுமற்றொருபறவை, ஒன்றுமுணுது- ஒன்றும்புசியாமற்சாட்சியாவிளங்குகின்றது, மாயையினால்-மாயையால், சொலப்படுபேதமும்-ஜீவேசரென்றுசொல்லுகின்றபேதமும், வான்-ஆகாயத்திற்கு, வந்தகடத்தில்அகப்படுபேதமெனப்படும்- கடத்திற்பிரவேசித்தகாலத்திற்கடாகாசமென்றுபெயர்வந்தபேதம்போலாகும். எ-று.

ப-ம். உபாதிசம்பந்தமுடையஜீவனதனுற்செய்யப்பட்டசுகதுக்கங்களானபுண்ணியபாவபலங்களை நுகருகின்றுனென்பார்,"அந்தவிரண்டிலுமொன்றுவினைப்பயனங்குநுகர்ந்திடும்" எனவும், உபாதியபிமானமில்லாததுபற்றிக் கருத்திருத்துவமின்மையினால் அந்தப்பலனைநுகராது கேவலஞ்சாட்சிஞானரூபமாகவீசன்வேறுய்ச்சுயமாகப்பிரகாசிக்கின்றுனென்பார்,"தொந்தமறும்பரமொன்றுமுணுது" எனவும், ஏகமானசிற்சொரூபப்பிரமமே உபாதியிலுள்ளமலினஞ்சுத்தம்என்னுங்குணங்களாலே ஜீவேசபேதமாகக்கற்பிக்கப்பட்டதென்பார்,"பேதமும்வான்வந்தகடத்திலகப்படுபேதமெனப்படுமாயையினால்" எனவுங்கூறினர்.

கருத்து. உபாதியால்வந்தபேத நீங்கிடிற் பரமார்த்தமாகஅவ்விருவர்களுக்குமுற்பத்திநாசமில்லாதஞானமேசொரூபமெனக்கொள்க. (உரு)

அ-கை. ஈசனதுஞானமனைத்தையும்விஷயீகரிப்பதாயும் ஜீவனதுஞானஞ்சிலவற்றைவிஷயீகரிக்கின்றதாயுமிருக்க எப்படிஇவர்களுக்கு ஏகத்தன்மைகூடுமென்றசங்கையைக்கண்டிப்பார் அப்பேதம் சித்துருபத்தாலா அல்லதுசடருபத்தாலாவென ஆக்ஷேபித்துக்கூறுகின்றுர்.

வேறு.

தற்பரனுருவஞ்சித்தேதற்பரனிடையேயபக்
கற்பிதஜீவன்றுனுமதானக்காலந்தச்
சிற்பொருளொன்றேவேறெனின்மற்றதுசித்தாமோ
வற்பமும்வேருகாதுசிதாகாரத்தாலே.

இ-ள. தற்பரனுருவம் - ஈசனதுருபம், சித்தே - சித்தேயாகும், தற்பரனிடையே - ஈசனிடத்தே, அக்கற்பிதஜீவன்றுனும் - அந்தக்கற்பிதமான ஜீவனும்,அதானக்கால்-அந்தச்சித்தேயானகாலத்தில்,அந்தச்சிற்பொருளொன்றே-

அந்தச்சித்தாகிய வத்துஒன்றேதான், வேறெனில்-பின்னமாகக்கூறிடில், மற்றதுசித்தாமோ- அதுசித்தாகுமோ ஆகாது, சிதாகாரத்தாலே - சித்துத்தன்மையாலே, அற்பமும்வேறுகாது - கிஞ்சித்தேனும்பின்னமாகாது. எ-று.

ப-ம். சித்திற்குவேருகமற்றெருருசித்துண்டென்றுல் அதுசித்திற்குவேருதலிற் சுவர்முதலியவைபோலாகிச்சித்திற்கானிவருமென்பார்," வேறெனின்மற்றதுசித்தாமோ" எனவும், ஞானத்திற்குப்பரிமிதவிஷயத்தன்மையும் எல்லாவற்றையும்விஷயீகரிக்குந்தன்மையும் உபாதியைச்சார்ந்தசுத்தாசுத்தகுணங்களால்வந்ததேயன்றி அதசொரூபத்தைச்சார்ந்ததன்றென்பார்," அற்பமும்வேருகாதுசிதாகாரத்தாலே" எனவுங்கூறினர். (உசு)

அ - கை. சடத்திற்கேயப்பேதமன்றிச்சித்திற்கில்லையென்று இரண்டாவதுசங்கையைமறுத்துக்கூறுகின்றுர்.

பன்னுசடாகாரப்புணர்வாலேபரசீவர்
பின்னரெனிற்போதத்தொருபேதம்பிறவாதே
மன்னுசடத்தேபேதமதத்தான்மானத்தாற்
சொன்னவபேதப்பொருள்கலர்கண்ணிற்றேன்றுதே.

இ-ள். பன்னு - சொல்லப்பட்ட, சடாகாரப்புணர்வாலே - சடருபசம்பந்தத்தால், பரசீவர் - ஈசீவேசர்கள், பின்னரெனில் - பேதமுடையவர்களென்றுல், போதத்தொருபேதம் - ஞானத்தில்ஒருபேதமும், பிறவாது - சனிக்காது, மன்னுசடத்தேபேதம்- நிலைபெற்றசடத்தினிடத்தேபேதஞ்சனிக்கும், மதத்தால்மானத்தால் - தருக்கத்தாலும்பிரமாணத்தாலும், சொன்னவபேதப்பொருள் - சொல்லப்பட்டபேதமில்லாவத்துவானது, கலர் - பாவிகளது, கண்ணிற்றேன்றுதே - திருஷ்டியில்த்தோன்றுது. எ - று.

ப - ம். இவ்விடத்திற்கூறியதர்க்கத்தாலும் சித்தேயல்லவா இதுவாகவிளங்குகின்றதென்றுஇருமுறைகூறியபிரமாணத்தாலுஞ் சிதேகத்தன்மைசித்தித்ததென்பார்," மதத்தான்மானத்தாற்சொன்னவபேதப்பொருள்" என்றுர். ()

அ - கை. சிவப்பிரசாதமுதலியவைகளையுடையவனுக்கேயத்துவிதமதியுண்டாகுமெனக்கூறுகின்றுர்.

வேறு.

மறையாலுமிருதிசொலும்வழியாலும்வருவதவி
றிறையார்தமருளில்வருவதுவேகமெனுமுணர்வு
பிறிவானதறுமுணர்வுபெறுமாகிலொருபொழுது
மிறவாதசிவமடையுமிடர்மோகமெவையுமிலன்.

இ-ள். ஏகமெனுமுணர்வு - பரமாத்துவிதமென்னும்ஞானம், மறையாலும் - சுருதியினாலும், மிருதிசொலும்வழியாலும் - ஸ்மிருதியினுற்சொல்ல

ப்பட்டஆசாரங்களாலும், வருவது - வரத்தக்கது, அவிர் - சுயஞ்சோதியாகிய, இறையார்தமருளில் - உருத்திரமூர்த்தியினதுபிரசாதத்தால், வருவது - வரத்தக்கது, பிறிவானதறுமுணர்வு - இந்தப்பின்னமில்லாதஞானத்தை, பெறுமாகில் - அடைந்தானுனல், ஒருபொழுதும் - ஒருக்காலும், இறவாதசிவமடையும் - அழியாதசிவத்தையடைவான், இடர்மோகமெவையுமிலன் - துன்பமோகமுதலியஎவைகளுமில்லாதவனுவான். எ - று.

கருத்து. ஒருடம்பின்கண்ணேபோக்திருத்வமுடையவனும் அஃதில்லாதவனுமிருக்கின்றசீவேசர்களுக்கு உபாதிகளாற்செய்யப்படும்பேதநீங்குதலாலுள்ளசின்மாத்திரரூபமாகியவைக்கியம்யாதுஅந்தஞானமே சோகமோகமுதலியசமுசாரபயநிவர்த்திரூபமாய்ப் பரமானந்தத்தையடையச்செய்யுமிலக்கணத்தையுடையமுத்திக்குக்காரணமென்றறிக. (உஅ)

அ - கை. இரண்டுபுட்களென்றுசொல்லியமந்திரத்தினுடையதாற்பரியவுரையினுற் பேதபட்சத்தைநிராகரித்துக் கீழேசொல்லியபொருளைநேரேபிரதிபாதிக்கின்றமந்திரார்த்தத்தை விவரித்துக்கூறுகின்றார்.

திதமாவியுடலுறையவிறைமாயைசெயலினுயும்
விதநாடவரியகடல்விழும்வேறுபடவுணர
விதுநாளும்வருமிறைவனுருவாகுமிலதெவையு
மதுநானெனனுபவமதடைவோனொரலைவுமிலன்.

இ - ள். இறை - பரமசிவன், உடலுறைய - இச்சரீரத்திலிருக்கவும், திதமாவி - நிலைபெற்றஇச்சீவன், மாயைசெயலின் - மாயையின்செய்கையினால், உயும் விதநாடவரியகடல் - கரையேறிப்பிழைக்கும்வண்ணங்கருதமுடியாதசமுத்திரத்தில், விழும் - விழுவான், வேறுபடவுணர - தனக்குவேறுகச்சிவனையறியில், இதுநாளும்வரும் - இந்தப்பவக்கடல் எந்நாளும்வரும், இலதெவையும்இறைவனுருவாகும் - உண்மையில்லாதவனைத்தும்பரசிவசொரூபமாகும், அது - அச்சிவமே, நான்-யான், எனனுபவமதடைவோன் - என்னுமனுபவத்தையடைபவன், ஒரலைவுமிலன்-ஒருசோகமுமில்லாதவன். எ-று.

ப - ம். சீவன் உபாதிபூதமானமலினசத்துவப்பிரதானமாயையினுல்வசீகரிக்கப்படலால், "இறைமாயைசெயல்" எனவும்,சமுசாரியானதன்னைக்காட்டிலும் விலக்ஷணமாகவேருய்விளங்குகின்றதாயும் சமுசாரதுக்கசமூகமில்லாததாயும் சிரவணமனனமுதலியவுபாயங்களால்த் தன்னுலேசேவிக்கத்தக்கதாயுமுள்ள பரமசிவசொரூபமேதானென்றறிதல் சீவனுக்குப்பரமாத்துவிதலட்சணமென்பார், "இறைவனுருவாகுமிலதெவையுமதுநானெனனுபவமதடைவோனொரலைவுமிலன்" எனவுங்கூறினர். (உக)

அ - கை. வித்துவானுன்மசொரூபத்தையடையும்விவரங்கூறுகின்றார்.

வேறு.

சின்மயமாகுந்தன்மகிமாவைத்திரவறிந்தானியாதொருபோதத்
தன்மையனருகுந்தன்னைபகர்த்தாவாய்முழுதுக்குந்தானிடமாகிப்
பொன்மயனருகும்பூரணனயப்போதெதிர்காணும்புண்ணியகோடிப்
பன்மையினலுந்தர்க்கொடுமானப்பார்வையினலும்பரனருளாலும்.

இ - ள். சின்மயமாகும் - சின்மாத்திரமாகிய, தன்மகிமாவை - தனது மகிமையை, யாதொருபோது - எக்காலத்தில், தீரவறிந்தான் - முற்றவுணர்ந்தானே, (அவன்) அத்தன்மையனருகுந்தன்னை - அத்தன்மையுடையவனுகியதன்னை, அகர்த்தாவாய் - கருத்திருத்துவமில்லாதவனயும், முழுதுக்குந்தானிடமாகி - எல்லாவற்றிற்குந்தானிருப்பிடமாகி, பொன்மயனருகும் - சுவணம்போன்றமேனியையுடைய, பூரணனய் - பூரணனயும், அப்போது - அப்பொழுது, புண்ணியகோடிப்பன்மையினலும் - முன்னியற்றியஅனேககோடிபுண்ணியமிகுதியினலும், தர்க்கொடு - தருக்கத்துடன், மானப்பார்வையினலும் - பிரமாணமாகியவேதப்பார்வையினலும், பரனருளாலும் - சிவப்பிரசாதத்தாலும், எதிர்காணும் - நேராகக்காண்பான். எ - று.

ப - ம். தரிசனக்கிரியாகருத்திருத்துவமில்லாது சொரூபப்பிரகாசமாகவிளங்குகின்றமையாற் கருமகருத்தருபாவமில்லாமற்பார்ப்பானென்பார், "தன்னையகர்த்தாவாய்" எனவும், வேதத்திலுள்ளபுருடசத்தத்துக்குப்பொருள்சொல்லுவார், "பூரணன்" எனவுங்கூறினர். (௩௦)

அ - கை. மேற்சனனங்களைக்கொடுக்கும் புண்ணியபாவங்களாற்பிரதிபந்திக்கப்பட்டபரவித்தையினற் சீவனுக்கெங்ஙனமுத்திகூடுமென்றசங்கையையும் பிராகரித்துச் சமவாதத்தைமறுக்கவேண்டிச் சின்மாத்திரரூபர்களாயுள்ளசீவேசர்களுக்குச் சமத்தன்மையா அன்றேல் உபாதியுடன்கூடினவர்களுக்கா வென்றுவிகற்பித்துக்கூறுகின்றர்.

வேறு.

பாவபுண்ணியங்களிரண்டையுமுதறிப்பற்றுதலொன்றுமின்றி
யாவையுந்தானய்வேறிலாதவனெப்பெய்துமற்றிப்பொருளறிந்தான்
சீவனும்பரனுஞ்சின்மயமாகுமாதலாலொப்பெனச்செப்பன்
மேவியொன்ருகிவிடுதலேயன்றிவேறுவேருகுமோவீடு.

இ - ள். இப்பொருளறிந்தான் - இந்தவஸ்துவையறிந்தவன், பாவபுண்ணியங்களிரண்டையும் - பாவபுண்ணியங்களாகியவிரண்டினையும், உதறி - தள்ளி, ஒன்றும்பற்றுதலின்றி - ஒருபொருளோடும்பற்றுதலில்லாமல், யாவையுந்தானய் - சகலமுந்தானய், வேறிலாதவன் - பின்னமாகவொருவஸ்துவுமில்லாதவன், ஒப்பெய்தும் - சாமியத்தையடைகின்றன், சீவனும்பரனும் - சீவனும் சிவனும், சின்மயமாகும் - சின்மாத்திரமாகும், ஆதலால் - ஆகையால்,

ஒப்பெனச்செப்பல் - சாமியமென்றுகூறுதல், ஒன்றாகிமேவிவிடுதலேயன்றி - ஏகத்தன்மையாகப்பொருந்திவிடுவதேயன்றி, வீடு - மோட்சமானது, வேறு வேறாகுமோ - ஒன்றற்கொன்றுபின்னமாகுமோஆகாது. எ - று.

ப - ம். இஃச்சொல்லியவிலக்கணத்தையுடையபரமசிவத்தைத்தானாக வித்துவானெப்பொழுதுபார்க்கின்றானோ அப்பொழுது வருபிறப்பைக்கொடுக்குஞ்சஞ்சிதபுண்ணியபாவங்களையுதறி யதற்கேதுவாகுந்தேகேந்திரியாதிக ளெல்லாவற்றிற்கும்வேறாகி யெல்லாவிதத்தாலுமைக்கியமாயுள்ளசிவசாமியத்தையடைகின்றானென்பார், "பாவபுண்ணியங்களிரண்டையுமுதறிப்பற்றுவீடொன்றொடுமின்றி, யாவையுந்தானுய்வேறிலாதவனெனப்பெய்தும்" என்றார்.

கருத்து. அவ்விருவர்களுக்குஞ்சின்மாத்திரரூபமாகப் பேதமின்மையிற் பேதத்தாற்சித்திக்குஞ் சாமியங்கூடாதென்றுகொள்க. (கூக)

அ-கை. உபமானத்தாலிரண்டாவது சங்கையைநிராகரித்து இவ்வண்ணஞ்சீவேசர்களுடையசொரூபபரியாலோசனையினாலொப்பில்லையென்றுரைத்துக் காரணபரியாலோசனையாற்சாமியமுண்டென்பாரைமறுக்கவேண்டி அக்காரணங் கருமமா அன்றேல் வித்தையா என்றுவிகற்பித்துக்கூறுகின்றார்.

உடம்புடன்புணர்ப்பாற்சீவனுக்கிறையோடொப்புளதென்னிலொப்பில்லை, கடந்திகழ்வானில்வானம்வேறாகக் கருதியொப்புரைப்பரோவொப்பாய், விடுந்திறங்கன்மத்தாலெனிற்கன்மமிறக்குமேவிச்சையாலென்னிற், றிடம்படமுன்பேயுள்ளதேஞானந்திகழ்த்துவதல்லதுசெய்யா.

இ-ள். உடம்புடன்புணர்ப்பால் - தேகோபாதிசம்பந்தத்தால், சீவனுக்கு - சீவான்மாவுக்கு, இறையோடு - பரமான்மாவோடு, ஒப்புளதென்னில் - சாமியமிருக்கின்றதென்னில், ஒப்பில்லை - சாமியங்கிடையாது, கடந்திகழ்வானில் - கடத்திற்பிரகாசிக்கின்றஆகாயத்தைக்காட்டிலும், வானம்வேறாகக்கருதி - மகாகாயத்தைப்பின்னமாகவெண்ணி, ஒப்புரைப்பரோ - சமானமாகச் சொல்லுவார்களோ, ஒப்பாய்விடுந்திறங்கன்மத்தாலெனில்-சாமியமாகுந்தன்மைகருமத்தாற்கூடுமென்றால், கன்மம் - கருமசாத்தியமெல்லாம், இறக்கும் - நசிக்கும், விச்சையாலென்னில் - ஞானத்தினாற்சாமியங்கூடுமென்னில், திடம்பட - திரமாக, முன்பேயுள்ளது - அந்தச்சாமியம் முன்னமேயிருக்கின்றது, ஞானம் - விச்சையானது, திகழ்த்துவதல்லது - பிரகாசிக்கச் செய்வதேயன்றி, செய்யா - ஒருபொருளையுண்டாக்கமாட்டாது. எ - று.

ப - ம். இஞ்சிக்கிய சருவக்கியத்தன்மைகளான உபாதியுடன் கூடியசீவேசர்களுக்கு மிகவும்வேற்றுமையிருத்தலாலொருக்காலும்ஒப்புக்கூடாதென்பார், "ஒப்பில்லை" எனவும், கருமசாத்தியமாகுங் காரியத்துக்கழிவுபாடுண்டெனபார், "கன்மமிறக்கும்" எனவும், ஞானமானது முன்பிருக்குஞ்சாமியத்

தைத்தெரிவிக்குமேயன்றி உண்டுபண்ணுது ஆகலின் முன்னமேயிவர்களுக்குச்சாமியமிருத்தலின் அது வித்தியாபலமாகாமையின் வித்தை பயனில்லாததாகிவிடுமென்பார், "ஞானந்திகழ்த்துவதல்லதுசெய்யா" எனவுங்கூறினர்.)

அ - கை. இவ்வண்ணஞ்சமவாதம்ஆக்ஷேபிக்கப்பட்டமையின் முன்னுள்ளசாமியமேவித்தையாலடையப்படுமென்னும்விவகாரமும் நமதுகோட்பாடென்றுதங்கருத்தைச்சித்தாந்தமாகக்கூறுகின்றூர்.

எப்படியாலும்பண்டுமிப்போதுமெப்பொழுதுஞ்சிவசீவர்க்
கொப்புளதாகுமுருவமொன்றுனவுண்மையால்வேறுருதொன்றே
யப்படியுள்ளசிவன்பிறர்போலவவிச்சையானிகழுமவ்வவிச்சை (றே.
மெய்ப்பரவிச்சையானசித்தொன்றுய்விடுதலொப் படைதல்வேறன்

இ - ள். எப்படியாலும் - எவ்வாற்றுனும், சிவசீவர்க்கு - சிவனுக்குஞ்சீவனுக்கும், ஒப்புளதாகும் - சாமியமாகிய, உருவம் - சொரூபம், பண்டும் - முன்னும், இப்போதும் - இப்பொழுதும், எப்பொழுதும் - எக்காலத்தும், ஒன்றுன - ஏகமான, உண்மையால் - மெய்ம்மையினல், (அவ்விருவர்களுக்குமுள்ளசாமியஅஸ்த்தித்துவம்,) வேறுருதொன்றே - (இலக்கணவிருத்தியால்) பின்னமில்லாதவொன்றேதான், அப்படியுள்ளசிவன் - அவ்வாறுள்ளசிவனுனவன், பிறர்போல - அன்னியர்போல, அவிச்சையானிகழும் - அவித்தையாற்றேற்றுகின்றுன், அவ்வவிச்சை - அந்தஅவித்தையானது, மெய்ப்பரவிச்சையால் - உண்மையானபரவித்தையினல், நசித்தொன்றுய்விடுதல் - நசித்துச்சீவேசர்களேகமாவதுவே, ஒப்படைதல் - சாமியமடைதலாகும், வேறன்று - வேறல்ல. எ - று.

ப - ம். எப்பொருள்எதனேடு எல்லாப்படியாலுஞ்சமமாகும் அஃ்துஅதுவேயென்னும்நியாயத்தாற் பேதத்தைஅபேக்ஷிக்காத ஐக்கியவிலக்கணமுள்ளசாமியமே யிவ்விடத்திற்சொல்லப்பட்டது பேதமில்லாமற்சாமியங்கூடாமையினுவமையன்றென்பார், "எப்படியாலும்" எனவும், சின்மாத்திரசொரூபமானசாட்சி சாக்கியப்பிரபஞ்சமெல்லாம்விளங்குதற்கேதுவாயிருத்தலின் எக்காலத்துமுண்மையாகலானும் பரப்பிரேமைக்கிருப்பிடமாகலிற்சுகரூபமாதலானும் அங்ஙனமே சத்து சித்து ஆனந்தம் என்றுசுருதியாற் கூறப்பட்டதனுலும் இவ்விருவர்களுக்குஞ்சமானவிலக்கணமிருத்தலில் ஏகத்தன்மையெப்பொழுதுஞ்சித்தமாயிருக்கின்றதென்பார், "எப்பொழுதுஞ்சிவசீவர்க்கொப்புளதாகுமுருவமொன்றுனவுண்மையால்" எனவும், அவித்தைமித்தையாதலாற் பரமார்த்தமாகப் பரமசிவசொரூபத்துக்கு ரூபபேதத்தையுண்டுபண்ணுதென்பார், "சிவன்பிறர்போலவவிச்சையானிகழும்" எனவும், வித்தையினுல்அவித்தைநீங்குங்கால்த் தானுகவேசித்தித்த சீவேசஐக்கியமேசேஷிக்கின்றமையாலதுவேசாமியசத்தார்த்த மென்பார், "அவ்வவிச்சை மெய்ப்பரவிச்சையானசித்தொன்றுய்விடுதலொப்படைதல்" எனவுங்கூறினர். (௯௯)

அ - கை. பிராணனல்லவாஇவனென்ற சுருதிவாக்கியத்தின்பொருளைத் தாற்பரியமாகச்சுருக்கிக்கூறுகின்றார்.

வேறு.

சீவன்றன்னுருவானசிவத்தைத்தெளியிற்றான்
மேவும்பலதொழிறன்னிடையாகவிளையாடும்
யாவுந்தன்னுருவாகிநிகழ்ந்தாலிவன்முத்த
னுவன்பண்டவனுகாமையின்முத்தனுமாகான்.

இ - ள். சீவன் - சீவனானவன், தன்னுருவானசிவத்தை - தன்னுடைய சொரூபமாகியசிவத்தை, தெளியில் - உறுதியாயறிவானாயின், மேவும்-பொருந்துகின்ற, பலதொழில் - பலதொழில்களும், தன்னிடையாக - தன்னிடத்திலுண்டாகும்படி, விளையாடும் - விளையாடுகின்றான், யாவும் - சகலமும், தன்னுருவாகிநிகழ்ந்தால் - தனது ஆன்மசுபாவமாகவே பிரகாசித்தால், இவன் முத்தனுவன்-இந்தச்சீவன் முத்தனுவான்,பண்டவனுகாமையின்-முன்னமேயிவன்பெத்தனுகாமையால், முத்தனுமாகான் - முத்தனுமாகமாட்டான். எ-று.

ப - ம். சீவன் தனது உண்மையானநிட்பிரபஞ்சசிவசொரூபத்தை எப்பொழுதுதானகவேகாணுகின்றானே அப்பொழுது வேறேவத்துவில்லாமையால் விளையாடுதல்முதலியவைகளைஆன்மவிடயமாகவும் தியானபூசாதிகளையும் கைகால்முதலியவைகளாற்செய்யப்படும்பாகியக்கிரியைகளையும் தன்னைக்காட்டிலும்வேறில்லையென்றும் யாதொன்றுஞ்செய்யத்தக்கதில்லையென்றும் அறிகின்றானென்பார்,"சீவன்றன்னுருவானசிவத்தைத்தெளியிற்றான்மேவும்பலதொழிறன்னிடையாகவிளையாடும்" எனவும், பந்தமும்முத்தியும்ஞானரூபமாகலிற் பாமார்த்ததிருட்டியில் முத்தனென்னுந்தன்மையும் அவனுக்கில்லையென்பார்," யாவுந்தன்னுருவாகிநிகழ்ந்தாலிவன் முத்தனுவன்பண்டவனுகாமையின்முத்தனுமாகான்" எனவுங்கூறினார். (௬௪)

அ- கை. இனிப்பரவித்தைக்குத்துணையானசாதனத்தைப்பிரதிபாதிக்கின்றமந்திரத்தின்பொருளைக்கூறுகின்றார்.

வேறு.

திரமன்னியநற்சத்தியத்தின்செய்கையாலுமனமென்று
மொருமைப்படுநன்மாதவத்தினுயர்வினாலுமூனமிலாப்
பிரமசரியமுதலாகப்பேசுந்தருமந்தன்னாலும்
பரமாம்வேதநெறியாலுமடையப்படுமிப்பரவித்தை.

இ - ள். திரமன்னிய - நிலைபொருந்திய, நற்சத்தியத்தின்செய்கையாலும் - நல்லவாய்மையின்செய்கையினாலும், என்றும் - எந்நாளும், மனம் - உள்ளம், ஒருமைப்படும் - ஒற்றுமைப்படுகின்ற, நன்மாதவத்தினுயர்வினாலும் - நல்லமாவத்தின்மேன்மையினாலும், ஊனமிலா - இழிவற்ற, பிரமசரியமுதலாக - பிரமசரியமென்னுமாச்சிரமமாதியாக, பேசுந்தருமந்தன்னாலும்-

சொல்லாநின்றதருமத்தினுலும், பரமாம்வேதநெறியாலும் - உயர்வாகியவே தவழியாலும், அடையப்படுமிப்பரவித்தை - இச்சிவஞானமானதெய்தப்ப டும், எ - று.

ப - ம். ஆன்மதரிசனத்துக்கனுகூலமாகுஞ்சித்தைகாக் கிரியமேதவம ன்றி கிருச்சிரசாந்திராயணமுதலியவையன்றென்பார், "ஒருமைப்படுநன்மா தவத்தினுயர்வினுலும்" எனவும், கேட்கத்தக்கவன் சிந்திக்கத்தக்கவன் தெளி யத்தக்கவனென்றசுருதியாலென்பார், "பரமாம்வேதநெறியாலும்" எனவுங் கூறினர். பிரமசரியமுதலாகப்பேசுந்தருமந்தன்னுலுமென்றமையால், சொ ல்லாமைகள்ளாமைமுதலியயோகாங்கங்களும்பெறப்பட்டன. (௩டு)

அ - கை. வித்துவான்அபரிச்சின்னனுதலினவனுக்குப்போக்குவரவில் லையென்றுதிருஷ்டாந்தத்தினுடன்கூறுகின்ருர்.

வேறு.

வேதம்பகர்வழியேவந்தவர்கட்மெய்க்குள்ளே
யாதும்பரவொளியேகண்டுணருவதொன்ருமப்
போதந்தனையடைவாரங்கொருகதிபோய்மீளா
ரேதுந்திகழ்தருவானெங்கொழிவுசெய்தேகுந்தான்.

இ - ள். வேதம்பகர்வழியே - வேதத்திற்சொல்லியமார்க்கப்படியே, வந்தவர்கள் - அனுஷ்டித்துவந்தவர்கள், தம்மெய்க்குள்ளே - தங்களதுசரீ ரத்தினுள்ளே, யாதும் - சகலத்தையும், பரவொளியேகண்டு - சொயம்பிர மமாகக்கண்டு, உணருவது - அறியப்படுவதாய், ஒன்ருமப்போதந்தனை - ஏக மாகுமந்தஞானத்தை, அடைவார்-அபரோக்ஷமாகவறிந்தவர்கள்,ஏதும்-எவ்வ ளவேனும், அங்கு-அவ்விடத்தில், ஒருகதிபோய்மீளார் - ஒருபோக்கும்வரவு மில்லாதவர்களாவார்கள், திகழ்தரு - விளங்குகின்ற, வான்-ஆகாயமானது, எங்கொழிவுசெய்து - எவ்விடத்தைநீக்கி, ஏகும்-எவ்விடத்திற்போகும் (போ காது). எ - று. (௩சு)

அ - கை. ஆன்மாபரிபூரணசிவசொருபத்தையடைதற்குத்துணைச்சாத னமானசத்தியமுதலியவையுபதேசிக்கப்பட்டன இப்போதுஅசாதாரணமா னகாரணத்தையுபதேசிக்கின்ருர்.

வேறு.

வாக்கினுலுரைக்குமாறிலாப்பொருளைமற்றுளபுலன்களொன்ருலே
நோக்குமாறென்னுங்கருமமொன்ருலுநுவறவத்தாலுநண்ணுதே
தாக்கிலாவந்தக்கரணமதுடையார்தத்துவஞானநல்விழியாற் (ம்.
போக்கிலாதெங்குமாகியபொருளைப்புரையறக்காண்பரெப்பொழுது

இ - ள். வாக்கினுலுரைக்குமாறிலா -நாவினுற்சொல்லமுடியாத, பொ ருளை - சிவத்தை, மற்றுள - வேருயுள்ள, புலன்களொன்ருல் - இந்திரியங்க ளொன்றினுலாயினும், நோக்குமாறென்னும்- பார்க்கும்வண்ணமென்னுரும்,

கருமமொன்றுலும்- ஒருகருமத்தினுலும், நவல்தவத்தாலும்-சொல்லப்பட்ட தவத்தினுலும், நண்ணு - கிட்டாத, தாக்கிலா - பற்றுதலில்லாத, அந்தக் கரணமதடையார் -விசுத்தமானசித்தவிருத்தியையுடையவர்கள், தத்துவஞா னநல்விழியால் -பிரமஞானமாகியநல்லவிழியினுல், போக்கிலாது - போக்கு வரவில்லாமல், எங்குமாகிய - சருவவியாபகமான, பொருளை - வஸ்துவை, எப்பொழுதும் - சதாகாலமும், புரையறக்காண்பர் - குற்றமறப்பார்ப்பார் கள். எ - று.

ப - ம். உருவமின்மையிற்கண்முதலியவற்றிற்குவிடயமாகாதென் பார்," புலன்களொன்றுலேநோக்குமாறென்னும்" எனவும், அக்கினிகோத் திரமுதலியவைகளாலும் கிருச்சிர சாந்திராயணமுதலியவைகளாலும்அடை யப்படாதென்பார்,"கருமமொன்றுலுநவறவத்தாலுநண்ணுது" எனவும்,விட யேந்திரியசம்பந்தத்தாலுண்டான காமாதிமலத்தால்வரும் குற்றமில்லாத க ண்ணுடிபோற்சுத்தமானஞானப்பிரசாதத்தாலுபாதிகளொன்றுமில்லாததாகு யுள்ளபரமசிவரூபத்தைச்சாக்ஷாத்கரிக்கின்றுனென்பார்," தத்துவஞானநல் விழியாற்போக்கிலாதெங்குமாகியபொருளைப்புரையறக்காண்பரெப்பொழுது ம்" எனவுங்கூறினர். (கஎ)

அ - கை. விசுத்தசத்துவகுணமுடையவனுக்கு நிஷ்களஞானமுண்டா வதற்குச்சகுணத்தியானங்காரணமாகுமென்றுகூறி இவ்வணுவான்மாவென் றசுருதிவாக்கியத்தின்பொருளைக்கூறுகின்றுர்.

அருளினைத்திருமேனியிற்றரித்தருளுமகிலநாயகனையெப்பொழு துந், தெருளுறத்தியானம்பண்ணுமேகாந்தசித்தராற்றெளிவுறும் பொருளிப், பொருளிதனிடத்தேயைவகைப்பட்டபொருள்களும் பொருந்துநுண்மையினு, லொருவருமறியாரரியதென்றிகழாதுணர் ந்திடவேண்டுமீதொன்றும்.

இ - ள். அருளினை - தனதுதிருவருளுருவமானபராசத்தியை, திருமே னியில் - திருவுருவில், தரித்தருளும்-தரித்திருந்தருளும், அகிலநாயகனை- சரு வலோகநாயகனுகியசிவபெருமானை, எப்பொழுதும் - சதாகாலமும், தெரு ளுற - தெளிவுபொருந்த, தியானம்பண்ணும் - தியானஞ்செய்கின்ற, ஏகாந் தசித்தரால் - ஏகாக்கிரசித்தமுடையவர்களால், தெளிவுறும்பொருளிப்பொ ருள் - தெளிந்தறியும்பொருளிந்தநிஷ்களஞானம், இதனிடத்தேயைவகைப்ப ட்டபொருள்களும்பொருந்தும் - இதனிடத்தேபிராணன்முதலியஐந்துவகுப் பாகியபொருள்களுமிருக்கின்றன, நுண்மையினுல் - இந்தப்பொருள்நுட்ப மாகியிருத்தலால், ஒருவருமறியார் - ஒருவருமுணரமாட்டார்கள், அரியதெ ன்றிகழாது - அறிதற்கரியதென்றுவிட்டுவிடாமல், ஈதொன்றமுணர்ந்திட வேண்டும் - இந்தவொருபொருளைமாத்திரம் விசாரித்தறியவேண்டும். எ-று.

ப-ம். அவச்சேதகவுபாதிவசத்தாலிவ்வான்மாருக்குமனுயிருந்தாலும் ஞானப்பிரசாதத்துக்கேதுவாகுமொருமைப்படுமனத்தினுல் முன்சொல்லியவண்ணமே அபரிச்சின்னபரசிவசொரூபமாகவறியப்படுவானெனன்பார், "நுண்மையினுலொருவருமறியாரரியதென்றிகழாதுணர்ந்திடவேண்டும்" எனவுங்கூறினர். (ரு.அ)

அ-கை. இவ்வாறுசருவான்மாவானபரசிவனைத்தானுகவடைந்தவித்துவானுக்கு எல்லாவற்றையுமடையுமிலக்கணமானபலத்தைக்கூறுகின்றூர்.

வேறு.

எத்தைப்பெறமுயல்கின்றுனதுபெறுகின்றுனுதலினெப்போது
நித்தத்துவமனுமொன்றைப்பெறநினைகின்றுனருடனினேர்பாடா
மத்தத்துவமுனிதன்னைப்பொருளதனுலுந்தனதுடலாலுந்தான்
பத்திப்படுமனனுலற்சனைநனிபண்ணக்கடவர்கடிருவேண்டின்.

இ-ள். எத்தைப்பெறமுயல்கின்றுன் - எதனையடைதற்கு முயற்சிசெய்கின்றுனே, அது-அதனை, பெறுகின்றுன்-தானுகவேயடைகின்றுன், ஆதலின்-ஆகையால், எப்போது - எப்பொழுது, நித்தத்துவமனுமொன்றை - நித்தியத்துவம்பொருந்திய பிரமசொரூபமொன்றினையே, பெறநினைகின்றுன் - அடையக்கருதுகின்றுன், (அப்பொழுது) திருவேண்டின் - செல்வத்திலிச்சையுண்டாயின், அருடனினேர்பாடாம்- கருணையில்மிகுந்தவனுகிய, அத்தத்துவமுனி தன்னை - அந்தப்பிரமவித்தானவனை, பொருளதனுலும் - திரவியங்களாலும், தனதுடலாலும் - தன்னுடையசரீரத்தினுலும், பத்திப்படுமனனுல் - பத்தியுண்டாகியமனத்தினுலும், அற்சனை - பூசனை, நனி-மிகவும், பண்ணக்கடவர்கள் - செய்யக்கடவர்கள். எ-று.

ப-ம். தனக்குவேறில்லாதுயாவுந்தானுகவிருத்தலின் ஏககாலத்திலெல்லாவற்றையுமடைகின்றுனென்பார், "எத்தைப்பெறமுயல்கின்றுனதுபெறுகின்றுன்" எனவும், எல்லாக்காமங்களும் வித்துவானுடையசொரூபமாகவேயிருத்தலினுல்அவனுக்குத்தொண்டுசெய்தலினன்புடையவனுமிச்சித்தபலனெல்லாமடைவானெனன்பார், "அத்தத்துவமுனிதன்னைப்பொருளதனுலுந்தனதுடலாலுந்தான்,பத்திப்படுமனனுலற்சனைநனிபண்ணக்கடவர்கடிருவேண்டின்" எனவுங்கூறினர். (ரு.கூ)

அ-கை. இங்ஙனங்கூறியவுபாயங்களாலல்லாமலான்மதத்துவமறிதற்கரிதென்று கூறுகின்றூர்.

வேறு.

எண்ணிலாக்கல்வியாலுமிலங்கியகேள்வியாலுந்
திண்ணிதாமதியினுலுந்தெளியவாராதுதீர
நண்ணியஞானிதானேநயந்தன்புசெய்யில்ஞானக்
கண்ணினுற்காணலாகுங்கரத்திலாமலகம்போல.

இ-ள். எண்ணிலா-எண்ணிக்கையில்லாத, கல்வியாலும்-வேதமுதலிய சகலகலைஞானத்தினாலும், இலங்கிய - பிரகாசிக்கின்ற, கேள்வியாலும்-சாத்திரக்கேள்வியினாலும், திண்ணிதாம் - வலிமையாகிய, மதியினாலும்- மேதையினாலும், தெளியவாராது-தெளிந்தடையப்பெறாது, திரம்நண்ணிய-திரம்பொருந்திய, ஞானிதானே-ஞானியானவன், நயந்தன்புசெய்யில் - விரும்பி (ஆன்மாவையறியவேண்டுமென்று) அன்புசெய்தால், கரத்திலாமலகம்போல-உள்ளங்கையின்நெல்லிக்கனிபோல, ஞானக்கண்ணினால்-ஞானநேத்திரத்தினால், காணலாகும் - பார்க்கக்கூடும். எ-று.

ப-ம். வேதசாத்திரங்கள்படித்தமையானும்அடிக்கடிசிரவணஞ்செய்தமையானும் கிரந்தப்பொருளைக்கேட்டவுட னுட்கொள்ளுமேதையினாலும்இவ்வான்மாவடையப்படானென்பார், "எண்ணிலாக்கல்வியாலுமிலங்கியகேள்வியாலுந், திண்ணிதாமதியினாலுந்தெளியவாராது" எனவும், சிரவண மனனமுதலியவற்றாற்பிரமப் பிராப்தியை வேண்டுகின்றவித்துவானுக்கிவ்வான்மா அவித்தையினால் விளங்காததன்சொரூபத்தைப்பிரகாசஞ்செய்கின்றானென்பார், "ஞானிதானேநயந்தன்புசெய்யில்ஞானக், கண்ணினாற்காணலாகும்" எனவுங்கூறினார்.

கருத்து. வித்தையால்அவித்தைநீங்கினகாலத்தில்ஆன்மசொரூபந்தானாகவிளங்குமென்பதாம். (௪0)

அ-கை. ஆன்மப்பிரார்த்தனைக்குச்சகாயமானவலிமைமுதலியவை வேண்டுமென்று கூறுகின்றார்.

அயர்ச்சிசேர்தவத்தினாலுமன்னியலிங்கத்தாலு
முயற்சிசேர்பிரமாதத்தான்மொய்ம்பிலாத்தன்மையானுஞ்
செயப்படாவுண்மைஞானந்தெள்ளுமாமதியாற்கால
வயத்தினாற்சத்துவத்தின்வலியினாலன்றிவாரா.

இ-ள். செயப்படாவுண்மைஞானம் - தொழிற்படுவதில்லாதவுண்மைஞானமானது, தெள்ளுமாமதியால் - தெளிந்தஉணர்வினாலும், காலவயத்தினால்-பரிபக்குவகாலவசத்தினாலும், சத்துவத்தின்வலியினால்- சத்துவகுணத்தின்வலிமையினாலும், அன்றி - (வருமே) யன்றி, அயர்ச்சிசேர்தவத்தினாலும் - மறதிசேர்ஞானத்தினாலும், அன்னியலிங்கத்தாலும் - சுருதியிற்சொல்லப்பட்ட வாச்சிரமலிங்கமன்றிமற்றோரிலிங்கத்தினாலும், முயற்சிசேர்பிரமாதத்தால்-முயற்சியையுடைய (புத்திரன்பசுமுதலியவிஷயசம்பந்தத்திற்கேதுவாகும்)பிரமாதத்தினாலும், மொய்ம்பிலாத்தன்மையானும்- (ஆன்மநிட்டையாலுண்டாகும்)வீரியமில்லாததன்மையினாலும், வாரா-வரமாட்டாது. எ-று.

ப-ம். வலிமை பிரமாதமின்மை தவம் என்றுசொல்லப்பட்ட ஆச்சிரமதருமத்தோடேக்கூடியஇம்மூன்றும் பிரமப்பிராப்தியில் அந்தரங்கசாதன,

மென்பதுதோன்ற எதிர்மறையாக், "அயர்ச்சிசேர்தவத்தினாலுமன்னியலிங் கத்தாலு'முயற்சிசேர்பிரமாதத்தான்மொய்ம்பிலாத்தன்மையானுஞ் செயப்ப டாவுண்மைஞானம்வாரா" எனவும், இவ்வண்ணமந்தரங்கசாதனங்களையுடை யவித்துவானுக்குச் சாட்சியாயுஞ்சின்மாத்திரரூபமாயும் தேஜோரூபமாயும் அபரிச்சின்னமாயுமுள்ளபிரமம்நன்ருகப்பிரகாசிக்குமென்பதுதோன்ற,"மதி யாற்காலவயத்தினாற்சத்துவத்தின்வலியினலன்றி" எனவுங்கூறினர். (௬௧)

அ - கை. வித்துவான்பிரமத்தையடையும்பிரகாரத்தைக்கூறுகின்ருர்.

இப்பரம்பரனைச்சேர்ந்தாரேகமாம்பொருளதாகித்
தப்பறுஞானமெய்திச்சாந்தராய்த்தாபமாறி
யெப்படியாலுமெல்லாப்பொருள்களுமெய்தியிங்கே
யப்பொருட்டமக்குள்ளாகவவைதனக்குள்ளுமாவார்.

இ - ள். இப்பரம்பரனை -இந்தப்பிரமத்தை, சேர்ந்தார் - அடைந்தவர்க ள், ஏகமாம்பொருளதாகி - அத்துவிதவஸ்துவாகி, தப்பறுஞானமெய்தி - தப் பில்லாதஞானத்தையடைந்து, சாந்தராய்-சாந்தமுடையவராகி, தாபமாறி- துன்பம்நீங்கி, எப்படியாலும் - எவ்வாற்ருனும், இங்கே- இவ்விடத்திற்றானே, எல்லாப்பொருள்களும்-எலலாப்பொருள்களையும், எய்தி- (தானாகவே) யடை ந்து, அப்பொருள் - அந்தப்பொருள்களெல்லாம், தமக்குள்ளாக - தங்கட்கு ள்ளாகவும், அவைதனக்குள்ளுமாவார் - அந்தப்பொருள்களுக்குள்ளாகத்தா ங்களுமாவார்கள், எ - று.

ப - ம். இந்திரியநிக்கிரகஞ்செய்தவான்மவித்துக்கள் ஒருமைப்பட்ட மனத்தராய் ஞானத்தினால்நிறைந்தவர்களாய் நிச்சயவான்களாய்ச் சோக மோகமுதலியசமுசாரதுக்கமில்லாதவர்களாய்ச் சரீரம்நீங்குங்காலத்திற்பின் னகடாகாசம்போல அவித்தையினாலுண்டானவுபாதிபரிச்சேதம்நீங்கினவர்க ளாகிச்சருவான்மகமாயும் ஆகாசம்போலச்சருவவியாபகமாயும்அபரிச்சின்ன மாயும்விளங்கும்பிரமத்தையடைகின்ருர்களென்பார்," எப்படியாலுமெல்லா ப்பொருள்களுமெய்தி" என்ருர். (௬௨)

இதுவுமது. வேறு.

அந்தமாமறையானாடியபொருளையழுகுறவறுதியிட்டல்லற்
பந்தமாமயற்பற்றறுத்தமாதவரிப்பரமயோகத்தினாலெல்லாம்
வந்துமாய்விடமாயனைத்திலும்பரமாய்மதிக்கொணுமாயையினுடைய
வந்தகாலத்தேபந்தமற்றிந்தவழுதினலரியவீட்டைவர்.

இ - ள், அந்தமாமறையால் - அழகுபொருந்தியவேதத்தினால், நாடிய பொருளை - கருதியவஸ்துவை, அழுகுறவறுதியிட்டு - செவ்வையாகநிச்சயித் து, அல்லல் - துன்பத்தைக்கொடுக்கின்ற, பந்தமாம் - பந்தமாகிய, மயற்பற்

று - மயக்கப்பற்றினை, அறுத்த - நாசஞ்செய்த- மாதவர் - மகாதவத்தையு
டையவர்கள், இப்பரமயோகத்தினால் - இந்தச்சன்னியாசயோகத்தினால், எல்
லாம்வந்துமாய்விடமாய்-சகலமும்வந்துநசிப்பதற்கிடமாய், அனைத்திலும்பர
மாய் - அனைத்திற்கும்மேலானதாயும், மதிக்கொணா -மதிக்கக்கூடாததாயுமுள்
ள, மாயையினுடைய - மாயையினுடைய, அந்தகாலத்தே - நாசகாலத்தே, ப
ந்தமற்று - தொடக்கற்று, இந்தவமுதினால் - அமிர்தத்திற்குச்சாதனபூதமான
ஞானத்தால், அரியவீடடைவர்-அரிதானமோக்ஷத்தையடைவார்கள். எ-று.

ப - ம். 'அதுநீயாகின்றாயென்னும் வேதாந்தமகாவாக்கியத்தாலுண்டா
கும்பிரமான்மைக்கியவிடயமானஉயர்ந்தஞானத்தால் நிச்சயிக்கப்பட்டபொ
ருளையுடையாரென்பார், "அந்தமாமறையாளுடியபொருளையழகுறவறுதியி
ட்டு" எனவும், சருவசன்மபரித்தியாகத்தாலும் கேவலப்பிரமநிட்டாரூபமா
னயோகத்தாலுஞ்சுத்தாந்தக்கரணத்தையுடையயதிகள் பூதபௌதிககாரியங்
களைஅபேக்ஷித்துக்காரணமாய்உயர்வாயுள்ளஅஞ்ஞானம்நசிக்குங்காலத்தில்நி
ரதிசயமானஅமிர்தத்தன்மைக்குச்சாதனமாகும்ஞானத்தினால் தானாகவறியும்
பிரமசொரூபமாகிச்சகலசமுசாரபந்தத்தினின்றும்விடுதலையடைகின்றார்களெ
ன்பார், "பந்தமாமயற்பற்றறுத்தமாதவரிப் பரமயோகத்தினாலெல்லாம், வந்
துமாய்விடமாயனைத்திலும்பரமாய் மதிக்கொணாமாயையினுடைய, வந்தகால
த்தேபந்தமற்றிந்தவமிர்தினாலரியவீடடைவர்" எனவுங்கூறினார்.

கருத்து. பிரமசொரூபத்தில்ஐக்கியமடைந்தவர்களிவ்வண்ணம்ஞானத்
தினாலுபாதியில்லயிக்குங்காலத்தில் கடாகாசம்போலபரிச்சின்னப்பிரமரூபத்
தையடைகின்றார்களெனக்கொள்க. (௩௫)

அ - கை. அந்தமுத்தனுடையபிராணன்முதலியகலைகளுஞ் சொரூபத்தி
லைக்கியமாகுமென்று திருஷ்டாந்தத்துடன்கூறுகின்றார்.

வீடிலாவினைகள்கலைகண்மூவைந்தும்விடையவிந்தியவதிபதிக
ணாடுசேதனனுஞ்சீவன்மற்றனைத்துநாதனாலயநண்ணிப்
பாடுபேருருவமொன்றுமற்றந்தப்பரமனேயாய்விடும்பார்மே
லோடுமாறெல்லாமுததிபுக்கொன்றாயுருவுபேரொழியுமாபோல.

இ - ள். வீடிலா - நீங்குதலில்லாத, வினைகள் - கர்மங்களும், கலைகள்
மூவைந்தும் - கலைகள்பதினைந்தும், விடையஇந்தியஅதிபதிகள் - விடயங்கள்
இந்திரியங்களிவற்றிற்குஅதிஷ்டானதேவதைகளும், நாடுசேதனனுஞ்சீவன்-
கருதுகின்றசேதனனுஞ்சீவனும், மற்றனைத்தும் - மற்றெல்லாமும், நாதனா
லயநண்ணி - பரமான்மாவானஅதிஷ்டானத்தையடைந்து, பாடு - சொல்
லப்பட்ட, பேருருவமொன்றுமற்று - நாமரூபமொன்றுமில்லாமல், அந்தப்ப
ரமனேயாய்விடும் - அந்தப்பரமான்மாவாகவே யாகிவிடும், பார்மேலோடு
மாறெல்லாம் - பூமியின்கணோடாநின்றஆறுகளெல்லாம், உததிபுக்கு - சமுத்

திரத்திற்புகுந்து, ஒன்ருய் - ஏகமாய், உருவுபேரொழியுமாபோல - நாமரூப மில்லாததாய்விடுவதுபோல. எ - று.

கருத்து. பிரச்நோபநிடத்திற்கூறியபிராணன் சிரத்தை ஆகாயம் வாயு அக்கினி ஜலம் பிருதிவி இந்திரியம் திவி மநம் அன்னம் வீரியம் தவம் மந்திரம் கருமலோகங்கள் உலகங்களினுமமென்னுமிந்தப்பதினறுகலைகளும் சமுசாரிகளுக்குத்தேகாந்தரங்களைக்கொடுக்கின்றனவாயினும் வித்துவான்களுக்குமுத்திகாலத்தில்வேறில்லாதனவாகிமேகங்களில்லாதகாலத்திற் சூரியப்பிரதிபிம்பங்களெப்படிசூரியன்மாத்திரமாகமிஞ்சுமோ அப்படிதத்தமக்குக்காரணமாயுள்ளவற்றையடைகின்றனவென்க. (சச)

அ - கை. ஜீவனுக்கும் பிரமத்திற்கும் பேதமஞ்ஞானத்தால்வந்தமையால் அஞ்ஞானமும்ஞானத்தாலன்றிநீங்காமையின் அறிந்தமாத்திரத்திற்கண்டகதசாமீகரம்போலப் பிரமப்பிராப்திசித்திக்குமென்றும் அவனுடையகுலத்திலப்பிரமவித்துண்டாகானென்றுங்கூறுகின்ருர்.

வேறு.

மிக்கநற்பிரமஞானமுற்றபொழுதேவெறும்பிரமமாய்மனத்
துக்கமற்றிடுவர்தொல்லைவல்வினைதுவக்குமாறுமிலர்துஞ்சிடார்
பொக்கமற்ருெருவனிச்சகத்திலனுபோகமாவறியுமாயின்மே
லக்குலத்தினிலொருத்தரப்பிரமவித்தராவதிலராணையே.

இ - ள். மிக்கநற்பிரமஞானம்- மிகுந்தநன்மைதரும்பிரம ஞானத்தை, உற்றபொழுதே - அடைந்தகாலத்திலேயே, வெறும்பிரமமாய் - பிரமமாத்திரமாய், மனத்துக்கமற்றிடுவர்- நெஞ்சிற்றுக்கமில்லாதவர்களாயும், தொல்லைவல்வினை - வலிமையுள்ளஊழ்வினையாம்பாசங்கள், துவக்குமாறுமிலர் - (தங்களைக்)கட்டுமாறுமிலாதவராயும், துஞ்சிடார் - அழியாதவராயுமாவார்கள், ஒருவன் - ஒருவிவேகி, பொக்கமற்று-பொய்ம்மையைநீக்கி, இச்சகத்தில் - இந்தச்சகத்தில், (பிரமத்தை) அனுபோகமாஅறியுமாயின் - அபரோட்சமாகஅறிவானுயின், மேல்-அதற்குமேல், அக்குலத்தினில்-அவனதுகுலத்தில், ஒருத்தர்-ஒருத்தராயினும், அப்பிரமவித்தராவதுஇலர் - பிரமவித்தல்லாதவர்களுண்டாகமாட்டார்கள், ஆணையே - (இஃது) சத்தியமே. எ- று.

கருத்து. வித்துவானுடையகுலத்திற்பிறந்தவன்பிரமவித்தாகவேவிளங்குவானென்றுணர்க. (சரு)

இதுவுமது.

சோகமோகபடலத்தினைக்கடிதொழிப்பதாகிவெறுமுண்மையா
யேகயோகசுகருபமெய்ப்பொருளெறிப்பதாகியுளசோபனம்
மோகமோடிம்வகையிங்கொர் நாவிலிதுசொல்லலுற்றதிதுதொல்லை
புாகமாகியவிரோதமானபரிசுத்தநெஞ்சிடைபரிப்பதே. (யே

இ-ள். சோகமோகபடலத்தினை - துக்கமோகமுதலியகூட்டத்தை கடிதொழிப்பதாகி - சீக்கிரத்தில்நீக்குகின்றதாயும், வெறும்உண்மையாய் - பாதிக்கப்படாதசத்தியமாயும், ஏகபோகசுகரூபமெய்ப்பொருளெதிப்பதாகியுள சோபனம்-ஒன்ருய் (த்தனித்) தனுபவிக்கத்தக்கஆனந்தரூபமானசத்தியப்பொருளைவிளக்குவதாயுமிருக்கின்றமங்களமானமறைப்பொருளை, மோகமோடும் வகை - மயக்கம்நீங்கும்படி, இங்கு - இவிடத்தில், ஓர்நாவினுல் - ஒருநாக்கினுல், சொல்லலுற்றதிது- (யான்) சொல்லத்தொடங்கியது, தொல்லையே- தொந்தரவேதான், இது-இப்பொருளானது, பாகமாகி -பரிபாகமுற்று, அவிரோதமான- விரோதமில்லாத, பரிசுத்தநெஞ்சிடை - சுத்தமுள்ளமனதினுல், பரிப்பது- இரகிக்கத்தக்கது. எ - று. (சகூ)

இதுவுமது. வேறு.

அச்சமாகியவெம்பிறவியைவேரோடறுப்பதாயறிவதற்கரிதாய், மெய்ச்சொரூபானந்தன்றிருமேனிவிளக்குவதாய்மிகுத்துள்ள, விச்சையின்றன்மைவிண்ணவர்க்கெல்லாம் விளங்கவேவிளம்பினுன்மெய்போ, லிச்சகமெல்லாம்படைத்து மெய்யன்பரிதயபங்கயத்தில்வீற்றிருப்பான்.

இ-ள். அச்சமாகிய - பயமாகிய, வெம்பிறவியை - கொடியசனனத்தை, வேரோடறுப்பதாய் - வேரோடறுக்கின்றதாயும், அறிவதற்கரிதாய் - அறியக்கூடாததாயுமுள்ள, மெய்ச்சொருபானந்தன் - சத்தியஞனசொரூபானந்தனது, திருமேனிவிளக்குவதாய் - திவ்வியசொரூபத்தைப்பிரகாசிப்பிக்கின்றதாயும், மிகுத்துள்ளவிச்சையின்றன்மை -(பெருமை) மிகுந்தஞான சுபாவத்தை, மெய்போல்-சத்தியம்போல, இச்சகமெல்லாம்-இச்சகமனைத்தையும், படைத்து - சிருட்டித்து, மெய்யன்பர் - உண்மையானபக்தர்களது, இதயபங்கயத்தில் - இதயதாமரையில், வீற்றிருப்பான் - வாசம்பண்ணும்பிரமாவானவர், விண்ணவர்க்கெல்லாம் - தேவரனைவர்களுக்கும், விளங்கவேவிளம்பினுன் - தெளிவாய்த்தெரியும்படிசொன்னுர். எ - று. (சஎ)

ஏ-வது. முண்டகோபநிடததாற்பரியமுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ - திருவிருத்தம் - கஅ0.

சிவமயம்.

---

உ

சிவாயபரமகுரவேநம:

## அ-வது கைவல்லியஉபநிடததாற்பரியமுரைத்தவத்தியாயம்.

---

அ - கை. இனிக்கைவல்லிய வுபநிடதமும் பிரமான்ம ஐக்கியத்தையே சொல்லுகின்றதென்றுதெரிவிப்பார்அவ்வுபநிடதப்பொருளைக்கூறுகின்றுர்.

நனிவேதநாலுமுகமாகமேவிநளினாலயத்திலுறைவா
னனுபோகமாகவருளாலறிந்தவவரேபரத்தையறிவார்
தனிமேவுவார்கள்பெறுஞானமாகுமிதுசாதனங்களுடைய
முனிமேவுவானதெனும்வேதநாலுமொழியோதுமாறுமொழிவான்.

இ-ள். தனிமேவுவார்கள் - அத்துவிதத்தையடைந்தவர்கள், பெறு ஞானமாகுமிது - அடைகின்றஞானமாகியஇதனை, சாதனங்களுடைய - சாதனசதுஷ்டயசம்பத்துடைய, முனிமேவுவானதெனும்-முனிவர்களாலடையப்பட்டதென்றுசொல்லும், வேதநாலுமொழியோதுமாறு- வேதத்திலுள்ளநான்குமொழிகள்சொல்லுகின்றபிரகாரம், அருளால் - பரமசிவப்பிரசாதத்தினால் (பிரமத்தை),அனுபோகமாக - அபரோட்சமாக, அறிந்தவவரே - அறிந்தவர்களே, பரத்தை - சொருபத்தை, அறிவார்-அறிவாரென்று, நனிவேதம்-பெருமைபொருந்தியநான்குவேதங்களையும், நாலுமுகமாகமேவி - நான்குமுகங்களாகப்பொருந்தி, நளினாலயத்தில் - பதுமாசனத்தில், உறைவான் - வாசம்பண்ணுகின்ற (பிரமாவானவர்), மொழிவான் - சொல்லத்தொடங்கினார். எ-று. (க)

அ-கை. சமுசாரதுக்கத்தைநீக்குகின்றவித்தைக்குவிடயமானநிரதிசயானந்தசிவசொருபத்தைமுமுட்சுக்கள்அவசியம்அறியவேண்டுமென்றுபிரதிக்கினைசெய்து அவ்வித்தைக்குஅதிகாரிகளையும்பிரயோசனத்தையும்முறையாகக்கூறுவார் ஆசுவலாயனரென்னுமாமுனிவர்பரமேட்டியையடைந்துசொல்லுகின்றார் எப்போதும் சத்துக்களாலே சேவிக்கத்தக்கதாயும் ரகசியமயும் மேலானதாயுமுள்ளபிரமவித்தையைஉபதேசிக்கவேண்டும், எதனாற்சீக்கிரத்தில்வித்துவான்பாவங்களினீங்கி மேலானபுருடனையடைகின்றானென்றசுருதியின்தாற்பரியப்படிகூறுகின்றார்.

வேறு.

ஈசனென்றியம்புமொன்றையிப்பிறப்பறுப்பார்தம்மான்
மாசறவறியவேண்டும்வருந்தியுமறிந்துநன்றுப்
பாசமானதுகெடுத்துப்பரப்பிரமத்தைநல்குந்
தேசுடையிந்தவிச்சைதீர்வறத்துறந்தோர்செய்வார்.

இ-ள். ஈசனென்றியம்புமொன்றை (சிவருத்திராதிநாமங்களையுடைய) ஈசனென்றுசொல்லப்படுமொருபொருளை, இப்பிறப்பறுப்பார்தம்மால்-இச்சனனமொழியஇச்சைகொண்டமுமுட்சுக்களால்,வருந்தியுமறிந்துநன்று-வருத்தப்பட்டேனும்நன்றாக (வேதத்தை) யறிந்து, மாசறவறியவேண்டும்-குற்றமற (அவசியம்) அறியத்தக்கது, பாசமானதுகெடுத்து-பாசத்தைநீக்கி, பரப்பிரமத்தைநல்கும் - பிரமசொருபத்தை அருளிச்செய்யும், தேசுடையிந்தவிச்சை - பிரகாசம்பொருந்தியஇந்தப்பரவித்தையை, துறந்தோர் - யதிகள், தீர்வற - நீங்காமல், செய்வார் (சேவை) செய்வார்கள். எ-று. (உ)

அ - கை. பிரமவித்தையுண்டாவதற்குஅநுகூலசாதனங்களாயுள்ளவற்றைக்கூறுகின்றார்.

முத்தியின்விருப்பத்தாலுமுதலவனற்பாதத்திற்
பத்தியினாலுமற்றப்பரனையேபாவிக்கின்ற
நித்தமாந்தியானத்தாலுநிரந்தரயோகத்தாலுஞ்
சித்தியாமிதுசித்திக்கும்வினையினாற்சித்தியாதால்.

இ - ள். முத்தியின்விருப்பத்தாலும் - முத்தியையடையவேண்டியுள்ளத்தெழுஞ்சிரத்தையாலும், முதலவனற்பாதத்திற்பத்தியினாலும் - பரமசிவனுடையநற்றிருவடித் (தாமரையில்) வைத்திருக்கப்பட்டஅன்பினாலும், அப்பரனையே - அந்தப்பரமசிவனையே, பாவிக்கின்ற - பாவனைசெய்கின்ற, நித்தமாந்தியானத்தாலும் - இடைவிடாதுசெயுந்தியானத்தினாலும், நிரந்தரயோகத்தாலும் - இடைவிடாயோகத்தாலும், சித்தியாமிது - சுபாவசித்தமானஇப்பரவித்தையானது, சித்திக்கும் - சித்திக்கும், வினையினால் - கருமத்தால், சித்தியாது - சித்திக்கமாட்டாது. எ - று.

ப - ம். ஏகாந்தத்தலத்திற்சுகாசனத்திலிருந்துகொண்டென்றசுருதியாற்கூறப்பட்டதாயும் இனியிவ்வத்தியாயத்திற்சொல்லுவதாயுமுள்ளயோகத்தை, "நிரந்தரயோகத்தாலும்" என்றார். (௩)

அ - கை. இவ்விதசாதனவானுக்குமூன்றிச்சையும் விடுதலேமோக்ஷசாதனமாகுமன்றிமற்றவையாகாதென்றும் பரவித்தையுண்டாவதற்குஅசாதாரணகாரணத்தையும் அதிகாரிகள்அதனாலடையும்பிரயோசனத்தையுங்கூறுகின்றார்.

வேறு.

திரமாமருத்தத்தினான்மைந்தராலுஞ் சேராதவற்றின்றியாகத்தினாலே, யுரமானவேதாந்தமாவாக்கியத்தா லுற்பன்னமாம்விச்சையாநிச்சயத்தாற், பரமானவஞ்ஞானவந்தத்திலேயப் படிஞானவுபதேசமொன்றாலுமேயிப், புரமாமுடம்புக்குளேயந்தமுத்திப் பொருள்கண்டுவீடெய்துவாரிப்புவிக்கே.

இ - ள். திரமாமருத்தத்தினால் - உறுதியாகுர்தனத்தினாலும், மைந்தராலும் - புத்திரர்களாலும், சேராது - ஒருவற்குப்பரவித்தைபொருந்தாது, அவற்றின்றியாகத்தினால் - அக்கருமமுதலியவைகளினுடையதியாகத்தினாலும், உரமான - வலிமையான, வேதாந்தமாவாக்கியத்தால் - வேதாந்தமகாவாக்கியசிரவணத்தால், உற்பன்னமாம் - உண்டாகிய, விச்சையாம் - வித்தியாரூபமான, நிச்சயத்தால் - நிருணயிக்கப்பட்ட (பொருளினாலும்), அப்படிஞானவுபதேசமொன்றாலும் - அவ்வண்ணமேஞானோபதேசமொன்றினாலும், பரமானஅஞ்ஞானவந்தத்திலே - மேலானஅஞ்ஞானத்தினநாசகாலத்திலே,

இப்புரமாமுடம்புக்குளே - இந்தப்பிரமபுரமாகியசரீரத்துள், இப்புவிக்கே- இந்தப்பூமியின்கண்ணே, அந்தமுத்திப்பொருள்கண்டு - அந்தமுத்திருபமான பிரமத்தைத்தானுகவேகண்டு, வீடெய்துவார்-முத்தியையடைவார்கள். எ-று.

ப-ம். கருமமுதலியவைகள்அநித்தியபலசாதனங்களாகும் பரவித்தை யங்ஙனமாகாமையால் கருமமுதலியவற்றின்தியாகத்தினுலேயே அஃதடை யத்தக்கதென்பார், "அவற்றின்தியாகத்தினுலே" எனமுர். (சு)

அ-கை. இவ்வாறுவிஷயம்பிரயோசனம்சாதனம் அதிகாரிஎன்னும் இவைகளுடன்பரவித்தையின்சொரூபமுபதேசிக்கப்பட்டது. இனி அதற்குச் சாதனமானயோகத்தைக்கூறுகின்முர்.

வேறு.

தக்கஞானத்தைத்தான்பெறற்பொருட்டுத் தனியிடந்தனையடை ந்திதய, துக்கமேவாமற் சுகாசனத்திருந்து தோடலேகழுத்துடம் பி வைநே, ரொக்குமாறிருத்திப்பூதிகொண்டிந்தவுடம்பையுத்தூளனம் பண்ணி, மிக்கவாய்வருமிந் தியங்களேயெல்லாம் விடயமேலெழாவ கைவிலக்கி.

இ-ள். தக்கஞானத்தை - அடையத்தக்கஞானத்தை, தான்பெறற் பொருட்டு - தானடையும்பொருட்டு, தனியிடந்தனையடைந்து - ஏகாந்தஸ் தலத்தைச்சேர்ந்து, இதயதுக்கமேவாமல் - இருதயத்திற்றுக்கமுண்டாகா மல், சுகாசனத்திருந்து - சுகாசனத்திருந்து, தோள் - தோள்கள், தலே - தலே, கழுத்து - கண்டம், உடம்பு - தேகம், இவை - இவைகளை - நேரொக் குமாறிருத்தி - நேரேசமமாகவிருத்தி, பூதிகொண்டு - விபூதியினுல், இந்தவு டம்பை - இந்தச்சரீரத்தை, உத்தூளனம்பண்ணி - பூசி, மிக்கவாய்வரும் - மி குந்துஇச்சித்துவருகின்ற, இந்தியங்களேயெல்லாம் - இந்திரியங்களனைத்தை யும், விடயமேலெழாவகை - விடயத்திற்போகாமலிருக்கும்படி, விலக்கி - நீக்கி. எ-று. (எ)

அ-கை. இனிஇரண்டுதிருவிருத்தங்களாற் சிவனுடைய நிஷ்களசொ ரூபத்தையும் லீலாவிக்கிரகத்தையும் தியானிக்கவேண்டுமென்றும்அதனுலடை யும்பிரயோசனத்தையுங்கூறுகின்முர்.

பத்தியாற்குரவன்பதம்பணிந்திதயபங்கயந்தனேநினேந்ததிலே
சித்தமாயொருவரானினேப்பரிதாய்நிமலமாயெங்கணுநிறைந்து
சுத்தமாய்ச்சாந்தமாயனேத்துலகுந்தோற்றுதற்கியோனியாய்ச்சுபாவ
சித்தமாயமுதாயருவமாயொன்முய்ச்சிற்சதானந்தமாய்ச்சிவமாய்.

இ-ள். பத்தியால் - அன்பினுல், குரவன் - குருவினது, பதம்பணிந் து - பாததாமரைவணங்கி, இதயபங்கயந்தனேநினேந்து - இதயகமலத்தை

த்தியானித்து, அதிலே - அதில், நித்தமாய் - என்றுமுள்ளதாயும், ஒருவரால் நினைப்பரிதாய்-(நிருவிகற்பமாயிருத்தலின்)எவர்களாலுஞ்சிந்திக்கத்தகாததாயும், நிமலமாய்-விரஜமாயும், எங்கணும்நிறைந்துசுத்தமாய் - சகலத்திலும்நிறைந்துவிசுத்தமாயும், சாந்தமாய்-(சமுசாரசம்பந்தமில்லாமையினலலையிலாக்கடல்போலச்) சாந்தமாயும், அனைத்துலகுந்தோற்றுதற்குயோனியாய் - எல்லாவுலகும்உண்டாவதற்குக்காரணமாயும், சுபாவசித்தமாய் - இயல்பாகவே சித்தித்துள்ளதாயும், அமுதாய் - அழிவில்லாததாயும், அருவமாய் - லௌகிகஉருவமில்லாததாயும், ஒன்ருய் - ஏகமாயும், சிற்சதானந்தமாய் - சச்சிதானந்தமாயும், சிவமாய் - பரமானந்தரூபமாஞ்சிவமாயும். எ - று. (சு)

இதுவுமது.

உரியநால்வேதத்தோமெனும்பொருளாயுள்ளதாயுள்ளவெப் பொருட்குங், கரியதாய்நின்றவொன்றினைக்காளகண்டமுங்கண்ணெருமூன்றும், பிரிவிலாமங்கைபாகமுமாகப்பேணுநற்பாவனைபெறுவா, னரியதாயருளினல்வரும்விச்சையதனினலதனையேயடையும்.

இ - ள். உரியநால்வேதத்து - ஓதுதற்குரியநான்குவேதங்களிலும்விளங்குகின்ற, ஓமெனும்பொருளாய் - பிரணவப்பொருளாயும், உள்ளதாயுள்ள - தோற்றுகின்றதாயுள்ள, எப்பொருட்கும்- சகலவத்துக்களுக்கும், கரியதாய் - சாட்சியானபிரபுவாயும், நின்றவொன்றினை - விளங்குகின்றசிவத்தை, காளகண்டமும் - நீலகண்டமும், கண்ணெருமூன்றும் - திரிநேத்திரமும், பிரிவிலா - பிரிவில்லாத, மங்கைபாகமுமாக - உமையையொருபாகத்திலுமுடையவராக, பேணுநற்பாவனை - வித்துவான்களால்விரும்பத்தக்கநல்லதியானத்தை, பெறுவான் - அடைகின்றவன், அரியதாய் - அருமையதாகி, அருளினல்வரும் - சிவப்பிரசாதத்தால்வருகின்ற, விச்சையதனினல் - வித்தையினல், அதனையே - அந்தச்சொருபத்தையே, அடையும் - அடைவான். எ - று. (எ)

அ - கை. அறியத்தக்கதாகவுபதேசிக்கப்பட்ட சிவசொருபத்தினது அத்துவிதியத்தன்மையைச்சருவான்மபாவத்தாற்கூறுகின்ருர்.

வேறு.

தெரிவரியசிற்கனமாய்த்திகழ்சிவனேதிசைமுகனு
மரியுடனவ்வரனுமவனமரரதிபதியுமவன்
றரிசறவேயக்கரமாய்ப்பரமாகுஞ்சுராட்டுமவ
னெரியுமழல்காலனவனிந்துவொடுபிராணனவன்.

இ - ள். தெரிவரிய - தெரிவதற்கரிய, சிற்கனமாய் - சிற்சொரூபமாய், திகழ் - பிரகாசிக்கின்ற, சிவனே -பரமேச்வரனே, திசைமுகனும் - பிரமாவும், அரியுடன் - விட்டுணுவுடன், அவ்வரனும்அவன் - அந்தருத்திரனும்அவன், அமரரதிபதியும்அவன்- தேவர்கட்கதிபதியானஇந்திரனும்அவன், தரிசறவே-

குற்றமறவே, அக்கரமாய் - அட்சரமாகி, பரமாகும்-பரமனுகிய, சுராட்டுமவன்-சுராட்டென்பவனும்அவன், எரியுமழல்- பிரகாசிக்கின்றஅக்கினியும், காலனவன் - காலனும்அவன், இந்துவொடு - சந்திரனேடு, பிராணனவன் - பிராணனும்அவன். எ - று.

ப-ம். பிரமன்முதலியதேவர்களுக்குக்காரணனென்றும்சுதந்தரனுய்த் தன்னுற்றுன்விளங்குகின்றவனென்றும் மற்றையர்கள் அவன்வசத்தராதலிற் றங்களாற்றுங்கள்விளங்கமாட்டாரென்றுங்கூறுவார், "பரமாகுஞ்சுராட்டும்" என்றுர். (அ)

அ-கை. பரசிவசொருபத்துக்குவேருகவொன்றுமின்மையின் ஆன்மாவுக்கந்தச்சொருபஞானமேமோக்ஷசாதனமாகுமென்றுகூறுகின்றுர்.

ஒழிந்ததொருபொருளில்லையுள்ளதெலாமவனேமுன்
கழிந்தபொருண்மேலும்வரக்கடவபொருட்டானுமவன்
மொழிந்ததனிப்பரவிச்சையவிச்சையெனுமுற்றுமவ
னிழிந்தபிறப்பறவேறுேர்வழியில்லையிவனெழிய.

இ-ள். ஒழிந்ததொருபொருளில்லை - (சிவத்துக்கு)அன்னியமாகவொருவத்துவுமில்லை, உள்ளதெலாம்அவனே - இருக்கின்றவனைத்தும்அச்சிவனே, முன்கழிந்தபொருள் - முன்சென்றபொருள்களும், மேலும்வரக்கடவபொருடானும்அவன்- மேல்வரக்கடவனவாகும்பொருள்களனைத்தும்அவனே, மொழிந்ததனிப்பரவிச்சை- கூறியஒப்பில்லாதபரவித்தையும், அவிச்சையெனுமுற்றும்அவன் - அவித்தையுமென்றுசொல்லுமெல்லாமும்அவனே, இழிந்தபிறப்பற - இழிவானசனனம்நீங்குதற்கு, இவனெழிய - இச்சிவனையல்லாமல், வேறுேர்வழியில்லை - வேறுமார்க்கம்இல்லை. எ - று. (க)

அ - கை. இந்தஞானமானதுமிகுந்தபிரதிபந்தங்களாலுண்டாகாதென்றுபிரதிபந்தநிவர்த்திக்குபாயங்கூறுகின்றுர்.

வேறு.

இன்னதெனுமற்றன்னிடைக்கண்டுதன்னையெப்பொருளினுங்காணு
மங்கிலையடைந்தாலவன்பிரமத்தை யடையும்வேறுென்றினலடை-
யான், றன்னையுமோங்காரத்தையுமரணியாக்கியேதத்துவஞான,வன்
னியைத்தியானமதனஞ்செய்தெழுப்புமதியினுர்வன்பவஞ்சேரார்.

இ-ள். இன்னதெனுமல்-இத்தன்மையுடையதென்று சுட்டியறியாமல், (சருவபூதங்களையும்)தன்னிடைக்கண்டு- தானுனஆன்மாவினிடத்திற்பார்த்து, தன்னை - தன்னை, எப்பொருளினுங்காணும் - சர்வபூதங்களிலும்பார்க்கின்ற, அங்கிலையடைந்தால்- அந்தஸ்திதியைப்பெற்றுல், அவன்பிரமத்தையடையும்- அவன்பிரமசொருபத்தையடைவான், வேறுென்றினலடையான்- மற்றுருஸ்திதியினுலடையமாட்டான், தன்னையுமோங்காரத்தையும்- ஆன்மாவையும்பிர

ணவத்தையும்,அரணியாக்கி-அதராரணியாகவும்உத்தராரணியாகவுஞ்செய்து, தத்துவஞானவன்னியை - உண்மைஞானமாகியஅக்கினியை, தியானமதனஞ் செய்தெழுப்பும்- தியானமாகியமதனஞ்செய்துண்டாக்கும், மதியினர்-விவே கிகள், வன்பவஞ்சேரார் - கொடியபிறப்பைஅடையார்கள். எ-று. (௧0)

அ - கை. சாக்கிரமுதலியவவத்தைகளிற்சுகதுக்கங்களைப் புசிக்கின்ற சீவன்சமுசாரியாவான். ஈசனேவப்படியாகான். அங்ஙனமாயினிவ்விருவர்க ளுக்குமெப்படியேகத்தன்மைகூடுமென்றுசங்கித்துக்கூறுகின்றார்.

தாக்கரும்பரமன்றன்சுதந்தரத்தாற்றன்னுடைமாயைதன்னாலே
யாக்கினனிந்தவுடம்படைந்தறியான்போலநின்றனைத்தையுமதிலே
சாக்கிரத்தென்னுமிடம்வகுத்தன்னபானமுந்தையலார்முதலாம் (ம்.
போக்கியங்களையும்புசித்திடுங்கனவும்பண்ணியத்தன்மையேபுசிக்கு

இ - ள். தாக்கரும்பரமன் - ஒன்றோடுஞ்சம்பந்திக்காதபரமேசன், தன் சுதந்தரத்தால் - தன்னுடையசுதந்தரபெலத்தால், தன்னுடைமாயைதன்னா லே - தனக்குவேறில்லாதமாயையினாலே, இந்தவுடம்படைந்து - இந்தச்சரீ ரத்தைப்பொருந்தி, அறியான்போலநின்று-மோகமுடையவன்போலநின்று, அனைத்தையும் - சகலவிவகாரங்களையும், ஆக்கினன் - செய்வானாகி, அதிலே- அதனிடத்தில், சாக்கிரத்தென்னும் - சாக்கிரமென்னும், இடம்வகுத்து - தல த்தைக்கற்பித்து, (கிரீடையால்) அன்னபானமும் - அன்னபானாதிகளையும், தையலார்முதலாம் - மாதர்கள்முதலாகிய, போக்கியங்களையும் - போகபதா ர்த்தங்களையும், புசித்திடும் -அனுபவிப்பான், கனவும்பண்ணி-சொப்பனத்தை யும்உற்பத்திசெய்து, அத்தன்மையேபுசிக்கும் - (சீவனாகவிளங்குகின்ற) அவ் வீசன்அவ்வண்ணமேபுசிக்கின்றான். எ - று.

போலஎன்றதனாற் பரமார்த்தமாக அவ்வீசனுக்குமோகமில்லையென்பது பெற்றாம். (௧௧)

இதுவுமது.

உறங்குமக்காலைமன்னியதமத்தினுட்புகுந்தொன்றொழியாம,லிறந்
தவவ்விடத்தேதன்னுருவானவின்பமேபுசிக்குமீண்டெழுந்து, கறங்
குபோனனவையடையினுமடையுங்கனவைவந்தடையினுமடையுஞ்
சிறந்தமுப்புரமுமிவன்விளையாடித்திரிதரச்செய்ததேதிகழ்த்தில்.

இ - ள். உறங்குமக்காலை - தூங்குகின்றகாலத்தில், மன்னியதமத்தினு ட்புகுந்து - நிலைபெற்றதமசுக்குட்பிரவேசித்து, ஒன்றொழியாமல்-யாதேனும் ஒன்றுதவறாமல், இறந்தவவ்விடத்தே-(எல்லாம்) இறந்தஅவ்விடத்தில், தன்னு ருவான-தனதுசோரூபமாகிய,இன்பமேபுசிக்கும்-மகானந்தத்தையே (திரிசிய ப்பிரதீதியில்லாமற்) புசிக்கின்றான், மீண்டெழுந்து-திரும்பவும்பூர்வகர்மயோ கத்தாற்சீவத்தன்மையுடையவனாகியெழுந்து, கறங்குபோல் நனவையடையி

னுமடையும்-காற்முடிபோற்சாக்கிரத்தைவந்தடைந்தாலுமடைவான், கனவை வந்தடையினுமடையும்-சொப்பனத்தைவந்தடைந்தாலுமடைவான், (ஆகையி னல்) திகழ்த்தில்-சொல்லுங்கால், சிறந்தமுப்புரமும், சிறப்புப்பொருந்தியமூ ன்றவஸ்தைகளென்னும்புரங்களும், இவன்விளையாடி- இப்புருடன்லீலையாகவி ளையாடி, திரிதரச்செய்ததே - திரியும்பொருட்டுச்செய்ததேதான். எ - று.

ப-ம். சொப்பனவத்தையிற்புறக்கரணங்கள்ஒழியினும்அவ்வவத்தையிற் காணும்பொருளாகப்பரிணமித்தவந்தக்கரணமிருக்கின்றது. அதுவுஞ்சுழுத்தி யில்ஒடுங்குமளவிற்பாவரூபஅஞ்ஞானதமத்தினல்மறைக்கப்பட்டவனுகித்தன் சொரூபமானவானந்தத்தைநேராகவேபுசிக்கின்முன். அதனுலேயேசுழுத்தியி னின்றுமெழுந்திருந்தபுருடன் நான்சுகமாகத்தூங்கினேனென்கின்முனென்ப துதோன்ற, "தமத்தினுட்புகுந்தொன்ருெழியாமலிறந்தவவ்விடத்தேதன்னுரு வானவின்பமேபுசிக்கும்" எனவும், ஈசனேஜீவரூபனுகவிருக்கின்முனெனில் அவனுக்குப்போகங்கூடாதென்றசங்கையைமறுக்கவேண்டிச்சுவற்கநரகமுத லெல்லாச்சுகதுக்கபோகங்களும்லீலையின்பொருட்டேயன்றி துக்கத்துக்கேது வாகாதென்பார், "சிறந்தமுப்புரமுமிவன்விளையாடித்திரிதரச்செய்ததேதிகழ் த்தில்" எனவுங்கூறினர். (கஉ)

அ-கை. ஈசன்விச்சுவாதீதனுதலின்இவனுக்குப்போகமில்லை சீவன்ப ரதந்திரனுதலினுண்மையாகப்போகமேனவனுக்கில்லையெனச்சங்கித்துக் கூறு கின்முர்.

சொல்லிடும்பொருள்களியாவையுங்கடந்துசுதந்தரனுய்த்துவக்கின்றி
யெல்லைதீரின்பமேவடிவாகியிருந்துளவிறைவனுக்கென்று
மல்லலுண்டாகாதிவையனுபவிக்கவன்னியமாகவோர்சீவ
னில்லையேபேதமின்மையாற்சடந்தானெங்ஙனேபுசிக்குமாறியம்பீர்.

இ-ள். சொல்லிடும் - கூறப்பட்ட, பொருள்களியாவையும் - அநித்தி யப்பொருள்களானசகங்களனைத்தையும், கடந்து - கடந்து, சுதந்தரனுய் - சுதந்தரனுயும், துவக்கின்றி - (உபத்திரவமான) பந்தமில்லாமல், எல்லைதீர்- அளவில்லாத, இன்பமேவடிவாகியிருந்துள - மகானந்தமேசொரூபமாயிருக் கின்ற, இறைவனுக்கு - பரனுக்கு, என்றும் - எக்காலத்திலேனும், அல்லலு ண்டாகாது - துக்கமுண்டாகாது, இவையனுபவிக்க - இத்துக்கரூபமானகரு மபலங்களையனுபவிக்க, அன்னியமாக - பின்னமாக, ஓர்சீவனில்லையே - ஒரு சீவனில்லை, பேதமின்மையால் - (சித்திற்குப்)பேதமில்லாமையினுலேதான், சடந்தான் - சடமானது, எங்ஙனே - எவ்வண்ணம், புசிக்குமாறியம்பீர் - புசி க்கும்வழிசொல்லுங்கள். எ - று.

ப-ம். பரமசிவன் பிரபஞ்சவாரோபவாதைகளுக்கதிட்டானமாயும் அவ தியாயுமிருக்கின்றவிச்சுவாதீதனுதலின்இல்லாததாயுள்ள போகம் துக்கத்துக் கேதுவாகாதென்பார், "சொல்லிடும்பொருள்களியாவையுங்கடந்து"எனவும்,

இதரசுகங்களெல்லாம்பேரின்பசொருபனுன ஈசனுடையவானந்தவிலேசமே யாதலின்விஷயசுகபோகங்களெல்லாம் லீலையின்பொருட்டென்பதுதோன்ற, "எல்லைதீரின்பமேவடிவாகி" எனவும், பரதந்திரத்தன்மைதுக்கத்துக்கேதுவாத லின் ஈசனுக்கந்தத்தன்மையில்லாமையால் துக்கியாகானென்பதுதோன்ற,"சுதந்தரன்" எனவும்,சிவேசர்களுக்குண்மையிற்பேதமில்லாமையால்இருவரிடத்திலுமுள்ளசின்மாத்திரரூபத்துக்குப்பேதமில்லாமை முன்னமேநிரூபிக்கப்பட்டதென்பதுதோன்ற, "அன்னியமாகவோர்சிவ னில்லையேபேதமின்மையால்" எனவும்,சடமானகருமபலமுஞ்சிற்சொருபத்திலாரோபிக்கப்பட்டுப்பொய்யாதலாற்சிற்சொருபனுயுள்ள ஆன்மாவுக்குண்மையாக அவ்விடயபோகமில்லையென்பார், "சடந்தானெங்ஙனேபுசிக்குமாறியம்பீர்" எனவுங்கூறினுர். (கரு)

அ-கை. இவ்வாறுசாக்கிரம் சொப்பனம் சுழுத்தி யிவ்வவஸ்தைகளிற் சிவபாவத்தையடைந்தபரமசிவனுக்குண்மையாய்ப்போகமில்லாமையால்அவ்வவஸ்தாநிர்மாணமும்அப்போகமும்அனைத்தும்லீலாமாத்திரந்தானெனக் கூறுகின்ருர்.

ஆதலாலறிவானந்தமாயுள்ளவமலனேயவைபுசிக்கின்ரு
னீதெலாம்விளையாட்டேவிளையாடுமிடங்களேயிப்புரமூன்று
மாதலாகாமைசொல்லவும்படுமோவதிசுதந்தரனையன்னியமா
யோதலாமோவிப்புரங்களுமவன்றனுருவமேவேறிலாமையினுல்.

இ-ள். ஆதலால் - ஆகையினுலே, அறிவானந்தமாயுள்ள-ஞானனந்தசொருபமாயிருக்கின்ற, அமலனே - நின்மலனுனஅரனே, அவை - அப்போகங்களை,புசிக்கின்ருன் - அனுபவிக்கின்ருன், ஈதெலாம் - இப்போகங்களெல்லாம், விளையாட்டே - விளையாட்டேதான், இப்புரமூன்றும்- இப்புரங்களாகியமூன்றுசரீரங்களும், விளையாடுமிடங்களே-சம்புவிளையாடுமிடங்களாகும், ஆதல்ஆகாமைசொல்லவும்படுமோ-(அப்பரமசிவனுக்கு)ஆதலையும்ஆகாமையையும்(ஒருவர்) சொல்லவுங்கூடுமோ, அதிசுதந்தரனையன்னியமாயோதலாமோ-மிகுந்தசுதந்தரனைவேருகச்சொல்லலாமோ, வேறிலாமையினுல்- பிரமத்துக்கன்னியமாகவொன்றுமில்லாமையினுல், இப்புரங்களும்-அவஸ்தாத்திரயங்களும், அவன்றனுருவமே-அவனுடையசொருபமேதான். எ-று.

ப-ம்- ஆப்தகாமனுயுள்ளவீசனுக்குவேருெருபலன்வேண்டாமையால்அவனுக்குமூன்றுபுரங்களுங்கேவலம் உய்யானவனங்கள்போலுள்ளனவெனவும், அவ்வீசனுக்குப்போகசம்பந்தமில்லையென்றுசோதிக்கவேண்டா வெனவுங்கூறுவார், "விளையாடுமிடங்களேயிப்புரமூன்று மாதலாகாமைசொல்லவும்படுமோ" என்ருர். (கசு)

அ-கை. மூன்றுபுரங்களும்விளையாடும்பொருட்டிருக்கின்றனவெனில் அவிதம்வருமென்றுசங்கித்துக்கூறுகின்ருர்.

மாலுறுநனவுகனவுறக்கங்கள்வடிவமாய்நிகழ்ந்துளவிறைக்கு
ஞாலமேல்விசுவன்றைசசன்பிராஞ்ஞனுமமாநவிலுவரடைவே
தூலமேவிசுவனுண்பவன்சுருக்கந்தைசசன்றுய்ப்பவன்சுகந்தன்
பாலதாதலினுற்றன்னுடையின்பம்பருகிடாநிற்குமேபிராஞ்ஞன்.

இ-ள். மாலுறு-மயக்கமில்லாத, நனவு-சாக்கிரம், கனவு-சொப்பனம், உறக்கங்கள்வடிவமாய் - சுழுத்திஎன்னும்இவைகளின்சொரூபமாகி, நிகழ்ந்துள - பிரகாசிக்கின்ற, இறைக்கு - ஈசனுக்கு, ஞாலமேல் - பூமியின்கண், அடைவே - கிரமமாக, விசுவன் - விசுவனென்றும், தைசசன் - தைஜஸனென்றும், பிராஞ்ஞன்-பிராஞ்ஞனெனறும், நாமமா - சங்கேதநாமமாக, நவிலுவர் - சொல்லுவார்கள், விசுவன் - விசுவனானவன், தூலமே - தூலமான சாக்கிரத்தை, உண்பவன் - புசிக்கின்றவனுவான், தைசசன் - தைஜஸனானவன், சுருக்கம் - சூக்குமமானசொப்பனத்தை, துய்ப்பவன் - புசிக்கின்றவன், பிராஞ்ஞன்- பிராஞ்ஞனென்பவன், சுகந்தன்பாலதாதலினுல்- சுகந்தன்னிடத்திலிருப்பதனுல், தன்னுடையின்பம் - தன்னுடையவின்பத்தையே, பருகிடாநிற்கும்- புசிப்பான். எ - று.

ப - ம். தன்னிடத்திற்கற்பிக்கப்பட்டசாக்கிரமுதலியசாட்சியமானவவஸ்தையின்பேதத்தாலந்தவந்தச்சாட்சியவிசேஷத்தாலுண்டாகிய விசுவன்முதலியசமுக்கினேயைச்சின்மாத்திர சாட்சியானவான்மாமுறையேயடைகின்றுனென்பார், "இறைக்குஞாலமேல்விசுவன்றைசசன்பிராஞ்ஞனுமமாநவிலுவர்" எனவும், பஞ்சீகரிக்கட்பட்டசத்தப்பரிசமுதலியவிஷயரூபமானதூலப்பிரபஞ்சத்தையும் புசிப்பவரனைவர்க்கும்பொதுவாகஈசனதுமாயையினுற்கற்பிக்கப்பட்ட போகரூபமானஸ்தூலப்பிரபஞ்சத்தையும்புசிக்கின்றவன் சாக்கிரத்தென்னுமவத்தைக்குச்சாட்சியானவிச்சுவான்மாவென்பார், "தூலமேவிசுவனுண்பவன்" எனவும், தனதவிச்சையினுற்கற்பிக்கப்பட்டஅசாதாரணமானவிஷயசமூகங்களை புசிப்பவன்வேறொருவனில்லாமற்றனேபுசிக்கின்றவன்சொப்பனத்திற்குச்சாட்சியானதைஜஸவானமாவென்பார், "சுருக்கந்தைசசன்றுய்ப்பவன்" எனவும், விஷயங்களும்இந்திரியவருக்கங்களும்அந்தக்கரணத்தோடுந்தனக்குக்காரணமான அஞ்ஞானத்தில்ஒடுங்குகின்றதனுல் விக்ஷேபமில்லாமற்சொரூபபூதமானவானந்தத்தைச்சுழுத்திசாட்சியானபிராக்கியன் புசிக்கின்றுனென்பார், "சுகந்தன்பாலதாதலினுற்றன்னுடையின்பம்பருகிடாநிற்குமேபிராஞ்ஞன்" எனவுங்கூறினர்.

கருத்து. அவஸ்தாசம்பந்தத்தா லிவனுக்குப் போகமுண்டாயதே யன்றிச்சொரூபத்தாற்பரமானந்தரூபனும்கேவலஞ்சின்மாத்திரமான சாட்சியாயும்விளங்குகின்றுனென்க. (கரு)

அ - கை. போக்கியமானஜகம்நிருபாதிகனான பரமசிவசொரூபத்தில்ஆரோபிதமாய்ப்பொய்யாதலானும் உபாதிநீங்குங்காலத்துப்புசிப்பவனும்பரமசிவனுக்குவேறுகவிராததனுலும் புசிப்பவன் புசிக்கப்படுபொருளென்னுமிவை

பிரமமேயென்றறிந்தவன்போகத்தால்வரும்புண்ணியபாபங்களைச் சம்பந்திக்கமாட்டானென்றுகூறுகின்றார்.

வேறு.

புரங்கண்மூன்றிலும்போக்கியமியாவையவ
கிருந்துதுய்ப்பவனியாவன்மற்றியாவையும்
பரம்பிரமமெனும்படிபார்ப்பவ
னரந்தையெய்திடானுயிரஞ்செய்யினும்.

இ - ள். புரங்கண்மூன்றிலும் - அவஸ்தைகண்மூன்றுகளினும், போக்கியமியாவை - புசிக்கபபடுவனவெவை, அங்கிருந்துதுய்ப்பவன்யாவன் - அவ்விடத்திலிருந்துபுசிப்பவனியாவன், யாவையும் - இவ்வெல்லாவற்றையும், பரம்பிரமமெனும்படிபார்ப்பவன்- பரப்பிரமமென்றுசொல்லும்படிகாண்பவன், ஆயிரஞ்செய்யினும் - ஆயிரம்போகங்களைப்புசித்தல்செய்யினும், அரந்தையெய்திடான் - துக்கத்தையடையமாட்டான். எ - று. (கசு)

இதுவுமது.

விழுமிதாமயமேதங்கள்செய்யினும்
பழிமிகும்பஞ்சபாதகம்பண்ணினு
மொழிவுறுமலொன்றேயென்றுணருவா
னமுவினனந்தனன்மையுந்தின்மையும்.

இ - ள். விழுமிதாமயமேதங்கள்-தூயதானபரிமேதங்களை,செய்யினும்-செய்தாலும், பழிமிகும் - பழிமிகுந்த, பஞ்சபாதகம்பண்ணினும்- பிரமகத்திமுதலியவைந்துபாதகங்களையுஞ்செய்தாலும், ஒழிவுறுமலொன்றேயென்றுணருவான்-தவிராமல்ஏகமானபிரமமென்றறிந்தவன், அந்தனன்மையும்- அப்புண்ணியபலத்தையும், தின்மையும் - அப்பாபபலத்தையும், நழுவினுன்- கடந்தவனுவான், எ - று. (கஎ)

அ- ஙக, இவ்வண்ணமேகத்துவஞானத்திற்குப்பயனைக்கூறி அந்தவேகத்தன்மையைவிவரித்துக்கூறுகின்றார்.

வேறு.

சீவனன்றுபுரமூன்றிற்சித்தாமவனேவிளையாடு
மேவுமெல்லாமெய்போலவவனல்விளைதலான்மெய்யத்
தேவனேசான்றுதலினுற்சித்துமவனேயத்துவிதன்
யாவுந்தானுதலினெதினுந்தனேயேவிரும்பலாலின்பன்.

இ - ள். புரமூன்றிற்சித்தாமவனேவிளையாடும் - அவஸ்தைகள்மூன்றினுஞ்சித்தாகியபரசிவனேவிளையாடுகின்றான், சீவனன்று - சிதாபாசனல்ல, மேவுமெல்லாம் - பொருந்தியவெல்லாப்பொருள்களும், மெய்போல - சத்தியம்போல, அவனல்விளைதலால் - அச்சிவனாலுண்டாதலால், மெய்யத்

தேவனே - அத்தேவனேசத்தாவான், சான்ருதலினுற்சித்துமவனே-(எல்லாவற்றிற்குஞ்) சாட்சியாயிருத்தலினுற்சித்ருபனுமந்தத்தேவனே, யாவுந்தாஞதலின்அத்துவிதன் - எல்லாமுந்தாஞயிருத்தலின்அத்துவிதன், எதினுந்தனையேவிரும்பலால் - எல்லாவற்றினும்மேலாகத்தன்னைவிரும்பலால், இன்பன்-ஆனந்தருபனுமவனே. எ-று.

ப - ம். ஈசனேலீலையினுற்சீவரூபனுகவிருத்தலால்ஈசனேக்காட்டிலுஞ் சீவன்வேறில்லாமையின், "சீவனன்று புரமூன்றில்" எனவும்,புசிப்பவனபோக்கியம் என்னும்விசித்திரமானசகம் மாயையினுல் மெய்போலுண்டாயதேயன்றி யுண்மையிலில்லாததனுல், "மெய்போல" எனவும், ஞானரூபனுனஆன்மாவுக்குப்பிரமலக்ஷணமானசச்சிதானந்தத்தன்மைசித்தித்தால் ஏகத்துவங் கூடுமெனில், அசத்தியமானவெல்லாவற்றிற்குந்திரிசியத்தன்மை நியமமாதலின்அதற்குச்சாக்ஷியானஞானரூபஆன்மா சத்தியனுயும் அதனுலேயேசித்ருபனுயும் பரப்பிரேமைக்கிருப்பிடமாதலாற்சுகரூபனுயும் முற்கூறியபடியெவ்விடத்தும்பேதத்திற்கு நிருபித்தறகொவ்வாது சொருபலாபமில்லாததனுலத்துவிதனுயும் ஆதலால் சாக்ஷியான்மா சச்சிதானந்தருபனுவானென்பார், "மெய்யத்தேவன் எனவும், சித்துமவனேயெனவும், இன்பனெனவும்," கூறினுர். (க௰)

அ - கை. இந்தச்சாக்ஷியினிடத்திற் சாக்கிரமுதலியவவஸ்தைகள்மூன்றுமொடுங்குவதனுல் அவற்றிற்குச்சாக்ஷியானவான்மாஜீவனுகான் உபாதிவசத்தாற்சீவன்போற்றேன்றினும் ஒருபாதியுமில்லாதகேவலப்பிரமந்தானென்றும், ஜீவன்போற்றேற்றுதலெதனுலெனில் அஞ்ஞானத்தாலென்றுங் கூறுகின்ருர்.

இந்தப்புரங்களொருமூன்றுமிவன்றனிடையேயிருப்பதெனிற்
றெருந்தப்புருடனன்றவன்போற்றேன்றுகின்ருன்கேவலமா
மந்தப்பிரமமாயவன்ருனறியாமையினுலப்பரனைப்
பந்தப்படுமோர்சீவனெனப்பார்ப்பார்பவத்தேபதைக்கின்ருர்.

இ - ள். இந்தப்புரங்களொருமூன்றும் - இந்தப்புரத்திரயங்களும், இவன்றனிடையேயிருப்பதெனில்- இவனிடத்திலொடுங்கியிருப்பதென்ருல், தொந்தப்புருடனன்று - துவிதனுனஜீவனன்று, கேவலமாமந்தப்பிரமமாயவன்ருன்- கேவலமானவந்தப்பிரமமாகிய ஆன்மாவே, அவன்போற்றேன்றுகின்ருன்-அந்தச்சீவன்போற்றேன்றுகின்ருன், அறியாமையினுல் - அஞ்ஞானத்தினுல்,அப்பரனை-அப்பரசிவனை, பந்தப்படுமோர்சீவனெனப்பார்ப்பார்-கட்டுப்பட்டஒருஜீவனெனக்காண்பவர்கள், பவத்தேபதைக்கின்ருர் - பவசமுத்திரத்தில்விழுந்து துன்பப்படுவார்கள். எ-று. (கக)

அ - கை. இவ்வாறுஜீவனுக்குச்சச்சிதானந்த அத்துவிதலக்ஷணமான சொருபத்தன்மையைப்பிரதிபாதித்துப் பிரமத்திற்குந்தடத்தலக்ஷணமாகவத்தன்மையைநிருபிக்கின்ருர்.

வேறு.

ஈனமாகிவிடும்பிராணன்மனங்களிந்தியமியாவையும்
வானமூதைநெருப்புநீர்புவிமற்றுமந்தமகத்திலே
யானதாகிலுநுண்மையின்னதிநுண்மையாமதுவாகுமெய்ஞ்
ஞானநாடியதத்துவம்பதமொன்றினெய்துமருத்தமே.

இ-ள். ஈனமாகிவிடும்பிராணன் -இழிவாகியபிராணனும், மனங்கள்-மனம்புத்தியென்னுமிவைகளும், இந்தியமியாவையும் - பொறிகளெல்லாமும், வானம் - விண்ணும், ஊதை - காற்றும், நெருப்பும் - தழலும், நீர் - ஜலமும், புவி - மண்ணும், மற்றுமந்தமகத்திலேயானதாகிலும் - மற்றுமுள்ளவனைத்தும்அந்தப்பிரமத்தினின்றும் உண்டானதாயினும், அதுநுண்மையின்அதிநுண்மையாம் - அப்பொருள்நுட்பத்தினுமிகுந்தநுட்பமாகும், ஆகுமெய்ஞ்ஞானம்நாடிய தத்- (சுபாவ) மாகியசச்சித்தாகக்கருதுகின்றஅப்பிரமமே, துவம்பதமொன்றினெய்துமருத்தமே - தொம்மென்னும்பதமொன்றின்கண்ணடையப்படும்பொருளாகும். எ-று.

ப-ம். நுண்மையான அபஞ்சீகிருதவிஷயங்களைக்காட்டிலும் நுண்மையானதுமாயை. அதற்குஞ்சூக்ஷமமானவெல்லாவுலகுக்குங்காரணப்பிரமமே ஜீவனைச்சொல்லுகின்றதொம்பதத்திற்கருத்தமென்பார், "நுண்மையின்னதிநுண்மையாமதுவாகுமெய்ஞ் ஞானநாடியதத்துவம்பதமொன்றினெய்துமருத்தமே" என்றார். (உ0)

அ-கை. சகத்காரணவாசியானதற்பதத்திற்கும் தேகமுதலியவுபாதியுடன்கூடியவான்மவாசியானதொம்பதத்திற்கும் விருத்தமானபாகபரித்தியாகத்தாலிரண்டிடத்துமுள்ளசின்மாத்திரரூபமானவேகத்துவத்தை, அஞ்சாவதத்தியாயத்தில் "நீயென்கின்றவார்த்தைக்குப் பொருளாயென்றுமிற்பதுவே" என்னும்பாடல்முதலியவற்றால்விரித்துரைத்தார், அதேசித்தாந்தமாக இங்ஙனங்கூறுகின்றார்.

நீயெனும்பொருளேயதென்றுநிகழ்த்திடும்பொருளாவதுந்
தூயசிற்பரமேபதங்களிரண்டினுந்துணிவாதலான்
மாயையென்றுமவித்தையென்றுமுபாதிபேதவழக்கினு
லாயகற்பிதபேதமல்லதபேதமேபொருளாவதே.

இ-ள். நீயெனும்பொருளே - நீயென்றுசொல்லும் பதப்பொருளே, அதென்றுநிகழ்த்திடும்பொருளாவதும் - அதென்றுசொல்லுகின்றபதப்பொருளாகின்றதும்,பதங்களிரண்டினும்-நீ அதுஎன்னும் சொற்களிரண்டிடத்தும், தூயசிற்பரமேதுணிவாதலால்-(பொருளானது)சித்தானபரசிவமேநிச்சயமாதலால், மாயையென்றுமவித்தையென்றுமுபாதிபேதவழக்கினுல்-மாயையென்றும்அவித்தையென்றுஞ்சொல்லப்படும் உபாதியின்பேதவிவகாரத்தால், ஆய

கற்பிதபேதமல்லது - உண்டாகியகற்பிதவேற்றுமையன்றி, அபேதமேபொருளாவது - பேதமில்லாத (ஏகத்துவமே) பொருளாகும். எ - று.

கருத்து. விசுத்தசத்துவப்பிரதானமாய்த் தன்னையடைந்தவனைமோகஞ்செய்யாதமாயை யீசனுடையவுபாதியாகும். மலினசத்துவப்பிரதானமாய்த்தன்னையடைந்தவனைமோகஞ்செய்யும்அவித்தை ஜீவோபாதியாகும்.இவர்களுக்குவந்தபேதமும் உபாதிவசத்தாலன்றிஉண்மையாகவில்லையென்றுணர்க. (உக)

இதுவுமது.

ஆதரத்தொடவிச்சைநாமமறுத்துநல்லதிகாரியைப்
போதமுற்றுமெனப்புகன்றதுபொய்யிலாமறையையமன்
றேதமற்றதுநானெனுந்திடனுவனேயஃதெய்தினோ
னோதுமுத்தியவன்றனுள்ளநுபோகமிங்ஙனுதிப்பதாம்.

இ - ள். பொய்யிலாமறை - மெய்யானவேதம், ஆதரத்தொடு - அன்போடு, அவிச்சைநாமமறுத்து-அஞ்ஞானமென்னும்பெயரையும்அறுத்து, நல்லதிகாரியை - நல்லஅதிகாரிக்கு, போதமுற்றுமெனப்புகன்றது - ஞானசொரூபமேயெல்லாமுமென்றுபதேசித்தது, ஐயமன்று-சந்தேகமேயில்லை, ஏதமற்றதுநானெனுந்திடனுவன் - (எவன்) குற்றம்நீங்கிஅந்தப்பரசிவன்நானென்னுந்திடமுடையவனுகின்றான், அஃதெய்தினோன் - (அவன்) அந்தப்பிரமத்தையடைந்தவன், அவன்றனுள் - அவனிடத்தில், ஓதுமுத்தி - சொல்லுகின்றமுத்தியிருக்கின்றது, இங்ஙன்அனுபோகம்உதிப்பதாம்- இவ்விடத்தே (அவற்கு) அநுபோகமுண்டாகும். எ-று.

ப - ம். இயல்பாகச்சித்தித்தஏகத்தன்மையைமறைத்தலால், "அவிச்சை" எனவும், நுண்மையினுநுண்மையாய் நித்தியமான அது நீயே நீயே அது என்றுசுருதிகூறிற்றென்பதுதோன்ற, "போதமுற்றுமெனப்புகன்றது பொய்யிலாமறை" எனவும், சாக்கிரமுதலியஅவஸ்தாரூபமாய்ப் பிராணன் மனமுதலியபிரபஞ்சமாயும் யாதொருபிரமம்பரோக்ஷமாய்விளங்குகின்றது அதுவே நீ நானென்றசத்தங்களுக்குலக்ஷியமாய் அபரோக்ஷமாய்விளங்குகின்றபிரத்தியக்குச்சைதன்னியமென்பார், "அதுநான்" எனவுங்கூறினர். (உஉ)

அ-கை. இனியைந்துபாடல்களாற் பிரமான்மவேகத்தன்மையையறிந்தஜீவன்முத்தனுக்கு அநுஸந்தானப்பிரகாரத்தைக்கூறுகின்றார்.

வேறு.

புகலுமுப்பதத்திற்போகம்போக்கியம்புசிப்பானேநா
னிகழுமித்தனைக்குஞ்சான்றாய்நின்றதற்சொருபனேநா
னிகழுவதென்பாலென்பானிற்பதுமிறப்பதென்பாற்
சகலமுமாதலாலேதற்பரம்பொருளாகின்றேன்.

இ- ள். புகலும் முப்பதத்தில்-சொல்லுகின்றமூன்றிடங்களாகியஅவத்தைகளினும், போகம் - போகமும், போக்கியம் - போக்கியமும், புசிப்பான் - புசிப்பவனும், நான் - நானே, திகழுமித்தனைக்குஞ்சான்றாய்நின்ற-விளங்குமித்தனைக்குஞ்சாட்சியாகிநிற்கின்ற, தற்சொரூபனேநான் - அந்தத்தத்பதசொரூபனும்நானே, சகலமும் - எல்லாமும், என்பால்திகழுவது - என்னிடத்திலேயேஉண்டாவதும், நிற்பதுமென்பால் - நிற்கின்றதுமென்கண்ணே, இறப்பதென்பால் - அழிவதுமென்கண்ணே, ஆதலால் - ஆகையினால், தற்பரம்பொருளாகின்றேன் - தற்பரம்பொருளானபரசிவனாகின்றேன். எ-று. (உங)

அணுவினுக்கணுவுநானேயப்படிமகத்துநானே
துணியிலெப்பொருளுநானேசோதியுட்சோதிநானே
பணிவுறத்தகுவேனானேபழையனும்புருடனானே
யிணைதனக்கில்லாவீசனாகியவின்பநானே.

இ - ள். அணுவினுக்கணுவுநானே - அணுவுக்குஅணுவாயுள்ளவனும்நானே, அப்படிமகத்துநானே- அவ்வாறேமகத்துக்குமகத்தாயுள்ளவனும்நானே, துணியிலெப்பொருளுநானே- நிச்சயிக்கிலெல்லாப்பொருளும்நானே, சோதியுட்சோதிநானே - ஒளிக்கும்ஒளியாயுள்ளவனும்நானே, பணிவுறத்தகுவேனானே-யாவராலும்வணங்கத்தக்கவனும்நானே, பழையனும்புடனானே - புராதனனானபுருஷனும்நானே, தனக்குஇணையில்லா-தனக்குநிகரில்லாத, ஈசனாகியவின்பநானே - பரசிவமானஆனந்தசொரூபமும்நானே. எ-று. (உச)

வேறு.

கண்ணுஞ்செவியுமின்றியுமேகாணக்கேட்கக்கடவேனான்
பண்ணுந்தொழிலெல்லாம்வல்லேன்பாணிபாதமில்லெனினு
மெண்ணுங்கடந்தவிடமிங்கேயிருந்துஞ்செல்வேனொருவர்க்
கொண்ணும்படியன்றெனையுணரவெல்லாமுணருகின்றேனான்.

இ - ள். கண்ணுஞ்செவியுமின்றியும் - விழியுங்காதுமில்லாமலிருக்கினும், காணக்கேட்கக்கடவேனான் - பார்க்கவும்கேட்கவும்வல்லவன்நான், பாணிபாதமில்லெனினும் - கைகால்களில்லையெனினும், பண்ணுந்தொழிலெல்லாம்வல்லேன் - செய்கின்றதொழிலெல்லாவற்றினும்வல்லவனும், இங்கே - இவ்விடத்தில், எண்ணுங்கடந்தவிடமிருந்தும் - நினைவையுங்கடந்தசொரூபஸ்திதியிலிருக்கினும், செல்வேனான்- (எங்குஞ்) செல்பவனும்நான், ஒருவர்க்கெனையுணர - எவர்க்குமென்னையறிதற்கு, ஒண்ணும்படியன்று - (யான்)பொருந்துந்தன்மையனல்ல, எல்லாமுணருகின்றேனான் - எல்லாவற்றையுமறிகின்றவனும்நானே. எ - று. (உரு)

ஓதுவேதம்பலவாலுமோதியுணரப்படுவேனான்
வேதவேதாந்தப்பொருள்களெல்லாம்விளங்கவறிவேனான்

நீதுநன்றும்வினைமரணஞ்சனனந்தேகேந்தியம்புத்தி
பூதமைந்துமின்றியகமிதமாய்நானேபுசிக்கின்றேன்.

இ - ள். ஓதுவேதம்பலவாலும் - சொல்லுகின்றமறைகளனேகங்களாலும், ஓதியுணரப்படுவேனுன் - துதித்தறியத்தக்கவனும்நான், வேதவேதாந்தப்பொருள்களெல்லாம் - மறையினும்மறைமுடிவினுமுள்ளபொருள்களெல்லாவற்றையும், விளங்கவறிவேனுன் - நன்ருகஅறிபவனும்நானே, தீதுநன்றும்வினை - பாவபுண்ணியங்களானகருமங்களும், மரணம்-இறப்பும், ஜனனம்-பிறப்பும், தேகேந்தியம் - உடல்பொறிகளும், புத்தி- புந்தியும், பூதமைந்தும்-பூதங்களைந்தும், இன்றி - இல்லாமல், அகம்இதமாய் - அகந்தையும்இதந்தையுமாய், நானேபுசிக்கின்றேன்- (யாவையும்) நானேநுகர்கின்றேன். எ-று. (உசு)

வேறு.

சிறப்புடையதேசுவடிவிற்றிகழ்தலானு
னெறித்தவடிவாலுமெறியாவடிவினலு
நிறத்தசுடரானவடிவாகநிகழ்கின்றே
னிறத்தலிலனுனபரமீசனவன்யானே.

இ - ள். சிறப்புடையதேசுவடிவில் - சிறப்புப்பொருந்தியசுயம்பிரகாசருபமாக, நான்திகழ்தலால் - யான்விளங்குகின்றதனுல், எறித்தவடிவாலும்- விளங்குகின்றருபமாகவும், எறியாவடிவினுலும் - விளங்காதருபமாகவும், நிறத்தசுடரானவடிவாக- விளக்கத்தையுடைய ஒளியானஹிரண்மயமாகவும், நிகழ்கின்றேன்-விளங்குகின்றவனும், இறத்தலிலனுன - அழிவில்லாதவனுன, பரமீசனவன்யானே - பரமசிவனும்யானே. எ - று. (உஎ)

அ - கை. இந்தவநுசந்தானத்தாலடையப்படும்பலனைக்கூறுகின்ருர்.

வேறு.

எனைவிடவொன்றுமிலையெலா மெனதுருவென்றுநிகழ்வதோ
ரனுபவம்வந்துவிளையுமே லழிவுளதன்றியமலமா
யினிதுறநெஞ்சிலுறைவதா யிலதுளதன்றியெதுவுமா
யனியமிறந்தபிரமமா மறிவுருவொன்றையடையுமே.

இ - ள். (ஒருவற்கு)எனைவிடவொன்றுமிலை - என்னைத்தவிரஒருபொருளுமில்லை, எலாமெனதுருவென்று - யாவும்என்சொருபமென்று, நிகழ்வதோரனுபவம்வந்துவிளையுமேல் - (இவ்வாறு) விளக்குமோரநுபூதிவந்துண்டாகுமெனின், அழிவுளதன்றியமலமாய் - நாசமில்லாதுவிமலமாயும், இனிதுறநெஞ்சிலுறைவதாய்- யாவரும் ஆனந்தமடையஇதயத்திலுள்ளதாயும், இலதுளதன்றியெதுவுமாய் - இல்லையுண்டென்னுமலியாவுமாயும், அனியமிறந்தபிரமமாமறிவுருவொன்றை - தனக்கன்னியமில்லாதபிரமமானஞானசொருபமொன்றினை, அடையுமே - அவன்அடையாநிற்பான். எ - று. (உஅ)

வேறு.

கைவல்லியவுபநிடதங்கருணையினாலேயெதுகருதிக்கூறிற்
றுய்வில்லையனியமொன்றுலெனவரிபிரமாதிகளுகவாநின்று
ரெவ்வல்லியினுளவதிகாரிகளுமிதறியும்படியினிதிற்சொன்னே
னவ்வெல்லையில்பொருளதிபத்தியொடறிவுறுவீரமரர்களனைவிரும்.

இ-ள். உய்வில்லையனியமொன்றுலென-மற்றொருபொருளினாற்பிழைப்பில்லையென்று, கைவல்லியவுபநிடதம்-கைவல்லியமென்னுமுபநிடதமானது, கருணையினால் - கிருபையினால், எதுக்கருதிக்கூறிற்று - எதனைக்கருதிச்சொல்லிற்று, அரிபிரமாதிகளுகவாநின்றார்- (அதனை) மாலயன்முதலியவர்கள்மகிழாநின்றார், எவ்வல்லியினுளவதிகாரிகளும்-எந்தப்பிரிவினுமுள்ளவதிகாரிகளும், இதறியும்படியினிதிற்சொன்னேன் - இதனையுணரும்படி பிரியமாகச்சொன்னேன், அமரர்களனைவீரும் - தேவர்களானநீங்களெல்லாரும், அவ்வெல்லையில்பொருளதிபத்தியொடறிவுறுவீர் - அந்தவெல்லையில்லாதபரசிவ சொரூபத்தைமிகுபத்தியோடறிவீர்கள். எ - று. (உக)

வேறு.

பண்டைநான்மறைகள்சொல்லியபரிசேபரகுருவாயிருந்துள்ள
வண்டநாயகனையாதரித்தவன்றனருளினாலநுபவமாகக், கண்டுளோ
ரிருக்குந்தன்மையையெல்லாங்காதலால்வானவர்க்குரைத்தான்,புண்
டரீகத்தேயிருந்துதான்சகலபூதமும்படைத்திடும்புனிதன்.

இ-ள். புண்டரீகத்தேயிருந்து - தாமரைத்தவிசினிருந்து, சகலபூதமும்படைத்திடும்புனிதன் - எல்லாப்பூதங்களையுமுண்டாக்கியதேவன், பண்டைநான்மறைகள்சொல்லியபரிசே - பழையநான்குவேதங்களுமுபதேசித்தவாறே, பரகுருவாயிருந்துள்ளவண்டநாயகனை - மூலகுருவாயெழுந்தருளியிருக்கின்றலோகநாயகனானசிவபெருமானை, ஆதரித்தவன்றனருளினால் - அன்பினால்வழிபட்டுஅவனதுதிருவருளினால், அநுபவமாக - சுவாநுபவமாக, கண்டுளோரிருக்குந்தன்மையையெல்லாம் - (அப்பரத்தை) க்கண்டுளோரிருக்குமியல்பெல்லாவற்றையும், காதலால்வானவர்க்குரைத்தான் - அன்பினால் விண்ணவர்களுக்குபதேசித்தான். எ - று. (௩௦)

கைவல்லியவுபநிடத முற்றிற்று. ஆ திருவிருத்தம் - சகo.

சிவமயம்.

உ

சிவாயபரமகுரவேநம:

ஒன்பதாவது.

# பிரகதாரணியவுபநிடததாற்பரியமுரைத்த வத்தியாயம்.

---

அத்தியாயவவதாரிகை.

இனிப்பிரகதாரணியத்துக்கும் பிரமான்மவைக்கியபரத்தன்மையையிரண்டத்தியாயங்களாற்கூறுவார் அதனுள்மைத்திரேயிப்பிராமணதிலமிர்தத்தன்மைக்குச்சாதனமான அத்துவிதவான்மதெரிசனத்தையும் அதற்குச்சாதனங்களானசிரவணாதிகளையும் பிரதிபாதிக்கின்றதுபற்றிச் சம்பூரணமானவுபதேசமாதலால் அதன்பொருளைமுன்னாகச்சுருக்கிக்கூறுகின்றார்.

துன்பமாமுடம்பினின்றுமங்கதனாற்றுவக்குருவகை நின்றசிவனுக், கின்பமேவடிவமாதலாற்சொருபானந்தனென்றெழின்மறையெல்லா, முன்புகூறிற்றவ்வின்பமாம்பரிசைமொழிந்திடக்கேண்மினென்றழகா, வன்பினாலலரோனமரரியாவர்களுமறியவாதரத்தொடுமுரைப்பான்.

இ - ள். துன்பமாம் - துக்கமுண்டாகும், உடம்பினின்றும் - சரீரத்திலிருந்தும், அங்கு - அவ்விடத்திற்றானே, அதனால் - அந்தச்சரீரத்தினால், துவக்குருவகைநின்ற - சம்பந்தமில்லாதபடிவிளங்குகின்ற, சிவனுக்கு - சிவத்துக்கு, இன்பமே - பரமானந்தமே, வடிவமாதலால் - சொரூபமாதலால், சொருபானந்தனென்று - சொரூபானந்தனென்று, எழின்மறையெல்லாம் - வலிமைபொருந்தியவேதமனைத்தும், முன்புகூறிற்று - முன்னமேசொல்லிற்று, அவ்வின்பமாம்பரிசை - அந்தப்பரமானந்தத்தன்மையை, மொழிந்திட - சொல்ல, கேண்மினென்று - கேளுங்களென்று, அழகா - அழகாக, அன்பினால் - அன்பினுடன், அலரோன் - பிரமதேவர், அமரரியாவர்களும் - எல்லாத்தேவர்களும், அறிய - அறியும்படி, ஆதரத்தொடு - அன்பினுடன், உரைப்பான் - சொல்லுகின்றார். எ - று.

(க)

அ-கை. சுருதியிற்பதியினுடையகாமத்தின்பொருட்டுப்பதியானவன்பிரியமுள்ளவனாகமாட்டானென்றதுமுதலானஅனேகம்பரியாயங்களாற் பதிமனைவிமைந்தன்பொருள்முதலியவை ஆன்மசேடமாகப்பிரியங்களாகுமென்று பிரதிபாதித்து எல்லாவற்றினின்றுமான்மாவேமிகுந்தபிரியமுடையவனென்றுசொல்லப்பட்டது அதன்பொருளைக்கூறுகின்றார்.

ஈசனுக்குருவானந்தமேயாகுமேதெனிலியாதினுந்தன்மே
லாசைவைத்திடலாலாசைவைத்திடுமானந்தமேமிகவுமானந்தம்

பாசம்வைத்திடுதறன்பொருட்டன்றிப்பதிபொருட்டல்லவேமனைவி
நேசமெப்படியுந்தன்னுடைாதலிற்றானிரதிசயானந்தநேரே.

இ - ள். ஈசனுக்கு- பிரத்தியக்ரூபனனசிவனுக்கு, உருவு-ரூபமானது, ஆனந்தமேயாகும் - ஆனந்தமேதான், ஏதெனில் - எதனுலெனில், யாதினும்- அனைத்தினும், தன்மேல் - தன்னைக்குறித்து, ஆசை - பிரேமையானது, வைத்திடலால் - வைப்பதனுல், ஆசைவைத்திடும் - பிரேமைக்குஆஸ்பதமாகிய, ஆனந்தமே - ஆனந்தமே, மிகவுமானந்தம் - மிகுந்தவானந்தமாகும், மனைவி - தாரமானவள், (பதியினிடத்தில்) பாசம்வைத்திடுதல் - ஆசைவைத்தல், தன்பொருட்டன்றி - தனதுகாமத்தின்பொருட்டல்லாமல், பதிபொருட்டல்ல- புருடனிமித்தமல்ல, எப்படியும் - எவ்வாற்றானும், நேசம் - ஆசையானது, தன்னுடைாதலின் - தன்னைக்குறித்துவைப்பதனுல், தான் - தானே, நேரே- ஸாக்ஷாத்தாய், நிரதிசயானந்தம்- நித்தியானந்தமாவான். எ - று.

ப - ம். பிரேமைக்கிருப்பிடமான மைந்தன்பொருள்முதலியவிஷயங்களாலுண்டானவானந்தம் அன்னியசேடமாதலின் சாட்சாத்தாகவானந்தமாகாது. யாதொன்றுநிரதிசயப்பிரேமைக்கிருப்பிடமானவானந்தமோ அதுவேபிரதானமாதலின் சேஷியான ஆன்மாவேசாக்ஷாத்தாகவானந்தமென்பார், "யாதினுந்தன்மேலாசைவைத்திடலாலாசைவைத்திடுமானந்தமேமிகவுமானந்தம்" என்றார்.

கருத்து. பரப்பிரேமைக்கிருப்பிடமானதன்மை யானந்தரூபத்திற்குக் கமகமென்றுகொள்க. (உ)

வேதியரரசர்விண்ணவர்மிகவும்விரும்பியவுலகுகள்சகல, பூதமும்போகபோக்கியமாகும்பொருள்களும்பொருள்களின் பொருட்டுக், காதல்செய்கின்றானல்லனெப்படியுங்காதல்செய்வதுதனைக்காமித், தாதலால்விருப்பந்தன்னுடைாதலிற்றானிரதிசயானந்தமாகும்.

இ - ள். வேதியர் - அந்தணர்களையும், அரசர் - க்ஷத்திரியர்களையும், விண்ணவர் - தேவர்களையும், மிகவும்விரும்பிய - மிகவும்விரும்பப்பட்ட, உலகுகள் - உலகங்களையும், சகலபூதமும் - சர்வபூதங்களையும், பொகபோக்கியமாகும் - போகபோக்கியமாகின்ற, பொருள்களும்- வஸ்துக்களையும், பொருள்களின்பொருட்டு-அப்பொருள்களினிமித்தம், காதல்செய்கின்றானல்லன்-ஆசைப்படுகின்றானில்லை, எப்படியும் - எவ்விதத்திலும், காதல்செய்வது - ஆசைப்படுவது, தனைக்காமித்து - தன்னைக்குறித்துத்தான், ஆதலால்- ஆகையினுல், விருப்பம் - பிரேமை, தன்னுடைாதலில் - தன்னிடத்திலிருப்பதனுல், தான் - தானே, நிரதிசயானந்தமாகும் - நித்தியானந்தனுவான். எ - று.

ப - ம். மிகுந்தவன்புடைய மனைவிமைந்தன்முதலியவர்கள் தனக்காகவேயன்புசெய்யப்படுகின்றார்களெனக்கூறி சுருதியிற்சொன்னவையெல்லாஞ்சங்கிரகிப்பார், "சகலபூதமும்" என்றார். (௩)

அ - கை. இவ்வண்ணம் அனைத்துமான்மசேடமாகக்கொண்டு பிரியமாதலின்றி ஆன்மாவேயிருந்தவன்புடையவனும் சகலக்ஷணமுடைய நிரதிசயானந்தசொருபனுமிருத்தலாற் பரிச்சின்னசுகத்திற்குச் சாதனங்களான கர்மங்களெல்லாவற்றையும்விட்டு அபரிச்சின்னமானசுகத்திலிச்சையுடையமுமுக்ஷுக்களாலேயன்போடும் ஞானரூபமானவான்மாசாக்ஷாத்கரிக்கத்தக்கவன் அதற்கு மனனநிதித்தியாசனத்தோடுங்கூடிச்செய்யப்படும்வேதாந்தமகாவாக்கிய சிரவணந்தானே சாதனமென்று கூறுகின்றார்.

யார்க்குமின்பம்போல்விரும்பிடப்படலாலின்பமேயிறைவடிவின்பந், தூக்கிமெய்யின்பம்பெறநினைப்பவராற்றுயர்மிகுந்தொழிலெலாம்விட்டுப், பார்க்கவுங்கேட்கநினைக்கவுந்தியானம் பண்ணவும்படுவனிப்பரம, னூக்கியங்கவனையறியவேயெல்லாமறிந்ததா மொழியவின்மையினால்.

இ - ள். இன்பமே - சுகமே, யார்க்கும் - எவர்களுக்கும், இன்பம்போல் - சுகமாக, விரும்பிடப்படலால் - விரும்பப்படுதலால், இன்பம் - அவ்வானந்தமே, இறைவடிவு - பரசிவசொரூபமாகும், தூக்கி - ஆராய்ந்து, மெய்யின்பம்-சத்தியசுகத்தை, பெறநினைப்பவரால்-அடையக்கருதுகின்றவர்களால், துயர்மிகும் - துக்கமிகுந்த, தொழிலெலாம்விட்டு - கர்மங்களனைத்தையும் நீக்கி, இப்பரமன் - இந்தவான்மாவானவன், பார்க்கவும் - தரிசிக்கவும், கேட்க-கேட்கவும், நினைக்கவும்-மனனிக்கவும், தியானம்பண்ணவும்படுவன் - தியானம்பண்ணவுமாவான், அவனே - அவ்வான்மாவை, ஊக்கி - ஊகித்து, அங்குஅறியவே- அவ்விடத்திற்றெரியவே, ஒழியவின்மையினால் - அந்தவான்மாவைத்தவிர வேறொன்றின்மையால், எல்லாம்அறிந்ததாம் - சமஸ்தத்தையுந்தெரிந்ததாகும். எ - று.

ப-ம். சப்தத்தினுடையசக்தியானதாற்பரியநியாயாநுசந்தானத்தைச்சிரவணம் எனவும்,நியாயமாகச்சுருதியினாற்பிரதிபாதிக்கப்பட்டபொருளுக்கு அசம்பாவனைமுதலியவைகளை நீக்குந்தன்மையிருத்தலால் அவ்வாகமயுத்தியினுடையவனுசந்தானத்தை, மனனமெனவும், இவ்வாறு சிரவணமனனங்களாலடையப்படும் பொருளின் சாக்ஷாத்காரத்தின்பொருட்டு விஜாதீயப்பிரத்தியயத்துக்குவேறானஸஜாதீயப்பிரத்தியயப்பிரவாகமானசிந்தனத்தை நிதித்தியாசனம் எனவும், அவ்வாறேசுருதியும் ஆன்மா பார்க்கத்தக்கவன் கேட்கத்தக்கவன் மனனிக்கத்தக்கவன் சிந்திக்கத்தக்கவன் தெளியத்தக்கவனெனக்கூறிற்றென்பார்,"பார்க்கவுங்கேட்கநினைக்கவுந்தியானம்பண்ணவும்படுவனிப்பரமன்" எனவும், மிகுந்தவன்புசெய்யத்தக்கவனானவான்மாவானவன் கேட்டல்முதலியவற்றால் சாக்ஷாத்கரிக்கப்பட்டஅளவில் அவனிடத்திலாரோபமானவெல்லாச்சகமும் அந்தவான்மசேடமாகப் பிரியமாகுமென்று முன்பேசொல்லப்பட்டதனால் அனைத்துமதற்குவேறில்லாததாக வறியப்பட்டதாகும், அவ்

வாறேசுருதியும் ஆன்மதரிசனத்துக்குச் சருவாவாப்திலக்ஷணமான பிரயோசனத்தைக் கூறிற்றென்பதுதோன்ற, "ஊக்கியங்கவனையறியவேயெல்லாமறிந்ததாமொழியவின்மையினல்" எனவுங்கூறினர். (அ)

அ - கை. இந்தவான்மதரிசனத்தினலேயே துக்கங்கள் நீங்குமென்று கூறுகின்றார்.

வேறு.

மத்தமுறும்பிறவிப்பகைமாளு
முத்தியுமுன்னிலையாமுடிவில்லா
வெத்துயருங்கெடுமின்பமதாகு
மத்துவிதத்தையறிந்தவவர்க்கே.

இ-ள். அத்துவிதத்தை - துவிதமில்லாதஞானத்தை, அறிந்தவவர்க்கே- தெரிந்தவர்களுக்கே, மத்தமுறும் - மதம்பொருந்திய, பிறவிப்பகை - சமுசாரமானபகை, மாளும்-ஒழியும், முத்தியும்- வீடும், முன்னிலையாம் - தன்முன்பு நிலையாகும், முடிவில்லா- அந்தமில்லாத, எத்துயரும் - எந்தத்துக்கங்களும், கெடும் - அழியும், இன்பமதாகும் - சிவானந்தமுண்டாகும். எ-று.

ப - ம். துக்கசமூகங்கணீங்கிடினுஞ் சுவர்க்கமுதலிய சுகங்களுக்கேதுவானபுண்ணியமிருத்தலால் அதன்னிமித்தமாகவித்துவானுக்குச்சமுசாரம் வருமோவெனில்அத்துவிதியப்பிரமான்மவைக்கிய சாக்ஷாத்காரம்வந்தபின் புண்ணியபாவமெல்லாவற்றிற்குமிருப்பிடமாய்க் கருத்திருத்துவபோக்திருத்துவமுதலியவையுடைய அந்தக்கரணம்வேறுகப் பிரிக்கப்பட்டமையின் அதனுலுண்டாகுஞ்சுகதுக்கபோக விலக்கணத்தையுடைய சமுசாரம் வித்துவானுக்கில்லையென்பார், "மத்தமுறும்பிறவிப்பகைமாளும்" எனவும், பரமாத்துவிதருபனுயுள்ளபுருடனுக்குத் தனக்குவேறுகத்துக்கஹேதுவானபொருளில்லாமையின் பரம்பரையாய்வந்தபவங்களிலே சம்பாதிக்கப்பட்டதுக்கசமூகங்கள்நீங்குமென்பார், "எத்துயருங்கெடும்" எனவும், இத்தன்மையான மோக்ஷத்திற்குஞ் சுகதுக்கங்கள்போலச் சுவர்க்காதி சுகங்களும்நீங்குதலாற்புருஷார்த்தத்தன்மையில்லையெனில் ஆன்மாவிற்குச்சொருபபூதமான நித்தியநிரதிசயஅத்துவிதவானந்தம் வேறெருகாரணத்தையபேக்ஷியாமற் சொருபப்பிரகாசத்தினலே விளங்குகின்றமையால் புருஷார்த்தமே யென்பார், "இன்பமதாகுமத்துவிதத்தையறிந்தவவர்க்கே" எனவுங்கூறினர். (கூ)

அ - கை. இவ்வாறுமுத்திசாதனமான அத்துவிதபரமானந்தவான்மதரிசனத்தைக்கூறிச் சுருதியிற்கண்டபேததரிசனநிந்தையைக்கூறுகின்றார்.

பின்னமுறப்பிரமத்தையறிந்தான்
றன்னையமெய்ப்பொருட்ள்ளுமதன்றி
மன்னுமுடம்புவசத்தொருவாதிங்
கின்னவுலோகமெனுமலிழிக்கும்.

இ-ள். பிரமத்தை - பிராமணசாதியை, பின்னமுற - தனக்குப்பின்னமாக, அறிந்தான்றன்னை - அறிந்தவனை, அ மெய்ப்பொருள்-அந்தப்பிரமம், தள்ளும் - தள்ளிவிடும், அதன்றி - அதன்றியும், மன்னும் - க்ஷத்திரமும், இன்னவுலோகம் - இந்தவுலகமும், உடம்புவசத்தொருவாது - உடம்பின்வசத்தினின்றும்நீங்காமலிருக்கும்படி, இங்கு-இவ்விடத்தில், எணுமல்-மதியாமல், இழிக்கும்-தள்ளிவிடும். எ - று.

கருத்து. அந்தப்பிரமம் பேதஞானிக்குஅகப்படாததனுற் சுகதுக்கங்களுக் கேதுவாகுமென்றறிக. (சு)

வேறு.

அல்லாதில்லாப்பரந்தன்னிலயலாவறியும்படியயர்ந்து
பொல்லாவாகத்தறிவுபெறும்பசுவானவனைப்புத்தேளி
ரெல்லாமெல்லாவேதமும்பூதங்களியாவுமிறத்தள்ளி
நில்லாநிற்கும்பேதத்தேநிற்பானசிக்கைதப்பாதே.

இ-ள். அல்லாதில்லா - பின்னவஸ்துவாயிராத, பரந்தன்னில் - பிரமத்தில், அயலா - பின்னமாக, அறியும்படியயர்ந்து - தெரியும்படிதன்னை மறந்து, பொல்லா ஆகத்தறிவுபெறும் - கொடிதானதேகஞானமுடைய, பசுவானவனை - பசுவை, புத்தேளிரெல்லாம் - தேவர்களனைவர்களும், எல்லா வேதமும் - சமஸ்தவேதங்களும், பூதங்களியாவும் - பஞ்சபூதங்களும், இறத்தள்ளிநில்லாநிற்கும் - அழியும்படிதள்ளிநிற்கும், பேதத்தேநிற்பான்-துவிதத்தில்நிற்கின்றவனுக்கு, நசிக்கைதப்பாது - மரணம்நீங்காது. எ-று.

ப-ம். பிரமக்ஷத்திராதிஜகத்தைத் தனக்குவேருகப் பார்க்கின்றவன் பொய்யாகக்கண்டானுகலின் அவனைப்பசுவென்பார், "பொல்லாவாகத்தறிவுபெறும்பசுவானவனை" எனவும், பேதமனுபவசித்தமாதலின் எப்படிநீக்கக்கூடுமென்னில், தோற்றுகின்றபேதம் கிளிஞ்சில்வெள்ளிபோலப்பிராந்தியாதலின் எதார்த்தமாய்த்தனக்குவேருகப்பேதஜகத்தைப்பார்க்கின்றவன் அதனுலுண்டாகியபுண்ணியபாவங்களால்வசீகரிக்கப்பட்டவனுய் ஜனனமரணமானசமுசாரத்தையடைகின்றுன் அங்ஙனமேசுருதியும் சமுசாரத்தினின்றுந்திரும்பவுஞ்சமுசாரத்தையடைகின்றுன் எவனிவ்விடத்தில்நானுநாமருபங்களையே பார்க்கின்றுனென்று கூறிற்றென்பதுதோன்ற, "பேதத்தேநிற்பானசிக்கைதப்பாதே" எனவுங்கூறினர். (எ)

அ-கை. தோற்றுகின்றபிரம க்ஷத்திர முதலியவைகளையெப்படியறிகின்றதென்றுசங்கித்து அவையெல்லாவற்றையும் ஆன்மசொரூபமாகவேயறியவேண்டுமென்று இதுபிராமணசாதிஇதுக்ஷத்திரமென்றதுமுதலியவைகளாற் சுருதிகூறிற்று அதன்பொருளைக்கூறுகின்றுர்.

மறையோரரசர்முதலானவன்ஞச்சிரமமற்றுள்ள
பிறிவாய்கிகழுகின்றவெலாம்பிரமமொன்றுமேபிறிதா

வறியாநிற்குமறிவென்றுமல்லற்பிறப்பையடைவிக்கு
மிறைதானுனநிலையெய்துமிரண்டுங்காணுதிருந்தக்கால்.

இ - ள். மறையோர்- வேதியர்கள், அரசர்-க்ஷத்திரியர்கள், முதலான- இவர்கள்முதலான, வன்னுச்சிரமம்-வருணுச்சிரமங்களும், மற்றுள்ள-மற்றுமி ருக்கின்ற, பிறிவாய்நிகழுகின்றவெலாம் - வேருகநிகழ்கின்றவனைத்தும்,பிரம மொன்றுமே - ஏகமானபிரமமேதான், பிறிதாவறியாநிற்கும்அறிவு - வேருக அறிகின்றபுத்தியானது, என்றும் - எக்காலத்திலும், அல்லற்பிறப்பை - துக்க மானசமுசாரத்தை, அடைவிக்கும் - அடையச்செய்யும், இரண்டுங்காணுதி ருந்தக்கால் - துவிதத்தைப்பாராமலிருந்தால், இறைதானுன - பரமசிவம் தா னென்ற, நிலையெய்தும் - சுபாவத்தையடைவான். எ-று.

ப-ம். மாயாகாரியமானபிரமக்ஷத்திரமுதலெல்லாம் ஆன்மசொருபத் தில்அத்தியாசிக்கப்பட்டுச்சிளிஞ்சிலில்வெள்ளிபோல் அதிஷ்டானத்தைக்கா ட்டிலும்வேருகநிருபிக்கமுடியாததனுல் எல்லாமான்மாவேயென்பார், "பிறி வாய்நிகழுகின்றவெலாம்பிரமமொன்றுமே" எனவும், பிரமக்ஷத்திரமுதலி யசகத்திற்கும்பிரத்தியகான்மாவிற்கும் பேதபுத்திசெய்வதுசமுசாரத்திற்கே துவாமென்பார், "பிறிதாவறியாநிற்குமறிவென்று மல்லற்பிறப்பையடைவிக் கும்" எனவுங்கூறினூர். (அ)

அ-சை. துக்கங்களெல்லாம்நீங்குதற்கும் நிரதிசயானந்தத்தையடை விக்குமிலக்கணமுடையமுக்திக்கும் அத்துவிதமானஆன்மவித்தையேசாதன மென்பதனையும் ஞானியின்பெருமையையுங்கூறுகின்ருர்.

வேறு.

அத்துவிதந்தானுமவிகற்பமதடைந்தபோதே
புத்தியிலிளைப்பும்போகும்போகுமிப்பிறப்புநேரா
வெத்திகழ்வாலும்பேதமின்மையாலிறையேயென்னுந்
தத்துவவித்தேயென்றன்றலையிருல்வணங்கத்தக்கான்.

இ - ள். அத்துவிதந்தானும் - அத்துவிதமாகிய, அவிகற்பமதடைந்த போதே - நிருவிகற்பத்தையடைந்தபொழுதே, புத்தியில் - புத்தியிலுள்ள, இளைப்பும்போகும் - துக்கமும்நீங்கும், இப்பிறப்பும்போகும் - இந்தச்சென்ம மும்ஒழியும், எத்திகழ்வாலும் - எந்தவிளக்கத்தினுலும், பேதமின்மையால் - பேதமில்லாததனுல், இறையேயென்னும் - (அனைத்தும்) பிரமமேயென்கி ன்ற, தத்துவித்தே-தத்துவஞானியே, நேரா-நேராக, என்றன்தலையினுல்-என துநான்குசிரங்களாலும், வணங்கத்தக்கான் - வந்திக்கத்தகுந்தவன். எ - று.

ப - ம். சகலவுபாதிகளையும்நீங்கினதாயும் விகாரங்களெல்லாவற்றிற் கும்வேருகியும் சத்தியஞானுனந்தஏகரசமாயும் விளங்கும்பிரமசொருபத் தில் சிரவணமுதலியசாதனங்களாலுண்டானபிரமத்தைவிஷயீகரிக்கின்றவித் தையினுல் அதனையாவரித்தவவித்தைநீங்குமளவில் அன்னியமானவிஷயங்க

ளில்லாமையால் விக்ஷேபவாசனையில்லாதசித்தவிருத்திக்கு யாதொருவுபாதியு ண்டோ அஃதேமோக்ஷமென்பார், "அத்துவிதந்தானுமவிகற்பமதடைந்தபோ தே புத்தியிலிளைப்பும்போகும்போகுமிப்பிறப்பும்" என்றார். (கூ)

அ-கை. இந்தஅத்துவிதீயப்பிரமான்மவிஞ்ஞானம் எங்குஞ்சுலபமா கக்காணுததற்குக்காரணங்கூறுகின்றார்.

வேதமாகமம்புராணமிருதிகள்வேறுமார்க்க
ரோதுமாகமங்கடர்க்கமொன்றொடொன்றெவ்வாதாகு
மீதெலாமொக்கப்பண்ணலாவதன்றிதயதுக்க
மாதலாலனைத்தும்விட்டிங்கனைத்துமாஞ்சிவனைப்பார்ப்பான்.

இ-ள். வேதம் - வேதங்களும், ஆகமம் - ஆகமங்களும், புராணம் - புராணங்களும், மிருதிகள் - ஸ்மிருதிகளும், வேறுமார்க்கர் - புத்தர்அருகர் முதலியமதவாதிகள், ஓதுமாகமங்கள் - சொல்லுகின்றஆகமங்களும், தர்க் கம் - தருக்கங்களும், ஒன்றொடொன்றெவ்வாதாகும் -ஒன்றுக்கொன்றுபொ ருந்தாதாகும், ஈதெலாம் - இவைகளெல்லாம், இதயதுக்கமாதலால்-மன த்தில்த்துக்கத்தையுண்டுபண்ணுமாதலால், ஒக்கப்பண்ணலாவதன்று-ஒன்றுப டுத்தக்கூடுவதல்ல, அனைத்தும்விட்டு - எல்லாவற்றையுந்தள்ளி, இங்கு - இவ் விடத்தில், அனைத்துமாம் - யாவுமாய்விளங்குகின்ற, சிவனை - சிவசொரூப த்தை, பார்ப்பான் - பார்க்கக்கடவன். எ-று.

ப-ம். சீவித்திருக்கும்வரைக்கும் அக்கினிஹோத்திரஞ்செய்யத்தக்க தெனவும் கருமமுதலியவற்றாற்பிரயோசனமில்லை துறவொன்றலேயேபிர யோசனமெனவும் இரண்டுபறவைகள்கூடிச்சகாக்களாகவிருக்கின்றனவென வும் ஒருதேவனேசகலபூதங்களினுஞ்சூக்குமமாயிருக்கின்றானெனவும் ஒன்று க்கொன்றுவிரோதார்த்தங்களாகச்சுருதிஸ்மிருதிபுராணவாகமங்களிருத்தலா ல், "ஒன்றொடொன்றெவ்வாதாகும்" எனவும், அவைகளுக்குஅவிரோதஞ்செ ய்யப்புகில்ஆயுளெல்லாமதன்பொருட்டேஒழியாநிற்கும், அவ்வாயுள்சித்தித்தி டினும்அவிரோதஞ்சித்திக்காது,அந்தவந்தநூல்களின்பரிசீலனம் மனோவிக்ஷே பத்துக்குக்காரணமாதலின் அவ்வனைத்தையுநீக்கி வேதாந்தமகாவாக்கியவிசா ரத்தாலுண்டாகியவான்மஞானமுடையவனுகப்பவித்து எந்தஎந்தவஸ்துக்க ளெந்தஎந்தரூபமாகப்பிரகாசிக்கின்றதோ அந்தஅந்தரூபமாகஅவைகளின்அதி ட்டானமானபரமசிவத்தையேயெல்லாவற்றிலும்பார்க்கத்தக்கதென்பார்,"இ தயதுக்கமாதலாலனைத்தும்விட்டிங்கனைத்துமாஞ்சிவனைப்பார்ப்பான்" எனவு ங்கூறினார்.

கருத்து. இதனாலிந்தமகாபூதத்தின்சுவாசமே இருக்கு எசுரு சாமம்அ தர்வணமென்னும்வேதங்களென்றசுருதியின்தாற்பரியங்கூறப்பட்டது. (கo)

வேறு.

கிருமிகேடங்கண்மதியுடைத்ததனிற்கிளர்ந்திடும்பசுமதியவற்றி
னரர்மதியுடையாரவரினுஞ்சிலவர்ஞானமிக்கிருப்பரன்னவரிற்

பெரியர்கந்தருவர்மதியினலவரிற்பெரியரேபிதிர்க்கள்வெவ்வேறு
ஒருவருக்கொருவர்தாரதம்மியத்தாலுணர்வினலுயர்ந்தவருளரால்.

இ - ள். கிருமிகீடங்கள்-புழு வண்டுமுதலியன, மதியுடைத்து- மதியுடையனவாகும், அதனில் - அவற்றைக்காட்டிலும், பசுமதி- பசுவினதபுத்தி, கிளர்ந்திடும் - சிரேட்டமாகவிளங்கும், அவற்றின் - அவைகளைக்காட்டிலும், நரர்மதியுடையர் - மனிதரதிகபுத்தியையுடையவர்கள், அவரினும் - அந்தரரினும், சிலவர் - சிலர்கள், ஞானமிக்கிருப்பர்-விசேஷவறிவுடையவர்களாயிருப்பார்கள், அன்னவரில்-அவர்களைக்காட்டிலும், கந்தருவர்-கந்தருவர்கள், பெரியர் - புத்தியையுடையவர்கள், அவரில்-அவர்களைக்காட்டிலும், பிதிர்க்கள் - பிதிர்க்கள், மதியினல் - பிரஞ்ஞையினல், பெரியர் - ஆதிக்கமாவார்கள், ஒருவருக்கொருவர் - ஒருத்தருக்கொருத்தர், தாரதம்மியத்தால் - தாரதம்மியத்தினலும், உணர்வினல் - அறிவினலும், வெவ்வேறு - வேறுவேருக, உயர்ந்தவர் - மேன்மையுடையவர்களாக, உளர்- இருக்கின்ருர்கள். எ-று. ()

உள்ளபேரெல்லாரிலுமுணர்வுடையீரும்பர்காணீங்களுங்களினுன், றெள்ளியேனுவேன்மதியினலென்னிற்செனர்த்தனன்சேதனனுகும், வெள்ளமேற்றுயிலுமாலினுமரன்ருன்மேதையாம் விளம்பியவெவர்க்கு,முள்ளமேமருவியுணர்வளிக்கின்றசிவனியாரினுமுணர்வுடையான்.

இ - ள். உள்ளபேரெல்லாரிலும் - கீழ்ச்சொல்லியிருக்கின்ற எல்லார்களினும், உம்பர்காள்நீங்கள்-தேவர்களேநீங்கள், உணர்வுடையீர் - மிக்வும்பிரஞ்ஞையுடையவர்கள், உங்களில் - உங்களைக்காட்டிலும், மதியினல் - பிரஞ்ஞையினல், நான்தெள்ளியேனுவேன் - நான்தெளிந்தவனுவேன், என்னில் - என்னைக்காட்டிலும், செனர்த்தனன் - திருமால், சேதனனுகும் - அறிவுடையவனுவான், வெள்ளமேல் துயிலும்- பாற்கடலில்நித்திரைசெய்கின்ற, மாலினும் - விஷ்ணுவைக்காட்டிலும், அரன்ருன்-திரிமூர்த்திகளிலுள்ளஉருத்திரர், மேதையாம் - அதிகஞானமுடையவராவார், விளம்பியவெவர்க்கும்-இப்போதுசொல்லியஅனைவர்களுக்கும், உள்ளமேமருவி- இருதயபங்கயத்திலிருந்து, உணர்வளிக்கின்ற - ஞானத்தைக்கொடுத்தருள்கின்ற, சிவன் - உமாபதியாகியமகாதேவரே, யாரினும் - எல்லாரினும், உணர்வுடையான் - மேலானபிரஞ்ஞையையுடையவர், எ - று. (கஉ)

ஆதலாலறியுமறிவெலாங்கைவிட்டறிவினுக்கறிவதாய்நின்ற
பேதமில்பிரமமொன்றுமேயறிவான்பேறுபேரின்பமாம்பிறத்தல்
சாதலற்றிருக்குமிதனையோர்வருத்தமின்றியேசார்தலுமாகு
மாதரித்தறியாரற்பமேவிரும்பியனந்ததுக்கத்திலேயமைவார்.

இ - ள். ஆதலால் - (மகாதேவரேசர்வஞ்ஞராய்)இருத்தலால், அறியுமறிவெலாங்கைவிட்டு - அறியத்தக்கவித்தையனைத்தையும்விடுத்து, அறிவினுக்

கறிவதாய்நின்ற - ஞானத்துக்குஞ்ஞானமாகவிளங்குகின்ற, பேதமில் - அத்துவிதமான, பிரமமொன்றுமே - பிரமமொன்றினையே, அறிவான் - அறியக்கடவன், பேறு - அதனுல்வரும்பலமும், பேரின்பமாம் - பேரானந்தமுத்தியாகும், பிறத்தல்சாதலற்றிருக்குமிதனை - செனனமரணமில்லாமலிருக்கின்றஇந்தச்சிவத்தை, ஓர்வருத்தமின்றியே - ஒருபிரயாசமுமில்லாமலே, சார்தலுமாகும் -இவ் விடத்திற்றுனேயடையலாம், (இந்தப்பிரமத்தை,) ஆதரித்தறியார் - அன்புவைத்துணராதவர்களாகி, அற்பமேவிரும்பி - அற்பசுகத்தையேகருதி, அனந்ததுக்கத்திலே - முடிவில்லாத்துன்பத்திற்றுனே, அமைவார் - அழுந்துகின்றுர்கள். எ - று.

ப- ம். கிருமிகீடமுதலுருத்திரன்வரைக்கும் மேன்மேற்பிரஞ்ஞை அதிசயமாயிருத்தலாற்சருவஞ்ஞத்தன்மைகூடாது. அனவச்சின்னஞானரூபனுன பரமசிவனுெருவனேசாக்ஷாத்சருவஞ்ஞனுதலால் முற்கூறியசுருதிஸ்மிருதிமுதலானஅனுன்மவித்தையைவிட்டு அனைத்தையும்பரமசிவசொரூபமாகவேஅனுசந்தானிக்கத்தக்கதென்பார், "பேதமில்பிரமமொன்றுமேயறிவான்" எனவும், பிரமான்மஞானம் மனோவியாபாரமாத்திரத்தாற்சாதிக்கப்படுதலின், "இதனையோர்வருத்தமின்றியெசார்தலுமாகும்" எனவுங்கூறினுர். (௧௩)

அ - கை. இங்ஙனங்கூறியபொருளேசுருதிமுதலியசாத்திரங்களுக்கும் பரமேசனுக்கும் நாராயணர்முதலியதேவர்களுக்கும் சம்மதமென்றுஅனுவதித்துக்கூறுகின்றுர்.

வேதநூன்மிருதிபுராணமத்துவிதமெய்ம்மையேவிளம்பமெய்த்தருக்
சாதியாநிற்கத்தத்துவஞானத்தவருமிப்பொருளேயேசார (௧௪)
வாதியாஞ்சிவனுராயணனுனிங்கறைந்ததுமபேதமாவிருக்க
வாதியாமொருவற்கிதையனுதரித்தன்மாயையினுடையவல்லபமே.

இ-ள். வேதநூல்-சுருதியும், மிருதி-ஸ்மிருதியும், புராணம்-புராணங்களும், அத்துவிதமெய்ம்மையே - அத்துவிதத்தின்உண்மையையே, விளம்ப-சொல்லவும், மெய்த்தருக்கம்-சுருதியனுக்கிரகமுடைய மெய்ம்மையானதர்க்கங்களும், சாதியாநிற்க - (பரமாத்துவிதவேதனத்தையே) சாதனஞ்செய்யவும், தத்துவஞானத்தவரும் - தத்துவஞானிகளும், இப்பொருளேயே - இந்தவத்துவிதப்பொருளேயே, சார - பொருந்தவும், ஆதியாம் - ஆதியாயிருக்கின்ற, சிவன் - சிவபிரானும், நாராயணன் - விஷ்ணுவும், நான் - யானும், இங்கறைந்ததும் - இவ்விடத்திற்சொல்லியதும், அபேதமாயிருக்க - அத்துவிதமாயிருக்கவும், வாதியாமொருவற்கு - மதவாதியாகியஒருவனுக்கு, இதையனுதரித்தல்- இந்தவத்துவிதப்பொருளேயனுதரவுசெய்கின்றபுத்திபொருந்துதல், மாயையினுடையவல்லபமே - மாயையினுடையவன்மையேயாகும். எ - று.

கருத்து. பரமாத்துவிதஞ்சர்வசம்மதமாயினும்அவித்தையின்வாசனையால்மறைபட்டகண்ணினராய்ப்பெத்தர்கள்விரும்பமாட்டார்களென்றறிக.(௧௪)

இதுவுமது. வேறு.

கனகமதபேதம்வேறுகடகமகுடாதிபோல
வனியவடிவாலனேகமறிவுநிலையாலபேத
மெனவுமுரையாடுவாருமிதயமிலர்ஞானவீன
ரெனையநிகழ்வாலுமீசனெனநினைகுவானவீசன்.

இ-ள். கனகமது - பொன்னானது, அபேதம் - பேதமில்லாததாயும், வேறுகடகம் - பின்னமாகியகங்கணம், மகுடாதிபோல - கிரீடமுதலானவை களாக ஆவதுபோல, அனியவடிவாலனேகம் - பின்னரூபத்தாலனேகமென்றும், அறிவுநிலையாலபேதமெனவும் - ஞானநிலையாலத்துவிதமென்றும், உரையாடுவாரும் - சொல்லுகின்றவர்களும், இதயமிலர்ஞானவீனர் - புத்தியில்லாதவருமறிவில்லாதவருமாவார்கள், எனையநிகழ்வாலும் - மற்றெந்தவிளக்கத்தினாலும், ஈசனெனநினைகுவான் - (அனைத்தும்) ஈசனேதானென்றுகருதுகின்றவன், அவீசன் - அந்தவீசனேயாவான். எ-று.

ப-ம். காரணப்பிரமாகாரமானசாமானியரூபத்தால் அனைத்தும்அத்துவிதந்தான். ஆகாயமுதலியபூதபௌதிக விசேஷாகாரத்தாற்றுவிதஜகத்தோற்றஞ்சத்தியந்தானெனில் ஒன்றுக்கொன்றுவிரோதமான துவிதாத்துவிதங்கள் ஓரிடத்திலிருக்கின்றதென்றுசொல்லுதல்பொருந்தாது, அங்ஙனமொப்பிய பேதாபேதவாதிகளை, "ஞானவீனர்" என்றார். (௧௫)

அ-கை. துவிதமதத்தைக்கண்டித்துக்கூறுகின்றார்.

பலவடிவும்வேறுபாடுபகரும்வெறுமூடரான
புலையரொடுகீடமோடுபுழுவினொடுவாசியேது
சொலவிலுலகாலும்வேறுதுணிவிலுணர்வேயெலாமெ
னிலகுமதிபேறதாகுமிறைவனடிபேணலாலே.

இ-ள். பலவடிவும் - பலவஸ்துக்களும், வேறுபாடுபகரும் - பின்னமென்றேசொல்லுகின்ற, வெறுமூடர் - வீண்மூடர்கள், ஆனபுலையரொடு - உற்பத்தியாகியநீசர்களோடும், கீடமோடு - கீடங்களோடும், புழுவினொடு - புழுவினோடும், வாசியேது - சமானமாவார்களென்றுசொல்லுவதற்குக்கூடநியாயமென்னிருக்கின்றது, சொலவில் - விவகாரத்தில், உலகு - உலகங்கள், வேறு - பின்னமாக, ஆலும் - சேரும், துணிவில் - நிச்சயத்தில், எலாம் - அனைத்தும், உணர்வேன் - ஞானமேயென்கின்ற, இலகுமதி - விளங்கும்புத்தியானது, இறைவனடிபேணலாலே - சிவபிரானதுதிருவடியைத்தியானித்தலாலே, பேறதாகும் - பிரயோசனமாகும். எ-று.

கருத்து. பேதாபேதபக்ஷம்பொருந்தாமையிற் சருவப்பிரகாரத்தாலும் பேதமேபரமார்த்தமென்றவைசேஷிகர்கள்சேதனர்களல்ல, கடமுதலியவை போலசேதனர்களேதான் முன்னமேபேதநிருவசனங்கூடாமைநிரூபிக்கப்பட்டதனாலென்க. (௧௬)

உலகெனவிளங்கல்ஞானவுருவமதடைந்துநாளு
மிலகுபரையின்சொரூபமெனும்விமலபுந்திதானும்
அலகிலருளிந்துமோலியடியிணையிலன்புநீட
நிலைகொளவுறுந்தியானநிகழ்வினிலிலங்குமோர்மின்.

இ-ள். உலகெனவிளங்கல் - சகங்களாகவிளங்குதலும், ஞானவுருவமத டைந்து - ஞானரூபத்தைப்பொருந்தி, நாளும்இலகு - எந்நாளும்ஒளிர்கின்ற, பரையின்சொரூபமெனும் - பராசத்தியினதுசொரூபமேயென்றுகருதுகின்ற, விமலபுந்திதானும் - நின்மலமாகியபுத்தியும், அலகிலருளிந்துமோலி - அளவி ல்லாததிருவருளையுடையசந்திரசேகரரது, அடியிணையில் - உபயபாததாமரை களில், அன்புநீட - பிரேமைமிக, நிலைகொளவுறுந்தியான - ஸ்திரமாகப்பொ ருந்துகின்றதியானத்தின், நிகழ்வினில் - விளக்கத்தினுல், இலங்கும் - (ஒருவ னுக்குப்) பிரகாசிக்கும், ஓர்மின் - நீங்களறியுங்கள். எ - று.

கருத்து. எவனுக்குச்சசிதர ஸ்மரணமுண்டோஅவனுக்கேயிவ்விதஞான முண்டாகுமன்றி வேறொருவனுக்கு இல்லையென்க. (கஎ)

மறைசகவிளக்கநாடிமருவுபிரியத்தினேது
முறையினையுரைத்ததாமெய்மொழியலவெனக்கொள்ஞானி
இறையவனியற்றயாதுமிலைதொழிலவற்குமோக
முறைதொழிலியற்றுவோனலுணர்வில்பசுவொத்தவீனன்.

இ - ள். சகவிளக்கநாடி - உலகவிளக்கத்தைக்கருதி, மறை - சுருதியா னது, மருவுபிரியத்தினேதுமுறையினை - பொருந்துகின்றபிரியஹேதுவின்மு றைமையை, உரைத்ததாம் - சொல்லியதாகும், மெய்மொழியலவெனக்கொ ள் - உண்மையாகச்சொல்லியதன்றென்றுகருதுகின்ற, ஞானி - பரமாத்து விதஞானியே, இறையவன் - பரமசிவனுவான், அவற்கு - அந்தஞானிக்கு, இ யற்ற - செய்யத்தக்க, தொழில் - கருமங்கள், யாதுமிலை-ஒன்றுமில்லை, மோ கமுறைதொழிலியற்றுவோன்-மயக்கம்பொருந்தியகருமங்களைச் செய்பவன், நல்உணர்வில் - நல்லஅறிவில்லாத, பசுவொத்த - பசுப்போன்ற, ஈனன் - இழி ந்தவனுவான். எ - று.

கருத்து. வியாவகாரிகஜகவிளக்கத்தையபேக்ஷித்து அக்கினிஹோத்திர ஞ்செய்யத்தகாதென்றதுமுதலியசுருதியும், சொர்க்கமுதலியபலசாதனமான அக்கினிகோத்திரத்தை உபதேசித்தது. இதனுல் ஜகஞ்சத்தியமாகாதென்க. ()

செலவொடுதிரும்பல்மேவுசெனனமரணங்கள்ஞான
மலம்விமலமென்பயாவுமருவறிஞன்முன்புசேர்வ
திலைவிரவுகின்றயாவுமியைபரசிவன்சொரூப
நிலையதெனநன்றதாகநிகழ்வுறவிளங்கலாகும்.

இ-ள். செலவொடுதிரும்பல்-கமாகமங்கள், மேவுசெனனமரணங்கள்-அடைகின்றஜனனமர்ணங்கள், ஞானம் - அறிவு, மலம்விமலம் - மலம்நின்மலம், என்பயாவும் - என்பவையனைத்தும், மருவு - பொருந்துகின்ற, அறிஞன்முன்பு - சிவயோகிமுன்பு, சேர்வதிலை - (ஒருநாளும்) செல்லுவதில்லை, விரவுகின்றயாவும் - பரவுகின்றவனைத்தும், இயைபரசிவன்சொருபநிலையதென-(கருணை) பொருந்தியபரமசிவனதுசொருபநிலையாகவே, நன்றதாக - (அவனுக்கு) நன்மையாக, நிகழ்வுறவிளங்கலாகும் -பிரகாசமாகவிளங்கும். எ-று.

கருத்து. ஜனனமரணகமாகமங்கள்முதலியவனைத்தும் வியாவகாரிகஜகத்தோற்றத்தின்பெலத்தாற் பிரகாசிக்கின்றதேயன்றி பரமார்த்தமாகவில்லையென்க.

(கக)

அ-கை. சருவப்பிரகாரத்தாலும் அத்துவிதமே உண்மையெனக்கூறுகின்றார்.

வேறு.

தேசிகனளித்தவழியினாலையந்தீர்ந்துசிற்சடத்திகழ்வெல்லா
மீசனாய்ப்பார்ப்பானிப்படிப்பார்க்குமிதனையுமிறையெனப்பார்ப்பா
னேசமோடிங்ஙன்பார்ப்பவன்பார்வைதன்னையுநீக்கியேயிந்தத்
தேசிகன்றிகழுஞ்சின்மயமாகச்சின்மயமென்கையுமிலையே.

இ-ள். தேசிகன் - ஆசாரியரானவர், அளித்தவழியினால்- அனுக்கிரகித்தமார்க்கத்தினால், ஐயந்தீர்ந்து-சந்தேகந்தீர்ந்து, சிற்சடத்திகழ்வெல்லாம்- சிற்சடவிளக்கமனைத்தும், ஈசனாய்ப்பார்ப்பான் - பரமசிவனாகவேபார்க்கக்கடவன், இப்படிப்பார்க்குமிதனையும் - இவ்வண்ணம்பார்க்கப்பட்டபார்வையையும், இறையெனப்பார்ப்பான்-சிவமாகவேபார்க்கத்தக்கது, நேசமோடு-அன்பினோடு, இங்ஙன்பார்ப்பவன் - இவ்வாறுசிவனாகப்பார்க்கின்றவனாகிய, இந்தத்தேசிகன் - இந்தச்சற்குருவானவன், பார்வைதன்னையும் - அந்தப்பார்வையையும், நீக்கி - விடுத்து, சின்மயமாகத்திகழும் - சின்மயமாகவிளங்குவான், சின்மயமென்கையுமிலையே - சின்மயமாகச்சேஷிப்பானென்கையும் அவனுக்கு இல்லை. எ-று.

கருத்து. இதனால் எவ்விடத்திற்றுவிதம்போற்பவிக்கின்றதோவெனஆரம்பித்து எவ்விடத்திலிவனுக்கனைத்துந்தானாகவேயாகும் எதனாலெதைப்பார்ப்பானென்று பரமார்த்தமானஅத்துவிதநிருபணஞ்செய்கின்ற சுருதிவாக்கியங்களுக்குரைசெய்யப்பட்டது. அத்துவிதியப்பிரமான்மஞானபெலத்தாலதற்குவேறாகத் தோற்றுநின்றவனைத்தும் பிரமமாத்திரமாகப்பார்த்து அதிற்கதகரேணுப்போல அந்தஞானமும்லயிப்பதனால்அதனையும் அவ்வான்மசொருபமாகவேபார்த்திடப் பிரமான்மஐக்கியவிடயமானஅந்தக்கரணவிருத்தி தனதுகாரணத்தோடும்லயிக்குமளவில் அவச்சேதகமில்லாததனால்வித்துவான்தன்சொருபமாகியசின்மாத்திரமாகச் சேடித்துக்கேவலஞ் சித்ருபனாகவே பிரகாசிக்

கின்றனெனவும், உண்மையாய்ப்பிரதியோகியாகவோர் பொருளில்லாததனு
ற்சேடித்ததாகக் கூறக்கூடாதெனவுங்கொள்க. (உ0)

இதுமவுது.

ஒழிவிலாப்பரமயோகியானுபவமுள்ளவாறுரைத்திடயானேர்
வழிபெறேனெடுமான்மகேசன்மாமுனிவர் வானவருரைத்திடமாட்
டார், விழிமிகுஞ்சிவனல்விஞ்சையாஞ்சிவையால் விளம்பவும்படா
ததுவிளம்பு, மொழியெலாம்வந்துமோனபாவத்தே முடியுமன்னில
மதேமுடிவு.

இ-ள். ஒழிவிலா - அழிவில்லாத, பரமயோகியானுபவம் - மகாத்மா
வினதுஅனுபவத்தை, உள்ளவாறுரைத்திட - உள்ளவண்ணஞ்சொல்வதற்கு,
யானேர்வழிபெறேன்-நான்ஒருவழியும்அடையாதவனுயிருக்கின்றேன், நெடு
மால் - விஷ்ணுவும், மகேசன் - உருத்திரமூர்த்தியும், மாமுனிவர் - பெரியமு
னிவர்களும், வானவர் - தேவர்களும், உரைத்திடமாட்டார் - (அவனனுபவத்
தைச்) சொல்லமுடியாதவராவார்கள், விழிமிகுஞ்சிவனல் - நெற்றியினுமொ
ருகண்ணையுடையபரமசிவனுலும், விஞ்சையாஞ்சிவையால் - வித்தியாசொரு
பியாகியபராசத்தியாலும், விளம்பவும்படாதது - சொல்லவுங்கூடாது. அது
விளம்புமொழியெலாம் - அதைச்சொல்லப்பட்ட வார்த்தையெல்லாம், மோ
னபாவத்தே - மௌனபாவத்திற்றனே, வந்துமுடியும்- வந்துமுடிந்துவிடும்,
அந்நிலமதேமுடிவு - அந்தநிலமேமுடிவாகும். எ-று. (உக)

வேறு.

இப்படிக்கருணையாலியம்பினேனெலா
மப்பழமறையெலாமறியவோதுவ
தொப்புறநானுமக்குரைத்தவீதெலாஞ்
செப்பருமறையதின்சேடமாகுமே.

இ-ள். அப்பழமறையெலாம்- அந்தஅனுதியாகியவேதங்களெல்லாம்,
அறியவோதுவது - அறியும்படிசொல்லுகின்றது, எலாம் - அனைத்தையும், இ
ப்படி - இவ்வாறு, கருணையால் - பரமசிவத்தின்கருணுபெலத்தினுல், இயம்பி
னேன் - சொன்னேன், ஒப்புற - ஒப்பும்படி, நான் - யான், உமக்கு - உங்க
ளுக்கு, உரைத்தவீதெலாம் - சொல்லியஇவ்வனைத்தும், செப்பரும் - சொல்
வதற்கரிய, மறையதின்-வேதத்தினது, சேடமாகும்-சேஷமேதான். எ-று.

வேறு.

உரையாடுவதித்தகைமைத்தெனவோர்குறியுண்டாம்
பொருள்பாலன்றேபூரணமாயோர்வேறில்லாச்
சொருபானந்தன்றிருமேனியெனச்சொலவன்றே
விரையார்கமலத்தவன்மெய்பாராவியப்புற்றுன்.

இ - ள். இத்தகைமைத்தென - இத்தன்மையுடையதென்று, உரையாடுவது - சொல்வதற்கு, ஓர்குறியுண்டாம் - ஒருகுறிப்பானபொருளுண்டு, பொருள்பாலனறு - அப்பொருளும்வேறிடத்திருப்பதல்ல, பூரணமாய் - பூரணமாயும், ஓர்வேறில்லா - ஓர்பின்னமுமில்லாததாயும்விளங்குகின்ற, சொரூபானந்தன்றிருமேனியெனச்சொல - சொரூபானந்தனதுதிருமேனியென்று சொல்வதற்கு, அன்றே - அக்காலத்திற்றானே, விரையார்கமலத்தவன் - வாசனைபொருந்தியகமலாசனத்தில்வீற்றிருக்கின்றபிரமதேவர், மெய்பாரா-மெய்யைநோக்கி, வியப்புற்றான் - அதிசயமடைந்தார். எ - று. (உ௩)

பிரகதாரணியவுபநிடதமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௬௩௩.

சிவமயம்.

---

உ

சிவாயபரமகுரவேநம:

# ௧௦ - வது உஷஸ்தப்பிராமணமுரைத்த வத்தியாயம்.

---

அத்தியாயவவதாரிகை.

இங்ஙனம்அத்துவிதியஆன்மவிஞ்ஞானமே மோக்ஷசாதனமெனக்கூறப்பட்டது. அவ்வான்மசொரூபமெத்தன்மைத்தென்றுசங்கித்து அதனைவிசேடமாகப்பிரதிபாதிக்கவேண்டி உஷஸ்தப்பிராமணத்தைக்கூறுகின்றார்.

நாதனுஞ்சொருபானந்தனுண்மலர்ப்பாதம்
போதமேயெனும்பரிசுபுத்தேளவர்க்கெல்லாம்
நேதிநேதிசெய்திப்பரிசெனநிகழ்த்திடுவான்
வேதநாலுநான்முகத்தினல்விளக்கியவிதாதா.

இ - ள். நாதனும் - யாவர்க்குநாயகராகிய, சொருபானந்தன் -சொருபானந்தரது, நாண்மலர்ப்பாதம் -புதுமலர்போன்றதிருவடியே, போதமேயெனும்பரிசு-ஞானசொரூமாயிருக்கின்றதென்னுந்தன்மையை, நேதிநேதிசெய்து-(பூதமுதல்மாயைகாறும்)இதல்லஇதல்லவென்றுநிஷேதித்து, இப்பரிசென - இவ்விதமென்று, வேதநாலும் - நான்குவேதங்களையும், நான்முகத்தினல்விளக்கிய - நான்குமுகங்களாலும்விளக்கும், விதாதா- பிரமதேவரானவர், புத்தேளவர்க்கெல்லாம் - தேவர்களனைவருக்கும், நிகழ்த்திடுவான் - சொல்லுகின்றார். எ - று. (௧)

அ - கை. எதுசாக்ஷாதபரோக்ஷமாயுள்ளபிரமம் எவன் அனைத்திற்குஞ்சருவாந்தரனனவான்மா அவனைச்சொல்லவேண்டுமென்றஉஷஸ்தியினது கேள்விக்கு இவன்ஆன்மாவென்றுஅபினயத்தாற்றனதநுபோகத்தாலடைய

த்தக்கவான்மவிடயமானவுத்தரம் யாக்கியவற்கியராற்கூறப்பட்டது. இங்ஙனங்கேள்வியுத்தரங்களாற்சித்தமாயுள்ளபொருளைக்கூறுகின்றார்.

வேறு.

எப்பொருளுக்குஞ்சான்றயார்க்குமுள்ளாகியென்று
மெய்ப்படுதன்றேசாலேவிமலமாய்விளங்காநின்ற
தெப்பொருளெல்லாமாகியெங்கணுநிறைந்துநின்ற
வப்பரம்பிரமமேநேரேயழகுறவறியலாகும்.

இ - ள். எப்பொருளுக்குஞ்சான்றாய் - எந்தப்பொருள்களுக்குஞ்சாக்ஷியாயும், யார்க்குமுள்ளாகி - அனைவர்களுக்கும்ஆந்தரப்பொருளாகியும், என்றும் - எக்காலத்தும், மெய்ப்படுதன்தேசாலே - மெய்ம்மையாகியதனதுபிரகாசத்தினாலேயே, விமலமாய்விளங்காநின்ற - நின்மலமாய்விளங்குவதாயுமுள்ளது, எப்பொருள் - எந்தவஸ்துவோ, எல்லாமாகி - அனைத்துமாகி, எங்கணும்நிறைந்துநின்ற-எங்கும்பூரணமாய்நின்ற, அப்பரம்பிரமம் - அந்தப்பரப்பிரமமே, நேரே - அபரோக்ஷமாக, அழகுறவறியலாகும் - அழகாகஅறியத்தகும். எ - று.

ப - ம். அந்தக்கரணவிருத்திசம்பந்தத்தாற்சோபாதிகவான்மாகாண்பவனுவான் இவன்நிருபாதிகனுதலால் நேரே ஈக்ஷணசொரூபனென்பார்,“ எப்பொருளுக்குஞ்சான்றாய்” எனவும், சோபாதிகனுக்காயின்மற்றொன்றை அபேக்ஷித்து ஆந்தரத்தன்மை, இவன்நிருபாதிகனுகலிற்காரியகாரணசமூகமனைத்துக்கும் ஆந்தரப்பொருளென்பார், “யார்க்குமுள்ளாகி” எனவுங்கூறினார்.

கருத்து. சொயம்பிரகாசனெவனோ அவனேசகலப்பிராணிகளுக்கும்பிரத்தியக்கானவான்மா, அந்தவான்மதத்துவமேசுருதியிற்பிரசித்தமாயபரோக்ஷமானசொயம்பிரகாசஅபரிச்சின்னப்பிரமமாகும் இவர்களுக்குப்பேதமில்லையென்க.

(உ)

அ-கை. இவன்ஆன்மாவென்றுஅபினயத்துடன்னிருபாதிகவான்மசொரூபமுபதேசிக்கப்பட்டது. அதனையறியாதஉஷஸ்திக்குப்போதிக்கும்பொருட்டு எவன்பிராணனாலேசேட்டிப்பிக்கின்றானென்றது முதலானவாக்கியங்களினாலியாதொருதடஸ்தலக்ஷணம் ஆன்மாவுக்குக்கூறப்பட்டிருக்கின்றதோ அதனைக்கூறுகின்றார்.

வேறு.

இந்தப்பிராணபானதியாராலுண்டாயியங்குவதிங்
கெந்தப்புருடன்முன்பாகவெல்லாமிலங்கியவிர்வாகுந்
தொந்தப்படவெத்தொழிலுஞ்செய்தேவன்றொழிலற்றிருக்கின்றா
னந்தப்பரனேயாவர்க்குமுள்ளாமான்மாவாகின்றான்.

இ - ள். இந்தப்பிராணபானதி-இந்தப்பிராணன்அபானன்முதலியவைகள், யாராலுண்டாயியங்குவது - எவனாலுண்டாகிச்சலிக்கின்றன, இங்கு -

இவ்விடத்தில், எந்தப்புருடன்முன்பாக-எந்தப்புருஷனதுசன்னிதானத்தில், எல்லாமிலங்கியவிர்வாகும்-அனைத்தும்பிரகாசமாகவிளங்கும், தொந்தப்பட- சுகதுக்காதிகளுக்குப்பாத்தியப்படும்படி, எத்தொழிலுஞ்செய்து - எல்லாத்தொழில்களையுஞ்செய்தும், ஏவன்தொழிலற்றிருக்கின்றான் - எவன்ஒருதொழிலுமில்லாமலிருக்கின்றானே, அந்தப்பரனே - அந்தப்பரமனே, யாவர்க்குமுள்ளாம் - எல்லார்களுக்குமாந்தரமான, ஆன்மாவாகின்றான் - ஆன்மவஸ்துவாகின்றான். எ - று.

கருத்து. பேதமாகத்தோற்றா நின்றபிராணாபானன்முதலிய காரியகாரணசங்காதத்துக்குத் தாருவெந்திரம்போற் சுபாவமாகவேயெந்தவதிஷ்டானவசத்தாற்சத்தாஸ்புரணமுண்டாகின்றதோ, பிராணாபானன் முதலியவனைத்தும் எதன்சன்னிதானமாத்திரத்தாற் றொழிலுடையனவாய்ப்பவிக்கின்றன காந்தத்தின்முன் அயம்போல் அனைத்தும்சேட்டிக்கினும்எவன்நிருபாதிகனாய்ச் சின்மாத்திரனாய்த்தான்சலனமில்லாதவனாய் அவைகளாற்செய்யப்படும் புண்ணியபாவங்களாற்சம்பந்தப் படுகின்றானில்லை அவனேமுற்கூறிய சருவாந்தரத்தன்மைமுதலான லக்ஷணமுடையவான்மாவென்க. (௬)

அ - கை. தூலமுதலிய சரீரங்களுக்கு அனான்மத்தன்மையைக்கூறுகின்றார்.

உடம்போதானன்றுடம்பீதென்றுணரப்படுதலாலுடம்பிற்
றிடஞ்சேர்பிராணாதியுமன்றுசெடமாய்க்காணுஞ்செய்தியினாற்
கடம்போலியாவனிவையனைத்துங்காண்பானவனேகத்தாவாய்
நடஞ்சேருடம்பினுண்ணின்றுநடத்துகின்றநானுவான்.

இ - ள். உடம்பீதென்றுணரப்படுதலால் - இதுசரீரமென்றுசுட்டியறியப்படுதலால், உடம்போ - இந்தச்சரீரமோ, தானன்று-நானல்ல, உடம்பில்- சரீரத்தில், திடஞ்சேர் - திடம்பொருந்திய, பிராணாதியும் - பிராணாதிகளும், செடமாய்க்காணுஞ்செய்தியினால் - செடங்களாகக்காணப்படுஞ் செய்கையினால், அன்று - நானல்ல, இயாவன் - எவன், கடம்போல்- கடத்தைப்போல, இவையனைத்தும் - சரீராதிகளனைத்தையும், காண்பான் - பார்க்கின்றானோ, அவனே - அவனே, கத்தாவாய் - அதிபனாகி, நடஞ்சேர்உடம்பினுள்நின்று- சலனம்பொருந்தியசரீரத்துள்ளேநின்று, நடத்துகின்றநானுவான் - ஏவுகின்றநானுவான். எ - று.

கருத்து. நான்பிரமமாகின்றேனென்றதுமுதலியவற்றிற் பிரத்தியக்குப்பொருளைக்கூறுகின்றநானென்னுஞ்சத்தத்திற்குச்சருவாந்தரனாயும் பிரத்தியக்காயுங்கூறப்பட்ட ஆன்மாவேமுக்கியப்பொருளன்றி ஆறுகோசமுடையதூலசரீரமாகாது அது கடம்போல் அசேதனமாய்த்திரிசியமாகலின், தூலசரீரத்தையெவன்காண்கின்றான் அவனே சருவாந்தரனான ஆன்மாவெனவும், பிராணாபானன் முதலியஐந்துவாயுக்களும் இருவகையிந்திரியங்களும் புத்தி

மனங்களும்ஆகியபதினேழுதத்துவங்களோடுகூடியலிங்கசரீரமும் பூதகாரிய மாய்த்திரிசியமாகலின் அனான்மாவேதான். அதற்கும் எவன்திருஷ்டாவோ அவனேசருவாந்தரனான ஆன்மாவெனவும், தடஸ்தமாகநிருபாதிகப்பிரமங் கூறப்பட்டதென்க. (௬)

அ-கை. திருஷ்டிக்குத்திருஷ்டாவென்றது முதலியவற்றிற் சுருதி யிற் சொப்பிரகாசசித்ரூபமான சொருபங்கொம்புப்பிடியாய்க் கூறப்பட் டது. அதனைக்கூறுகின்றார்.

வேறு.

வினவுற்றகேள்விக்குக்கேட்பானாகி மேவியகாக்ஷியில்விழித்து க்காண்பானாகி, மனனத்தின்மந்தாவாய்ஞானந்தன்னின் மதித்திடு ஞாதாவாகிமன்னுகின்றான், சொனவத்தற்பரனாகுமவனில்வேறாந் தோற்றமெலாமெய்யாகுந்தோற்றமன்று, நினையிற்றற்பரனேயிங்கெ ல்லாமென்று நினைவதுவேநினைவானநினைவுநேரே.

இ-ள். வினவுற்றகேள்விக்கு - கேட்கின்றசெவிக்கு கேட்பானாகி - கேட்பவனாகியும், மேவியகாக்ஷியில் - பொருந்தியகண்ணுக்கு, விழித்துக்கா ண்பானாகி - விழித்துப்பார்ப்பவனாயும், மனனத்தில்- மனனத்தொழிலையுடை யமனத்திற்கு, மந்தாவாய்-மனனிக்கின்றவனாயும், ஞானந்தன்னில்- விஞ்ஞா னத்திற்கு, மதித்திடுஞாதாவாகி - மதிக்கின்றவிஞ்ஞாதாவாயும், மன்னுகின் றான் - நிலைபெற்றிருப்பவனே, சொனஅத்தற்பரனாகும்-முன்சொல்லியஅந்த த்தற்பரனாவான், அவனில் - அவனுக்கு, வேறாந்தோற்றமெலாம் - பின்னமாக த்தோற்றுகின்றவனைத்தும், மெய்யாகுந் தோற்றமன்று - உண்மையானதோ ற்றமல்ல, நேரே - நேராக, நினையில் - ஆலோசிக்கில், தற்பரனே - அந்தப் பரனே, இங்கெல்லாமென்று - இங்குஅனைத்துமென்று, நினைவதுவே - நினை ப்பதுவே, நினைவானநினைவு - நினைக்கத்தக்க நினைவாகும். எ-று.

கருத்து. உருவமுதலியவிஷயங்களோடுகூடியகண்முதலியவற்றால் ரூப முதலியஇச்சையினாலுண்டானசிற்சாயையினால்வியாபிக்கப்பட்டபுத்திவிருத்தி யே கண்காதுமுதலியனவாதலால் அவைகளானுன்மசொருபமானஉருவமுதலி யவிஷயங்களையேபிரகாசிக்கச்செய்கின்றனவன்றித் தனதுசைதன்னியவிளக்க த்தால்வியாபிக்கப்பட்டஉருவமுதலியவையில்லாத பிரத்தியகான்மாவைப்பிர காசிப்பிக்கமாட்டாவாம். உலகசம்பந்தமுடையகண்முதலியவைகளுக்குத்திரு ஷ்டாவாய்த் தனக்கியல்பானசைதன்னியசொருபதிருஷ்டியால்வியாபிக்கப்ப ட்டஅவ்வான்மா கர்மபூதமானலௌகிகதிருஷ்டியினாலெங்ஙனம்வியாபிக்கப்ப டுவான், புத்திவிருத்திக்குப்பிரகாசகனானசொப்பிரகாசசிதான்மாவே முற்கூறி யசர்வாந்தரனானபரமான்மாவெனவும்இங்ஙனஞ்சருவாந்தரனானவான்மாவை த்தடஸ்தசொருபலக்ஷணங்களாலுபதேசித்ததுபற்றிஅந்தவான்மாவுக்கன்னிய மானகாரியகாரணங்களாகியபூதபௌதிகஜகம் அதிஷ்டானத்தினுண்மைஞா னத்தாற் சுத்திரஜதம்போற் பாதிக்கப்பட்டதனால் அஃதுவிவகாரதிசையிற்சத்

நியமன்றிப்பரமார்த்தநிருபணத்திற்சத்தியமாகாது. சருவாந்தரஞனபிரத்திய கான்மாவினிடத்திலத்தியாசத்தாற்றேன்றி யங்ஙனமேயோடுங்கிஅதிஷ்டா னமாத்திரமாகவேசேடிக்கின்றதெனவுங்கொள்க. (௫)

அ-கை. இவ்வாறுபிரத்தியகான்மாவுக்கு அத்தியாத்மமானசருவாந் தரத்தன்மையையுபதேசித்து அதிபூதமாகியசருவாந்தரத்தன்மையையுமுப தேசிக்கவேண்டிக் கார்க்கிப்பிராமாணத்தின்பொருளைக்கூறுகின்றார்.

வேறு.

பாரிலேயெல்லாப்பொருள்களுங்கோவைப்பட்டதெப்படியில ப்படியே, நீரிலேபாருநெருப்பிலேநீருநிலவுகாலதனிலேநெருப்பு, மூருகாலந்தரிக்கலோகத்துமுண்டையும்பாவுமேபோலச், சாருமா மொன்றேடொன்றுவேறறவேதன்னிலேயின்னியிச்சகத்தில்.

இ-ள். பாரிலே - பூமியின்கண், எல்லாப்பொருள்களும் - சகலவஸ் துக்களும், கோவைப்பட்டதெப்படியில் - கோவையாகியதெவ்வாறே, அப் படியே - அவ்வாறே, நீரிலே - ஜலத்தில், பாரும் - பூமியும், நெருப்பிலே - தீயில், நீரும் - ஜலமும், நிலவுகாலதனில் - விளக்குகின்றவாயுவில், நெருப் பும் - தீயும், ஊருகால் - சலிக்கின்றகாற்று, அந்தரிக்கலோகத்தும் - ஆகாய த்திலும், உண்டையும்பாவுமேபோல - நூலினதுஉண்டையும்பாவும்போல, ஒன்றேடொன்று - ஒன்றுக்கொன்று, வேறற-பின்னமில்லாமல், தன்னிலே யின்னி - தன்னிற்றனேபின்னி, இச்சகத்தில் - இவ்வுலகில், சாருமாம் - பொருந்தியிருக்கின்றனவாம். எ-று.

ப-ம். சருவாந்தரஞன வான்மாவுக்கு நிரதிசயமானசூக்குமத்தன் மையும் வியாபகத்தன்மையும் தெரிவிக்கும்பொருட்டுப் பிருதிவிமுதற்பிரம லோகம்வரைக்கும் மேன்மேற்குறுக்குநீட்டங்களாக கோவைப்பட்டுச் சூக் குமத்தன்மைவியாபகத்தன்மை இரண்டுமொன்றற்கொன்றேற்றந்தாழ்வுள்ளா கச் சுருதிவாக்கியங்களாற்காணப்படுகின்றது. அவற்றுள் எப்படிநூல்களிடத் திற் குறுக்கநீட்டங்களான சூத்திரங்களாற் படமானதுகோவைப்பட்டிருக் கின்றதோ அப்படி மண்ணின்காரியமான ஜகமனைத்துங் காரணமாயுஞ் சூக் குமமாயும் வியாபகமாயுமுள்ள பிருதிவியிற் கோவைப்பட்டிருக்கின்றதென் பார், "பாரிலேயெல்லாப் பொருள்களுங்கோவைப்பட்டது" என்றார். (சு)

அந்தரிக்கங்கள்கந்தருவத்தேயாதித்தவுலகங்களிடையே
கந்தருவங்கள்சந்திரவுலகிற்கதிரவனுலகுகளெல்லாஞ்
சந்திரவுலகந்தாரகையுலகிற்றாரகைவானவருலகி
லிந்திரவுலகில்வானவருலகமியாவையுங்கோவையாயிருக்கும்.

இ-ள். அந்தரிக்கங்கள் - ஆகாயலோகங்கள், கந்தருவத்தே - கந்தர் வலோகத்திலும், கந்தருவங்கள் - கந்தர்வலோகங்கள், ஆதித்தவுலகங்களி

டையே - சூரியலோகங்களிலும், கதிரவனுலருகளெல்லாம்-ஆதித்தனுலகமெல்லாம், சந்திரவுலகில் - சந்திரலோகத்திலும், சந்திரவுலகம்- சந்திரலோகம், தாரகையுலகில்-நக்ஷத்திரலோகத்திலும், தாரகை - நக்ஷத்திரலோகம், வானவருலகில்-தேவலோகத்திலும், வானவருலகம்-தேவலோகம், இந்திரவுலகில்-இந்திரலோகத்திலுமாக, யாவையும்-அனைத்தும், கோவையாயிருக்கும்-கோக்கப்பட்டிருக்கின்றன. எ - று.

ப - ம். சூக்குமதாரதம்மியத்தாலதிசயமுடையபோகங்களுக்கு ஆச்ரயரூபமாகப்பொருந்தியிருக்கும் பஞ்சபூதங்களே அவஸ்தாவிசேஷங்களாலவ்வவ்வுலகமாக விவகரிக்கப்படுதலால் ஒவ்வோருலகத்தையும் பன்மையாகக்கூறினர். (எ)

இதுவுமது. வேறு.

அரசாகியவமராதிபனுலகானவையடையப்
பிரசாபதியுலகங்களினிடையேபிரமனதா
முரைசாருலகினில்மற்றவையிதுமாலவனுலகிற்
றிருமாலுலகஞ்சேர்வுறுமிடமுஞ்செப்புதுமே.

இ - ள். அரசாகிய - அரசனாகிய, அமராதிபன் - இந்திரனது, உலகானவையடைய - உலகங்களெல்லாம், பிரசாபதிஉலகங்களினிடையே-பிரஜாபதிலோகங்களிலும், மற்றவை - அந்தப்பிரஜாபதிலோகங்கள், உரைசார் - சொல்லுகின்ற, பிரமனதாம் - பிரமாவினது, உலகினில் - உலகங்களிலும், இது - இந்தப்பிரமலோகம், உயர்மாலவனுலகில் - உயர்ந்தவிஷ்ணுலோகத்திலுங் (கோவைப்பட்டிருக்கும்), திருமாலுலகம் - விஷ்ணுவினதுஉலகம், சேர்வுறுமிடமும் - பொருந்துமிடத்தையும், செப்புதும் - சொல்வாம். எ-று.

ப-ம். தூலப்பிரபஞ்சஅபிமானியானவிராட்டேபிரசாபதியாதலால் அவனதுசரீரத்தையுற்பத்திசெய்கின்றனவாயும் வைராஜனதுபதத்திலுபபோகஸ்தானங்களாயுமுள்ளபஞ்சபூதங்களை, "பிரசாபதியுலகங்கள்" எனவும், இரணியகருப்பரூபத்தையடைந்தபிரமதேவனாற் பஞ்சீகரணம்பண்ணப்படாதனவாயும் பிரமாண்டத்தையாரம்பிக்கின்றனவாயுமுள்ள ஆகாசமுதலியசூக்குமபஞ்சபூதங்களை, "பிரமனதாமுரைசாருலகு" எனவுங்கூறினர். (அ)

இதுவுமது. வேறு.

உருத்திரனுலகின்மாலுலகுருத்திர
னிருக்குமவ்வுலகெலாமீசலோகமே
திருத்தகுமீசலோகங்கடிண்ணமாய்க்
கருத்தறுஞ்சதாசிவவுலகின்கண்ணதே.

இ - ள். மாலுலகு - விஷ்ணுலோகமானது, உருத்திரவுலகில் - உருத்திரலோகத்திலும், உருத்திரனிருக்குமவ்வுலகெலாம்-உருத்திரன்வாசம்பண்

னுகின்றஅந்தவுலகமெல்லாம், ஈசலோகமே-ஈச்வரலோகத்திலும், திருத்தகு மீசலோகங்கள்-செல்வம்பொருந்தியஈச்வரலோகங்கள், திண்ணமாய் - வலிமையாக, கருத்தறும் - கருத்தினுலெட்டக்கூடாத, சதாசிவவுலகின்கண்ணே - சதாசிவலோகத்திலும் (கோவைப்பட்டிருக்கின்றன). எ - று. (க)

இதுவுமது.

தற்பரந்தன்னிலேசதாசிவன்றன
அற்பவவுலகெலாமுறுதியாமதிற்
கற்பிதமாய்நிகழ்ந்திடுமெய்காணுறி
லற்புதமாம்பரனல்லதில்லையே.

இ-ள். சதாசிவன்றனது-சதாசிவனுடைய, உற்பவவுலகெலாம்- உற்பத்திக்கப்பட்டவுலகமனைத்தும், தற்பரந்தன்னிலே- தற்பரமாகியபிரத்தியகான்மாவில், உறுதியாம்-உறுதியாகக்கோக்கப்பட்டிருக்கின்றது, அதில் கற்பிதமாய்நிகழ்ந்திடும்-அந்தப்பரத்தில் (ஜகமனைத்தும்) கற்பிதமாகவிளங்கும், மெய்காணுறில் - உண்மையாய்ப்பார்க்குமிடத்தில், அற்புதமாம்பரனல்லதில்லை-அற்புதனுகியபரனைத்தவிர இல்லை. எ-று.

கருத்து. காரியலோகங்கள் காரணலோகங்களில் அத்தியாசிக்கப்பட்டனவாய்ப் பொய்யாய்த்தங்களதுதோற்றத்துக்கு அதிஷ்டானசத்தானசருவாந்தரிருக்குருபப்பிரத்தியகான்மாவினிடத்தில் மாயையாற்கோவையிடப்பட்டதாகவிருக்கின்றன. சருவாதிஷ்டானனுனபிரத்தியகான்மா தனக்கு வேருனவோர்பொருளிலிருக்கின்ருனில்லை தன்னிற்ருனேயிருக்கின்ருன். பராதினப்பிரகாசங்களாகிய சத்துவிலக்ஷணப்பொருள்களுக்குச் சத்தையின்ஸ்புரணத்தின்பொருட்டு அந்தவான்மாவினிடத்திற்கோவையாகும். இவனேவெனில் சுயம்பிரகாசனுகலின் மற்ருேராதாரத்திற்கோவைப்படானென்க.(கo)

அ - கை. இவ்வாறுபிருதிவிமுதற் பிரமலோகம்வரை அனைத்துஞ் சருவாந்தரனுகியபிரத்தியகான்மாவினிடத்திலத்தியாசத்தாற் ருேற்றப்படுதலின் உண்மையாய் அதிஷ்டானத்துக்கு வேறில்லையென்று நிரூபித்து சகலஜகத்கற்பனைக்கும் ஆதரவாதலாற் சருவாந்தரனுனவான்மாவை அந்தரியாமியாகக்கூறவேண்டி அதிதெய்வம் அதிபூதம் அத்தியாத்மமென்று கூறப்பட்டஜகத்துக்குஉபாதானனுய் அனைத்துக்குமுள்ளாய் உபாதியனைத்துநீங்கினவனுய்விளங்கும்பிரத்தியகான்மா அந்தவர்தூியமனவியாபாரசம்பந்தத்தால் அந்தரியாமியாவனென்றுபதேசித்த அந்தரியாமிப்பிராமணத்தின்பொருளைக் கூறுகின்ருர்.

வேறு.

உடையதொன்றுடையானெனும்வேறவயின்றிலோகத்
திடையிருந்துமிருந்திலனுயெவையும்முடம்பாய்த்

திடமிதென்றறியாவகைநின்றொருசெய்கையின்றி
யடையவுஞ்செயுமாரவனந்தரியாமியாவன்.

இ - ள். ஒன்றுஉடையது - ஒருபொருள்தன்னுடையதெனவும், உடையானெனும்-ஒருபொருளையுடையவனெனவுஞ்(சொல்கின்ற), வேறவையின்றி-பின்னமாகியஅவ்வுரைகளில்லாமல், லோகத்திடையிருந்தும்-உலகத்தின்கண் இருந்தும், இருந்திலனுய்-இல்லாதவனுயும், எவையும் - சகலத்தையும், உடம்பாய்-உடம்பாகவுடையவனுயும், திடம்-திடமாக, இதென்றறியாவகைநின்று-இதவென்றுசுட்டியறியத்தகாதவனுயுமிருந்து, ஒருசெய்கையின்றி-ஒருதொழிலுமில்லாமல், ஆர் - எவன், அடையவுஞ்செயும் - எல்லாவற்றையுஞ்செய்பவன், அவன் - அவனே, அந்தரியாமியாவன் - அந்தரியாமியென்பவனுவான். எ - று.

ப - ம். பிருதிவிமுதலியவற்றிற்குவெளியிலிருந்து அவற்றைநியமனஞ்செய்யக்கூடாமையின் இவ்வான்மாவுபாதானகாரணமாய் அவற்றின்ஆந்தரப்பிரதேசத்திலிருக்கின்றனென்பார், "லோகத்திடையிருந்தும்" எனவும், ஆன்மாவிற்குவேருகச் சரீரமென்றென்றில்லையாயினும்பிருதிவிமுதலியவையுடல்போல்மறைத்தலின், "எவையும்முடம்பாய்"எனவும்,இவ்வான்மா எல்லாவற்றிற்குமாந்தரப்பொருளாயினும் அவற்றால் எமக்குவேருகவொருநியந்தாவுள்ளானென்றறியப்படாதுநிற்றலின், "இதென்றறியாவகைநின்று" எனவும்,அந்தரியாமிலக்ஷணவியாபாரசம்பந்தத்தால் ஆன்மாவிற்கு விக்கிரியைத்தன்மைவருமென்னில்,உபாதிவசத்தால் நியந்தாவாயினும் பாரமார்த்திகமாகஒருதொழிலுமில்லாதவனென்பார், "ஒருசெய்கையின்றியடையவுஞ்செயும்" எனவும், சோபாதிகனுதலால் நம்மைப்போலிவ்வான்மாவுமொருசீவனென்னில், அங்ஙனமன்று உள்ளிருந்துநியமனஞ்செய்யுமுபாதியைத் தன்னதென்றபிமானஞ்செய்யாமையின், விகாரசமூகங்களுக்குவேருய் ஸம்ஸாரதுக்கமுதலியவையில்லாதவனுய் இவனேதத்தந்தொழில்களிற்செல்லும்படிஎல்லாவற்றையும் ஏவுகின்றுனுகலின், "அந்தரியாமி" எனவுங்கூறினர். (கக)

அ - கை. அந்தரியாமியானவிவனை நம்மைப்போற் பிருதிவிமுதலியதேவதைகளுமெதனுலறியவில்லையென்றசங்கைக்குச்சமாதானமும் ஜாக்கிரசொப்பனமுதலியவவஸ்தைகளிற் சுகதுக்கங்களைப்புசிக்குஞ்சீவர்கள் அந்தரியாமிக்குவேருனவர்களென்றுசங்கித்த வேறல்லரென்று தெரிவிக்கவேண்டி, ஆருவதத்தியாயத்திலுள்ள சோதிப்பிராமணத்திலிவ்வான்மாவிற்கு மூன்றவஸ்தைகளிலுள்ளபதார்த்தங்களோடும் விவகாரத்தாலுஞ் சம்பந்தமில்லாமையும் அதனுற்செய்யப்படும் புண்ணியபாவங்கண்முதலியசகலதருமங்களுடன் சேராமையும் சொப்பிரகாசத்தன்மையும் நிரதிசயானந்தஸ்வபாவத்தன்மையும்அத்துவிதியத்தன்மையும் உபதேசிக்கப்பட்டது. அவற்றுட்சொப்பிரகாசத்தன்மையைச் சூரியனும்சந்திரனும் அஸ்தமித்திடில் அக்கினியும்வாக்கும்சாந்தத்

தையடையில் ஏதஜோதியாம் இந்தப்புருஷனேயென்றுசுருதிகூறிற்று,அதன் பொருளையுங்கூறுகின்றார்.

காண்டல்கேட்டல்கருதல்செயப்படுவானலன்றான்
காண்டல்கேட்டல்கருதல்செயப்படுவானொருத்தன்
தூண்டாச்சோதியினாலனல்சோமனருக்கனெல்லா
மாண்டபோதும்விளங்குமனக்கரியாகிநின்று.

இ-ள். கரண்டல்-காணப்பட்டவனும், கேட்டல்-கேட்கப்பட்டவனும், கருதல்செயப்படுவானலன்-கருதப்பட்டவனுமல்லன், தான்காண்டல்-தான் திருஷ்டாவாயும், கேட்டல்-சுரோதாவாயும்,கருதல்செயப்படுவானொருத்தன் மந்தாவாயுமிருக்கின்றஒருவன், அனல் - அக்கினி, சோமன் - சந்திரன், அருக்கன் - சூரியன், எல்லாம்-அனைத்தும், மாண்டபோதும் - அழிந்தகாலத்தும், தூண்டாச்சோதியினால்-தன்னுடையதூண்டாவிளக்கத்தினால், மனக்கரியாகிநின்று - மனோஸாட்சியாய்நின்று, விளங்கும் - விளங்குகின்றான். எ - று.

ப - ம். ரூபமுதலியகுணங்களில்லாதவனா யிந்திரியங்களுக்கவிஷயனாகலின், "காண்டல்கேட்டல்கருதல்செயப்படுவானலன்" எனவும், எல்லாவிந்திரியங்களிலுமிருத்தலிற்றிருக்குரூபனாய்க் காண்பானும் கேட்பவனும்விஞ்ஞாதாவும் இவனேயாகலின், "தான்காண்டல்கேட்டல்கருதல்செயப்படுவான்" எனவுங்கூறினார்.

இதனாற்கண்ணுக்குக்காண்பான் கேள்விக்குக்கேட்போனென்றசுருதியின்பொருள் கூறப்பட்டதுமன்றி, இவ்வந்தரியாமியேகாண்பான் கேட்பவன் என்று பிரதிபாதித்ததனால், ஏவப்பட்டவர்களாகியகாண்பவன்முதலானவர்கள் வேறு நியந்தாவேறு என்னும்பேதப்பிராந்தியைநீக்கும்பொருட்டு இவர்களைக்காட்டிலும்அன்னியனல்லன்காண்பான் என்றசுருதியின்பொருளுமுபதேசிக்கப்பட்டதாம்.

(கஉ)

அ - கை. சூரியன்முதலியபாகியவொளிகளில்லாதகாலத்தும் ஆன்மசொரூபசைதன்னியப்பிரகாசம் அந்தக்கரணசாக்ஷியாய்த்தனதுபிரகாசத்தினாலேயே எப்போதும் விளங்குகின்றதேயன்றிப் பாகியமானவொளியை அபேக்ஷிக்கின்றதில்லையென முற்கவியாற்சாக்கிர அவஸ்தையைக்கூறிச் சொப்பனமுதலியஅவஸ்தைகளுக்குஞ்சாக்ஷியென்பதைக்கூறுகின்றார்.

வேறு.

சித்தமத்தமித்திடத்தபாவமுந்தெரிந்திடுஞ்
சுத்தநற்சுழுத்தியிற்றுயக்குமாயைகண்டிடு
மத்தமித்தலும்பிறத்தலும்மிலானபாவபா
வத்தையுமகண்டமுமறிந்தபோதரூபனே.

இ - ள். (அவ்வான்மாவானவன்), சித்தம்அத்தமித்திடத்து-மனோவியாபாரம்நசித்தவிடத்தில், அபாவமுந்தெரிந்திடும் - அதனபாவத்தன்மையையும் அறிவான், சுத்தநற்சுழுத்தியில்-சுத்தமாகியநல்லசுழுத்தியில், துயக்குமாயை-சோர்வுள்ளமாயைதனையும், கண்டிடும்-காண்பான், அத்தமித்தலும்-ஒடுங்குதலும், பிறத்தலும் இலான்-விகசித்தலுமில்லாதவன், அபாவபாவத்தையும்-பாவாபாவத்தையும், அகண்டமும்-எல்லாவற்றையும், அறிந்தபோதரூபனே-அறிந்தஞானரூபனாவான். எ - று.

ப-ம். சொப்பனாவஸ்தையிற்கண்முதலியவிந்திரியங்கள்ஒடுங்கலால் சித்தம்பாகியவிடயவிவகாரங்களின்றிக்கேவலஞ்சொப்பனபதார்த்தங்களினாகாரமாகப்பரிணாமத்தையடைகின்றகாலத்தும்மற்றொருபிரகாசத்தினுதவியின்றிச் சொரூபமானசிற்பிரகாசத்தினாலந்தவான்மாவே யதனையறிகின்றானென்பார், "சித்தமத்தமித்திடத்தபாவமுந்தெரிந்திடும்" எனவும், எப்போதுகாரணமானபாவரூபவஞ்ஞானத்திற் புறக்கரணங்கள்போற் சித்தமும் ஒடுங்குகின்றதோ அத்திசையில் அப்பொழுதுகேவலம் அஞ்ஞானமயமாகியஅந்தச்சுழுத்தியவஸ்தையையுஞ் சொரூபசிற்பிரகாசத்தினாலேயேயிவ்வான்மாவறிகின்றானென்பார், "சுத்தநற்சுழுத்தியிற்றுயக்குமாயைகண்டிடும்" எனவும், மூன்றவஸ்தைகளிலுந்தானாகப்பிரகாசிக்கின்றசிதான்மா தோற்றம்ஒடுக்கமுதலியதருமமில்லாதவனாய் எக்காலத்திலும்அறியப்பட்டதாயும் அறியப்படாததாயும் இருபிரிவுடையபாவாபாவரூபமான ஜகமனைத்தையும் கேவலம்ஒருபாதியுமில்லாதசொப்பிரகாசசித்தரூபனானஇவ்வான்மாவே அறிகின்றானென்பார், "அத்தமித்தலும்பிறத்தலும்மிலானபாவபாவத்தையுமகண்டமுமறிந்தபோதரூபனே" எனவுங்கூறினார்.

கருத்து. சூரியன்முதலியபாகியப்பிரகாசங்களினுதவியின்றிச்சாக்கிர முதலிய அவஸ்தைகளிலனைத்தையுந்தானேவிளங்கச்செய்வதுபற்றி ஆன்மா சொயஞ்சோதியெனவும், அவஸ்தைகள்மாறிவரினும் இடைவிடாமலிருந்துகாண்டலினால் அவற்றிற்கன்னியனெனவும், திரிசியமனைத்தும்வேத்தாவான அவனிடத்திற்கற்பிதமாய்மித்தையாதலால் அவனுக்குவேறாகஅன்னியமில்லையெனவுங்கொள்க.

(௧௫)

அ - கை. யாதொருதுவிதத்தைப்பார்க்கின்றானில்லை பார்த்தும்பார்க்கின்றானில்லையென்றசுருதியின்பொருளைக்கூறுகின்றார்.

பின்னமானதன்றியேபிரமமாயறிந்தவன்
றன்னுபேதமேவினுஞ்சொரூபமேகிகழ்ந்ததா

முன்னின்ஞானநாசமில்லைஞேயநாசமாகுமா
றன்னில்ஞானஞேயமாகவேறுறாததன்மையால்.

இ - ள். பின்னமானதன்றியே - வேறில்லாமல், பிரமமாயறிந்தவன் - பிரமமாகவறிந்தவன், தன்னுபேதமேவினும் - நெருங்கியபேதம்பொருந்திடினும், சொருபமேநிகழ்ந்ததாம் - அதுசொருபமாகவேவிளங்கியதாகும், உன்னில்-கருதில், தன்னில்-தன்னிடத்துள்ள, ஞானம்-ஞானமானது, ஞேயமாக-திரிசியமாக, வேறுறாததன்மையால்-பின்னப்படாததன்மையினால், ஞானநாசமில்லை-ஞானத்துக்கழிவில்லை, ஞேயநாசமாகும் - திரிசியத்துக்கழிவுண்டாகும். எ - று.

ப - ம். அவஸ்தாத்திரயசாக்ஷியாய் அவற்றிற்குவேறாய்ச் சுயஞ்சோதிசொருபனுள்ளஇவ்வான்மாவைத்தானாகவறிந்தானென்பார், "பின்னமானதன்றியேபிரமமாயறிந்தவன்" எனவும், வித்துவான் தனக்குவேறான அவித்தை அதன்காரியமிவையெல்லாம் வித்தையினால்நீங்குதலிற் றுவிதமானஜகத்தைக்கண்முதலியவிந்திரியவிசேடஞானத்தாற்கண்டிடினும் அவன்சொருபஞானமாகவேபிரகாசிக்கின்றானென்பார், "தன்னுபேதமேவினுஞ்சொருபமேநிகழ்ந்ததாம்" எனவும், எப்படியக்கினியினதுவெம்மை அக்கினியுள்ளவரைக்குமுள்ளதோ அப்படி அழிவில்லாத ஆன்மாவினதுதிருஷ்டியும்அவினாசியாகலின் அழியுமென்றுசங்கிக்கத்தக்கதில்லையென்பார், "உன்னின்ஞானநாசமில்லை" எனவும், ஆன்மாவினதுதிருஷ்டியெப்பொழுதுமுளதாயின் அத்திருஷ்டியினாலெப்பொழுதுந்திரிசியமானஜகத்தோற்றமேன்காணவில்லையெனில், அதிஷ்டானவுண்மைஞானத்தால்த் திருக்குக்கு விடயமானதிரிசியஜகம்தானடையத்தக்கவுபாதியில் ஒடுங்குகின்றது. ஆதலால் விசேஷத்தோற்றமில்லாமை விஷயாபாவத்தால்வந்ததேயன்றிச் சிற்சொருபமானதிருக்கில்லாமையினாலென்று சொல்லுதல்பொருந்ாதென்பார், "ஞேயநாசமாகும்" எனவுங் கூறினார்.

கருத்து. திருக்குச்சொருபனாகியபிரத்தியகான்மாவினதுசொருபப்பிரகாசத்தாற்பிரகாசிக்கின்ற அவிதஜகம் சமாதிகளிலும் சுழுத்திமுதலியஅவஸ்தைகளிலுமில்லாததாகும், திருஷ்டாவானசிதான்மாவொருவனேயிருக்கின்றானென்க. இதனால்த்திருஷ்டாவினது திருஷ்டிக்குக்குறைதலில்லையெனவும் இரண்டாம்பொருளில்லையெனவும் நிருபித்தசுருதியின்பொருள் கூறப்பட்டதாம். (கசு)

அ - கை. இங்ஙனம்அத்துவிதியவான்மநிட்டனுடையயாதொருகதிமுதலியவைகளுக்குநிரதிசயத்தன்மை சுருதிகூறிற்றோ அதனைக்கூறுகின்றார்.

வேறு

இதுபரமமானகதியிதுபரமமாமுலகு
மதிசுகமுமாவதிதுவழிவிறனமாவதிது
வுதறுதனதோலுரகமுடலெனவுனுதுபர
மதனையறிவானதிகனகமதிவையானுடலில்.

இ-ள். இதுபரமமானகதி-இந்தச்சொருபமேபரமபதமும், இதுபரமமாமுலகும்-இதுவேமேலானவுலகமும், இது-இதுவே, அதிசுகமுமாவது- அதிகசுகமுமாகும், இது-இதுவே, அழிவில்தனமாவது-நாசமில்லாதஐச்வரியமாகும், உதறுதனதோல் - உதறுகின்றதனதுசட்டையை, உரகமுடலெனவுனுது - பாம்பு சரீரமெனறுகருதாது, (அதுபோல), பரமதனையறிவான் - பிரமத்தையறிகின்றவனுன, அதிகன் - சிரேட்டன், உடலில் - சரீரத்தில், அகமதி - நானென்னும்புத்தியை, வையான் - அவன்வைக்கமாட்டான். எ - று.

ப-ம். பிரமன்முதற்றம்பமீருயுள்ளகதிகள் அவித்தையினுற்கற்பிக்கப்பட்டனவாகலின் உயர்ந்தனவன்றென்பதோன்ற, "இதுபரமமானகதி" எனவும், கருமபலன்களை ஆசிரயித்திருக்கின்றவுலகங்களுயர்ந்தனவாகாமையினுலும் இந்தப்பிரமநிட்டையொருகருமத்தாலுண்டாகாமற் சுபாவமாகவேநிரதிசயமாதலாலும், 'இதுபரமமாமுலகும்"எனவும்,விஷயசுகமனித்தியமாயும் அதனுடையலேசமாயுமிருப்பதுபற்றி யுபேக்ஷிக்கத்தக்க அபரமமாதலால், நிரதிசயானந்தப்பிரமான்மசொருபமாக விருத்தல் நித்தியமாகலின் இந்தப்பிரமநிட்டையேமேலானசுகமென்பார், "அதிசுகமுமாவதிது" எனவும்,அன்னியங்களானசம்பத்துக்கள் கருமங்களாற் சாதிக்கப்படுதலின் அனித்தியமாதலால் நித்தியமானஅத்துவிதீயப்பிரமான்மநிட்டையேமேலானசம்பத்தென்பார், "அழிவிறனமாவதிது" எனவுங்கூறினர்.

(கரு)

அ - கை. தேகான்மபாவம் பேதத்தை முன்னிட்டிருத்தலால் அதுநிருபிக்கக்கூடாதென்றுகூறப்புகுந்தார் பேதத்தைநிராகரிக்கின்ற சுருதியின்பொருளைக்கூறுகின்முர்.

தற்பரமமாகியுளதத்துவமதேயொழிய
வற்பமயல்காணுமவரத்துருவமேயடைவர்
கற்பிதவஞானமதிலுற்பவமதாமுலக
நற்பிரமமாயறிவர்நற்சிவமதாநயனர்.

இ-ள். தற்பரமமாகியுள- தற்பரமாயிருக்கின்ற, தத்துவமதேயொழிய- பிரமத்தைத்தவிர, அற்பம்- கிஞ்சித்தேனும், அயல்காணுமவர் - பின்னமாகப் பார்க்கின்றவர்கள், அத்துருவமேயடைவர் - நிலையில்லாதமரணத்தையேய டைவார்கள், கற்பித-கற்பிதமாயுள்ள, அஞானமதில் - அவித்தையில், உற்பவ மதாம்-உற்பத்தியாகிய, உலகம்-சகத்தை, நற்சிவமதாம்நயனர்- நல்லசிவமா கியதிருக்கானவர்கள், நற்பிரமமாயறிவர்-சுத்தப்பிரமமாகவறிவார்கள். எ-று.

ப-ம். துவிதஜகத்தோற்றத்துக்கு அதிஷ்டானமானபிரமமே சகநிஷே தத்துக்கும் அவதியாகலின், துவிதப்பிரபஞ்சம்போலத்தனக்கன்னியமாயோர திட்டானத்திலத்தியாசிக்கப்பட்டு மற்றொன்றினதீனமானசத்தையையுடைய தாகாதென்பதுதோன்ற, "தற்பரமமாகியுளதத்துவம்" எனவும், ஆன்மசொ ரூபமானசிவனிடத்தில்வேறுயொருவஸ்துவும் உண்மையாயில்லை. நான்வேறு ஜகமுதலியவைவேறென்று, எவன் பிரத்தியகான்மபாவத்தையடைந்திருக்கு ம்பிரமத்தினிடத்திற்பேதத்தைப்பார்க்கின்றானோ அவன் அவித்தையால்வசீகரி க்கப்பட்டவனும்சுருதிகூறியபிரகாரம் மரணத்தினின்றுந்திரும்பவும் மரணத் தையடைவானென்பதுதோன்ற, "அத்துருவமேயடைவர்" எனவும், உண்மை யாகப்பேதமில்லாமையால் அஞ்ஞானமும் அதன்காரியமானஆகாசமுதலிய பூதபௌதிகஜகமும்மற்றெல்லாமும் அத்துவிதியமானபிரமத்தினிடத்தில் அத் தியாசிக்கப்பட்டதாகலின் அதிஷ்டானமான ஆன்மசொரூபமாயொருபிரகா ரமாகவே பார்க்கத்தக்கது. அங்ஙனமேசுருதியும் ஏகப்பிரகாரமாய் விஞ்ஞா னகனஏகரஸலக்ஷணமாகவேயிந்தவான்மா சாந்திதாந்திமுதலிய சாதனகலா பாநுஷ்டானத்தாலுண்டானபெரியவருத்தத்தையடைந்தேனும் முமுக்ஷுக்க ளாற் சாக்ஷாத்காரமாயறியத்தக்கவனென்பதுதோன்ற 'ஏகப்பிரகாரமாகவே இடைவிடாமற்பார்க்கத்தக்கது இது அப்பிரமேயம் துருவ' மென்றவாக்கியத் தாற்கூறிற்றென்பார், "கற்பிதவஞானமதிலுற்பவமதாமுலகை நற்பிரமமாயறி வர்நற்சிவமதாநயனர்" எனவுங்கூறினார். (கரு)

அ-கை. கூறியதாயும் சொல்லப்போவதாயுமான எல்லாவுபநிடதங்க ளின்பொருளையுஞ்சொல்லாநின்ற 'அந்தவிவன் மகான் அஜன்ஆன்மாவென்று தொடங்கிய, கண்டத்திற்சொல்லியபடியறியப்படும்பொருளின்சொரூபத்தை க்கூறுகின்றார்.

வேறு.

நிலையினிலையாகியளவிடவொணுதநிமலனுருநாளுநினைகுவான்

சலனமறநாவுமலைவலையறுதசமயகலையோதறவிருவா

னுலகிலுதியாதுவுயர்வுகுறைவானவொருவினையினாலுமருவுறு

தலகிலுலகேவல்செயவுரியனுனவதிபதியுமாமமலனே.

இ-ள். நிலையில்நிலையாகி- தனதுஸ்திதியிற்றானேநிலையாயிருப்பதாகி, அளவிடவொண்ணாத - அளவிடக்கூடாத, நிமலனுரு - நின்மலனாகியபரமசிவ சொரூபத்தை, நாளும்நினைகுவான் - எந்நாளும்நினைப்பவனாயும், நாவுசலன மற - நாவானது (இடைவிடாமற்) சலிப்பதுநீங்க, மலைவுஅலையறாத - மய க்கமாகியஅலைநீங்காத, சமயகலையோதல்தவிருவான் - சமயசாஸ்திரங்களைச் சொல்லுதலில்லாதவனாயுமுள்ள, அமலன் - அமலனானவன், உலகிலுதியா து - உலகத்திற்பிறவாமல், உயர்வுகுறைவான - ஏற்றந்தாழ்வாகிய, ஒருவி னையினாலுமருவுறாது - ஒருகருமங்களாலும்துன்பம்பொருந்தாமல், அலகிலு லகேவல்செயவுரியனான-அளவில்லாதவுலகத்தோர்கள் ஏவற்றொழில்செய்யத் தகுந்தவனான, அதிபதியுமாம் - இறைவனுமாவரன். எ-று.

ப-ம். திருக்குருபனான ஆன்மாபார்க்கத்தக்கவனாயின் பார்வையாந் தொழிற்குவிஷயனாகலிற்கடமுதலியவைபோற்றிரிசியனாவானெனில்,மற்றொ ருவனாயின்மற்றொருவனாற்காணப்படுவான் அத்துவிதீயனான ஆன்மாஎப்படி யொருவனாலறியப்படுவான் ஆதலாற்றனதுவிஷயமானஸாக்ஷாத் காரமுண் டாகுங்காற்சொரூபப்பிரகாசத்தாலேயேவிளங்குகின்றானென்பார், "அளவிட வொண்ணாதநிமலன்" எனவும், அபரோக்ஷப்பிராந்திபரோக்ஷஞானத்தால் நீங்கா தாகலின் இவ்வான்மாவைப்புத்திமானானவித்துவான் குருவினுபதேசத்தாலு ஞ்சாத்திரத்தாலும்அறிந்திடினும் திரும்பவும் சாக்ஷாத்காரரூப ஆன்மவிஷய மானபிரஞ்ஞையைஅனுசந்தானிக்கவேண்டுமென்பதுதோன்ற, "நிமலனுருநா ளுநினைகுவான்" எனவும், இதயமத்தியிலிருக்கின்றஜகத்காரணனானஅபரிச்சி ன்னவான்மாவே எல்லாவற்றையும் அதிஷ்டித்துரக்ஷிக்கின்றானாகலிற் பிரம ன்முதற்றம்பம்வரைக்கும் உள்ளவனைத்தையும் ஏவுகின்றவனாயும் எல்லார்க ளும்தன்வசத்தேநிற்றலினால் எல்லாவற்றிற்குஞ்சுதந்திரனான அதிபதியாயுமா வரனென்பார், "உலகேவல்செயவுரியனானவதிபதியும்" எனவுங்கூறினார்.

கருத்து. கருமத்தால்வசீகரிக்கப்பட்டஆன்மாவிற்கு உயர்வுதாழ்வான கருமங்களாலுண்டானஏற்றந்தாழ்வுண்டாகும். இவனிருபாதிகனாய்ச் சர்வே ச்வரனாய்க் கருமத்தோடுங்கூடியஎல்லாவுலகினையும் ஏவும்வல்லமையுடையவ னாயிருத்தலினால் அவன்வசத்தனவான உயர்வுதாழ்வானகருமங்களுக்கு அ வனிடத்திலுயர்வுங்குறைவுமான விகாரங்களையுண்டாக்கும்வல்லமையில்லை யென்றுணர்க. (கஎ)

அ-கை. பரவித்தைக்குச் சாதனமானவேதாத்தியயன முதலியவைக ளை இந்தவான்மாவைவேதானுவசனத்தாலென்றதுமுதலானவாக்கியத்தாற் சு ருதிகூறியபிரகாரம்நிரூபிக்கின்றார்.

பூதபதிபூதபாலனுலகூடுபோகமுடியாததானவோர்
சேதுவெனுமீசனனவனைமேவறேடிவழிபாடுமேவியே
வேதமொழியாலும் வேள்விபலவாலுமேவுதவதானபூசையே
யாதிவழியாலுமாதரவினாலுமாயுமுனிஞானியாகுவான்.

இ-ள். பூதபதி - பூதங்களுக்குப்பதியாயும், பூதபாலன் - பூதங்களை க்காப்பவனும், உலகூடுபோகமுடியாததான - ஜகங்களுக்குவிவஸ்தாபேதம் நீங்கமுடியாததாயுள்ள, ஓர்சேதுவெனும் - ஒருகரையாகிய, ஈசனனவனை - பரமசிவனை, மேவல்தேடி - அடையவிரும்பி, வழிபாடுமேவி - வணக்கம்பொருந்தி, வேதமொழியாலும் - வேதவாக்கியங்களாலும், வேள்விபலவாலும் - பலயாகங்களாலும், மேவுதவதான பூசையேயாதிவழியாலும் - பொருந்திய தவம் தானம் பூசைமுதலானமார்க்கங்களாலும், ஆதரவினாலும் - பக்தியினாலும், ஆயுமுனி - ஆராய்கின்றமுனியானவன், ஞானியாகுவான் - ஞானியாவான். எ - அ.

ப - ம். கிரகமுதற்பிரமலோகம்வரைக்கும் அந்தவந்தமரியாதையழிய க்கூடாதென்று வருணாச்சிரமமுதலானஒழுக்கங்களால்,எப்படிலௌகிகமான சேது பேதிக்காததற்கேதுவாகுமோ அப்படியே தரிக்கின்றானதலாலும், இந்தப்பரசிவனுரைத்தருளிய சுருதிமிருதிசொல்லியநெறியே யநுஷ்டிக்கின்றவனையதனாலுண்டானஞானத்தினால் ஸம்சாரசமுத்திரத்தில்நின்றுந்தாண்டச்செயதலினாலும், "உலகூடுபோகமுடியாததானவோர்சேது" எனவும், மந்திரப்பிராமணரூபங்களான எல்லாவேதங்களையுமத்தியயனஞ்செய்தலினாலுமென்பார், "வேதமொழியாலும்" எனவும், சுருதிமிருதிகளாற் சொல்லப்பட்ட துலாபுருஷன்முதலியவைகளை, "தானபூசை" எனவும், இவ்வாறுவேதாநுவசன முதலியவைகளால் ஆன்மாவையறிதற்கு இச்சிக்கின்றானென்று சுருதியானது அந்தக்கரணசுத்தியடையும்பொருட்டு அறியவிச்சைகொண்டவர்களுக்குச் சாதனங்கூறிற்று. இங்ஙனமுண்டாகியவித்துவான் சாந்திதாந்திமுதலியவற்றாலுங்கேள்விமுதலியவற்றாலும் உண்டானவித்தையினால் ஆன்மாவைச்சாக்ஷாத்கரிக்கின்றமனனமுள்ளவனாகலின் யோகியாவான். அனாத்மஞ்ஞன மற்றொருவனுக்கு அநான்மவிஷயமானமனனமிருந்திடினுங் கருமசம்பந்தமிருத்தலினால் அவன்முனியன்றுகருமியே. ஆன்மவித்து கிருதகிருத்தியனாகலிற் கேவலம்முனியே. அங்ஙனமேசுருதியும் அவனையேயறிந்துமுனியாவானென்று கூறிற்றென்பதுதோன்ற, "ஆயுமுனிஞானியாகுவான் எனவுங்கூறினர். ஈண்டுத்தவமென்றது அனசனரூபமானகிருச்சிரசாந்திராயணமுதலியவைகளையன்று. கிரமமானஉணவினையேகூறவேண்டும், உணவி

ல்லாவிடில் ஜீவனத்திற்குக்கெடுதல்வருதலினுல் வித்தையுண்டாகாதாகலி னென்க. (கஅ)

அ-கை. எல்லாவற்றிற்கும் வசி ஈசானனென்றதுமுதலியவற்ருல் விதிமுகமாகவுபதேசிக்கப்பட்ட ஆன்மதத்துவம் சோபாதிகமென்னுஞ்சங்கையை யொழிப்பதற்கு நிஷேதமுகமாகச்சுருதியான து அந்தவான்மாஇதல்ல இதல்லவென்றதுமுதலியவற்ருல் வாக்குமனங்களுக்கெட்டாத ஆன்மசொரூபத்தையுபதேசித்தது. அதன்பொருளைக்கூறுகினருர்.

வேறு.

குறியதுவாதலாற்குறிக்கவும்படா
னிறுவதுமிலனுடம்பென்றுமின்மையாற்
செறிவதுபற்றிலன்றீண்டலின்மையா.
லறியிலவ்வறிஞனென்ருேடுமார்ப்புருன்.

இ-ள். குறிஅதுவாதலால் - ஆன்மாவேலக்ஷியப்பொருளாகையால், குறிக்கவும்படான்-குறிப்புக்குமடங்கமாட்டான், உடம்புஎன்றுமின்மையால்-தேகம்எக்காலத்துமின்மையால், இறுவதுமிலன் - அழிவுமில்லாதவனுவான், தீண்டலின்மையால் - தீண்டுதலில்லாமையால், பற்றுசெறிவதுமிலன் - ஒரு பற்றும்நெருங்குதலில்லாதவனுவான், அறியில்-உணருங்கால், அவ்வறிஞன்-அந்தஞானியானவன், ஒன்ருேடுமோர்ப்புருன் - ஒன்ருேடுங்கட்டுப்படமாட்டான். எ-று.

கருத்து. திரிசியமானதுவிதங்களெல்லாவற்றையும் இதல்லஇதல்லவென்றுநிஷேதித்தலினுல் ஒருபாதியுமில்லாதநிஷேதத்திற்கவதியானஆன்மாஎப்போதும்அழிவில்லாதவனெனவும், இவனுக்குஅன்னியனுகஒருகர்த்தா பரமார்த்தமாகவில்லாமையால் வித்தைகருமமென்னுமிவைமுதலியஎல்லாவிவகாரங்களுஞ்செய்கின்றவனெனவும்,இவ்வான்மா கைகால்முதலியவிந்திரியங்களாற்கிரகிக்கப்படாதவியல்பினையுடையான் இந்திரியங்கள் ரூபமுதலியவைகளையுடையபொருள்களையேவிஷயீகரிக்கின்றனவாகலினெனவும், அத்தியஸ்தப்பிரபஞ்சத்தினுல் வசீகரிக்கப்படாதசொரூபனெனவும், போக்குவரவுடைய அவயவிகளாகியதிரிசியத்தின்சம்பந்தத்தால் அதிஷ்டானனுனவான்மாவிகாரியாகான், ஓரிடத்திலுந்தனதென்றுஅபிமானமில்லாமையின் எப்படிக்கானல்நீர்பூமியைநனைக்காதோ அப்படிச்சம்பந்தத்திற்கேதுவானதிரிசியம் பொய்யாதலாலுண்மையாகவிகாரத்தையுண்டுபண்ணுதெனவுமுணர்க. (கக)

அ-கை. அந்தவிது இருக்கினுற்கூறப்பட்டதென்றுசுருதிதன்னுற்பிரதிபாதிக்கப்பட்டபொருளினது ஸம்வாதமாகவுதாகரிக்கின்ற மந்திரத்தைச்சங்கிரகித்அக்கூறுகின்ருர்.

தத்துறுவினையினுலுயர்வுதாழ்வுறு
வித்துவான்மகிமையேவிளம்பினித்தமா
மத்தகு சொரூபத்தையறிந்துபாவமா
மித்துயர்வினையொடுமென்றுஞ்சேர்வுறுன்.

இ-ள். விளம்பில் - சொல்லின், தத்துறுவினையினுல் - கெடுதலுறு புண்ணியபாபமானகருமத்தால், உயர்வுதாழ்வுறு - விருத்திக்ஷயங்களானவிகாரத்தையடையாத, வித்துவான்மகிமையே - ஆன்மஞானியினதுமகிமையே, நித்தமாம் - நித்தியமாகும், அத்தகுசொரூபத்தையறிந்து- (ஆதலாலே ஒருவன்) மேற்சொல்லியநித்தியமகிமாரூபமான ஆன்மாவையறிந்து, பாவமாமித்துயர்வினையொடும் - பாபமாகியஇந்தத்துன்பக்கருமத்தினுேடும், என்றுஞ்சேர்வுறுன் - எக்காலத்துஞ்சேராதவனுவான். எ - று.

ப-ம். அன்னியங்களானமகிமைகள்கருமத்தாற்சாதிக்கப்பட்டனவாகலின்அனித்தியங்களாகும். விகாரத்திற்கேதுவானவைகளோடுஞ்சம்பந்தமில்லையென்றுநிரூபிக்கப்பட்டிருத்தலாலும் இயல்பாகவேநிர்விகாரமாதலாலும் இந்தமகிமையேநித்தியமென்பார்,"வித்துவான்மகிமையேவிளம்பினித்தமாம்" எனவும், ஸம்ஸாரத்திற்கேதுவாம்புண்ணியபாபங்களானகருமங்கள்வித்தையால்நீங்குமென்பதுதோன்ற, "பாவமாமித்துயர்வினையொடுமென்றுஞ்சேர்வுறுன்" எனவுங்கூறினுர். பாபம்போலப்புண்ணியமுஞ்சமுசாரத்திற்கேதுவாதலாலிங்ஙனமவ்விரண்டுங்கூறப்பட்டன. (உ0)

அ-கை. பரவித்தையுண்டாவதற்குப் பகிரங்கசாதனங்களானவேதாநுவசனமுதலியவையுபதேசிக்கப்பட்டன. இனிச்சுருதியாற்கூறப்பட்டவந்தரங்கசாதனங்களைக்கூறுகின்றுர்.

சத்தியத்தான்மிகுசாந்திதாந்தியா
லெத்தொழிலும்மிசைவற்றிருத்தலாற்
பத்தியாலிறைவனைப்பண்ணும்பூசையாற்
சுத்தவேதாந்தமெய்த்துணிவுதோன்றுமால்.

இ-ள். சத்தியத்தால் - சத்தியத்தினுலும், மிகுசாந்திதாந்தியால்-மிகுந்தசாந்திதாந்திகளாலும், எத்தொழிலும்இசைவற்றிருத்தலால் - எந்தக்கருமங்களும்பொருந்தலற்றிருத்தலினுலும், பத்தியால் - பக்தியினுலும், இறைவனைப்பண்ணும்பூசையால் - பரமசிவனைச்செய்யும்பூஜாவிசேஷத்தினுலும், சுத்தவேதாந்த - பரிசுத்தம்பொருந்தியவேதாந்தத்தின், மெய்த்துணிவு- உண்மையாய்நிச்சயமானஞானம், தோன்றும் - உண்டாகும். எ - று.

ப-ம். சகலயோகங்களுக்கும்அங்கமானமெய்யுரையாலும் இந்திரியவியாபாரங்களின்ஒழிவினுலும் மனேவிஷயங்களானஆசைகளினீங்குதலாலு

ம் லோகாந்தரங்களுக்குச்சாதனங்களாய் வித்தைக்குவிரோதிகளான கருமத்தியாகத்தினுலுமென்பார், "சத்தியத்தான்மிகுஞ்சாந்திதாந்தியா லெத்தொழிலும்மிசைவற்றிருத்தலால்" எனவும், கேட்கத்தக்கதுமனனிக்கத்தக்கதென்றதுமுதலியவேதாந்தங்களாற் பிரதிபாதிக்கப்பட்டவித்தைக்குஹேதுவான சிரவணமனனமுதலியவைகளாலுமென்பார், "சுத்தவேதாந்தம்" எனவுங்கூறினர். (உக)

அ-கை. இங்ஙனங்கூறியவாறே ஜாபாலமுதலியவுபநிடதங்களிற்பிரதிபாதிக்கப்பட்ட விபூதிதாரணசிவபூஜைமுதலியவைகளுஞ் சிவப்பிரீதிகரங்களாகலின் பரவித்தையுண்டாவதற்குஅந்தரங்கசாதனங்களாகுமென்றுகூறுகின்றார்.

வேளுடல்பொடிபடவிழித்தவிண்ணவற்
காளெனுமன்பினலணியுநீற்றையுத்
தூளனம்பண்ணலாற்றெழுதுபோற்றலான்
மாளுதல்பிறத்தலாம்வழியைமாற்றலாம்.

இ-ள். வேளுடல்பொடிபட - மன்மதனதுசரீரம்பொடியாகும்படி, விழித்தவிண்ணவற்கு - நெற்றிக்கண்ணைவிழித்தெரித்தசிவபெருமானுக்கு, ஆளெனும்அன்பினல் - அடிமையென்னும்பக்தியினல், அணியுநீற்றை - எல்லாராலும்அணியத்தக்கவிபூதியை, உத்தூளனம்பண்ணலால் - உத்தூளனஞ்செய்தலாலும், தொழுதுபோற்றலால் - வணங்கிப்போற்றுவதினலும், மாளுதல்பிறத்தலாம்வழியை - செனனமரணமாகியமார்க்கத்தை, மாற்றலாம் - ஒழித்துவிடலாம். எ-று. (உஉ)

இதுவுமது.

மெய்யுறுமன்பினன்மேவுசாதன
மையமில்ஞானமுண்டாக்குமாக்கினல்
வையகமியாவையுமன்னுபோதமாய்க்
கையுறுகூவிளங்கனியிற்காணலாம்.

இ-ள். மெய்யுறுமன்பினல் - (இவ்வாறு) உண்மையாகியபிரேமையினல், மேவுசாதனம் - பொருந்துகின்றசாதனங்கள், ஐயமில்ஞானமுண்டாக்கும் - சந்தேகமில்லாதஞானத்தையுண்டுபண்ணும், ஆக்கினல் - (அவ்வாறு ஞானத்தையுண்டாக்கினல், வையகமியாவையும்-எல்லாச்சகங்களையும், மன்னுபோதமாய் -நிலைபெற்றஞானசொருபமாகவே, கையுறுகூவிளங்கனியில்-கரத்திலிருக்கின்றவில்வக்கனிபோல, காணலாம் - பார்க்கலாம். எ-று. (உங)

அ-கை. சிவஞானிக்குஎன்னுண்டாகுமென்ற சங்கைக்குச்சமாதானமும், நான்தேசிகனுக்குவிதேகத்தையும் என்னையுங்கொடுக்கின்றேனென்றுகூறுதியினற் றன்னேடுமெல்லாப்பொருளையும் பிரமோபதேசஞ்செய்கின்றகுருவின்பொருட்டுக் கொடுக்கத்தக்கதென் றுபதேசிக்கப்பட்டது. அதன்பொருளையுங்கூறுகின்றார்.

வேறு.

மேவுபாவம்வெல்லாதுமெய்ஞ்ஞானியைவென்றிடுமிவனெல்லாப்
பாவமானதுமாதலால்வேதனம்பண்ணவல்லவனுன
தேவதேவனுந்தேசிகன்றனக்குமுன்செய்பொருளுடலாவி
யீவதேகடனிறைவவெம்பிரானெனவேத்திமெய்யிதயத்தால்.

இ - ள். மேவுபாவம் பொருந்துகின்றபாவமானது, மெய்ஞ்ஞானியை- உண்மைஞானியை, வெல்லாது - ஜயிக்காது, இவன் - இந்தஞானி, எல்லாப்பாவமானதும் - பாபமாகியஅனைத்தையும், வென்றிடும் - செயிப்பான், ஆதலால் - ஆகையால், வேதனம்பண்ணவல்லவனுன- (ஒருவனுக்கு) ஞானத்தையுண்டாக்கவல்லவனுகிய, தேவதேவனுந்தேசிகன்றனக்கு - தேவதேவனுகியகுருவுக்கு, முன்செய்பொருள் - முன்புதொழிலாற்சம்பாதிக்கப்பட்டபொருள்களையும், உடல் - தேகத்தையும், ஆவி - உயிரையும், மெய்யிதயத்தால் - உண்மையானமனத்தினுல், இறைவ எம்பிரானெ்ன - இறைவனேயெம்பெருமானேயென்று, ஏத்தி - துதித்து, ஈவதேகடன்-கொடுப்பதேகடனுகும்.எ-று.

கருத்து. பிரமநிஷ்டர்களிடத்திற் செய்யத்தக்கதாயும் செய்யத்தகாததாயுமானபுண்ணியபாவங்களுக்குத் தாண்டுந்தன்மையுந்தபிக்கச்செய்யுந்தன்மையுமில்லை. அங்ஙனமேசுருதியும் இந்தக்கிருதாகிருதங்களான புண்ணியபாபங்களிரண்டும் இவனையதிக்கிரமிக்காதென்று கூறிற்றென்றறிக. (உச)

அ - கை. அத்தன்மையனுன குருவைத்தாய்தந்தையாகக்கருதி ஒருக்காலுந் துரோகஞ்செய்யக்கூடாதென்னும் இந்தப்பொருளைப்பிரதிபாதிக்கின்றதானயாஸ்கரால் உதாகரிக்கப்படும் மந்திரத்தைக்கூறுகின்ருர்.

மாயவபுன்லத்தெழாவகைதீர்ந்ததன்வாய்மையாலிடரின்றிப்
பாயவின்னமுதிருசெவித்துளைவழிபாய்ச்சினுன்பதுமத்தா
டாயுந்தந்தையுஞ்சுற்றமுமற்றுநற்றனமுமென்றடைவான்றன்
காயமுள்ளளவும்புகழ்ந்தேத்துவான்கற்றதோர்கலையாலே.

இ - ள். மாயவன்புலத்து - தீங்காகியவலியஒலிமுதலைம்புலங்களில், எழாவகை - எழும்பிச்செல்லாதபடி, தீர்ந்த - அடக்கிய, தன்வாய்மையால்- தனதுஉபதேசத்தால், இடர்இன்றிப்பாய - துக்கமில்லாமற்பாயும்படி, இன்னமுது-இனியசொருபஅமிர்தத்தை, இருசெவித்துளைவழி - இரண்டுசெவித்துளைகளின்வழியாக,பாய்ச்சினுன் - செலுத்திய (தேசிகனது), பதுமத்தாள் - தாமரைபோன்றதிருவடிகளே, தாயும் - மாதாவும், தந்தையும் - பிதாவும், சுற்றமும்-பந்துக்களும், நற்றனமும்-நல்லநிதிகளும், மற்றும்-இன்னும்வேண்டியஅனைத்தும், என்றடைவான்-என்றுசரணமடைகின்றவன்,தன்காயமுள்ளளவும்- தன்சரீரமுள்ளவரைக்கும், கற்றதோர்கலையால்-தான்கற்றஒப்பில்லாதகல்வியினுல், புகழ்ந்தேத்துவான் - புகழ்ந்துதுதிக்கக்கடவன். எ - று.

ப-ம். லௌகிகமாய்க்காதுகுற்றுதல் துக்கத்திற்கேதுவாகலின் அங்ஙனமன்றென்பார், "இடரின்றிப்பாயவின்னமுதிருசெவித்துளைவழிபாய்ச்சினன்" என்றார்.

கருத்து. ஆன்மா சொருபபூதனுயினும் முன்அஞ்ஞானமலத்தாலாவரிக்கப்பட்டு நஷ்டமானவன்போலிருந்தான். அதன்பின்குருவினுபதேசத்தாற்கண்டத்திலிருக்குமாபரணம்போலமறுபடியடையப்படுகின்றானென்றுணர்க.

அ-கை. இந்தமந்திரத்தின்பொருளையேவிரித்துக்கூறுகின்றார்.

வேறு.

தேசிகன்றன்றிருமேனிசிந்தைசெய்யச் சிவனைச்சிந்தித்தானுஞ் செம்பொற்றாளிற், பூசனைசெய்திட வெங்குமாகிநின்ற பூரணனையினிதாகப்பூசித்தானு, நாசமிலாச்சிவனுமநவின்றானுண்ட நாயகன்றன்றிருநாமநவின்றானுகி, லீசனையேயிகழ்ந்தானுங்கண்ணுற்காண வெழுந்தருளுந்திருக்கோலமிகழ்ந்தானுகில்.

இ-ள். தேசிகன்றன்திருமேனிசிந்தைசெய்ய - குருவினதுதிவ்வியசரீரத்தைத்தியானம்பண்ணிடில், சிவனைச்சிந்தித்தானும்-சிவபெருமானையேதியானித்தவனுவான், செம்பொற்றாளிற்பூசனைசெய்திட-அவரதுசெவ்வியபொன்னடியில்அருச்சித்திடில், எங்குமாகிநின்றபூரணனை- எவ்விடத்திலும்பிரகாசிக்கின்றபரிபூரணனை, இனிதாகப்பூசித்தானும் - அன்புடன்பூசித்தவனுவான், ஆண்டநாயகன்றன்திருநாமம்நவின்றானுகில் - தன்னைத்திருவருளால்ஆண்டகுருமூர்த்தியினதுதிருநாமத்தைச்சொல்வானேல், நாசமிலாச்சிவனுமம்நவின்றான் - அழிவற்றசிவநாமத்தைச்சொன்னவனுவான், கண்ணுற்காண - கண்ணும்பார்க்கும்படி, எழுந்தருளுந்திருக்கோலம் - எழுந்தருளுகின்றதிருக்கோலத்தை, இகழ்ந்தானுகில்-தூஷிப்பானுகில், ஈசனையேயிகழ்ந்தானும்-சிவனையேதூஷித்தவனுவான். எ-று. (உ௬)

ஆதலினுல்வேதவேதாந்தத்துண்மை யறிவானுய்முழுதுமறிந்தடங்கினுன்றன், பாதமடைவான்முத்திவேண்டினல்லற் பாப்பையெலாங்கைவிடுவான்பரிவோடுங்கட், கோதுவதிற்கிட்ப்பதிலையருளாலெல்லா மோதினேனிப்பொருண்மெய்யுணர்ந்தோன்செய்யு, நீதிபிழைநினைந்திடவுமில்லையெங்கு நிறைந்தபரம்பொருளாகிநிகழாநின்றான்.

இ-ள். ஆதலினுல் - ஆகையால், வேதவேதாந்தத்துண்மை-வேதவேதாந்தங்களினுண்மையை, அறிவானுய் - அறிபவனுகி, முத்திவேண்டின்-முத்தியைக்கருதிடில், முழுதும்அறிந்தடங்கினுன்றன்- அனைத்தையும்அறிந்துதன்னிலேயடங்கியதேசிகரது, பாதமடைவான் - திருவடியைச்சேர்வான், அல்ல

ற்பரப்பையெலாங்கைவிடுவான்-அவனேவிசாலமாகிய துக்கங்களையெல்லாங் கைவிடுவான், பரிவோடுக்கட்கோதுவதில்-பிரியத்துடனேஉங்களுக்குச்சொல லவேண்டியவிஷயத்தில், கிடப்பதில்லை - பாக்கியொன்றுமில்லை, அருளால்-சிவபெருமானததிருவருளால், எல்லாமோதினேன் - அனைத்தையும்உபதேசித்தேன், இப்பொருள் - இந்தப்பொருளினது, மெய்யுணர்ந்தோன் - உண்மையையறிந்தவன், செய்யும்நீதிபிழை - செய்யத்தக்கவிதியையும்விலக்கையும், நினைந்திடவுமில்லை - கருதவேயில்லை, எங்குநிறைந்த - எவ்விடத்தும்நிறைந்த, பரம்பொருளாகி - பிரமசொரூபமாகி, நிகழாநின்றான் - விளங்குகின்றான். எ - று. (உஎ)

வேறு.

ஒருவராலொருவிரகிலுணர்வொணாததுபரம  
குருவினாலறியவருமதனைநேர்தருகுரவ  
னருளையாதொருவழியிலடையலாமதுமுயல்கை  
கருமமாமெனநிகரில்கருமநான்முகனருளும்.

இ - ள். ஒருவரால்ஒருவிரகில் - ஒருவரால்ஒருபாயத்தினாலும், உணர்வொணாதது - அறியக்கூடாதஅந்தவஸ்து, பரமகுருவினால்அறியவரும்-உயர்ந்ததேசிகரால்அறியக்கூடும், அதனைநேர்தரு-அந்தச்சொரூபத்தையபரோக்ஷமாகத்தருகின்ற, குரவனருளை-தேசிகரதுகிருபையை, யாதொருவழியிலடையலாம் - எந்தமார்க்கத்தினாற்பெறலாமோ, அதுமுயல்கை - அந்தமார்க்கத்தில்முயர்ச்சிசெய்வது, கருமமாமென - நல்லதொழிலாகுமென்று, நிகரில் - ஒப்பில்லாத, கருமநான்முகன் - சிருட்டித்தொழிலைச்செய்கின்றபிரமதேவர், அருளும் - சொன்னார். எ - று. (உஅ)

உஷஸ்தப்பிராமணமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ருகக.

சிவமயம்.

---

உ

சிவாயபரமகுரவேநம:

## கக - வது கடவல்லியொடுசுவேதாச்சுவதரமுமுரைத்தவத்தியாயம்.

---

### அத்தியாயவவதாரிகை.

இவ்வாறுபிரகதாரணியவுபநிடதத்திற்குப்பிரமான்ம ஐக்கியபரத்தன்மையுரைசெய்து, கதிசாமானியந்தெரிவிக்கவேண்டி இவ்வத்தியாயத்தாற் கடவல்லியுபநிடதத்தின்தாற்பரியத்தையுங்கூறுவான் தொடங்குகின்றார்.

பன்னுநன்குருவெனும்பரம்பரன்றிறஞ்
சொன்னதன்மையையெலாந்தோன்றநானுமக்
கின்னமுங்கூறுவனெனவியம்பினு
னன்னவாகனத்தினனமரர்க்கன்பினல்.

இ-ள். பன்னு-சொல்லுகின்ற, நன்குருவெனும்-சற்குருவாகிய, பரம்பரன்றிறம்-பரமசிவத்தின்சக்தியை, சொன்னதன்மையையெலாம்-பகர்ந்ததன்மையனைத்தையும், தோன்ற-தெரியும்படி, நான்உமக்கு-நான்உங்களுக்கு, இன்னமுங்கூறுவனென-இன்னமுஞ்சொல்வேனென்று, அன்னவாகனத்தினன்-அன்னவாகனத்தையுடையபிரமதேவர், அமரர்க்கு-தேவர்களுக்கு, அன்பினல்-கிருபையினல், இயம்பினன்-சொன்னர். எ-று. (க)

அ-கை. கடவல்லியுபநிஷதத்தில் முன்னிருக்கும்மந்திரங்கள் வித்தையைத்துதிக்கும்பொருட்டாகலின் அதுமுன்னமே சொல்லிக்கிடந்தமையால் அவற்றைக்கூருது, வித்தியாஸ்வரூபத்திற்குஉபயோகமானதுர்த்தரிசமென்ற அமுதலியமந்திரங்களின்பொருளைக்கூறுகின்ருர்.

வேறு.

குகையிலிருப்பதாய்மிகவுங்கூடமாகியெவ்விடத்துந்
திகழ்வதாகியொருவர்க்குந்தெரியாதாகுஞ்சிவனுருவ
மிகவுநன்ருய்மேலாமவ்வுருவமெய்ம்மைவிளங்குமவன்
சுகதுக்கங்கடீர்ந்துவெறுஞ்சுகசொரூபனுகின்ருன்.

இ-ள். குகையில்-அந்தக்கரணமென்னுங்குகையில், இருப்பதாய்-இருப்பதாயும், மிகவுங்கூடமாகி-மிகவும்ரகசியமாயும், எவ்விடத்துந்திகழ்வதாகி-எங்கும்பிரகாசிப்பதாயும், ஒருவர்க்கும்-ஒருவருக்கும், தெரியாதாகும்-தெரியாததாயுமுள்ளது, சிவனுருவம்-சிவனுடையரூபம், மேலாம்அவ்வுருவமெய்ம்மை-மேலானஅந்தச்சொரூபத்தின்உண்மை, மிகவும்நன்ருய்-மிகவுந்தெளிவாய், விளங்குமவன்-விளங்கும்படியடைந்தவன், சுகதுக்கங்கள்தீர்ந்து-இன்பதுன்பங்களற்று, வெறும்சுகசொரூபனுகின்ருன்-கேவலம் ஆனந்தசொரூபனுகப்பவிக்கின்ருன். எ-று.

கருத்து. அறியப்பட்டவான்மதத்துவம்நிரதிசயமாகலின் மகிழ்வும் துன்பமுமான இவற்றிற்கேதுவாகியவுயர்வுதாழ்வுகள் அங்ஙனமுண்டாகாவென்றுணர்க. (உ)

அ-கை. தருமத்தைக்காட்டிலும்அன்னியமென்ற மந்திரத்தின்பொருளைக்கூறுகின்ருர்.

தருமாதிகட்கும்பூதங்கட்மக்கும்வேறதாயாதொன்
றருமாமறைகளறைகின்றதரியபிரமசரியாதி

சரியாகின்ருர்யாதுபெறவதுதற்பரமக்கரமதனைத்
திரமாயறியுமவன்சிந்தைசெய்ததெல்லாஞ்சித்திக்கும்.

இ - ள். தருமாதிகட்கும்- தருமாதருமமுதலியவைக்கும், பூதங்கடமக்கும்-சென்றகாலமுதலியதிரிகாலங்களுக்கும், வேறதாய்-வேருக,யாதொன்று எது, அருமாமறைகளறைகின்றது - அருமையாகியபெரியவேதங்கள்சொல்லுகின்றதோ, அரியபிரமசரியாதி - அரியபிரமசரியாதிஆச்சிரமங்களை, யாது பெறச்சரியாகின்ருர் - எதனையடைதற்குஆசரிக்கின்ருர்களோ, அது - அதுவே, தற்பரம்-தற்பரமாயும்,அக்கரம்-அக்ஷரப்பொருளாயும் விளங்குகின்றது, அதனை-அந்தப்பொருளை, திரமாயறியுமவன்-ஸ்திரமாகஅறிந்தவன், சிந்தைசெய்ததெல்லாம்-கருதியவனைத்தும், சித்திக்கும்-சித்தித்திடும். எ - று.

கருத்து. "தருமாதிகட்கும்" என்றதனுல், சுருதிகூறியஅதருமமும்பெறப்பட்டது. "அக்கரமதனைத்திரமாயறியுமவன்சிந்தை செய்ததெல்லாஞ்சித்திக்கும்" என்றதனுல், வடநூலிற்கூறியபடி இந்தப்பிரணவரூபமானவக்ஷரமே ஹிரணியகருப்பனென்னும்பரப்பிரமமும்,அப்படியேஒருபாதியுமில்லாதஸச்சிதானந்தஏகரசமானபிரமமும்எனப்பிரணவத்திற்குஇரண்டுகுறிப்புமிருத்தலால்த் தாதான்மியங்கூறப்பட்டது. ஆதலால் உபாசிக்கத்தக்கதாயும் அறியத்தக்கதாயுமுள்ளபிரமங்களைத் தன்னுடையஅதிகாரத்திற்குத் தகுந்தபடியறிந்தவன் அடையத்தக்கபிரமத்தையேனும்அறியத்தக்கபிரமத்தையேனும் எதனையிச்சிக்கின்ருனே அதனையடைகின்ருனென்பதும் பெறப்பட்டது. இவ்வாறே வருஞ்செய்யுளில் ஆலம்பனமென்றவிடத்திலுங்கூட்டிக்கொள்க. (கூ)

அ - கை. பிரணவத்தாலறியத்தக்க பரப்பிரமஸ்வரூபமித்தன்மைத்தென்றுகூறுகின்ருர்.

அந்தப்பரமேயெப்பொருட்குமாலம்பனமாவதுவதனைச்
சிந்தைக்கேறத்தெளிவுற்ருன்செனியான்மரியானெருதிசையில்
வந்துற்றிலனேர்வடிவுமிலனதனுல்வரவுபோக்காகு
மிந்தத்தொழில்களொன்றுமிலனெங்குந்தானுவிருக்கின்ருன்.

இ - ள். அந்தப்பரமே-அந்தவக்ஷரப்பொருளே, எப்பொருட்கும்-சகலவஸ்துக்களுக்கும், ஆலம்பனமாவது- பற்றுக்கோடாகும், அதனை- அதனை, சிந்தைக்கேறத்தெளிவுற்ருன் -சிந்தையில்ஏறும்படி தெளிவாகவறிந்தவன், செனியான் - பிறவான், மரியான் - சாகான், ஒருதிசையில்-ஒருதிசையிலும், வந்துற்றிலன் -வந்துபொருந்தமாட்டான், ஓர்வடிவுமிலன்-(தனக்கு)ஒருவடிவமுமில்லாதவனுவன், அதனுல் - ஆகையால், வரவுபோக்காகும்-கமாகமமாகிய, இந்தத்தொழில்களொன்றுமிலன் - இந்தத்தொழில்க ளொன்றுமில்லாதவனுவான், எங்கும் - எவ்விடத்திலும், தானுவிருக்கின்ருன் - தானுகவேவிளங்குகின்ருன். எ - று.

ப-ம். "ஜநியான்மரியான்" என்றதனால், ஆதியும்அந்தமுமாகியபாவவி காரங்களின்றென்றுபொருள்படுதலின் அதற்குமத்தியில்வரும் விகாரங்களு மில்லாதவனென்பதுபெறப்பட்டது. கெடுதலில்லாதஞானஸ்வபாவனுதலா அம்,தனக்குவேறுயொருபொருளுமில்லாததனாலும், துவிதம்போலொருகார த்தாலுண்டாகானெனன்பார், "ஒருதிசையில்வந்துற்றிலன்" எனவுங்கூறினார்.

கருத்து. ஆகாசமுதலியபொருள்களிருக்கின்றன ஆன்மாவினிடத்தில் நின்றும்ஆகாயமுண்டாயிற்றென்றசுருதியாலென்னில், அச்சுருதிக்கும்மாயை யின்வசத்தாற்றுவிதப்பிரபஞ்சம் அத்துவிதமானபிரமத்தினிடத்தில் அத்தி யாசிக்கப்பட்டதென்றுதாற்பரியமாகலின் வேறாகவொருபொருளுமுண்டாக வில்லையென்க. (அ)

அ-கை. உலகத்திலொருஆன்மா மற்றொருவானமாவினைக்கொன்றவ னாகக்காணப்படுதலிற் கொன்றவனும்கொல்லப்படுபவனுமுள்ள இரண் டான்மாக்கள் எல்லாப்பிராணிகளுக்குஞ்சம்மதமாகுமென்று சங்கித்துக்கூறு கின்றார்.

வேறு.

பொன்றவுடலைத்துணிசெய்போதுமிறைபொன்றான்
கொன்றிடுதலுங்கொலையெனுந்தொழிலுமில்லா
னின்றுபெருமைச்சிறுமையிற்பெருகிநுபடா
யென்றுமிதயக்குகையிலேயிலகுகின்றான்.

இ-ள். பொன்றஉடலை - அழியும்படியுடம்பை, துணிசெய்போதும் - வெட்டினபோதிலும், இறைபொன்றான் - அக்ஷரப்பொருளாகியஆன்மாஅழி யமாட்டான், கொன்றிடுதலும் - ஒருவரைக்கொல்லுதலும், கொலையெனுந் தொழிலும்இல்லான்- ஒருவரால் தன்னைக்கொலைசெய்தலென்னுந்தொழிலுமி ல்லாதவன், பெருமை - பெரியதில், பெருகி - பெரிதாயும், சிறுமையில்-சிறி யதில், நுட்பாய்நின்று - சிறிதாயும்நின்று, என்றும்-எக்காலத்தும், இதயக்கு கையில் - அந்தக்கரணமாகியகுகையில, இலகுகின்றான் - விளங்குகின் றான். எ. று.

ப-ம். இவ்வான்மாநிருவிகாரனாகலிற் கிரியாசிரயத்தன்மையும் அதற் குவிஷயமாந்தன்மையும் அவனுக்குப்பொருந்தாது. அங்ஙனமறிந்தவர்கள் அறியாதவர்களென்பதுதோனற, "கொன்றிடுதலுங்கொலையெனுந்தொழிலுமி ல்லான்" என்றார்.

கருத்து. உலகிலுள்ளஅணுமகத்துக்களானபொருள்களெல்லாம் இந்த க்காரணபூதமானஆன்மாவினாற்சத்தையுடையனவாகும். ஆன்மாவிற்கத்தன் மையும் இரண்டிடத்திலும்வியாபகத்தன்மையிருத்தலினாலென்க (ரு)

இதுவுமது.

அண்ணியனுமாகுமதிதூரியனுமாகும்
வண்ணமிலதானமகிமாவருளினாலே
கண்ணினிகழ்வாமலதுகாணவெளிதோதான்
றிண்ணமுறநானறிவன்வேறுதெளிவாரார்.

இ-ள். அண்ணியனுமாகும் - சமீபத்திலிருப்பவனுமாவான், அதிதூரியனுமாகும் - அதிதூரத்திலிருப்பவனுமாவன், வண்ணமிலாதான-இவ்வண்ணமென்றுகுறிக்கக்கூடாத, மகிமா-மகிமாரூபனான அந்தவான்மாவானவன், அருளினாலே-சிவப்பிரசாதத்தினாலே, கண்ணினிகழ்வாம்அலது-ஞானநேத்திரத்திற்குவிளங்குவனேயன்றி, காணவெளிதோ-காண்டற்கெளியவனோ, திண்ணமுறநானறிவன் -திடமாகநானறிவேனேயன்றி, வேறுதெளிவரார்-மற்றியாவர்தெளிபவர். எ-று.

ப-ம். விருத்தகர்மயோகம் பரிச்சின்னமானபொருளுக்குக்கூடாது. அபரிச்சின்னனானபிரத்தியகான்மா மகாதேவனுய்ச்சருவகதனாதலால் அவனிடத்திலிருத்தல் போதல் சயனஞ்செய்தல் முதலியவை யொன்றற்கொன்றுவிரோதமாயிருக்கினும் அத்தியாசிக்கப்பட்டதாகலின் ஏககாலத்திலந்தத்தோற்றங்கூடுமென்பார், "அண்ணியனுமாகுமதிதூரியனுமாகும்" எனவும், ஆன்மா பிரமாதிஸ்தம்பபரியந்தம் உற்பத்தியானஎல்லாப் பிராணிகளுடையஇதயத்தில் ஆன்மரூபமாகவிருந்திடினுங், காணப்பட்டதாயும் காணப்படாததாயுமானவிஷயங்களிலிச்சையில்லாதபுருஷன் விஷயோபபோகத்தாலுண்டான தோஷமில்லாதவனுய்ச்சிவப்பிரசாதத்தால் அனவச்சின்னப்பிரமரூபமானபிரத்தியகான்மாவின்மகிமையையெப்போதுஅபரோக்ஷமாகவறிகின்றானோ அப்போதுஸம்ஸாரபந்தத்தினின்றும் முக்தனுவானன்றிமற்றையர்க்கரிதென்பதுதோன்ற, "மகிமாவருளினாலேகண்ணினிகழ்வாமலதுகாணவெளிதோதான்" எனவுங்கூறினர். "திண்ணமுறநானறிவன்வேறுதெளிவாரார்" என்றது நாசிகேதாவுக்குத்தருமராஜர்கூறியது. (சு)

இதுவுமது.

நின்றுமுடறோறுமுடலின்றிநிகழ்வானுய்ப்
பொன்றுமதனோடுமொருபொன்றுதலுமுறானு
யென்றுநிலையாயுலகமெங்குமொருதானு
மொன்றையறிவானிடர்களொன்றிலுமுழலானால்.

இ-ள். உடல்தோறும் - சரீரங்கள்தோறும், நின்றும்-இருந்தும், உடலின்றிநிகழ்வானுய் - சரீரமில்லாமல்விளங்குகின்றவனுயும், பொன்றுமதனோடும் - அழிகின்றஅந்தவுடலினோடும், ஒருபொன்றுதலுமுறானுய் - ஓரழிவுமில்லாதவனுயும், என்றுநிலையாய்-எக்காலத்தும்அழிவில்லாமலிருந்து, உலகமெங்கும் - சகமெங்கும், ஒருதானும் - ஒப்பற்றதாஞகவேவிளங்குகின்ற,

ஒன்றை - பிரமத்தை, அறிவான் - அபரோட்சமாகவறிந்தவன், இடர்களொன்றில் - ஒருதுன்பத்திலும், உழலான் - உழலமாட்டான். எ - று.

ப - ம். தேவபிதிர்மனுஷ்யாதிகளுடைய சரீரங்களில் ஆகாசம்போலான்மபாவமாக இருக்கினும் இவ்வான்மாவுக்கு மகத்துவம்ஆகாசம்போலாபேக்ஷிகமன்றென்பார், "என்றுநிலையாயுலகமெங்குமொருதானுமொன்றை" என்றார். (எ)

இதுவுமது. வேறு.

இகழுபுன்னெறியைவிட்டொருப்படுமிந்திரியங்கண்மனங்கண் மீட்டிருக்குந், தகவினையுடையானருள்பெறுமந்தவருளினாற்பிரமத் தையடைவான், இகபரமிரண்டும்புசிப்பவனவனிங்கெவ்விடத்தேயுளனிங்ஙன், றிகழுறமிகுத்ததேவருமறியார்மனிதரோவினித்தெளிவுறுவார்.

இ - ள். இகழுபுன்னெறியைவிட்டு - நிந்திக்கத்தக்கஅற்பமார்க்கத்தைவிடுத்து, ஒருப்படும் - கூடிய, இந்திரியங்கள்-இந்திரியங்களையும், மனங்கள்-மனமுதலானவைகளையும், மீட்டிருக்கும் - திருப்பியிருக்கின்ற, தகவினையுடையான் - குணத்தையுடையவன், அருள்பெறும்-சிவப்பிரசாதத்தையடைவான், அந்தவருளினால் - அந்தத்திருவருளால், பிரமத்தையடைவான்-ஆன்மாவையடைவான், இங்கு - இவ்விடத்தில், இகபரமிரண்டும் - இம்மைமறுமையிரண்டினையும், புசிப்பவனவன் - புசிக்கின்றவனாகியஅவன், எவ்விடத்தேயுளன் - எங்கேயிருக்கின்றான், இங்ஙன்திகழுற - அவனைஇவ்விடத்தில்விளங்கும்படி, மிகுத்ததேவருமறியார் - மிகுதியானதேவர்களும் அறியமாட்டார்கள், மனிதரோ - மானுடர்களோ, இனித்தெளிவுறுவார் - இனிமேலறிவார்கள். எ-று.

ப - ம். பாபங்களைச்செய்தலினும் பொறிவழிச்செல்கையினும் நீங்காதவர்களாய்ச் சித்தைகாக்கிரியமிலராய் விஷயங்களினின்றுநீங்காதமனமுடையவராயுள்ளவர் இவ்வான்மசொரூபத்தையடையாரென்பார் எதிர்மறையாக, "இகழுபுன்னெறியைவிட்டொருப்படு மிந்திரியங்கண்மனங்கண் மீட்டிருக்குந் தகவினையுடையானருள்பெறும்" எனவும், சுருதியில்எவனுக்குப்பிரமக்ஷத்திரங்கள்அன்னமாகுமென்றதுஉபலக்ஷணமாகலிற்பிரமக்ஷத்திராதிகளாற்குறிக்கப்படுமெல்லாவுலகுமிந்தப்பரமான்மாவிற்கு அன்னஸ்தானமாகும். எல்லாவற்றையுஞ்சங்கரிக்கின்றதருமராஜாவுங்கறியாவான். அங்ஙனமேசுருதியும்காலனும்எவனுக்குபசேசனமென்றுகூறிற்றென்பதுதோன்ற, "இகபரமிரண்டும்புசிப்பவன்" எனவுங்கூறினர். இவ்வான்மாஅனேகவேதாத்தியயத்தினாலும் கிரந்ததாரணசக்தியினாலும் அனான்மசாஸ்திரச்சிரவணத்தினாலும்அடையப்படானென்றதுமுதலியன ஏழாவதத்தியாயத்திற்சொல்லிக்கிடந்தனவாகலின் அதனைவட்நூலிற்கூறியபடிகூறினாரில்லையென்க. (அ)

அ - கை. இங்ஙனங்கூறியபொருளை யிரதரூபகற்பனையாய் அடைபவனையும்அடையத்தக்கதாயும்விரித்துக்கூறுவார், லோகசித்தமாயும் உபாதியால்

வந்ததாயுமுள்ளஜீவேசர்களுடையபேதத்தைக்கூறுகின்ற 'சத்தியம்புசிக்கின்றவர்கள்' என்றமந்திரத்தின்பொருளையும் ஜீவேசர்க்குப்பேதமுண்மையன்றென்பதேயிந்தமந்திரத்திற்குத்தாற்பரியமென்பதனையுங்கூறுகின்றார்.

ஏயபேருலகில்வினைப்பயனுகர்ந்தங்கிதயமேமருவுவாரிருவர்
சாயையாதபமாகின்றனர்சிவசங்கரரென்றிடத்தகுவா
ரோயுமாறறவேயுண்பவன்சீவனூட்டுவான்சிவனிவர்தமக்கிங்
காயபேதந்தானுபாதியால்வந்ததல்லதபேதமேயாகும்.

இ-ள். ஏயபேருலகில் - பெருமைபொருந்தியவுலகின்கண், வினைப்பயனுகர்ந்து - கருமபலத்தைப்புசித்து, அங்கு - அவ்விடத்தில், இதயமேமருவுவார் - இருதயத்திற்பொருந்தியிருக்கின்றவர்களாகிய, இருவர் - இருவர்கள், சாயையாதபமாகின்றனர் - நிழலும்வெய்யிலும்போலிருக்கின்றனர், சிவசங்கரரென்றிடத்தகுவார் - (அவர்கள்) சீவேசரென்றுகூறத்தகுவார்கள், ஓயுமாறறவே - (அவர்களில்) ஓயுந்தன்மையில்லாமல், உண்பவன்சீவன் - புசிப்பவன்சீவனாவான், ஊட்டுவான்சிவன் - ஊட்டப்பட்டவன்சங்கரனாவான், இங்கு - இவ்விடத்தில், இவர்தமக்கு -இவ்விருவர்களுக்கும், ஆயபேதந்தான்- உண்டானபேதமானது, உபாதியால்வந்ததல்லது - சமஷ்டிவியஷ்டியுபாதியினால்வந்ததேயன்றி, அபேதமேயாகும்-யதார்த்தத்தில்அபேதமேதான். எ-று.

ப-ம். தன்னாற்செய்யப்படுங்கருமத்தின் பலபூதமானசரீரத்திற்பூதாகாயத்தையபேக்ஷித்துஉயர்வான இதயாகாசத்திலிருக்கின்றசத்துவபரிணாமரூபமானபுத்தியையடைந்தஜீவபரமான்மாக்களுக்குள் சத்தியமாகவரக்கடவதானகருமபலத்தைப்புசிக்கின்றவன்சீவனே பரமான்மாவன்று. அங்ஙனமேசுருதியும் 'மற்றொருவன்புசிக்காதவன், என்றுகூறிற்று. சத்திரநியாயம்போலப்புசிப்பவனும்புசிக்காதவனுமானஇருவரிடத்திலும் புசித்தலென்னுஞ்சொல்ஏறிற்று. அங்ஙனமொப்பாவிடில் நிழலும்வெய்யிலும்போன்றசமுசாரித்தன்மையும் அஸம்ஸாரித்தன்மையுமானவிலக்ஷணத்தன்மைகூடாதென்பார் "சாயையாதபமாகின்றனர்சிவசங்கரர்" என்றார். (க)

அ-கை. அவித்தையாமுபாதியால்வந்த சீவனுக்கு அவ்வவித்தையால் ஸம்ஸாரமும் வித்தையால்மோக்ஷமுமான இவ்விரண்டும்ரதரூபகற்பனையாகப் பிரதிபாதிக்கின்றார்.

வேறு.

தேசினிகழ்தேருடல்செலுத்துமதிபாகன்
பாசமனமாமதுபிணித்துவருபாய்மா
வீசுபுலனும்விடயவீதிமிசைதானு
மீசனிவையாதும்விளையாடியிடுகின்றான்.

இ-ள். தேசினிகழ்தேருடல் - பிரகாசித்துவிளங்குகின்றஇரதஞ் சரீரமாகவும், செலுத்து பாகன் மதி - அதைநடாத்துகின்றபாகன்புத்தியாகவும்,

பாசமனமாம் - கயிறுமனமாகவும், அதுபிணித்துவரு - அந்தக்கயிற்றினுற்க ட்டிவருகின்ற, பாய்மா - குதிரையானது, வீசுபுலனும்-பரம்புகின்றஐம்புலன் களாகவும், விடயவீதிமிசை - விஷயமாகியவீதியில், தானுமீசன் - ஆத்மாவா கியவீசன், இவையாதும் - இவைகளனைத்தையுங்கொண்டு, விளையாடியிடுகி ன்முன் - விளையாடுகின்முன். எ - று.

ப - ம். புத்தியாலேயே யிந்திரியங்கள் ஏவப்படுதலாற் புத்தியை, "பா கன்" என்முர்.

கருத்து. சரீரமுதலியவற்றைரதமுதலியனவாய்க் கூறியவதனுல் ஆன் மாவவற்றிற்கு நாயகனுகக்கூறப்பட்டான். சரீரமுதலியவற்ருேடுங்கூடிய ஆ ன்மா புசிப்பவனன்றி சின்மாத்திரரூபனுனவான்மா அங்ஙனமாகான்' மற் ருெருவன்புசிக்காதவ, னென்னுஞ்சுருதியிருத்தலினென்க. (௧0)

அ - கை. இங்ஙனங்கூறியரதகற்பனையைமுன்னிட்டு அவிவேகிகளுக்கு அவசமானவிந்திரியத்தன்மையும் விவேகிகளுக்குவசமானவிந்திரியத்தன்மை யுங் கூறுகின்முர்.

யோகமனமொன்றியறிவாமுணர்விலானுக்
காகமுறுமைம்புலவயங்கள்வயமாகா
பாகனையறிந்தபரிபோலமனனத்தே
யாகுமதியாளனையறிந்துவயமாமால்.

இ - ள். யோகமனமொன்றி - ஆத்மயோகத்தால்மனமொன்றி, அறி வாமுணர்விலானுக்கு - விவேகமாகியபுத்தியில்லாதவனுக்கு, ஆகமுறும் - சரீ ரத்திலிருக்கின்ற, ஐம்புலஅயங்கள் - ஐம்புலங்களாகியகுதிரைகள், வயமா கா - வசப்படாவாம், பாகனையறிந்தபரிபோல-சாரதியையறிந்தகுதிரையைப் போல, மனனத்தேயாகுமதியாளனை - மனனத்தின்கண்ணேபொருந்தியிருக் கின்றவிவேகியை, அறிந்துவயமாம் - அறிந்துவசப்படும். எ - று.

ப - ம். "பாகனையறிந்தபரிபோல" என்றதனுல், விவேகிக்கு அவ்விந்திரி யங்கள் ஏவுதற்கும் நீக்குதற்கும்வசங்களாமெனபதுபெறப்பட்டது. (௧௧)

அ - கை. இங்ஙனங்கூறியவிருவர்களும் முறையே ஸம்ஸாரமோக்ஷங் களுக்கு அதிகாரிகளென்று கூறுகின்முர்.

வருத்தமிலதாமனனமற்றமதிகேடன்
பரத்தையடையான்மிகுபவத்தையடைகின்று
னெருக்குமனனுலுணர்வுகூடினவன்வீடா
யிருக்குமிடமேவியதினின்றுமிளையானல்.

இ - ள். வருத்தமிலதாம் - வருத்தமில்லாத, மனனமற்றமதிகேடன் - மனனமில்லாதபுத்தியீனனுனவன், பரத்தையுடையான் - சிவத்தையடைய

மாட்டான், மிகுபவத்தையடைகின்றான் - மிகுந்தசனனங்களையேயடைகின்றான், ஒருக்குமனனால் - ஒருமைப்படுகின்றமனத்தினால், உணர்வுகூடினவன் - ஞானமடைந்தவன், வீடாயிருக்குமிடமேவி - மோக்ஷமாகவிருக்கின்றஇடத்தையடைந்து, அதில்நின்றும் - அவ்விடத்திலிருந்தும், இளையான் - இளைக்கமாட்டான். எ - று.

ப - ம். காமாதிகளால்வசீகரிக்கப்பட்டவனாய்ச் செய்யக்கூடாதகாரியத்தின் முயற்சியுள்ளவனாய் அசுத்தனாதலால், "மதிகேடன்" என்றார்.

கருத்து. விவேகியானவன் ஸம்ஸாரமண்டலத்தையடையாதவனாய்ப் புனராவர்த்தியில்லாத முத்திஸ்வரூபமானபிரமத்தையடைவானென்க. (கஉ)

அ - கை. மறுபடியந்தப்பதத்தைவிரித்துக்கூறுகின்றார்.

வேறு.

பொருந்துஞானமாம்பாகனான்மனத்தளைபூட்டியைம்புலப்பாய்மா
பரந்தெழாவகைதன்வசமாக்கினான்பரம்பதமடைகின்றான்
றிருந்துமாலுடைப்பதமதுவதுபரஞ்சிவனெனுந்திருநாமத்
திருந்தவாறுதானிருந்தவாறன்றிவேறிணையிலாவிறையாவன்.

இ - ள். பொருந்து - பொருந்துகின்ற, ஞானமாம்பாகனால் - விஞ்ஞானமாகியசாரதியினால், மனத்தளைபூட்டி - மனமாகியபாசத்தைப்பூட்டி, ஐம்புலப்பாய்மா - பஞ்சவிந்திரியங்களாகியகுதிரைகள், பரந்தெழாவகை - விரிந்துபோகமலிருக்கும்படி, தன்வசமாக்கினான் - தன்வசஞ்செய்தவன், பரம்பதமடைகின்றான் - பரமபதத்தையடைகின்றான், திருந்தமாலுடைப்பதமது - திருந்தியவிஷ்ணுவினதுபதமும்அதுவேயாகும், பரம்அது - உயர்வாகியஅதுவே, சிவனெனுந்திருநாமத்திருந்தவாறுதான் - சிவனென்னுந்திருநாமத்தையுடையவனாயிருந்தவாறுதான், இருந்தவாறன்றி-அப்படியிருந்தசிவபிரானைத்தவிர, இணையிலாஇறை - ஒப்பில்லாதஇறைவன், வேறுயாவன் - வேறெவனிருக்கின்றான். எ - று.

ப - ம். ஆன்மானான்மவிவேகத்தையுடைய நிச்சயரூபமானபுத்தியை, "பாகன்" எனவும், வியாபகமானபிரமத்தினுயர்ந்தசச்சிதானந்தஏகரஸஸ்வரூபத்தை ஆன்மஸ்வரூபஞானத்தால் ஸம்ஸாரபந்தத்தினீங்கி யடைகின்றானென்பதுதோன்ற, "பரம்பதமடைகின்றான் திருந்துமாலுடைப்பதமது" எனவுங் கூறினார். (கங)

அ - கை. இங்ஙனங்கூறிய சொரூபமே லீலையினால் உமையொருபாகமானசிவமாயிற்று. ஸச்சிதானந்தஏகரசமான இந்தப்பரசிவஸ்வரூபமே உருத்திரன்முதலியகுணமூர்த்திக்கும் மற்றையவிந்திராதிகட்கும் பரமபதமென்றுகூறுகின்றார்.

அருளதாலுருவொன்றியேநின்றுளவகிலநாயகனென்னும்
பொருளதேபரமாம்பதமியாவரும்புகலிடமதுவாகும்

கருணைமேவியசிவனொழிந்துருத்திரன்கண்ணனுன்முகனென்பா
ரிருளதானதில்பரம்பதமெனும்படியெங்ஙனேயிமையோரே.

இ - ள். அருளதால் - திருவருளாகியபராசத்தியுடன், உருவொன்றி யேநின்றுள - திருவுருக்கொண்டெழுந்தருளியிருக்கின்ற, அகிலநாயகனென னும்பொருளதே - சர்வேச்வரனென்னும்வஸ்துவே, பரமாம்பதம் - பரமபத மாகும், இயாவரும் - எவர்களுக்கும், புகலிடம் - தஞ்சமாகியஇடம், அது வாகும் - அந்தப்பரமபதமேயாகும், இமையோரே - தேவர்களே, கருணைமே வியசிவனொழிந்து - கிருபைபொருந்தியஸாம்பமூர்த்தியானசிவபிரானைத்தவிர, உருத்திரன்கண்ணனுன்முகனென்பார் - உருத்திரன் விஷ்ணு அயன் என்னும் மூவர்களுக்கும், இருளதானதில் - அஞ்ஞானமில்லாத, பரம்பதமெனும்படி - பரமபதமென்னும்வண்ணம், எங்ஙன் - எங்கே. எ - று.

ப - ம். திருந்துமாலுடைப்பதமதுவென்ற சுருதிவாக்கியத்திற்குத்தா னேயுரைசெய்வார் 'எவ்விடத்தில் அன்னியத்தைப்பார்க்கின்றுனில்லை கேட்கி ன்றுனில்லை' யென்றசுருதிகூறியபிரகாரம் திரிபுடிஹீனமாயத்துவிதமானதத் துவம்யாது அதுவே தேவர்நரர்முதல் எல்லார்களாலும்விரும்பத்தக்கதான நிரதிசயானந்தஸ்வரூபமானபதமென்பார், "யாவரும்புகலிடம் அதுவாகும்" என்றுர். (கஎ)

அ - கை. இந்திரியமுதலியவற்றிற்கு ஒன்றற்கொன்று சூக்குமத்தன் மையும் வியாபகத்தன்மையும்பிரத்தியக்குத்தன்மையும் தாரதம்மியமாகக்கூ றிஅடையத்தக்கபரசிவசொரூபத்திற்குநிரதிசயசூக்குமத்தன்மைமுதலியவை நிரூபிக்கின்றுர்.

இந்தியங்களிற்பொருளெனல்பரமனமிவற்றினும்பரமத்திற்
புந்திநற்பரமதினுமான்பரமெலாம்பொன்றியதெரியாமை
யந்தமானினும்பரமவ்வியத்தமாமதிற்பரம்புருடன்று
னிந்தமெய்ப்பரம்புருடனிற்பரம்பிறிதில்லைமேலிவனேயாம்.

இ - ள். இந்தியங்களில் - பஞ்சவிந்திரியங்களினும், பொருளெனல் பரம் - விஷயங்களென்பதுசிரேஷ்டமாகும், இவற்றினும் - இவைகளினும், மனம் - மனமானது, பரம் - சிரேஷ்டமாகும், அத்தில் - அதனினும், புந்தி - புத்தியானது, நற்பரம் - நல்லசிரேஷ்டமாகும், அதினுமான்பரம் - அத னினும்மகத்தத்துவஞ்சிரேஷ்டமாகும், எலாம்பொன்றியதெரியாமை - அனை த்தும்தன்கண்ணசித்தறும்அஞ்ஞானமாகிய, அவ்வியத்தம் - மாயையானது, அந்தமானினும்பரம்ஆம்-அந்தமகத்தத்துவத்தைக்காட்டிலுஞ்சிரேஷ்டமாகும், அதிற்பரம்புருடன்றுன் -அதனினும்புருடன்சிரேஷ்டனுவான், இந்தமெய்ப்பர ம்புருடனில்-இந்தவுண்மையாய்ச்சிரேஷ்டனுகியபுருஷனைக்காட்டிலும், பரம் பிறிதில்லை-சிரேஷ்டம்வேறில்லை, மேலிவனேயாம் - இந்தப்புருடனேசிரேஷ் டனுவான். எ - று.

கருத்து. பூதகாரியமாய்ஸ்தூலங்களான இந்திரியங்களைத்தங்ளுக்குவிள க்கமுண்டாகும்பொருட்டுச் சப்தமுதலியவிடயப்பொருள்களையுண்டாக்குத லின் இந்தியங்களிற்பொருளதிகமெனவும், பெரிதானஅந்தப்பொருள்களைக்கா ட்டிலும் மனமென்னுஞ்சொல்லுக்குவாச்சியமாய் மனத்திற்கு ஆரம்பகமான பூதசூக்குமம்அதிகமெனவும், அதனினும்சூக்குமமாய்மகத்தாய்ப்பிரத்தியகா ன்மபூதமான புத்தியென்னுஞ்சப்தத்திற்குவாச்சியமான அத்தியவஸாயமு தலியவையுண்டாக்கும்பூதசூக்குமமதிகமெனவும், அதனினும்ஸமஷ்டிரூபஇர ணியகருப்பசம்பந்தமுள்ளபுத்திரூபமானபெரியவான்மா எல்லாப்புத்திவிருத் திகளுக்குங்காரணமாயும் சூக்குமதரமாயும் வியாபகமாயும்பிரத்தியக்குப் பூத மாயும் இருத்தலால் அதிகனெனவும், அதனினும்அவ்வியாகிருதநாமரூபான்மக மாய் எல்லாவுலகிற்கும்பீஜபூதமாய் மாயைபிரகிருதி அவித்தையென்னும் பரி யாயங்களையுடையஅவ்வியத்தம் எல்லாவற்றினும்அதிகமெனவும், இவையெல் லாவற்றிற்குங்காரணனுய்ச்சூக்குமதரனுய் பிரத்தியகான்மாவானபுருடன்ச கலஜகத்தையும் தன்சொருபத்தாலேயேநிறைக்கின்றவனுயும் எல்லாச்சரீரங் களினுஞ்சருவாந்தரனுயுமிருக்கின்றதனுலதிகனெனவும்,சிற்கனப்பிரத்தியகா ன்மாவானபுருடனைக்காட்டிலும் மேலானபொருள்யாதொன்றுமில்லையென வும், இங்ஙனம்எல்லாவற்றிற்குங்கூறிய சூக்ஷுமத்தன்மைமுதலியவையிவ னிடத்தில் முடிந்தநிற்றலினுல் இவனேயடைகின்றவர்களானஸமுஸாரிகளு க்கு அடையப்பட்டஉயர்வானகதியாவான்.புனராவர்த்தியில்லாமையின்இக்க தியேயுயர்ந்தது மற்றைக்கதிகள்புனரார்வத்தியுடையனவாதலாலுயர்ந்தனவ ன்றெனவும்,இந்தக்கதியும்பிராப்தப்பிராப்திரூபமாதலால்ஞானமாத்திரத்தால டையத்தக்கதே யன்றிமற்றைக்கதிகளைப்போற்கிரியையாற்சாதிக்கப்படுந்தன் மையும் அனித்தியத்தன்மையும் இதற்குஉண்டென்றுசங்கிக்கத்தக்கதில்லையெ னவுமுணர்க. (கரு)

அ - கை. சுருதியிற்கூறியபுருஷபதத்திற்குரைசெய்கின்றூர்.

புருடனென்றுரைசெயப்படுவதுபரிபூரணமாகின்ற
சொருபநின்றவாநிற்கவிங்கருளொடுதோன்றவல்லவன்றூனே
யரனுமன்றுமாலயனுமன்றெவர்க்குமுள்ளாகியேயாவர்க்குந்
தெரிவருஞ்சிவனவனேயிங்கொருங்கியசிந்தையார்தெளிவாரே.

இ- ள். புருடனென்று உரைசெயப்படுவது-புருஷனென்றுசொல்லப்படு வது, பரிபூரணமாகின்ற - அகண்டபரிபூரணமாகிய, சொருபம் - தனதுசொ ரூபமாக, நின்றவாநிற்க - விளங்கிநின்றவண்ணமிருக்கவும், இங்கு - இங்கே, அருளொடு-கருணையேவடிவமாகியபராசக்தியோடு,தோன்றவல்லவன்றூனே- விளங்கவல்லவனே ஆவன், அரனுமன்று- (அவன்) உருத்திரனுமல்ல, மாலயனு மன்று - அரியயனுமல்லன், எவர்க்குமுள்ளாகி-யாவர்க்குமாந்தரனுகி, யாவர் க்குந்தெரிவரும் - எவர்களாலுமறியக்கூடாத, சிவன் - சிவபெருமானேஆ வான், அவனே - அந்தச்சிவபிரானே, இங்குஒருங்கிய- இவ்விடத்திலொருமைப் பட்ட, சிந்தையார்-சித்தத்தையுடையவர்கள், தெளிவார்-அறிவார்கள், எ-று.

ப - ம். திரிவிதபரிச்சேதமில்லாதவனுய்ச் சச்சிதானந்தலக்ஷணனுனபர சிவனே சாக்ஷாத்புருஷசத்ததத்திற்குஅபிதேயனுவான். அவனே லீலையினுல் தன்னுடையசிவசக்திருபத்தன்மையைத்தெரிவிக்கும்பொருட்டு உமைபாகனு ய்ப்பவித்தானென்பார், "இங்கருளொடுதோன்றவல்லவன்" எனவும், சகலபி ராணிகளிடத்திலும்தானுகவேயிருக்கினும் ஆவரணுவித்தையென்னுமோகத்தி னுல்மறைபொருளாகித் தேகேந்திரியாதிகளுக்கு வேருகவிளங்குகின்றுனி லலே. அங்ஙனமாயினும் இந்திரியங்களைக்காட்டிலும் உயர்வுடையன பொரு ள்களென்றுகூறியபிரகாரமே நிரதிசயசூக்கும ஆன்மதத்துவத்தைப்பார்க்கு ம்வல்லமையுடைய சூக்குமதரிசிகளானவித்துவான்களால் குருக்களாலும் சாஸ்திரங்களாலும் பரிபக்குவமாய்ஏகாக்கிரத்தையடைந்த சூக்குமபுத்தியி னுல் அந்தப்புருஷன்பார்க்கப்படுவானென்பார், "தெரிவருஞ்சிவனவனையிங் கொருங்கியசிந்தையார்தெளிவாரே" எனவுங்கூறினுர். (கசு)

அ - கை. ஆன்மதரிசனத்துக்குவேண்டு முபாயத்தைக்கூறுகின்றுர்.

வேறு.

வாக்கதுமனத்திடைவைக்குமம்மனம்
போக்கிடும்புந்தியுட்புந்திமானிலே
யாக்கிடுமந்தமானிவையனைத்தினுந்
தாக்கறுசாந்தமாந்தன்னிற்சாந்தமாம்.

இ - ள். வாக்கது-வாக்கானது, மனத்திடை-மனத்தினிடத்தில், வைக் கும் - ஒடுங்கும், அம்மனம் - அந்தமனமானது, புந்தியுள்- புத்தியினிடத்தில், போக்கிடும் - ஒடுங்கும், புந்தி - புத்தியானது, மானிலேயாக்கிடும் - மகத்தத் துவத்திலேஒடுங்கும், அந்தமானிவையனைத்தினும் - அந்தமகத்தத்துவமானது இவையெல்லாவற்றினும், தாக்கறும் - சம்பந்தமில்லாத, சாந்தமாம்தன்னில்- சாந்தமாகியஆன்மாவானதன்னிடத்தில், சாந்தமாம் - ஒடுங்கும். எ - று.

ப- ம். புறக்கரணங்களெல்லாவற்றையும்மனத்தினும், அதனைச்சொப்பிர காசசொருபமானபுத்தியென்னுமான்மாவினிடத்தினும்,அதனைஸமஷ்டிபூதமா யும்சூக்குமதரமாயுமுள்ளஹிரண்யகருப்பனெனனுமுபாதியினும்அதனைச்சொ ருபபோதஸத்துவமாயச் சாந்தமாய் நாமருபங்களொன்றுமில்லாததாய் நிரு விகாரமாயச்சாக்ஷிசின்மாத்திரருபமாய் முக்கியமான ஆன்மாவினிடத்திலொ டுக்கிப் பரிபூரணஸ்வப்பிரகாசாநுசந்தானபரனுய்ப்பவிக்கத்தக்கவனென்பது தோன்ற, "இவையனைத்தினுந்தாக்கறு சாநதமாந்தன்னிற்சாந்தமாம்" என வுங்கூறினுர். (கஎ)

அ - கை - பிருதிவிமுதலிய பூதங்களுக்கு முறையே ஒவ்வொருகுணங்களி ல்லாமையினுல் ஒன்றற்கொனறு சூக்குமதாரதம்மியங்காணப்படுகின்றது எனவேஒருகுணமுமில்லாதஆன்மாவிறகு நிரதிசயசூக்ஷூமத்தன்மைசொல லவேண்டுவதில்லையாயிற்று. எனக்கருதிச்சப்தாதிகளை நிஷேதித்துஆன்மசொ ருபத்தைக்கூறுகின்றுர்.

ஒலிமுதலுரைப்பனவொன்றுமின்றியே
யெலையிலதாகியெப்பொருட்குமேலதாய்ச்
சலமதின்றியவதுதன்னைத்தம்முளே
நிலைபெறவறிந்தவர்மரணநீங்குவார்.

இ-ள். ஒலிமுதல் - சத்தமுதலாக, உரைப்பனவொன்று மின்றி - சொல்லப்பட்டனவொன்றுமில்லாமல், எலையிலதாகி - எல்லையில்லாததாயும், எப்பொருட்கும்-அனைத்திற்கும், மேலதாய் - உயர்வாயும், சலமதின்றியவது தன்னை -சாந்தமாயுமுள்ளஅதனை, தம்முளே - தனதுஇருதயத்தின்கண்ணே, நிலைபெற அறிந்தவர் - திரமாகவுணர்ந்தவர்கள், மரணம்நீங்குவார் - சனன மரணத்தைக்கடப்பார்கள். எ - று.

கருத்து. பரமான்மஞானத்தைநிச்சயஞ்செய்தவர் அவித்தியாகாமக ருமத்தையிலக்கணமாகவுடையஸம்ஸாரத்தினின்றும் விடுதலையடைகின்றாரெ ன்றுணர்க. (கஅ)

அ-கை. இங்ஙனங்கூறியஆன்மாவை யாவருமறியாததற்குக்காரண ங்கூறுகின்றார்.

வேறு.

பரப்பினனிந்தியங்களைப்பார்க்குறப்பரம்பரனுள்ளாகி
யிருத்தலாலறிவொண்கிலன்புறம்புளவிதரமேகாண்கின்றான்
திருப்பிஞானநாட்டத்தினலப்பொருடெரியவேபெறுந்தீர
னொருத்தனேயவிநாசியாம்பரவொளியாயவனொளிர்கின்றான்.

இ-ள். பார்க்குற - ஜகத்தைக்காணும்பொருட்டு, இந்தியங்களை -ஐம் பொறிகளையும், பரப்பினன்-விரிவாகச்சிருட்டித்தவனாகிய, பரம்பரன்-பரம சிவன், உள்ளாகியிருத்தலால்-ஆந்தரப்பொருளாகஇருத்தலால், அறிவொண்கி லன்-அறிதற்கரியவனாகலின், புறம்புள-(சீவன்)பாகியத்திலுள்ள, இதரமேகா ண்கின்றான்-பின்னங்களையேபார்க்கின்றான், திருப்பி - ஆந்தரவழியேதிருப்பி, ஞானநாட்டத்தினால் - ஞானக்கண்ணால், அப்பொருள்- அந்தப்பரசிவனை, தெ ரியவேபெறும் - காணப்பெற்ற, தீரனொருத்தனே - தீரனாகியவொருவனே, அவிநாசியாம் - நாசமில்லாதவனாவான், பரவொளியாய் - பிரமசொரூபமா யும், அவன் - அவனே, ஒளிர்கின்றான் -பிரகாசிக்கின்றான். எ - று. (கக)

இதுவுமது.

பேதமாகிவேறாகியபொருள்கண்மேற்பேதமையதனாலே
காதன்மேவினர்காலபாசத்திலேகட்டுணக்கடவாரே
யாதலாலழிவின்றியபொருளிலேயறிஞராதரித்தல்லா
லேதுமாதரித்திடாதவரப்பொருளெய்தியேயிருக்கின்றார்.

இ-ள். பேதமாகி - பின்னமாகி, வேறாகியபொருள்கள்மேல் - வேறா யிருக்கின்றவிடயங்களில், பேதமையதனால் - மடமையால், காதல்மேவினர்-

ஆசைகொண்டவர்கள், காலபாசத்தில்- யமனதுபாசக்கயிற்றினல், கட்டுணெக்கடவார்- பிணிக்கப்படுவோர்கள், ஆதலால் -ஆகையால், அழிவின்றியபொருளில் - நாசமில்லாதவஸ்துவினிடத்தில், அறிஞராதரித்தல்லால் - விவேகிகள் அன்புவைப்பதேயன்றி, ஏதும்ஆதரித்திடாது - மற்றெதனிடத்தும்அன்புசெய்யாமல், அவர்-அவ்வறிஞர், அப்பொருள் - அந்தவஸ்துவை, எய்தியேஇருக்கின்றார் - அடைந்தேயிருக்கின்றார்கள். எ - று. (உ0)

அ - கை. அவ்வான்மாவையடையுமுபாயங்கூறுகின்றார்.

வேறு.

சத்தப்பரிசவுருவிரதங்கந்தாதிசமைந்தனமுதலா
வெத்தைக்கொண்டிங்கறிகின்றானதனையொழியவேதுளதா
மத்தற்பரத்தைக்கண்டிந்தவவத்தைமூன்றுங்காணமை
சித்தித்திருக்குமவனலமுந்தீங்குமின்றித்திகழ்கின்றான்.

இ - ள். சத்தப்பரிசவுருவிரதங்கந்தாதிசமைந்தனமுதலா-சப்தம் ஸ்பரிசம் உருவம் இரதம் கந்தமுதலாகப்பொருந்தியஅனைத்தையும், எத்தைக்கொண்டு- எதனுல், இங்கறிகின்றான்- இவ்விடத்திலறிகின்றானே, அதனையொழிய-அதைத்தவிர, ஏதுளதாம் - யாதிருக்கின்றதாகும், அத்தற்பரத்தைக்கண்டு-அந்தப்பிரமத்தையபரோக்ஷமாகப்பார்த்து, இந்தஅவத்தைமூன்றும் - இந்த மூன்றவஸ்தைகளையும், காணமை - (ஆன்மாவாகியதன்னிடத்திற்) காணதிருக்கின்றதன்மை, சித்தித்திருக்குமவன் - சித்தித்திருக்கின்றஅவன், நலமுந்தீங்குமின்றி - நன்மையுந்தீமையுமில்லாமல், திகழ்கின்றான் - விளங்குகின்றான். எ - று.

கருத்து. தேகமுதலியகூட்டங்களுக்குவேறாய்ச் சின்மாத்திரப்பிரகாசமானஆன்மாவினலேயே ரூபமுதலியஎல்லாவிடயங்களுமறியப்படுதலின் ரூபமுதலியஎல்லாப்பிரத்தியயங்களுக்குஞ்சாக்ஷியே யான்மாவாவானன்றிக் கடம்போல ரூபமுதலியவைகளையுடையஅனன்மாக்களான தேகேந்திரியமுதலியவைகள்அன்றெனவும், எல்லாஞ்சின்மாத்திரரூபனனஆன்மாவினலேயேயறியப்படுதலால் ஒருவஸ்துவுஞ்சேஷிக்கவில்லையெனவுங்கொள்க. (உக)

அ - கை. சாக்ஷியான ஆன்மசொரூபத்தைவிசேஷித்துக்கூறுகின்றார்.

மூன்றாகின்றவவத்தையெனமொழியும்புரங்கண்மூன்றுணருஞ்
சான்றாயறியிலறிகின்றதன்னில்வேறாகாதவைதா
னான்றாவுணர்வேயுருவானவொளியேயுளதாய்வித்தாகித்
தோன்றாநின்றுந்தோன்றாதுதிகழ்வானென்றுஞ்சுதந்தரத்தால்.

இ-ள். மூன்றாகின்றஅவத்தையெனமொழியும் - மும்மையாகியஅவஸ்தைகளென்கின்ற, புரங்கள்மூன்று - முப்புரங்களையும், உணருஞ்சான்றாயறியில்-அறிகின்றசாட்சியாகத் (தன்னை) ப்பார்த்தால், அறிகின்றதன்னில்-அவ்வாறறி

ன்றதன்னைத்தவிர, அவைதான்வேருகாது - அந்தமூன்றவஸ்தைகளும்பின்னமாகாது, ஊன்ருவுணர்வேயுருவான-தள்ளக்கூடாதஞானமேருபமாகிய, ஒளியேயுளதாய் - விளக்கமேயிருப்பதாயும், வித்தாகி - காரணவஸ்துவாயும், தோன்ருநின்றும் - விளங்கியும், என்றும் - எக்காலத்தும், சுதந்தரத்தால் - சுதந்தரத்தினுல்,தோன்ருதுநிகழ்வான்-திரிசியமாகாமல்விளங்குவான். எ-று.

ப-ம். சிதான்மாவினுல்விளங்கும்மூன்றவஸ்தைகளும் மற்றைத்திரிசியம்போல அவனிடத்திலத்தியாசிக்கப்பட்டதாதலால் அவனுக்குவேருயில்லையென்பார்,"தன்னில்வேருகாதவைதான்" எனவும், பரசிவன் சுதந்தரனுதலிற்றன்னுடையமாயாவிலாஸத்தினுல் மூன்றுபுரங்களாக ஒருகால்விளங்குகின்ருன், தத்துவமாக அப்படிவிளங்குகின்ருனில்லை, ஒருபாதிகளுமின்றித்தானேவிளங்குகின்ருனென்பார், "தோன்ருநின்றுந்தோன்ருது நிகழ்வானென்றுஞ் சுதந்தரத்தால்" எனவுங்கூறினுர். (உஉ)

அ-கை. 'யாதொன்று இகத்தில்அதுவேபரத்திலும் யாதொன்றுபரத்தில் அதுவேயிகத்திலென்ற, சுருதியின்தாற்பரியத்தைக்கூறுகின்ருர்.

வேறு.

பரமிகமாய்நிகழ்ந்ததுபரம்பொரு
ளொருபொருள்பிறிதிலையுளதுபோற்பல
கருதுமேலவன்கணிற்காண்பதெங்கணு
மரணமேமரணமேமறித்துஞ்சார்வதே.

இ-ள். பரம்பொருள்-பிரமமே, பரம்இகமாய்நிகழ்ந்தது -பரத்திலும் இகத்திலுமிருப்பதாகிவிளங்குகின்றது, ஒருபொருள்பிறிதிலை-அந்தவொருபொருளைத்தவிரவேருென்றுமில்லை, உளதுபோற்பலகருதுமேல் - இருக்கின்றதுபோலப்பலவாகக்கருதுவனேல், எங்கணும்-எங்கும், அவன்கணில் - அவனிடத்தில், காண்பது - காணப்பட்டது, மரணமே - மரணமேதான், மறித்தும் - மறுபடியும்பிறந்து, மரணமே சார்வது - அவனுக்குமரணமேபொருந்துகின்றது. எ-று.

ப-ம். யாதொருஇந்தக்காரியகாரணஸமூகத்திலிருக்கின்ற ஸச்சிதானந்தஏகரஸமானதத்துவமோ, யாதொன்றஜகத்காரணமாய்ஸர்வஞ்ஞனுய் சூரியாத்மகமானபிரமத்தினிடத்திலுமிருக்கின்றதோ, அவ்விரண்டும்எப்போதும் ஒன்றேதான். கிஞ்சிக்கியத்தன்மையும்சருவக்கியத்தன்மையுமானபேதத்தோற்றம் மாயை அவித்தைஎன்னுமுபாதிகளால்வந்ததாகலிற் பேதமவர்கட்கில்லை. அங்ஙனமேசுருதியும், இந்தப்புருடனிடத்தில்யாவன் யாவன்ஆதித்தனிடத்தில்அவனெருவனென்று, கூறிற்றென்பதுதோன்ற, "பரமிகமாய்நிகழ்ந்ததுபரம்பொருளொருபொருள்" என்ருர். (உ௩)

அ-கை. பரமானபிரமத்தைக்காட்டிலும் எல்லாவுலகிற்கும்பேதமனுபவிக்கப்படுகின்றதென்றுசங்கித்து உபமானத்துடன் அத்தாதான்மியத்தைக் கூறுகின்ருர்.

வன்னிதானொருவனுயிருக்கமற்றவன்
றன்னியவுருவமாய்த்தோன்றுமாறுபோ
லின்னதெனுமலுட்புகுந்துமேகனு
யன்னியனுகியொன்ருேடுமோர்ப்புருன்.

இ-ள். வன்னிதான் ஒருவனுயிருக்க - அக்கினியானவனொருவனுயிருக்கவும், மற்றவன் - அந்தஅக்கினியானவன், றன்னியஉருவமாய்த் தோன்றுமாறுபோல் - தான்பொருந்தியபொருள்களின்வடிவமாகக்காணுந் தன்மைபோல, இன்னதெனுமல்- இன்னதென்று குறிக்கப்படாமல், உட்புகுந்து- சரீரத்துட்புகுந்தும், ஏகனுய் - ஏகசொருபனுயும், அன்னியனுகி - அன்னியசொருபங்களாயும் இருந்தும், ஒன்ருேடும் ஆர்ப்புருன் - ஒன்ருேடுஞ்சம்பந்தப்படமாட்டான். எ-று.

ப-ம். எப்படியொருவனுன அக்கினியே உலகத்தையனுப்பிரவேசித்துத் தகிக்கப்படுவனவான விறகுமுதலியபேதருபங்களிற்சென்று தகிக்கப்படும் பொருளுக்குச்சமானவுருவத்தை யடைகின்ருன், அப்படியே ஸச்சிதானந்தருபபரசிவனொருவனே யெல்லாப்பிராணிகளுக்குமந்தராத்மாவாய்த் தேவமனுஷ்யாதி சரீரத்தையடைந்து அந்த அந்தருபங்கள்போலாகின்ருன். அங்ஙனமாயினும் பிரபஞ்சத்திற்குவேருகத்தனக்கு ஸ்பாவமாயுள்ள நிருபாதிகசொருபமாயிருக்கின்ருனென்பார், "இன்னதெனுமலுட்புகுந்துமேகனுயன்னியனுகி" எனவும், ஒருவனுயுள்ளஆன்மாவே அங்கங்கே அந்தவந்தருபமாகியிருக்கினும் அதனுற்செய்யப்படும்ஸம்ஸாரதுக்கத்தினனுபவமும் அவனுக்குண்டாகாது. எப்படிச்சூரியன்எல்லாவுலகத்திற்குங்கண்ணொளியாகிக்கண்ணுக்கு உபகாரஞ்செய்து கண்ணுயிருக்கினும் அசுபமுதலியவற்றின்தரிசனத்தாலுண்டானஅத்தியான்மங்களாயும் பாகியங்களாயுமுள்ளபாபதோஷங்களோடுஞ் சேராதவனுவனே, அப்படியே ஏகனுய்ச் சர்வபூதங்களுக்குமந்தராத்மாவாயினும் அந்தப்பிராணிசமூகங்களைக்காட்டிலும் வேருய் அவர்களுடையதுக்கத்தோடுஞ்சேராதவனுவான். அவித்தையால்இவ்வான்மாவிற்கு ஸம்ஸாரதுக்கத்தோற்றமேயன்றிப் பரமார்த்தமானவுபாதியிலில்லை இல்லாததாய் அனுதியானஸம்ஸாரதுக்கத்தோடும் பரமார்த்தபூதனுனஆன்மாவிற்கு எப்படிச்சம்பந்தங்கூடுமென்பதுதோன்ற, "ஒன்ருேடுமோர்ப்புருன்" என்ருர். (உ௪)

அ-கை. ஸர்வங்களுக்கும்முக்கியனுனஆன்மாஒருவனே. இவனுக்குச்சமானமாகவும் அதிகமாகவும் ஒருவனில்லையெனவும், எல்லாவுலகுமெங்ஙனமிவன்வசமாகுமெனவும், இவனுக்குச்சர்வாந்தரமான ஆன்மத்தன்மை யெங்ஙனமெனவுஞ், சங்கித்துங்கூறுகின்ருர்.

வேறு.

எல்லாம்வசிகரிப்பானுயெதுக்குமுள்ளாமொருவடிவைப்
பல்லாயிரங்கோடிகளாகப்பண்ணுநிற்கும்பரம்பரனை

யல்லாதொன்றுமில்லையெனவனுபவத்தாலகத்துணர
வல்லார்தமக்குப்பேரின்பம்வடிவாய்மொழியுமாமறைதான்.

இ-ள். எல்லாம்வசிகரிப்பானும் - அனைத்தையுந்தனக்குவசப்படுத்து கின்றவனும், எதுக்குமுள்ளாம்-அனைத்திற்குமாந்தரமாயுமிருக்கின்ற, ஒரு வடிவை - ஏகசொரூபத்தை, பல்லாயிரங்கோடிகளாக - பல்லாயிரங்கோடியண்டங்களாக, பண்ணுகிற்கும் - செய்கின்ற, பரம்பரனையல்லாது - பரமசிவனைத்தவிர, ஒன்றுமில்லையென - ஒன்றுமில்லையென்று, அனுபவத்தால் - சுவானுபவத்தால், அகத்துணரவல்லார்தமக்கு - மனத்தில்அறியவல்லவர்களுக்கு, பேரின்பம்வடிவாய் - பேரின்பமேசொரூபமாக, மாமறைதான் - பெருமை பொருந்தியவேதங்கள், மொழியும் - சொல்லுகின்றன. எ-று.

ப-ம். இதயாகாசத்திலிருக்கின்ற ஆன்மாவைக்குருசாஸ்திரங்களுடையஉபதேசத்தால் ஸாக்ஷாத்தாக எவர்களனுபவிக்கின்றார்களோவிவேகிகளாய்ப்பிரமசொரூபமான அவர்களுக்கே நிரதிசயாபிவியத்தியாய்நித்தியமானசுகமுண்டாகுமென்பார், "அனுபவத்தாலகத்துணரவல்லார்தமக்குப்பேரின்பம்வடிவாய்மொழியுமாமறைதான்" என்றார்.

கருத்து. மற்றையர்களானஅஞ்ஞர்களுக்கு சத்தப்பரிசமுதலியவிஷயங்களாலுண்டாகிய அநித்தியமானசுகமேதான். இவ்விஷயசுகம் சுபகருமத்தால்வைக்கப்பட்ட புத்திவிருத்தியையனுசரித்துநிற்றலின் க்ஷணிகத்தன்மையுள்ளதாகுமென்க. (உரு)

அ-கை. நித்தியானித்தியங்களுக்குச்சேதனன் சேதனங்களுக்கு, என்ற சுருதியின்பொருளைக்கூறுகின்றார்.

யாவனறியப்படாமையினுலிவ்வேறுண்டாமிவ்வேறெத்
தேவனுலேநிலைபெற்றுச்சேதனங்களாய்த்திகழு
மோவலறவேயப்பரனையுள்ளத்துணர்ந்தோருள்ளத்தே
தாவில்சாந்திகுடிகொள்ளுமல்லாதவரைச்சாராதால்.

இ-ள. யாவன் - எவன், அறியப்படாமையினுல்-தானாகவுணரப்படாததனுல், இவ்வேறுண்டாம் -இந்தப்பின்னங்களானசகங்கள்தோற்றுகின்றன, இவ்வேறு - இச்செகங்கள், எத்தேவனுல் - எந்தத்தேவனுல், நிலைபெற்று-திரமாகி, சேதனங்களாய்த்திகழும்-சேதனங்களாகவிளங்குகின்றன, அப்பரனை-அந்தப்பரசிவனை, ஓவல்அறவே - ஒழிவின்றிப்பத்தியாக, உள்ளத்துணர்ந்தோர் - மனத்திலறிந்தவர்களது, உள்ளத்தே- இருதயத்தின்கண்ணே, தாவில் சாந்திகுடிகொள்ளும் - குறைவில்லாதசாந்தியானது குடிகொண்டிருக்கும், அல்லாதவரைச்சாராது-அவ்வாறுணராதவர்களிடத்திற்பொருந்தாது. எ-று.

ப-ம். துவிதப்பிரபஞ்சமானது அஞ்ஞானவசத்தாற் சுயம்பிரகாசமானபிரமத்திலத்தியாசிக்கப்பட்டு விசித்திரமானவெவ்வேறுநாமரூபங்களாகத்தோ

ன்றுகின்றதென்றுதெரிவிப்பார், "யாவனறியப்படாமையினுலிவ்வேறுண்டாம்" எனவும், எந்தச்சத்தையின்சம்பந்தத்தால்ஆகாசாதிகளும்வியாவகாரிகமாகவித்தியங்களாகும். எந்தச்சைதன்னியத்தையனுசரித்தபெலத்தினுல் சுரர்நரர்முதலியவர்கள்சேதனர்களாகின்முர்களென்பார், "இவ்வேறெத்தேவனுலே நிலைபெற்றுச்சேதனங்களாய்த்திகழும்" எனவுங்கூறினுர். (உசு)

அ - கை. குறிக்கக்கூடாதஆன்மசுகமானது சாதகனுக்குச்சாமானியமாய்விளங்குகின்றதா விஸ்பஷ்டமாய்விளங்குகின்றதா விளங்குகின்றதில்லையாவென்றசங்கைக்கு, சாமானியமாய்விளங்குகின்றதும்விசேஷமாய்விளங்குகின்றதும்ஆன்மாவேயென்றுஉத்தரங்கூறுவார்'அவ்விடத்திற்சூரியன்விளங்குகின்றுனில்லை' யென்றசுருதியின்பொருளைக்கூறுகின்முர்.

வேறு.

இதுவதெனவொண்ணுதவெல்லையில்பேரின்பத்தை
யதுவிதுவென்பர்களறிவோவறியாமையோவறிவே
யெதுவுமிறையானிகழ்வதிறைநிகழ்விலிவையொன்ரு
மதிபரிதியனலொளியுமறுவில்பரனுலொளியாம்.

இ - ள். இதுவதெனவொண்ணுத - இதுஅதுஎன்றுகருதக்கூடாத, எல்லையில்பேரின்பத்தை - அளவில்லாதபேரானந்தத்தை, அதுவிதுவென்பர்கள் - (பிரமநிஷ்டர்கள்) அதுஇதுஎன்றுஅனுபவித்துச்சொல்லுவார்கள், அறிவோ - (அதுஇப்பொழுதுள்ளவர்களுக்குவிளங்குகின்றதாக)அறியப்படுமோ, அறியாமையோ - (விளங்காததாக) அறியப்படாதோஎனின், அறிவே- அறியப்பட்டதாகும், எதுவும் - அனைத்தும், இறையால் - பரமசிவத்தினுல், நிகழ்வது - பிரகாசிக்கின்றது, இறைநிகழ்வில் - அந்தப்பரமசிவப்பிரகாசத்தில், இவையொன்ரு - இவைகள்பொருந்தாவாம், மதி - சந்திரன், பரிதி - சூரியன், அனல்- அக்கினியென்னுமிவர்களது, ஒளியும் - பிரகாசமும், மறுவில்- குற்றமற்ற, பரனுல் - பிரமத்தினுல், ஒளியாம் - விளக்கமாகும். எ - று.

கருத்து. ஸ்வபாவமானபானம் ஆன்மாவிற்கேயன்றி அன்னியங்களானபௌதிகங்களெல்லாவற்றிற்குமில்லை. ஆதலால் ஸ்வப்பிரகாசசித்தேகரஸமாய்த்தனதுசொரூபமானநிரதிசயசுகமே எப்போதும்விளங்குகின்றதும் விசேஷமாய்விளங்குகின்றதுமென்றுணர்க. (உஎ)

அ - கை. தோன்றுகின்றகாரியப்பிரபஞ்சங்களுக்குமூலமாயொருகாரணமில்லாமலிருக்குந்தன்மைகூடாமையினுல் மூலகாரணத்திற்கு இருக்குந்தன்மைகூறுகின்முர்.

வேறு.

அரசதொன்றும்பர்வேராகிநீள்சாகைகிழ்
நிரைசெய்தெங்கணுநிறைந்தென்றுநின்றுள்ளதாற்
கரையிலண்டங்களெல்லாமதன்கண்ணதா
மொருபரம்பொருள்கட்டுரைத்திடவொணுதொருவரால்.

இ-ள். அரசதொன்று-அரசமரம்ஒன்று, உம்பர்வேராகி-ஊர்த்துவபாகத்தில்வேருடையதாகி, நீள்சாகைகீழ்நிரைசெய்து - நீண்டசாகைகளைஅதோபாகத்தில்ஒழுங்காகப்பரப்பிக்கொண்டு, எங்கணும்நிறைந்து - எங்கும்நிறைந்து, என்றும்நின்றுள்ளது -எக்காலத்தும்நின்றுள்ளது, கரையிலண்டங்களெல்லாம் - கரையில்லாதஅண்டங்களனைத்தும், அதன்கண்ணதாம் - அந்தமூலப்பிரமத்தினிடத்திலிருக்கின்றதாம், ஒருவரால்-ஒருவராலும், ஒருபரம்பொருள்-ஏகமானபிரமசொரூபத்தை, கடந்திடவொணுது -கடக்கக்கூடாது. எ-று.

ப - ம்.அவ்வியத்தமுதல் ஸ்தாவரம்வரைக்குமுள்ள ஸம்ஸாரவிருக்ஷத்திற்குவேரானது ஸம்ஸாரமண்டலத்திற்கு மேலிராநின்றதாய் முன்சொல்லிய ஒருபாதியுமில்லாதபிரமமேயாகலின், "அரசதொன்றும்பர்வேராகி" எனவும், சுவர்க்கநரகங்களேகுறுக்கு நீட்டங்களானசாகைகளாகலின், "சாகைகீழ்நிரைசெய்து"எனவும், இந்தச்சமுசாரவிருக்ஷத்திற்குமூலகாரணமானபிரமம்ஸம்ஸாரதோஷத்தோடுஞ்சேராததாய்அழிவில்லாதஸ்வபாவமாயிருத்தலாலும், பரமார்த்தசத்தியமான இப்பிரமத்தினிடத்தில்மாயாவிலாசத்தினுல்எல்லாவுலகங்களும் ஆசிரயித்திருக்கின்றனவாய்ப்பரமார்த்தங்கள்போலத்தோற்றுதலாலும்,இங்ஙனங்கூறியகாரியமானஸம்ஸாரவிருக்ஷமும் வாசாரம்பணமாய்க்கந்தருவநகரமுதலியவைபோற்பொய்யாதலாலும், எல்லாவுலகிற்கும்உற்பத்திஸ்திதிலயங்களுக்குக் காரணமான பிரமத்தைஒருவிகாரமுந்தாண்டாதென்பார், "ஒருபரம்பொருள்கடந்திடவொணுதொருவரால்" எனவுங்கூறினுர். (உஅ)

அ - கை. சுருதியினுல் எந்தப்பொருளின்ஞானத்தால் அமிர்தத்தன்மை சித்திக்குமென்றுகூறப்பட்டது அதனையும் பிரமத்திற்குக் கூறியபயஹேதுத்துவத்தைவிரித்துங்கூறுகின்றுர்.

> எச்சகத்துஞ்சலிப்பிக்குமீசானனும்
> வச்சிரத்தைப்பெறுமனிதன்வீடுறுமிவற்
> கச்சமுற்றங்கிகாலர்க்கனிந்திரன்யம
> னிச்சயிப்பானதந்தொழில்செயாநிற்பரால்.

இ - ள். எச்சகத்தும் - எந்தச்சகங்களையும், சலிப்பிக்கும் - சலிக்கச்செய்கின்ற, ஈசானனும் - ஈசானனுகிய, வச்சிரத்தைப்பெறுமனிதன் - வச்சிரத்தைப்பெறுகின்றஒருமனிதன், வீடுறும் - மோட்சத்தையடைவான், இவற்கச்சமுற்று - இந்தச்சிவத்தினிடத்திற்பயமுற்று, அங்கி - அக்கினி, கால் - வாயு, அர்க்கன் - சூரியன், இந்திரன் - தேவேந்திரன், யமன் - நமன் (என்னுமிவர்கள்), நிச்சயிப்பான - நிச்சயிக்கப்பட்டனவாகிய, தந்தொழில்செயாநிற்பர் - தங்கள்தொழில்களைச்செய்கின்றுர்கள். எ - று.

கருத்து. அக்கினிமுதலியதிக்குப்பாலகர்களும் அவனிடத்திற்பயந்துதத்தந்தொழில்களின் முயற்சிசெய்துகொண்டிருக்கின்றுர்களென்னில் அன்னியர்களுக்குப்பயஹேதுவாமென்றுசொல்லவேண்டுவதில்லையாயிற்று. (உகூ)

அ-கை. இவ்விடத்தில் அசக்தனுயின்எனவும், எப்படிக்கண்ணுடியிலெனவும், இந்திரியங்களுக்கு வேறுபாட்டைஎனவும்,கூறியசுருதிகளின் பொருளைக்கூறுகின்முர்.

வேறு.

உண்ணுடியாகத்தினுணராதவன்ருனுடம்பாமுடம்புக்குளேகாணலாகுங், கண்ணுடிபோலப்பிராணுதிகத்தைக் கடம்போற்கழித் துக்கழித்தற்றபின்னைக்,கண்ணுனபரனன்றிவேறின்மையாலக்கண்ணுனவனுபூதியாகின்றகண்ணு, லெண்ணுரும்வேறின்மைகண்டார்களேரே யிறவாதுபிறவாதெலாமாயிருப்பார்.

இ-ள். ஆகத்தின் - இந்தச்சரீரத்தில், உண்ணுடி - உள்ளோநாடி, உணராதவன் - தன்னையறியாதவனே, உடம்பாம்-உடம்பாகக்கொள்வான், கண்ணுடிபோல - கண்ணுடியைப்போல், உடம்புக்குளே - தனதுசரீரத்துள்ளே, காணலாகும் - பார்க்கத்தக்க, பிராணுதிகத்தை - பிராணன்முதலியவற்றை, கடம்போற்கழித்து - கடத்தைப்போலநீக்கி, கழித்தற்றபின்னை - (அவ்வாறு) கழித்துநீங்கியபின்பு, கண்ணுனபரனன்றி - திருக்கானபரனைத்தவிர, வேறின்மையால் - பின்னமாகவொருவஸ்துவுமில்லாததனுல், அக்கண்ணுனவனுபூதியாகின்றகண்ணுல் - அத்திருக்கானவனுபவமாகியநேத்திரத்தினுல், நேரே-அபரோக்ஷமாக, எண்ணுரும் - கருதுகின்ற, வேறின்மைகண்டார்கள் - பின்னமில்லாததன்மையைக்கண்டவர்கள், எலாமாய் - சகலமுந்தானுகி, இறவாது-அழியாமலும், பிறவாது-ஜனிக்காமலும், இருப்பார்-இருப்பார்கள். எ-று.

ப-ம். வித்தியாதிகாரத்திற்கு யோக்கியமான இந்தச்சரீரமிருக்குங்காலத்தே பிரத்தியகான்மாவை'அனவச்சின்னபரசிவசொரூபமாகஅறிகிறதற்கு எவன் அசக்தனுகின்முனோஅவன்எல்லாவுலகங்களிலும் புண்ணியபாபங்களின்வசத்தினுற் சரீரத்தைச்சுமக்கும்பொருட்டே சிருஷ்டிக்கப்படுவான் என்பார், "உண்ணுடியாகத்தினுணராதவன்ருனுடம்பாம்"எனவும், எப்படிஅழுக்கில்லாத கண்ணுடியிற்றன்னுடையரூபத்தைநன்முகப் பார்க்கின்முனோ அப்படியே இந்தமானிடசரீரத்தில் சிரவணமனனமுதலிய ஸாதனகலாபானுஷ்டானத்தால் ஆன்மாவைப் பிரமரூபமாகச்சாக்ஷாத்கரிக்கலாமன்றிமற்றையெவ்விடத்திலும்ஸாதனுநுஷ்டானமுண்டாகாததனுல் இந்தஞானம்சுலபமன்றென்பதுதோன்ற, "உடம்புக்குளேகாணலாகுங்கண்ணுடிபோல்" எனவுங் கூறினுர்.

கருத்து. இந்திரியங்கள்மனம்சத்துவம் ஆன்மா அவ்வியத்தம்என்னுந்தத்துவங்கள் முறையேகாரணமாய்ச்சூக்குமமாதலால், ஒன்றற்கொன்றுஉத்தமத்தன்மையைக்கூறி இவ்வெல்லாவற்றிற்கும்ஸாக்ஷாத்தாய்வியாபகனுனபுருஷன் லிங்கசரீரத்திற்கு வேருயுள்ளவனுகலிற், சகலபுண்ணியபாபங்களின்சம்பந்தமும்லிங்கசரீரத்திற்காதலால் அதைநிஷேதித்தலினுல்ஆன்மாவிற்குஸம்ஸாரஸம்பந்தமில்லையென்று வடநூலிற் கூறியபொருளைமுன்பிவ்வத்தியாயத்தில்

"இந்தியங்களிற் பொருளதுபரமெனும்" செய்யுளிற்சொல்லிக்கிடந்ததென்றத
னை விடுத்தறஉங்காண்க. (௩௦)

அ - கை. இந்தநிருபாதிகனை ஆன்மாவையெப்படியறிகின்றதென்று
சங்கித்து அதற்குச்சமாதானமும், எவர்கள்இவனையறிகின்றார்களென்ற, சுரு
தியின்பொருளைக் கூறிக்கூறுததாயுள்ள சுருதிவாக்கியங்களுக்கும் பொருளைத்
தாற்பரியமாய்ச் சங்கிரகித்துக்கூறுகின்றார்.

வேறு.

ஒருவருங்கண்ணாற்காணவொண்ணுமதன்றுள்ளத்தாற்
கருதவுந்துணிந்தங்கொன்றக்கடவதுமலாததைத்தான்
சுருதியாலனுபவத்தாற்றுணிந்தவர்சுகசொரூப
மருவியேமாண்டுமீண்டுவரும்வழிமறப்பரன்றே.

இ - ள். ஒருவரும் - யாவர்களும், கண்ணாற்காணவொண்ணுமதன்று -
நேத்திரத்தினாற்பார்க்கத்தக்கதல்ல, உள்ளத்தாற்கருதவும் - மனத்தினால்நினை
க்கவும், துணிந்து அங்குஒன்றக்கடவதும்அலாது-நிச்சயித்துஅங்குப்பொருந்தக்
கடவதுமன்றி, அதைத்தான்-அந்தச்சொரூபத்தை, சுருதியால்- சுருதியினாலு
ம், அனுபவத்தால் - அனுபவத்தினாலும், துணிந்தவர் - அறிந்தவர்கள், சுக
சொரூபமருவி - சுகசொரூபத்தையடைந்து, மாண்டுமீண்டுவரும்வழி- இற
ந்துதிரும்பவும்பிறக்கும்வழியை, மறப்பர் - மறந்துவிடுவார்கள். எ - று.

ப - ம். மனனரூபமானஸம்யக்தரிசனத்தினால் என்பார், "உள்ளத்தாற்
கருதவும்" என்றார். கண்ணாற்காணவொண்ணுமதன்று, என்றதனால் மற்றை
யிந்திரியங்களாலுங்காண்பரியதென்பதூஉம்பெற்றாம். (௩௧)

அ - கை. இவ்வாறுகடவல்லியுபநிஷதத்தால் ஸச்சிதானந்தஏகரஸப்பி
ரமான்மஐக்கியபரத்தன்மையைத்தெரிவித்து, சுவேதாச்வதர உபநிஷதத்திற்
கும் அத்தன்மையைச்சேஷத்தாற்கூறப்புகுந்தார், அவ்வுபநிடதத்தில் யாதுஜ
கத்காரணமதுவேபிரமமென்றறியும்பொருட்டுக் காலம்சுபாவம்நியதியதிர்ச்
சைஎன்றதுமுதலியவற்றுற்காலமுதலியவற்றிற்குஜகத்காரணத்தன்மையில்லை
யென்றுநிஷேதித்து தியானயோகத்தையடைந்தவர்கள் பார்க்கின்றார்கள்தன
துகுணங்களாற்கோப்பியமானதேவன்தன்சத்தியை, என்றசுருதியால்மாயாச
கிதனாய் ஸ்வப்பிரகாசசிதான்மாவானபிரமத்திற்கு ஜகத்காரணத்தன்மை உப
தேசிக்கப்பட்டது. அந்தச்சத்தியோகத்தன்மையைக்கூறுகின்றார்.

வேறு.

வித்தகவேதப்பொருளதாய்ஞானவிழியினால்விளங்கிடும்பொரு
ட்கோர், புத்தியினாலுமுள்ளவாறறியப்போயிடாதாயிருந்துள்ள, சத்
தியுண்டந்தச்சத்தியோடென்றுந்தான்பிரிவின்றியததுவே, சத்திய
ஞானவனந்தவானந்தத்துவமாகியேயிருக்கும்.

அ-கை. இவ்விடத்தில் அசக்தனுயின்எனவும், எப்படிக்கண்ணுடியிலெனவும், இந்திரியங்களுக்கு வேறுபாட்டைஎனவும்,கூறியசுருதிகளின் பொருளைக்கூறுகின்ருர்.

வேறு.

உண்ணுடியாகத்தினுணராதவன்ருனுடம்பாமுடம்புக்குளேகாணலாகும், கண்ணுடிபோலப்பிராணுதிகத்தைக் கடம்போற்கழித் துக்கழித்தற்றபின்னைக்,கண்ணுனபரனன்றிவேறின்மையாலக்கண்ணுனவனுபூதியாகின்றகண்ணு, லெண்ணும்வேறின்மைகண்டார்கனேரே யிறவாதுபிறவாதெலாமாயிருப்பார்.

இ-ள். ஆகத்தின் - இந்தச்சரீரத்தில், உண்ணுடி - உள்ளோநாடி, உணராதவன் - தன்னையறியாதவனே, உடம்பாம்-உடம்பாகக்கொள்வான், கண்ணுடிபோல - கண்ணுடியைப்போல், உடம்புக்குளே - தனதுசரீரத்துள்ளே, காணலாகும் - பார்க்கத்தக்க, பிராணுதிகத்தை - பிராணன்முதலியவற்றை, கடம்போற்கழித்து - கடத்தைப்போலநீக்கி, கழித்தற்றபின்னை - (அவ்வாறு) கழித்துநீங்கியபின்பு, கண்ணுனபரனன்றி - திருக்கானபரனைத்தவிர, வேறின்மையால் - பின்னமாகவொருவஸ்துவுமில்லாததனுல், அக்கண்ணுனவனுபூதியாகின்றகண்ணுல் - அத்திருக்கானவனுபவமாகியநேத்திரத்தினுல், நேரே-அபரோக்ஷமாக, எண்ணும் - கருதுகின்ற, வேறின்மைகண்டார்கள் - பின்னமில்லாததன்மையைக்கண்டவர்கள், எலாமாய் - சகலமுந்தானுகி, இறவாது-அழியாமலும், பிறவாது-ஜனிக்காமலும், இருப்பார்-இருப்பார்கள். எ-று.

ப-ம். வித்தியாதிகாரத்திற்கு யோக்கியமான இந்தச்சரீரமிருக்குங்காலத்தே பிரத்தியகான்மாவை'அனவச்சின்னபரசிவசொரூபமாகஅறிகிறதற்கு எவன் அசக்தனுகின்ருனே அவன்எல்லாவுலகங்களினும் புண்ணியபாபங்களின்வசத்தினுற் சரீரத்தைச்சுமக்கும்பொருட்டே சிருஷ்டிக்கப்படுவான் என்பார், "உண்ணுடியாகத்தினுணராதவன்ருனுடம்பாம்"எனவும், எப்படி அழுக்கில்லாத கண்ணுடியிற்றன்னுடையரூபத்தைநன்ருகப் பார்க்கின்ருனே அப்படியே இந்தமானிடசரீரத்தில் சிரவணமனனமுதலிய ஸாதனகலாபானுஷ்டானத்தால் ஆன்மாவைப் பிரமரூபமாகச்சாக்ஷாத்கரிக்கலாமன்றிமற்றையெவ்விடத்திலும்ஸாதனுநுஷ்டானமுண்டாகாததனுல் இந்தஞானம்சுலபமன்றென்பதுதோன்ற, "உடம்புக்குளேகாணலாகுங்கண்ணுடிபோல்" எனவுங் கூறினுர்.

கருத்து. இந்திரியங்கள்மனம்சத்துவம் ஆன்மா அவ்வியத்தம்என்னுந்தத்துவங்கள் முறையேகாரணமாய்ச்சூக்குமமாதலால், ஒன்றற்கொன்றுஉத்தமத்தன்மையைக்கூறி இவ்வெல்லாவற்றிற்கும்ஸாக்ஷாத்தாய்வியாபகனுனபுருஷன் லிங்கசரீரத்திற்கு வேருயுள்ளவனுகலிற், சகலபுண்ணியபாபங்களின்சம்பந்தமும்லிங்கசரீரத்திற்காதலால் அதைநிஷேதித்தலினுல்ஆன்மாவிற்குஸம்ஸாரஸம்பந்தமில்லையென்று வடநூலிற் கூறியபொருளைமுன்பிவ்வத்தியாயத்தில்

"இந்தியங்களிற் பொருளதுபரமெனும்" செய்யுளிற்சொல்லிக்கிடந்ததென்றதனை விடுத்ததுஉங்காண்க. (ரு௦)

அ - கை. இந்தநிருபாதிகனை ஆன்மாவையெப்படியறிகின்றதென்று சங்கித்து அதற்குச்சமாதானமும், எவர்கள்இவனையறிகின்றார்களென்ற, சுருதியின்பொருளைக் கூறிக்கூறுததாயுள்ள சுருதிவாக்கியங்களுக்கும் பொருளைத் தாற்பரியமாய்ச் சங்கிரகித்துங்கூறுகின்றார்.

வேறு.

ஒருவருங்கண்ணுற்காணவொண்ணுமதன்றுள்ளத்தாற்
கருதவுந்துணிந்தங்கொன்றக்கடவதுமலாதததைத்தான்
சுருதியாலனுபவத்தாற்றுணிந்தவர்சுகசொரூப
மருவியேமாண்டுமீண்டுவரும்வழிமறப்பரன்றே.

இ - ள். ஒருவரும் - யாவர்களும், கண்ணுற்காணவொண்ணுமதன்று - நேத்திரத்தினுற்பார்க்கத்தக்கதல்ல, உள்ளத்தாற்கருதவும் - மனத்தினுல்நினைக்கவும், துணிந்துஅங்குஒன்றக்கடவதும்அலாது-நிச்சயித்துஅங்குப்பொருந்தக்கடவதுமன்றி, அதைத்தான்-அந்தச்சொரூபத்தை, சுருதியால்- சுருதியினுலும், அனுபவத்தால் - அனுபவத்தினுலும், துணிந்தவர் - அறிந்தவர்கள், சுகசொரூபமருவி - சுகசொரூபத்தையடைந்து, மாண்டுமீண்டுவரும்வழி- இறந்துதிரும்பவும்பிறக்கும்வழியை, மறப்பர் - மறந்துவிடுவார்கள். எ - று.

ப - ம். மனனரூபமானஸம்யக்தரிசனத்தினுல் என்பார், "உள்ளத்தாற் கருதவும்" என்றார். கண்ணுற்காணவொண்ணுமதன்று, என்றதனுல் மற்றையிந்திரியங்களாலுங்காண்பரியதென்பதூஉம்பெற்றும். (ருக)

அ - கை. இவ்வாறுகடவல்லியுபநிஷதத்தால் ஸச்சிதானந்தஏகரஸப்பிரமான்மஐக்கியபரத்தன்மையைத்தெரிவித்து, சுவேதாச்வதர உபநிஷதத்திற்கும் அத்தன்மையைச்சேஷத்தாற்கூறப்புகுந்தார், அவ்வுபநிடதத்தில் யாதுஜகத்காரணமதுவேபிரமமென்றறியும்பொருட்டுக் காலம்சுபாவம்நியதியதிர்ச்சைஎன்றதுமுதலியவற்றுற்காலமுதலியவற்றிற்குஜகத்காரணத்தன்மையில்லையென்றுநிஷேதித்து தியானயோகத்தையடைந்தவர்கள் பார்க்கின்றார்கள்தனதுகுணங்களாற்கோப்பியமானதேவன்தன்சத்தியை,என்றசுருதியால்மாயாசிதனுய் ஸ்வப்பிரகாசசிதான்மாவானபிரமத்திற்கு ஜகத்காரணத்தன்மை உபதேசிக்கப்பட்டது. அந்தச்சத்தியோகத்தன்மையைக்கூறுகின்றார்.

வேறு.

வித்தகவேதப்பொருளதாய்ஞானவிழியினுல்விளங்கிடும்பொருட்கோர், புத்தியினுலுமுள்ளவாறறியப்போயிடாதாயிருந்துள்ள, சத்தியுண்டந்தச்சத்தியோடென்றுந்தான்பிரிவின்றியததுவே, சத்தியஞானவனந்தவானந்தத்துவமாகியேயிருக்கும்.

இ-ள். வித்தக - ஞானஸ்வரூபமாயிருக்கின்ற, வேதப்பொருளதாய் - சுருதிப்பொருளாகி, ஞானவிழியினுல் - ஞானக்கண்ணுல், விளங்கிடும்பொருட்கு - பிரகாசிக்கின்றபிரமத்துக்கு, ஓர்புத்தியினுனும் - ஒருபுத்தியினுலும், உள்ளவாறு - உள்ளவண்ணம், அறியப்போயிடாதாயிருந்துள்ள - அறியக்கூடாததாயிருக்கின்ற, சத்தியுண்டு - ஒருசத்தியிருக்கின்றது, அந்தச்சத்தியோடு - அந்தச்சத்தியுடன், என்றுந்தான்பிரிவின்றியது - எக்காலத்துந்தான்பிரிவில்லாமலிருப்பதாகும், அதுவே-அந்தப்பிரமமே, சத்திய-சத்தியமாயும்,ஞான-ஞானமாயும், அனந்த-முடிவில்லாததாயும், ஆனந்ததத்துவமாகியே-ஆனந்தசொருபமாயும், இருக்கும் - இருக்கின்றது. எ - று.

ப-ம். அப்பிரமத்திற்குச் செய்யத்தகாதவற்றையுஞ்செய்யும் ஒருசத்தியுண்டு,அங்ஙனமில்லாவிடிற் சத்தியில்லாத அசத்தனுக்கு அது அக்கினியைச்சிருட்டித்தது என்றதுமுதலியவற்றுல் கேட்கப்படுங்காரணத்தன்மை கூடாதென்பதுதோன்ற, "அந்தச்சத்தியோடென்றுந்தான்பிரிவின்றியது" என்றுர்.

அ-கை. இங்கு உண்பான் உண்ணப்படுவது ஊட்டுவான்என்று மூவிதமாகவிவக்ஷிக்கப்பட்டது. அது அத்துவிதீயமானபிரமத்தினிடத்தில் எப்படிக்கூடுமென்றுசங்கித்துக்கூறுகின்றுர்.

மெய்யதாமுருவம்விமலமாமிறைக்குவிளங்கியதிவ்யமாமுருவம் வையமாமுருவமற்றுமோருருவமறைமுதலாகவேவிளம்பல், செய்யுநூலெல்லாம்வேறுமோருருவஞ்சிவனுடைவடிவிலேயிவற்றிற், றுய்யதாமுருவஞ்சொல்லிலவ்விறைக்குத்துலங்கியஞானமேசொருபம்.

இ-ள். விமலமாமிறைக்கு-நின்மலனுனபரமசிவனுக்கு, மெய்யதாமுருவம்-உடலோடுங்கூடினவனுகியஜீவன்ஒருவடிவமாகும்,விளங்கியதிவ்யமாமுருவம் இலங்குகின்றஈச்வரன்ஒருவடிவமாகும், மற்றுமோருருவம் - பின்னும்ஒருவடிவமானது, வையமாமுருவம்- போக்கியமாகியவடிவமாகும், மறைமுதலாக வே-வேதங்கள்முதலாக, விளம்பல்செய்யுநூலெல்லாம்- சொல்லுகின்றசாஸ்திரங்களனைத்தும், வேறுமோருருவம்- மற்றும்ஒருவடிவமாகும், சிவனுடைவடிவிலே - (இவ்வடிவங்களெல்லாம்உண்மையாகச்) சிவனுடையவடிவில்லை, அவ்விறைக்கு - அந்தப்பரமசிவனுக்கு, இவற்றில் - (இப்பொழுதுகூறிய) இந்தவடிவங்களைக்காட்டிலும், துய்யதாமுருவஞ்சொல்லில்-சிரேஷ்டமாகியவடிவத்தைச்சொல்லுங்கால், துலங்கிய-பிரகாசிக்கின்ற, ஞானமேசொருபம்-ஞானமேவடிவமாகும். எ - று.

கருத்து. சச்சிதானந்தமானபிரமம் சத்துவ ரஜ தமோகுணரூபமானதனதுமாயையினுற் கடமுதலியஉபாதிகளாலாகாசம்போற் பின்னபேதங்களோடுங்கூடுகின்றது. அவற்றுள்மலினசத்துவப் பிரதானமாயாவச்சின்னமானரூபம் ஜீவனென்னும்பெயரையடைகின்றது, தமப்பிரதானமாயாவச்சின்னமானதுபோக்கியஜகமாகும், விசுத்தசத்துவப்பிரதானமாயாவச்சின்னமான

மற்ருெருருபம் ஈசனென்னும்பெயருடைத்தாய்ப் போகத்தைக்கொடுக்கும். மாயாதீதமான அந்தப்பிரமத்திற்கு எல்லாவேதாந்தங்களாலும்பிரதிபாதிக்குங் கேவலஞ்சிதேகரஸமாயாதொன்று சுத்தருபமுண்டோ அது சோபாதிகங்களானமூன்றுருவங்களைக்காட்டிலும் விலக்ஷணமாகுமென்றுணர்க. (௩௩)

அ - கை. எல்லார்களுக்கும் ஜீவனமானபிரமத்திலென்ற மந்திரத்தாற் சீவனுக்குஅவித்தையினுல் ஸம்ஸாரசக்கிரத்திற் சுற்றுதலும் வித்தையினுல் பிரமதாதான்மியமும் யாதொன்று கூறப்பட்டது அதனைக்கூறுகின்ருர்.

பெரியதாயெவர்க்குமுள்ளதாயுயிராய்நிறைந்துளபிரமசக்கரத்தே
திரிதராநிற்குஞ்சீவனிப்பரிசேதிரிதருமிவனையுந்திரிக்கும்
பரமனுயுள்ளவவனையுமனனம்பண்ணியிப்படியிலேபார்ப்பா
ஞெருவனேசெனனமரணமற்றென்றுமுள்ளதாய்நிகழ்ந்திடவுரியான்

இ-ள். பெரியதாய்-மகத்தாயும், எவர்க்குமுள்ளதாய்-யாவர்க்குமாந்தரமாயும், உயிராய்-பிராணுதாரமாயும், நிறைந்துள-நிறைந்திருக்கின்ற, பிரமசக்கரத்தே-பிரமத்தாலுண்டாக்கியஸம்ஸாரசக்கரத்தில்,சீவன்திரிதராநிற்கும்-சீவன்சுழலுகின்ருன், இப்பரிசே - இவ்வண்ணமே, திரிதருமிவனையும் - சுழல்கின்றஇந்தச்சீவனையும், திரிக்கும் - சுழற்றுகின்ற, பரமனுயுள்ளவவனையும் - சிரேஷ்டனுயிருக்கின்றஅந்தஈச்வரனையும், மனனம்பண்ணி-மனனஞ்செய்து, இப்படியிலேபார்ப்பாஞெருவனே - இவ்வண்ணமாகப்பார்க்கின்றஒருவனே, செனனமரணமற்று - பிறப்பிறப்பொழிந்து, என்றுமுள்ளதாய் - எக்காலத்துமுள்ளபிரமமாகவே, நிகழ்ந்திடவுரியான் - விளங்குதற்குரியனுவான். எ-று.

கருத்து. தனதுஅவித்தையினுற் சமுஸாரசக்கரத்திற் சுற்றுகின்றஜீவன் தன்னுற்செய்யப்படும் புண்ணியவசத்தாலும், பரமசிவனுடைய திருவருளினுலும், சிரவணமனனமுதலிய சாதனகலாபங்களையுடையவனுய் குருவினுலுபதேசிக்கப்பட்ட சாத்திரக்கேள்வியினுல் பிரத்தியகான்மாவையும் ஈசனையும் ஒன்ருகமனனத்தாற்சாக்ஷாத்கரித்து மோக்ஷத்தையடைகின்ருனென்றறிக. ()

அ - கை. இந்தஜீவனுக்கு ஈசனேடுதாதான்மியத்தை நன்ருகப்பிரதிபாதிக்கின்ற அன்னியமந்திரத்தை எடுத்துக்கூறுகின்ருர்.

வேறு.

அறிவனுமறியாதானுமாய்நிகழ்பரசிவர்க்கு
மறையினுல்வடிவாற்றர்க்கவழியினுலனுபவத்தாற்
பிறிவிலமாயைபோகவேதுவாம்பிரமந்தானிங்
கறைதருமெல்லாந்தானுயகர்த்துருவாகிநிற்கும்.

இ - ள். அறிவனும் - சர்வக்கியனும், அறியாதானுமாய் - கிஞ்சிக்கியனுமாகி, நிகழ் - பிரகாசிக்கின்ற, பரசிவர்க்கு, சிவேசர்களுக்கு, மறையினுல்- வேதங்களாலும், வடிவால் - அவர்களதுசுபாவத்தினுலும், தர்க்கவழியினுல்-

தருக்கமார்க்கத்தினாலும், அனுபவத்தால் - அனுபவத்தினாலும், பிறிவிலை - பிரிவில்லை, மாயை-மாயையானது, போகவேதுவாம் - போகத்துக்குக்காரண மாகும், இங்கு - இவ்விடத்தில், பிரமந்தான் - பிரமமானது, அறைதரும் - சொல்லுகின்ற, எல்லாந்தானுய் - அனைத்துந்தானும், அகர்த்தருவாகி - அக ர்த்தாவாயும், நிற்கும் - விளங்குகின்றது. எ - று.

ப-ம். சைதன்னியமாய் ஏகஸ்வபாவனுனதத்பதார்த்தன் பரசிவனுவான். கர்த்தாவாய்ப் புசிப்பவனுய் ஆவரித்தஞானனுனவன் துவம்பதார்த்தனுனஜீ வனுவான். இவ்விருவர்களும் பிரதீதியினுற்பின்னர்களாவார்களன்றிப் பரமா ர்த்தமாக 'அதுநீயாகின்ருய்நான்பிரமமாகின்றேன்' என்றதுமுதலானசுருதியி னுலும் அதனையனுசரித்தயுக்தியினுலும் வித்துவான்களநுபவத்தாலும் அவர்க ள்அபின்னர்களே. பேதமும்உபாதியாலுண்டாயிற்றேயன்றி வாஸ்தவமாகவில் லையென்பதுதோன்ற, "பரசிவர்க்குமறையினுல்வடிவாற்றர்க்கவழியினு லநு பவத்தாற்பிறிவிலை" என்ருர்.

கருத்து. மலினசத்துவப்பிரதானமாயையினுல் வசீகரிகப்பட்டபிர த்தியகான்மாவன்றே கர்த்தாபோக்தாவாவான். பரமான்மாவோவெனின், மாயையைஸ்வாதீனஞ்செய்தவனுதலால் நாநாவிதருபனுயினும் கருத்திருத் துவமுதலியசகலஸம்ஸாரதருமமில்லாதவனே. ஆதலால் அந்தவுபாதியை நீக்கிடில் அவர்களுக்கு ஏகத்தன்மைநிச்சயமென்றறிக. (௩௫)

அ-கை. ஆன்மஞானத்தினுல் அப்பொழுதேமுக்திகாணுததனுல் அத ற்குஅந்தச்சாதனத்தன்மை பிரத்தியக்ஷவிருத்தமென்னும்பிராந்தியைநீக்கும் பொருட்டு 'அவனுடையதியானத்தால், என்றசுருதியையுதாகரித்துக் கூறுகி ன்ருர்.

வேறு

நாசமுற்றுவிடுமாயைசிவனசியானிரண்டினிலுநாதனு
மீசனிற்குமிறையைத்தியானபரனுகவந்தவியல்பாலுமே
யோசகத்தினிலையாலுமேகமெனுமுண்மையாலுமுயிர்முடிவினிற்
றேசெனத்திகழுமிங்ஙனேபிறிதுசெய்தமாயைசிதைவாகுமால்.

இ-ள். மாயை - அவ்வியக்தமானது, நாசமுற்றுவிடும் - நாசத்தைய டையும், சிவன் - சீவனுனவன், நசியான் - அழியமாட்டான், இரண்டினிலும் - இந்தஇரண்டினிலும், நாதனும்ஈசனிற்கும் - நாதனுகியஈச்வரனிற்கின்ருன், இறையை - நாயகனுயிருக்கின்றபரமசிவனை, தியானபரனுகவந்த - தியானஞ் செய்கின்றவனுகவந்த, இயல்பாலும் - குணத்தினுலும், யோசகத்தினிலையாலு ம் - யுக்திநிலையினுலும், ஏகமெனுமுண்மையாலும் - அத்துவிதமென்னும்உண் மையினுலும், உயிர்முடிவினில் - சீவோபாதிமுடியுமிடத்தில், தேசெனத்திக ழும் - பிரகாசம்போற்ருேன்றும், இங்ஙன் - இவ்விடத்தில், பிறிதுசெய் தமாயை - துவிதத்தையுண்டாக்கியபிரகிருதியும், சிதைவாகும் - நாசத்தைய டையும். எ-று.

ப - ம். வித்தையால்நீங்கப்படுதலால், "நாசமுற்றுவிடுமாயை" எனவும், பின்னம்போலத்தோன்றுகின்றமாயாகாரியமானபேதம் பிரமத்தினிடத்திலத்தியாசிக்கப்பட்டு அதற்குவேறில்லாமையினால் சொயம்பிரகாசனுயொருவனுனபரசிவனே யுள்ளானென்பதுதோன்ற," இரண்டினிலுநாதனுமீசனிற்கும்" என்றார்.

கருத்து. இதனால் 'க்ஷரம்மாயை' யென்றமந்திரத்தின் பொருள்கூறப்பட்டதாம். ஒருபேதமுமில்லாதசிதானந்தரஸமான பிரமத்தினுடையதியானமான தோற்றுகின்ற எல்லாம்பிரமமன்றோ என்னுந்தடஸ்தஞானத்தினுற் பேதப்பிரபஞ்சமாத்திரம் நீங்காநிற்கும். அந்தப்பொருளேயே நான்பிரமமாகின்றேனென்றுதானுகஅறியாநின்ற யுக்தியானமனனத்தாற் பிரத்தியக்குக்குப்பிரமத்தன்மையில்லையென்றெண்ணும்மாயைநீங்கும். திரும்பவும்அந்தரூபத்தினுடையபாவனையானநிதித்தியாஸனத்தாற் பிரமவிஷயமான அபரோட்சஞானமுண்டாகும். அதனால்மாயைதனதுகாரியத்தோடுநீங்குமாயினும் அதனுலுண்டாகியவாஸனைபிராரப்தகருமபலம்க்ஷயமாகும்வரைக்குந் தொடராநிற்கும். வித்துவானுக்கு அதுவரைக்குந்தேகயாத்திரைமுதலியவிவகாரம் விரோதமாகாது. திரும்பவும்பிராரப்தகருமபலபோகம்முடிந்துவிதேககைவல்லியத்தையடையுங்காலத்தில் தனதுவாஸனையோடுங்கூட எல்லாமாயையுநீங்குமெனக்கொள்க. (௩௬)

அ - கை இங்ஙனங்கூறிய தியானமுதலியவற்றிற்கும் பலத்தைக்கூறுகின்றசுருதியைச்சங்கிரகிக்கின்றார்.

வேறு.

ஈசனையறிந்தவந்தவிடத்திலேயெண்ணுமெல்லாப்
பாசமுநசித்தருனும்பணியறப்பவத்தின்றீர்வும்
காசுறுமகிலமாயக்கங்குலின்கழிவுந்தானே
யாசறுமகண்டரூபியாகையுமனைத்துமெய்தும்.

இ - ள். ஈசனையறிந்த - பரமசிவனையறிந்த, அந்தவிடத்திலே - அந்தவிடத்தின்கண்ணே, எண்ணும்எல்லாப்பாசமும் -கருதுகின்றபந்தமனைத்தும், நசித்தல்தானும் - நசிப்பதுவும், பணியற - தொழில்கள்ஒழியும்படி, பவத்தின்றீர்வும் - பிறவியின்அழிவும், காசுறும்-குற்றம்பொருந்திய, அகிலமாயக்கங்குலின்கழிவும் - அலகில்மாயையாகியஇருட்டினததீர்வும், தானே - தானே, ஆசறும் - குற்றமில்லாத, அகண்டரூபியாகையும் - அகண்டசொரூபனுதலும், அனைத்தும் - மற்றனைத்தும், எய்தும் - சித்திக்கும். எ - று.

கருத்து. மலம் மாயை கருமம் என்னுமிவைமுதலியபாசங்களும் அவித்தைமுதலியஐந்துகிலேசங்களும் நீங்குமெனவும், அதினுடையதியானத்தால் மூன்றுந்தேகநீங்குமென்றுசுருதிகூறியபடிஅத்துவிதப்பிரமஸாக்ஷாத்காரத்தால் மூலாஞ்ஞானம்நீங்கினவளவில் ஒன்றையுமபேக்ஷிக்கவேண்டுவதில்லாதகேவல ஆத்மாவஸ்தானலக்ஷணமான ஈச்வரத்துவத்தையடைகின்றான்எனவுங் கொள்க. (௩௭)

அ-கை. ஆப்தகாமனுய் மாயாசக்திவசத்தால் மூவகைப்பட்டஜகத்தையொழித்துவிட்டு உண்மையாய் அபின்னமானகைவல்லிய ரூபப்பிரமத்தைஸாக்ஷாத்கரிக்கத்தக்கதென்று கூறுகின்றார்.

மேவியதன்பாலுள்ளமெய்ப்பொருளொன்றுமன்றி
யாவுமிங்கறியவேண்டாவருந்துமிப்பொருளுமாகிச்
சீவனுயுண்பானுகிச்சிவனெனவூட்டுவானுய்
மூவிதமாகிநிற்குமூலமாம்பிரமந்தானே.

இ-ள். மேவியதன்பாலுள்ள - பொருந்தியதன்னிடத்திலிருக்கின்ற, மெய்ப்பொருளொன்றுமன்றி - உண்மைப்பொருளாகியஆன்மாவைத்தவிர, யாவுமிங்கறியவேண்டா - வேறொன்றினையும்இவ்விடத்திலறியவேண்டாம், அருந்துமிப்பொருளுமாகி - புசிக்கின்றஇந்தப்போக்கியவஸ்துவாயும், சீவனுயுண்பானுகி-போக்த்தாவாகியசீவனுயும், சிவனெனவூட்டுவானுய் - பிரேரிதாவாகியஈச்வரனுயும், மூலமாம்பிரமந்தானே - காரணமாகியபிரமமே, மூவிதமாகிநிற்கும் - மூன்றுபிரிவாகவிருக்கின்றது. எ-று.

ப-ம். இப்பிரமத்துக்குவேருனதுபொய், என்றசுருதியின்படிபிரமத்திற்குவேருனதத்துவமில்லையாகலின், "யாவுமிங்கறியவேண்டா" என்றார். ()

அ-கை. இங்ஙனங்கூறியபிரமஞானமுண்டாவதற்கு உபாயத்தைப்போதிக்கும்பொருட்டு 'எப்படியக்கினியினுடைய' மூர்த்திஎன்றசுருதியின்பொருளைக்கூறுகின்றார்

வேறு.

தீமரந்தொறுமடைந்தழிவுறுதுதெரிவா
காமைநின்றரணியால்வடிவுகாணுமதுபோ
லாமுடம்பிலழிவின்றிமறைகின்றவமல
னேமெனும்பொருளுணர்ந்திடவுடம்பில்வெளியாம்.

இ-ள். தீ - அக்கினியானது, மரந்தொறுமடைந்து - மரங்கடோறுமிருந்து, அழிவுறுது - அழியாமல், தெரிவாகாமைநின்று - கட்புலப்படாமல்நின்றும், அரணியால்-அரணியினுல், வடிவுகாணுமதுபோல்-அதன்வடிவங்காணப்படுதல்போல, ஆம்உடம்பில் - உண்டாகியசரீரத்தின்கண், அழிவின்றி - நாசமில்லாமல், மறைகின்றஅமலன் - மறைந்திருக்கின்றஆன்மாவானவன், ஓமெனும்பொருளுணர்ந்திட- பிரணவப்பொருளையறிந்திட, உடம்பில் - சரீரத்தில், வெளியாம் - தெரியவரும். எ-று.

கருத்து. அந்தப்பிரமமும் இதயதாமரையில் தியானிக்கத்தக்கதாயும் அறியத்தக்கதாயும் பரம்அபரமென்றிருவகையாகஇருந்துவிளங்கும். இதயம் அதராரணியும் பிரணவம்உத்தராரணியும் பிரணவத்திற்குஅபிதேயமாயும் ஆலம்பனமாயும்இருக்கின்றபரம்அபரமென்னும்இருவகையானபிரமத்தினுடையதி

யானம்மதனமுமாகும், அதனுடையஅப்பியாஸமும் ஸாக்ஷாத்காரமுண்டாகும் வரைக்குஞ் செய்யவேண்டும். இந்தவுபாயத்தால் நிருபாதிகமாய்ச்சொயம்பிரகாசமானஆன்மசொருபத்தை, எப்படிவிறகில் தெரியாதிருக்கின்றஅக்கினியைஅதரோத்தரங்களாகிய அரணிகளால்விடாதுகடைதலினுல் அடைகின்றுரோ அப்படிச்சாக்ஷாத்கரிக்கவேணடுமென்றுணர்க. (கூக)

அ-கை. இவ்வாறுஆன்மாவைத்தரிசிக்கவேண்டுமென்றுஅனேகதிருஷ்டாந்தங்களாற்கூறி ஸத்தவமுதலியசாதனங்களையுபதேசிக்கின்றுர்.

உலத்தலின்றியொழிவற்றபொருளுண்மையதுதான்
சலித்தலின்றியதவத்தினவர்தங்கணெதிரோ
திலத்திலெண்ணெயரணிக்கனறதித்திகழுநெய்
நிலத்தினீரெனநிகழ்ந்துவெளியாகிநிலையாம்.

இ-ள். உலத்தலின்றி - நாசமில்லாமல், ஒழிவற்ற- நீங்குதலில்லாத, பொருளுண்மையது - வஸ்துவானது, சலித்தலின்றிய - சலனமில்லாத, தவத்தினவர்தங்கணெதிரோ - தவத்தையுடையவர்களதுகண்ணுக்குமுன்பாகவே, திலத்திலெண்ணெய் - எள்ளிலெண்ணெய்போலும், அரணிக்கனல் - அரணியிலக்கினிபோலும், ததித்திகழுநெய் - தயிரில்விளங்குகின்றநெய்போலும், நிலத்தில்நீரென - பூமியிற்சலம்போலும், நிகழ்ந்து - அந்தஆன்மாவிளங்கி, வெளியாகி - வெளிப்பட்டு, நிலையாம் - நிலையாகும். எ-று.

கருத்து. எண்ணெய்முதலியவை திலமுதலியவற்றில் அவிவேகத்தால் அறியப்படாதனவாயினும், ஆட்டுதல் குடைதல் கடைதல் தொடுதல் முதலியவற்றுல் விவேகத்தாலடையப்படுவனபோல்,நிருபாதிகனுன இவ்வான்மாவை சத்தியவசனுய்க்கிருச்சிரசாந்திராயணமுதலியவிகிதவருணச்சிரமமான ஸ்வதருமங்களையுடையஸாதகன் சிரவணமனனமுதலியவற்றுற் பக்குவமானமனத்தால் ஸாக்ஷாத்கரிக்கவேண்டுமென்றுணர்க. (௨0)

அ-கை. இவ்வாறு பாலிற்காரணரூபமாகவிருக்குநெய்யைப் பால்வியாபித்திருக்கின்றதுபோல் காரணமான ஆன்மாவினுற் காரியமான எல்லாவுலகும் வியாபிக்கப்படுமென்றும்,அத்துவிதமானபிரமத்திற்குத்தனதுசக்திவசத்தாற்புசிப்பவன் போக்கியம் போகப்பிரதனென்னும் மூவகையானஸ்திதியும், அபரிச்சின்னசிதானந்த ஏகரஸநிருபாதிக ஆன்மஞானத்தால்மோக்ஷமுமென்றும்,எல்லாவுபநிஷதங்களின்பொருளையுஞ் சங்கிரகித்துக்கூறுஞ் சூத்திரபூதமானசுவேதாச்வதரத்தின்முதலத்தியாயத்தையுரைசெய்து, மற்றயைந்தத்தியாயங்களுமிங்ஙனங்கூறியவற்றையேவிரித்தலினுல் அதனைச்சுருக்கிக்கூறுகின்றுர்.

வேறு.

ஆகுஞானநற்றவமறைமீறறையருத்தமுமதுவல்லா
வியாகதானபுண்ணியங்களாலியோகம்வந்தெய்தும்வந்தெய்துற்ற

யோகஞானமுள்புகுத்துமெய்யுணர்வுதானுள்ளவாறுளவாறே
யேகமானவீடளித்திடுங்கருமத்தாலின்பவீடெய்தாதே.

இ-ள். நற்றவம் - நல்லதபோபலத்தால், ஆகும்ஞானம் - ஞானமுண்டாகும், மறையீறு - உபநிஷதங்கள், அறைஅருத்தமுமது - சொல்லுகின்றதாற்பரியமும்அதுவாகும், அல்லால் - இதுவன்றியும், யாகதானபுண்ணியங்களால் - எக்கியதானமுதலியபுண்ணியங்களால், யோகம்வந்தெய்தும் - யோகஞ்சித்திக்கும், வந்தெய்துற்றயோகம் - வந்துபொருந்தியயோகமானது, ஞானம் - அபரோக்ஷஞானத்தை, உள்புகுத்தும் - இருதயத்திலுண்டாக்கும், மெய்யுணர்வுதான் - அந்தஅபரோட்சஞானமானது, உள்ளவாறுளவாறே-எப்படியிருக்கின்றதோஅப்படியே,ஏகமானவீடு-அத்துவிதமுத்தியை, அளித்திடும் - கொடுக்கும், கருமத்தால் - கருமங்களால், இன்பவீடு - பிரமானந்தமாகியமோட்சம், எய்தாது - கிடைக்காது. எ-று.

கருத்து. பரமேசனுக்குஅர்ப்பணஞ்செய்யும்புத்தியால் அனுஷ்டிக்கின்ற நித்தியநைமிககருமங்களால் ‘மூன்றங்கமுன்னதமாய்ச்சரீரம்ஸமனுய், என்று சுருதிகூறியயோகமுண்டாகும். இவ்வாறு ஒருமைப்படுமனத்தையுடையவனுக்குச் சிரவணமுதலிய அனுஷ்டானத்தால்வருத்தமின்றிப்பிரமான்மஐக்கிய ஞானமுண்டாகும். அதனுல்முத்தியுண்டாகுமென்பதே அஞ்சத்தியாயங்களுக்குந்தாற்பரியமென்றறிக. (௬௪)

அ-கை. பிரமவித்தையைக்கோபனம்பண்ணும்பொருட்டு அத்தியாச்சிரமிகளுக்கென்று அதிகாரியினிலக்கணத்தைச்சுருதிகூறியபடி யுபதேசிக்கின்ருர்.

மிக்கசாந்தராய்நீற்றினுத்தூளனம்புண்டரம்விளங்கச்செய்
பக்குவர்க்கிதுபகரலாமல்லதுபகர்ந்திடப்படாதென்றுந்
தக்கநற்குரவன்றனைச்சிவனெனத்தானினைந்திடுவாருட்
புக்கலாகுமிங்குரைத்தமெய்ப்பரம்பொருள்புரணமாய்வெளியாக.

இ-ள். மிக்கசாந்தராய் - மிகுந்தசாந்தர்களாகி, நீற்றினுத்தூளனம்- விபூதியுத்தூளனமும், புண்டரம்-திரியக்குத்திரிபுண்டரமும், விளங்கச்செய்- விளங்கும்படிதரித்துக்கொள்ளுகின்ற, பக்குவர்க்கு - பக்குவமுடைய அதிகாரிகளுக்கு, இதுபகரலாமல்லது - இந்தப்பொருளையுபதேசஞ்செய்யலாமேயன்றி, என்றும் - எக்காலத்திலும், பகர்ந்திடப்படாது - (மற்றையர்களுக்கு) உபதேசஞ்செய்யக்கூடாது, தக்கநற்குரவன்றனை - தகுந்தநல்லகுருவை, சிவனெனத்தானினைந்திடுவார் - சிவனென்றேகருதுகின்றமகாத்மாக்களது, உள் - இருதயத்தில், இங்குரைத்த - இவ்விடத்திற்கூறிய, மெய்ப்பரம்பொருள் - உண்மையாகியபரம்பொருள், புரணமாய் - பிரகாசமாயும், வெளியாக - அபரோட்சமாயும், புக்கலாகும் - செல்லும். எ-று.

ப-ம். எது அத்தியாச்சிரமம் எவன்யோகாதிகாரி என்னில், ஜாபாலத்தில்உபதேசித்தபிரகாரம் விபூதியுத்தூளனம் திரிபுண்டரதாரணம் சிவமந்திரஜபம் சிவபூசை இவைமுதலியவையே அத்தியாச்சிரமம். இவ்வனுஷ்டானமுடையவனதிகாரியென்பதுதோன்ற, "மிக்கசாந்தராய்நீற்றினுத்தூளனம்புண்டரம்விளங்கச்செய்பக்குவர்க்கிதுபகரலாம்" எனவும், சிவபக்திபோற் குருபக்தியும்ஞானோத்பத்திக்குஅந்தரங்கசாதனமென்பதுதோன்ற, "தக்காநற்குரவன்றனைச்சிவனெனத்தானினைந்திடுவான்" எனவுங்கூறினார். (௬௨)

அ-கை. பிரதிபாதிக்கப்பட்ட உபநிஷதத்தின்பொருளை முடித்துக்கூறுகின்றார்.

அரியமாமறைவாக்கினாலுங்களுக்கறியவுமறைந்தேனான்
றெரியுமாகின்மற்றவன்றெரியாமையைக்கடந்துபோய்ச்சிந்தைக்குப்
பிரியமாகியபரப்பிரமத்தையேபெற்றுமேற்பிறவாமைக் (ன்
குரியனாகுமென்றுரைத்தனனுணர்வினாலுலகெலாம் படைத்திட்டா

இ-ள். நான் - யான், அரிய - அரிதாகிய, மாமறைவாக்கினால் - பெருமைபொருந்தியசுருதிவசனங்களால், உங்களுக்கறியவும் - உங்களுக்கறியும்படி, அறைந்தேன் - உபதேசித்தேன், தெரியுமாகில் - அறியப்படில், அவன் - அந்தவிவேகி, தெரியாமையைக்கடந்துபோய்-அஞ்ஞானத்தைத்தாண்டிப்போய், சிந்தைக்குப்பிரியமாகிய - உளத்திற்குப்பிரியமாயிருக்கின்ற, பரப்பிரமத்தையேபெற்று-சிவத்தையேயடைந்து, மேற்பிறவாமைக்கு-இனிப்பிறவாமலிருப்பதற்கு, உரியனாகுமென்று - உரியவனாவானென்று, உணர்வினால்- ஞானத்தினால், உலகெலாம்படைத்திட்டான் - உலகமனைத்தையுஞ்சிருட்டித்தபிரமதேவர், உரைத்தனன் - சொன்னார். எ-று.

ப-ம். நிரதிசயானந்தரூபமாகலின், "பிரியமாகியபரப்பிரமத்தை" என்றார். (௬௩)

௧௧ வது கடவல்லியொடுசுவேதாச்சுவதரமுரைத்தவத்தியாயமுற்றிற்று.
ஆ திருவிருத்தம்-௰௦௪.
சிவமயம்.

---

உ

திருச்சிற்றம்பலம்.

## ௧௨ வது சருவசாஸ்திரார்த்தசங்கிரக முரைத்தவத்தியாயம்.

அவதாரிகை.

இவ்வாறுஐதரேயகமுதலிய எல்லாச்சாகைகளினுபநிஷதங்களுக்கும் உரைசெய்து, அடையுஞ்சவுகரியத்தின்பொருட்டு எல்லாவுபநிஷதங்களினும்இருக்கும்பொருளைச்சங்கிரகமாகக்கூறுகின்றார்.

வகுத்துநானுமக்குரைத்தநான்மறைகளின்பொருளைத்
தொகுத்துநான்சொலக்கேண்மினென்றின்னவாசொன்னா
னுகத்தநான்கையுமொன்றதாயிரமொருபகனான்
முகத்தினாற்பொருணான்குநான்மறையினான்மொழிவான்.

இ-ள். ஒன்றதாயிரம் - ஓராயிரம், உகத்தநான்கையும் - சதுர்யுகங்களையும், ஒருபகல் - ஒருபகலாகக்கொண்டு, நான்முகத்தினால்-நான்குமுகங்களாலும், பொருள்நான்கும் - நான்குமகாவாக்கியப்பொருள்களையும், நான்மறையினால்மொழிவான் - நான்குவேதங்களாலுரைசெய்தபிரமதேவரானவர், வகுத்துநானுமக்குரைத்த-நான்உங்களுக்குவகுத்துச்சொல்லிய, நான்மறைகளின்பொருளை - நான்குவேதங்களின்தாற்பரியத்தை, தொகுத்துநான்சொலக்கேண்மினென்று - சுருக்கிநான்சொல்லக்கேளுங்களென்று, இன்னவாசொன்னான் - இவ்வாறுபதேசஞ்செய்கின்றார். எ-று. (க)

அ-கை. எல்லாவுபநிஷதங்களுக்குஞ் சம்மதமானபொருள் பிரத்தியக்குப்பிரமதாதான்மியமென்று கூறுகின்றார்.

வேறு.

பாடுகின்றவெக்கலையின்பயனுந்தெரிந்துபகர்கின்றே
னோடுகின்றசிந்தையொழித்தொருப்பட்டெவருங்கேண்மினுரை
யாடுகின்றநானென்னுமுரைக்குமறிவுக்குமறிவாய்
நாடுகின்றவுணர்வொன்றுண்டதுவேயான்மாநமக்கெல்லாம்.

இ-ள். பாடுகின்ற - சொல்லுகின்ற, எக்கலையின்பயனுந்தெரிந்து-எல்லாநூல்களின்பொருளுந்தெரிந்து, பகர்கின்றேன்- யான்உபதேசஞ்செய்கின்றேன், ஓடுகின்றசிந்தையொழித்து-பொறிவழிச்செல்கின்றமனத்தைவிடுத்து, ஒருப்பட்டெவருங்கேண்மின்- ஒற்றுமைப்பட்டெல்லாருங்கேளுங்கள், உரையாடுகின்ற - சொல்லுகின்ற, நானென்னுமுரைக்கும் - அகமென்னுஞ்சொல்லுக்கும், அறிவுக்கும் - ஞானத்திற்கும், அறிவாய் - ஞானமாய், நாடுகின்றவுணர்வுஒன்றுண்டு-கருதுகின்றஞானசொரூபமொன்றிருக்கின்றது, அதுவே-அந்தப்பிரமசொரூபமே, நமக்கெல்லாம் - நம்போலிகட்கெல்லாம், ஆன்மா-ஆன்மாவாகும். எ-று.

ப-ம். "அதுவேயான்மாநமக்கெல்லாம்" என்றதனால், காரியகாரணமானதேகத்தோடுங்கூடியசைதன்னியம் நான் என்னுஞ்சொல்லுக்குவாச்சியமாய் ஆன்மாவாகத்தோற்றிடினும், தேகமுதலியவை கடம்போலஅநான்மாவாய்ச்சடங்களாதலாற் சருவாந்தரசாக்ஷியானசின்மாத்திரரூபனேஅகம் என்னுஞ் சத்தத்திற்குலக்ஷியனான ஆன்மாவன்றி மற்றவையன்றென்பதுபெற்றும். (உ)

அ- கை. ஸம்ஸாரித்தன்மைக்குச்சொருபஞானமில்லாமையேமூலமாகலிற் பிரமத்தையடையும்விஷயத்தில் ஞானத்தைக்காட்டிலும் வேறொன்றையிச்சிக்கத்தக்கதில்லை. அந்தஞானமும் இந்தமுறையாற்சித்திக்குமென்றுகூறுகின்றார்.

மாசதில்லாப்பரனாகியிருக்கத்தனதுமாயையினு
லீசனென்பதறியாமலிறந்தான்பிறந்தான்போலிருக்கும்
பாசம்விடுமாநினைவுறுவான்பாரம்பரியத்தாற்பண்ணு
மாசின்மறையாலாசையெலாமறலாற்சாந்தியாதியினால்.

இ-ள். மாசதில்லா - குற்றமில்லாத, பரனாகியிருக்க - பிரமமாகியிருக்கவும், தனதுமாயையினால் - தன்னுடையமாயையினாலே, ஈசனென்பதறியாமல் - (தான்) ஈச்வரனென்பதுதெரியாமல், இறந்தான்பிறந்தான்போலிருக்கும் - ஜனனமரணங்களையடைந்தவன்போலிருக்கின்றான், பாசம்விடுமாநினைவுறுவான் - அந்தப்பாசங்களைநீக்கநினைவுகொண்டவன், பாரம்பரியத்தாற்பண்ணும் - குருபாரம்பரியமாக (அத்தியயனஞ்) செய்கின்ற, ஆசில்மறையால்-வழுவில்லாதவேதங்களாலும், ஆசையெலாமறலால் - ஈஷணாத்திரயங்களும் நீங்குதலாலும், சாந்தியாதியினால்-சாந்திமுதலியவற்றாலும். எ-று.

ப-ம். எல்லாவற்றிலும்வியாபித்திருக்கின்றசிவனே எல்லாப்பிராணிகளினும் அவ்வவ்வுபாதிவசத்தாற்சீவபாவத்தையடைந்து பரிச்சின்னன்போலத்தோற்றுகின்றான். அங்ஙனமேசுருதியும் 'இந்தஜீவான்மாவாக அனுப்பிரவேசித்துநாமருபங்களைச்செய்கின்றான், என்றுகூறிற்று. அங்ஙனமாயினும், தனக்குஅஸம்ஸாரியானபிரமருபத்தன்மையை அந்தக்கரணத்தைமுன்னிட்டுமறைக்கின்ற அஞ்ஞானத்தால் ஸம்ஸாரிபோலத்தோற்றுகின்றானென்பார், "மாசதில்லாப்பரனாகியிருக்கத்தனதுமாயையினு, லீசனென்பதறியாமலிறந்தான்பிறந்தான்போலிருக்கும்" என்றார். (௯)

இதுவுமது. வேறு.

பத்தியாற்குரவன்பாதம்பணிந்துவேதாந்தம்பன்னுஞ்
சுத்தமாவாக்கியத்தாற்றுணிந்தவப்பொருளைத்தூய
புத்தியாற்றுணிந்துகொண்டப்பொருளனுபோகமாகச்
சித்தியாநிற்குமைக்கஞ்சிவபதந்தனையேசேரும்.

இ-ள். பத்தியால் - பிரேமையினாலும், குரவன்பாதம்பணிந்து - சற்குருவினதுதிருவடிகளைவணங்கி, வேதாந்தம்பன்னும் - உபநிஷதங்கள்சொல்லுகின்ற, சுத்தமாவாக்கியத்தால்துணிந்த - பரிசுத்தமாகியமகாவாக்கியங்களால்நிச்சயித்த, அப்பொருளை - அந்தப்பிரமத்தை, தூயபுத்தியாற்றுணிந்துகொண்டு - தூய்மையுடையபுத்தியினால்நிச்சயித்து, அப்பொருளனுபோகமாக - அந்தப்பொருள் சுவானுபோகமாகுங்கால், ஐக்கம்சித்தியாநிற்கும்-ஐக்கிய

மானதுசித்திக்கும், சிவபதந்தனையேசேரும் - (அதனல்) சிவபதத்தையேய் டைவான். எ - று. (௪)

இதுவுமது. வேறு.

ஊனிலொருபற்றுமுளனன்றியுடனிற்கு
நானெனவிளம்புதனைநற்சிவமதாகத்
தானறியுமாகிலொருவன்றனுருவாகு
ஞானபரிபூரணநலந்தனையடைந்தான்.

இ - ள். ஒருவன் - ஒருவன், ஊனிலொருபற்றுமுளனன்றி - சரீரத்தி லொருபற்றுமுடையவனுகாமல், உடல்நிற்கும் - இவ்வுடலின்கண்ணேநிற்கின்ற, நானெனவிளம்புதனை - நானென்றுசொல்லுகின்றதன்னை, நற்சிவமதாகத்தான்அறியுமாகில் - நல்லசிவமாகவேதான்அறிவானேல், தன்உருவாகும் - தனதுசொரூபமாகும், ஞானபரிபூரணநலந்தனை - பரிபூரணஞானமாகியநன்மையை, அடைந்தான் - அடைந்தவனுவான். எ - று.

ப-ம். சாந்திதாந்திகளாலும் சிரவணமனனுதிகளாலும் உண்டானஞான த்தினுல்ஸாக்ஷிசின்மாத்திரரூபமாயும், சுகதுக்கமுதலிய எல்லாத்துவிதங்களு ம்நீங்கினதாயும், நீ நான் என்னுஞ்சொற்களால் குறிக்கப்பட்டதாயுமுள்ள அபரிச்சின்னமானபரசிவசொருபத்தை ஸாக்ஷாத்கரிக்கின்றகாலத்திற்றனே, தனக்குப்பரிபூரணத்தன்மையையடைகின்றன். அங்ஙனமேசுருதியும்' அந்த இதனையறிந்துவாமதேவர்சொல்லுகின்றர் நான்மனுவானேனென்று'கூறிற்றெ ன்பார்," நானெனவிளம்புதனைநற்சிவமதாகத், தானறியுமாகிலொருவன்றனு ருவாகு, ஞானபரிபூரணநலந்தனையடைந்தான்" என்றர். (௫)

அ - கை. பாவாபாவாத்மகமானஅனைத்தும் அவித்தையினுற்கற்பிதமா கலானும், அவ்வவித்தையுந்தோற்றுதல்மாத்திரமான ரூபமுடையதாய்ச்சத சத்திற்குவிலக்ஷணமாகலானும், இவ்விரண்டும்வித்தையால் நீங்கினஅளவில் கேவலம்பிரமமேசேஷிக்கின்றதன்றிப் பாவாபாவாத்மகமானஒருபொருளுமி ல்லையென்றுகூறுகின்றர்.

வேறு.

செறிவாயெங்குந்திகழ்ந்துள்ளசிவனுனென்னுந்திகழ்வுற்று
னெறியானிகழுநிகழ்வெல்லாநிமலமாயேநிகழ்ச்சிதரு
மறிவாயறியாமையுமாகியறிவிப்பவனுயறிவானுய்ப்
பிறிவாயுளதாயிலதாயும்பிரமமொன்றுமேபிறழும்.

இ - ள். செறிவாயெங்குந்திகழ்ந்துள்ள - எங்கும்நிறைந்துவிளங்குகி ன்ற, சிவன்நானென்னும்திகழ்வுற்றுன் - சிவனேநானென்னும்விளக்கமுடை யவனுக்கு, நெறியால்நிகழும்நிகழ்வெல்லாம் - கிரமமாகவிளங்குகின்றவிளக் கமனைத்தும், நிமலமாயேநிகழ்ச்சிதரும் - நின்மலமாகவேவிளங்கும், அறி

வாய் - ஞானமாயும், அறியாமையுமாகி- அஞ்ஞானமாயும், அறிவிப்பவனுய்- அறிவிப்பவனுயும், அறிவானுய்-அறிபவனுயும், பிறிவாய் - பின்னமாயும், உள தாய் - இருக்கின்றதாயும், இலதாயும் - இல்லாததாயும், பிரமமொன்று மேபிறழும் - பிரமம்ஒன்றுமாத்திரமேவிளங்கும். எ - று. (௬)

அ - கை. அந்தஅவஸ்தையில் அவித்தியாநிவிர்த்தியிருக்கின்றதா? இல் லையா? இல்லையெனில் அவித்தையிருக்கின்றதென்றுவரும். அங்ஙனமாயின் எ வ்வாறு கேவலபரிசேஷஞ்சித்திக்கும், இருக்கின்றதெனில்,அந்நிவிர்த்தியுஞ் சேஷிக்குமென்றுசங்கித்துக் கூறுகின்ருர்.

வேறு.

அடையவும்பிரமமேயெனவறிந்துளோ
னடைவதங்கதனையேயாகுமன்றியே
யிடையிலோர்மாயையுண்டென்னவெண்ணுமேற்
கடையதேயாமவன்கற்றகல்வியே.

இ - ள். அடையவும்பிரமமேயெனவறிந்துளோன் - அனைத்தும்பிரம மேயென்றுஉணர்ந்தவன், அடைவதங்கதனையேயாகும் - அடைவதும்பிரமத் தையேயாகும், அன்றியே - இவ்வாறன்றி, இடையிலோர்மாயைஉண்டென் னஎண்ணுமேல் - இடையில்ஒருமாயையிருக்கின்றதென்றுகருதுவானுயின், அவன்கற்றகல்வி - அவன்அப்பியாசித்தவித்தையெல்லாம், கடையதேயாம் - இழிந்ததேயாகும். எ - று.

கருத்து. விவகாரதிருஷ்டியினுல் அவித்தையும் அதன்ஒழிவும் அன்றி ப் பரமார்த்ததிருஷ்டியினுல்இரண்டுமில்லை. சுபாவதிருஷ்டியினுல் மற்றியாது விளங்குகின்றதெனில், பாவாபாவாதிபேதாத்மகமான எல்லாவுலகும் காரண மானபிரமரூபமாகவே விளங்குகின்றதென்றுகொள்க. (எ)

அ - கை. இங்ஙனம் வித்தை அவித்தை குரு சிஷ்யன் பாவம் அபாவம் என்னும் இப்பேதங்களாகப் பிரமமேவிளங்குகின்றதென்று வடநூலில்விரித் துக்கூறியவனைத்தும் அஞ்சாவதத்தியாயத்திற் சொல்லிக்கிடந்தனவென்று கருதி,ஈண்டுச்சுருக்கிக்கூறி ஆன்மாவில்நின்றும் ஆகாசமுண்டாயிற்று, என்ற துமுதலானசிருட்டியைக் கூறுகின்றசுருதி பேதசகத்தையெதற்காகச்சொ ல்லிற்றென்றுசங்கித்துக்கூறுகின்ருர்.

வேறு

மாயையென்ருென்றுண்டாகமதிப்பதுமனனமல்ல
வாயினுமகண்டஞானவங்கமாமிந்தஞானங்
காயம்வேருகுமென்கைகாரணமாகவித்தைத்
தூயநான்மறைகளோதுந்துவந்துவந்தீர்க்கைசுட்டி.

இ-ள். மாயையென்றுஒன்றுண்டாகமதிப்பது-மாயையென்றுஒன்றிரு க்கின்றதாகக்கருதுவது, மனனமல்ல-மனனமன்ருகும்,ஆயினும்-அவ்வாருயி

னும், இந்தஞானம் - இந்தஞானமானது, அகண்டஞானஅங்கமாம் - அகண்டஞானத்திற்குஅங்கமாகும், காய்ம்வேருகுமென்கைகாரணமாக - தேகம்பின்னமாகுமென்பதும் பிரமத்தையடைதற்குக்காரணமாக, துவந்துவந்தீர்க்கைசுட்டி - துவிதத்தைநீக்குவதுகுறித்து, இத்தை - இதனை, தூயநான்மறைகளோதும் - புனிதமாகியநான்குவேதங்களுஞ்சொல்லும். எ-று.

கருத்து. எல்லாச்சகவிஷயஞானமும்பிரமரூபமாகவறிவது பிரமத்தை அடைதற்குச்சாதனமாகும். அதற்குவேறுனஞானம் வேறென்றுயுள்ளதனை வேறென்றுயறிதலின் அஞ்ஞானமாகும். ஆயினும், ஜகத்திற்குஆரோபஅபவாதங்களொப்புக்கால்கிட்பிரபஞ்சமாய் அத்துவிதமாய்விளங்கும்பிரமத்தையடையக்கூடும். ஆதலால், அதனையடைதற்குபகாரமாமென்பதுகருதியே துவிதஜகத்பிரதிபாதனமென்றறிக. (அ)

அ-கை. ஜகம்பொய்யானுற் 'சரீரத்தோடிருக்கும்வரைக்கும் அக்கினிஹோத்திரஞ்செய்யத்தக்கது. அந்தஇவனைவேதாநுவசனத்தாற் பிராமணர்கள் அறிதற்குஇச்சிக்கின்றுர்கள், என்னுஞ்சுருதிகளாற் சாத்தியசாதனபாவமுதலியவற்றை ஏன்சொல்லுகின்றதென்று சங்கித்துக்கூறுகின்றுர்.

யாதொருபடியிற்றேன்றுமியல்பினுற்சகத்துக்குண்மை
யோதியதுபநிடந்தானேர்விடத்துண்மையாகப்
பேதமாமுலகுதோன்றிற்பிறப்பதற்கேதுவாகு
மீதெலாமில்லையென்னலின்பத்துக்கேதுவாகும்.

இ-ள். யாதொருபடியிற்றேன்றும் - எவ்வாறுதோன்றுகின்றதோ, இயல்பினுல் - அத்தன்மையைக்கொண்டே, உபநிடந்தான்சகத்துக்கு உண்மையோதியது - உபநிஷதம்ஜகத்தினுக்குச் சத்தியத்தன்மையைக்கூறிற்று, ஓர்விடத்து - கருதுமிடத்தில், உண்மையாகப்பேதமாமுலகுதோன்றில் - உண்மையாகப்பின்னமாகிய உலகந்தோன்றினுல், பிறப்பதற்கு ஏதுவாகும் - ஜனிப்பதற்குக்காரணமாகும், ஈதெலாம்இல்லையென்னல் - இவையனைத்துமில்லையென்பதுவே, இன்பத்துக்கேதுவாகும் - பேரின்பத்திற்குக்காரணமாகும். எ-று.

ப-ம். வியாவகாரிகசத்தியமாகச்சகத்தையொப்பி, அந்தச்சுருதி சாத்தியசாதனபலமானவற்றைக்கூறியதேயன்றி, அதற்குப்பாரமார்த்திகசத்தியத்தன்மையைச் சொல்லவில்லையென்பார், "யாதொருபடியிற்றேன்றுமியல்பினுற்சகத்துக்குண்மையோதியது" எனவும், பாரமார்த்திகசத்தியமாகயாதொருஜகஞானமுண்டோ அதுமித்தையான ஞானமாதலால் ஸம்ஸாரத்திற்கேதுவாகும். உலகம் அசத்தியமென்பது பரமார்த்தமாதலால் ஸம்ஸாரநிவிர்த்திக்கேதுவாகுமென்பார், "பேதமாமுலகுதோன்றிற்பிறப்பதற்கேதுவாகும், ஈதெலாமில்லையென்னலின்பத்துக்கேதுவாகும்" எனவுங்கூறினுர். (௯)

இதுவுமது. வேறு.

ஆகையாலகிலத்தையேமாயையென்றுகமெய்யாய்வந்த
மோகமாற்றுதற்பொருட்டோரோவிடத்திலேமொழிந்ததுமுதுவே
பாகமாகியசித்தரைக்குறித்துமெய்ப்பரம்பொருளாகின்ற (தம்
வேகமேநிகழ்கின்றதெல்லாமெனவியம்பியதிதயத்தால்.

இ - ள். ஆகையால் - ஆதலால், மெய்யாய்வந்தமோகமாற்றுதற்பொருட்டு - மெய்யாகப்பொருந்தியமோகத்தைமாற்றும்பொருட்டு, அகிலத்தையேமாயையென்றுக - உலகத்தைமாயையென்று, ஒரோவிடத்திலே-ஒவ்வோரிடத்தில், முதுவேதம்மொழிந்தது - புராதனமாகியவேதங்கூறிற்று, பாகமாகியசித்தரைக்குறித்து - பரிபக்குவசித்தமுடையவரைக்குறித்து, நிகழ்கின்றதெல்லாம் - விளங்குகின்றவனைத்தும், மெய்ப்பரம்பொருளாகின்ற - மெய்ப்பரம்பொருளாகிய, ஏகமேஎன - பிரமமேயென்று, இதயத்தால் - இருதயத்தினுல், இயம்பியது - கூறிற்று. எ - று.

கருத்து. மாயையாகப்பிரகிருதியையும் மாயியாகமகேசனையும் அறியத்தக்கதெனவும், இந்தத்துவிதம்மாயாமாத்திரமாமெனவும், எல்லாம்பிரமமெனவும், இச்சகமனைத்தும் இவ்வான்மசொரூபமெனவும், உபதேசித்தசுருதிகள், தோற்றுகின்றவெல்லாவுலகிற்கும் அகண்டைகரசப்பிரமத்தன்மையையே போதிக்கின்றனவென்றறிக. (௫௦)

இதுவுமது.

மெய்யைநாடின்மெய்ப்பரமலால்விச்சையுமவிச்சையும்வேறேயோ
வையமானதுமற்றொருபொருள்களுமில்லையிம்மனனஞ்செய்
துய்யயோகிமுனெப்படியெப்படித்தோற்றுகின்றதுதோற்றஞ்
செய்யுமியாவையுஞ்சிவன்வடிவாகவேதிகழ்ந்திடுந்திடமாக.

இ- ள். மெய்யைநாடில்-உண்மையைக்கருதுங்கால், மெய்ப்பரமலால்-மெய்யாகியபிரமத்தைத்தவிர, விச்சையும்அவிச்சையும்வேறேயோ - வித்தையும்அவித்தையும்வேறே, வையமானதும்-உலகமும், மற்றொருபொருள்களும்-வேறொருபொருள்களும், இல்லை-(வேறாக) இல்லை, இம்மனனஞ்செய்துய்யயோகிமுன்-இந்தமனனஞ்செய்கின்றபரிசுத்தமுடையசிவயோகிமுன்பு, எப்படியெப்படித்தோற்றுகின்றது-எவ்வெவ்வண்ணமாகத்தோன்றுகின்றதோ, தோற்றஞ்செய்யுமியாவையும்-அவ்வண்ணந்தோற்றுகின்றவனைத்தும், திடமாக - உறுதியாக, சிவன்வடிவாகவேதிகழ்ந்திடும்-சிவசொரூபமாகவேவிளங்கும். எ-று.

அ - கை. சருவஜகத்தோற்றமாகயாதொன்றுண்டோ அதுசிவனேயென்றுண்டானபுத்தியும், பூருவவாஸனையாற் சகத்தோற்றமிருந்ததனுல் அதுநீங்கும்பொருட்டாதலால் அந்தப்புத்தியுஞ் சிவயோகிக்கில்லையென்றுகூறுகின்றார்.

வேறு.

யாதொருபடியிற்றேற்றமென்றியம்பியதுமுன்னை
வாதனையதனைப்பற்றியல்லதுமற்றொன்றில்லை
போதமேயுள்ளதென்றும்பூரணனுகையாலே
யோதமில்வேலைபோலுமொழிவறநிறைந்தயோகி.

இ - ள். யாதொருபடியிற்றேற்றமென்றியம்பியதும் - எவ்வாறுவிளங்குகின்றதோவென்றுசொல்லியதும், முன்னைவாதனையதனைப்பற்றியல்லது - பூருவவாசனையைப்பற்றியேயன்றி, மற்றொன்றில்லை - வேறொன்றிலலை, பூரணனுகையால் - பரிபூரணனுதலால், என்றும்போதமேயுள்ளது - எக்காலத்தும்ஞானசொரூபமேயிருக்கின்றது, ஒழிவறநிறைந்தயோகி - இடைவிடாமல்எங்கும்நிறைந்தயோகியானவன், ஓதமில்வேலைபோலும் - அலையில்லாதசமுத்திரம்போல்வான். எ - று.

ப-ம். சிவயோகியானவன் விக்ஷேபத்திற்கேதுவானதுவிதமில்லாததனுல், நிருவிகற்பமாய்ச் சிதேகரஸஸ்வபாவமாய்ச் சலனமில்லாதவனுய்விளங்குவானென்பார், "ஓதமில்வேலைபோலுமொழிவறநிறைந்தயோகி" என்றூர்.()

அ - கை. சுயம்பிரகாசப்பிரமான்மருபமாய்விளங்குகின்றவித்துவான் ஞானத்திற்கேதுவான அந்தக்கரணுதிகள் அவித்தியாகாரியங்களாதலால், வித்தையால் அவித்தைநீங்குதலின் அந்தஅவஸ்தையைக் கருமகர்த்திரு பாவமாகஅறிகின்றுனில்லையென்று கூறுகின்றூர்.

அப்படியிருந்தயோகியனுபவத்தன்மைதானு
மெப்படியென்றுகாணுனீசன்மாலுனுங்காணேம்
செப்பிடவறியாவேதாகமங்களுஞ்சிவனூர்மேனி
யெப்படியென்னின்மற்றப்படியிலேயிருந்ததென்னும்.

இ - ள். அப்படியிருந்தயோகி - அவ்வாறிருந்தயோகியானவன், அனுபவத்தன்மை - சுவானுபவத்தன்மையை, தானுமெப்படியென்றுகாணுன் - எவ்வாறென்றுதானுமறியமாட்டான், ஈசன் - ஈச்வரனும், மால் - விஷ்ணுவும், நானும் - யானும், காணேம் - காணமாட்டோம், வேதாகமங்களும்-வேதங்களும்ஆகமங்களும், செப்பிடவறியா - சொல்லஅறியாதனவாகும், சிவனூர்மேனியெப்படியென்னில் - சிவசொருபம் எவ்வண்ணமிருக்கின்றதென்றுல், மற்றப்படியிலேயிருந்ததென்னும் - அவ்வண்ணமேயிருக்கின்றதென்று (அவ்வேதாகமங்கள்) சொல்லும். எ - று. (௧௩)

அ - கை. பரசிவனேநித்தியசித்தஞானவானென்றுகூறுகின்றூர்.

வேறு.

அம்பிகாபதியறியுமிவ்வனுபவமவனருளாகும்மக்
கொம்பனுளமிர்திடுந்திருவருளேயேகோலமாய்க்கொண்டந்த

வெம்பிரானருளாலரிநாம்பிறரியாவருமறிவோமத்
தம்பிரானறிந்தமையெவராலெனச்சங்கையுந்தகுமோதான்.

இ - ள். இவ்வனுபவம் - இந்தச்சுவானுபவத்தை, அம்பிகாபதியறியும் உமாபதியாகியசிவபெருமான்அறிவன், அவனருளாகும் - அவரதுதிருவருளே வடிவாகிய, அக்கொம்பனாள் - அந்தப்பார்வதிதேவியும், அறிந்திடும் - அறிவாள், திருவருளேயேகோலமாய்க்கொண்டு-திருவருளையேயழகாகவடைந்து, அந்தஎம்பிரானருளால் - அந்தஎம்பெருமானது திருவருளால், அரி - விஷ்ணுவும், நாம் - யாமும், பிறர்யாவரும்அறிவோம் - மற்றெல்லாரும்அறிவோம், அத்தம்பிரானறிந்தமை - அந்தச்சிவபெருமான்உணர்ந்தது, எவராலென- யாராலென்று, சங்கையுந்தகுமோ- (சங்கிக்குஞ்) சங்கையும்கூடுமோ. எ-று.

அ - கை. பலங்களெல்லாம்புசிக்கப்பட்டுப்புண்ணியபாபங்கள் ஒழியுங்கால், பரமான்மாவேகுருமூர்த்தியாக ஒருவற்குவெளியில்வந்து அருள் செய்வானென்று மேல்வருஞ்செய்யுட்களாற் கூறுகின்றார்.

ஞானமாகியவிழியினாற்குருபரனயந்துநோக்கிடவுண்டா
மானுபூதியாதொன்றதுவேசிவனுவதப்படியுள்ள
மேனிதான்வினையொத்தவப்பொழுதிலேவெளிப்படும்வெளிகாண
லானதேசிகன்றன்னையப்பரம்பொருளென்னவாதரஞ்செய்வான்.

இ - ள். ஞானமாகியவிழியினால் - ஞானமாகியநேத்திரத்தினால், குருபரனயந்துநோக்கிட - தேசிகர்கருணைகூர்ந்துகடாக்ஷித்தலினால், உண்டாம் ஆனுபூதியாதொன்று-உண்டானசுவானுபூதியாதொன்றுண்டோ, அதுவேசிவனுவது-அதுவேசிவசொரூபமாகும், அப்படியுள்ளமேனிதான்- அச்சிவமாயிருக்கின்றதிருமேனியானது, வினையொத்தவப்பொழுதிலே- புண்ணியபாபங்கள் ஒத்தகாலத்தில், வெளிப்படும்-வெளியாகும், வெளிகாணலானதேசிகன்தன்னை-வெளியிற்காணும்படிதோற்றியதேசிகரை, அப்பரம்பொருளென்ன - அந்தச்சிவபெருமானேயென்று, ஆதரஞ்செய்வான்- (ஒருவன்) அன்புசெய்யக்கடவன். எ-று. (௧௫)

நேசநெஞ்சினாற்றனக்கதுநினைவலவாயினுநெறியென்றே
தேசிகன்றிருவுள்ளமேசெய்குவான்செனித்திடுங்குலத்துக்கு
மாசதாயினுமாச்சிரமத்திலேவழுவினுமுலகெல்லா
மேசிவிடினுமறம்புகழ்தனம்பிறவிழப்பினுமிடரேனும்.

இ - ள். செனித்திடுங்குலத்துக்குமாசதாயினும் - தான் பிறந்தகுலத்துக்குக்களங்கம்வருவதாயிருக்கினும், ஆச்சிரமத்திலேவழுவினும் - ஆச்சிரமத்தில்நின்றும் நழுவினாலும், உலகெல்லாமேசிவிடினும்-உலகத்தோர்களெல்லாரும் நிந்தித்துத்தள்ளிவிடுத்தாலும், அறம்- தருமத்தையும், புகழ்- கீர்த்தியை

யும், தனம் - திரவியங்களையும், பிற - மற்றனைத்தையும், இழப்பினும் - இழந்தாலும், இடரேனும் - துன்பமாயிருந்தாலும், தனக்கதுகினைவலவாயினும் - தனக்குஅவ்வாறிருப்பதுகருத்தன்று யினும், நேசநெஞ்சினால - அன்புபொருந்தியமனத்தினால், நெறியென்றே - இதுவேநமக்கு நல்லவழியென்று, தேசிகன்றிருவுள்ளமேசெய்குவான் - பரமதேசிகரது திருவுள்ளம்போலவேசெய்யக்கடவன். எ - று. (கசு)

தேசிகன்றிருவுள்ளமுண்டாகவச்சிவன்றிகழ்ந்திடுகின்றான்
ஈசனிங்கருள்செய்யவந்திருக்கின்றவிடமிவன்றிருமேனி
மாசதொன்றிவனளவிலேசெயிலெரிவாய்நரகினிற்பூத
நாசமெவ்வளவவ்வளவுஞ்செலநண்ணுநன்னெறிநண்ணான்.

இ - ள். தேசிகன்திருவுள்ளமுண்டாக - சற்குருவினது கருணைமிகுந்த திருவுள்ளம் ஒருவனிடத்தில் உண்டானால், அச்சிவன்திகழ்ந்திடுகின்றான்-அவனுக்குஅந்தச்சிவபெருமான் விளங்குகின்றான், ஈசனிங்கருள்செய்யவந்திருக்கின்ற இடம் - சிவபெருமான் இவ்விடத்தில் திருவருள்செய்யவந்தமர்கின்ற இடம், இவன்திருமேனி - இந்தச்சற்குருவினதுதிருமேனியேயாகும், மாசது ஒன்று இவனளவிலேசெயில் - ஒருகுற்றமாயினும் இந்தத்தேசிகனிடத்திற்செய்தால், பூதநாசமெவ்வளவு - பூதங்களெல்லாம் அழிவதற்குஎத்தனைகாலமிருக்கின்றதோ, அவ்வளவுஞ்செல- அத்தனைகாலமுஞ் செல்லும்வரைக்கும், எரிவாய்நரகில் - ரௌரவாதிநரகங்களில், நண்ணும் - அடைந்துகிடப்பான், நன்னெறிநண்ணான் - நல்லமார்க்கத்தில்வரவேமாட்டான். எ - று. (கஎ)

வேறு.

அருவெனுமமலன்றானருளிலனெனினுஞ்சார்
குருபரனருளுண்டேயெனிலொருகுறையுண்டோ
திருவடிதரவந்தார்திருவுளமிலரென்றா
லொருவருமிலர்கண்டீருறுதுயர்களைகின்றார்.

இ - ள். அருவெனுமமலன்றான் - அருபமாகியசிவபிரான், அருளிலன் எனினும்- திருவருள்செய்யாவிட்டாலும், சார்குருபரன் அருளுண்டேஎனில்- பொருந்தியதேசிகரது திருவருள்உண்டென்னில், ஒருகுறையுண்டோ- ஒருதாழ்வுண்டுகொலோ, திருவடிதரவந்தார் - திருவடிசூட்டவெழுந்தருளியதேசிகர், திருவுளமிலரென்றால் - திருவுளமிரங்கிக் கருணைசெய்கிலரெனில், உறுதுயர்களைகின்றார் - உற்றதுன்பங்களையொழிப்பார், ஒருவருமிலர்கண்டீர் - வேறொருவருமில்லை பாருங்கள். எ - று. (கஅ)

உறுவதுதனில்வேறுயுளதலவதுநேரே
பெறவருள்பெரியோனேபெருகியகுருவாவா
னெறியுடலுளனாவானிலைபெறவழிபாடே
செறிபவனருளாலேசிவகதியடைவானால்.

இ - ள். உறிவது - தான்அடையும்பொருள், தனில்வேறுயுளதல - தன்னைக்காட்டிலும்வேறாயிருக்கின்றதல்ல, அதுநேரேபெறஅருள் - அதனைஅபரோக்ஷமாகஅடையும்படிஅருள்கின்ற, பெரியோனே - உயர்ந்தவனே, பெருகியகுருவாவான் - (அருள்) பெருகியகுருமூர்த்தியாவர், நெறி - ஒழுங்காக, உடல் - காயத்தினும், உளம் - மனத்தினும், நாவால் - வாக்கினும், நிலைபெற - ஸ்திரமாக, வழிபாடேசெறிபவன் - பணிவிடை(சமீபத்தில்)நெருங்கிச்செய்பவன், அருளால் - தேசிகரதுதிருவருளால், சிவகதியடைவான் - மோக்ஷத்தையடைவான். எ - று. (௧௯)

இந்தவிடும்பையுடம்புறுமேதுத்
தந்தையெனப்புகழ்கின்றிலர்தக்கோ
ரந்தமிலாதவகண்டமுநம்முட்
டந்தவர்தந்தையெனச்சமைவுற்றார்.

இ - ள். தக்கோர் - அறிஞர், இந்த இடும்பை உடம்புஉறும்ஏது - இந்தத்துன்பமாகியசரீரமுண்டாவதற்குக்காரணமாகிய, தந்தையெனப்புகழ்கின்றிலர் - தந்தையைக்குருவென்றுபுகழமாட்டார்கள், அந்தமிலாத - முடிவில்லாத, அகண்டமும் - அகண்டசொரூபத்தை, நம்உள் - நமதுஇருதயத்தின்கண்ணே, தந்தவர் - (விளங்கும்படி) அருள்செய்தவரே, தந்தையெனச்சமைவுற்றார் - குருவென்றுகருதியிருக்கின்றார். எ - று.

ப - ம். "இந்தவிடும்பையுடம்புறுமேதுத், தந்தையெனப்புகழ்கின்றிலர்" என்றதனால், அஷ்டைச்வரியங்களையும், கந்தருவர்திபதங்களையும், சார்வபௌமபதவியையும், மந்திரதந்திரமுதலியவற்றையும், லௌகிகமானவுபாயங்களையும், கொடுப்பவர்கள்குரவர்களல்லரென்பதுபெறப்பட்டது. (௨௦)

வேறு.

உண்டுபோற்றோன்றுமுலகெலாமுண்மை யன்றெனவுணர்த்தி
யெப்பொருளுங், கண்டசான்றதனைக்காக்ஷியதறவேகண்டிடக்கரி
யெனக்காட்டும், பண்டைவேதாந்தவாக்கியஞ்சொன்ன படியிலேப
ரமனோடொன்றாய், விண்டிடாவண்ணமுணர்த்துவான்றன்னைவியன்
குருவென்றிடும்வேதம்.

இ - ள். உண்டுபோற்றோன்றும்உலகெலாம் - இருக்கின்றதுபோலத்தோற்றுகின்றஜகங்களெல்லாம், உண்மையன்றெனஉணர்த்தி - மெய்யல்லவென்றறிவித்து, எப்பொருளுங்கண்டசான்றதனை - எல்லாப்பொருள்களையுங்காண்கின்றஸாக்ஷியை, காக்ஷியதறவேகண்டிட - திரிசியமில்லாமற்காணும்படி, கரியெனக்காட்டும் - ஸாக்ஷியாகத்தெரிவிக்கின்ற, பண்டைவேதாந்தவாக்கியஞ்சொன்னபடியிலே - புராதனமாகியவேதாந்தமகாவாக்கியங் கூறியவண்ணமே, பரமனோடொன்றாய் - பிரமத்தினோடுஏகமாகி, விண்டிடாவண்ணமுணர்த்துவான்றன்னை - பிரியாதபடிஉபதேசிப்பவனையே, வேதம் - சுருதி, வியன்குருவென்றிடும் - பெருமைபொருந்தியகுருவென்றுசொல்லும். எ - று. (௨௧)

கருத்து. எல்லாத்துன்பங்களேயும்ஒழிப்பதாயும் நிரதிசயானந்தமளிப்பதாயுமுள்ள பரமபுருஷார்த்தத்தையடையச்செய்பவனேகுருவென்க.

காட்சியையெல்லாங்கண்ணதாய்க்கரைத்துக் கண்ணெழிந்தொருபொருளில்லா, மாட்சியையளிக்கவல்லவன்குருவாமாரிபோன்மாறுவேண்டாதே, மீட்சியில்பதத்தைக்கருணையாலளிக்கும்வித்தகக்குரவனேயெவருந், தாழ்ச்சிசெய்தேத்தற்குரியதத்துவமாஞ்சங்கரனென்றிடத்தகுவான்

இ-ள். காட்சியையெல்லாம் - திரிசியங்களேயெல்லாம், கண்ணதாய்க்கரைத்து - திருக்காகும்படிசெய்து, கண்ணெழிந்தொருபொருளில்லா- திருக்கைத்தவிரவேறொருபொருளுமில்லாத, மாட்சியையளிக்கவல்லவன்குருவாம் - பெருமையைக்கொடுக்குந்திறமுடையவரேகுருவாவார், மாரிபோல் மாறுவேண்டாதே - மேகங்களேப்போலக்கைம்மாறுகருதாமல், மீட்சியில்பதத்தை - திரும்புதலில்லாதபதவியை, கருணையால்அளிக்கும் - திருவருளால் கொடுத்தருள்கின்ற, வித்தகக்குரவனே-ஞானசிரியரே, எவரும் - எல்லாரும், தாழ்ச்சிசெய்து - தாழ்ந்து, ஏத்தற்குரியதத்துவமாம்-துதித்தற்குரியதத்துவசொருபியாகிய, சங்கரனென்றிடத்தகுவான் - சங்கரனென்றுசொல்லத்தகுவான். எ-று. (௨௨)

வருபிறப்பறவேவேண்டினன்மறையீறென்னுமம்புயத்தினேமலர்த்தற், கிரவியாய்நெஞ்சிற்கிசைந்தநற்குருவையாதொருவழியினுவிறைஞ்சி, யருள்சுரந்திடுவோர்க்காவதேசெய்வானருமறைமுடிவெலாமறையும், பொருளேநேராகவுமக்கெனக்கீசன்புகன்றவப்படியிலேபுகன்றேன்.

இ-ள். வருபிறப்பறவேவேண்டினன் - மறுபடியும்நண்ணுகின்றபிறவிநீங்கக்கருதியவன், மறையீறென்னும்அம்புயத்தினே - வேதாந்தமென்னுந்தாமரையை, மலர்த்தற்கிரவியாய் - மலர்த்துதற்குச்சூரியனுகி, நெஞ்சிற்கிசைந்தநற்குருவை - உள்ளத்திற்கியைந்தசற்குருவை, யாதொருவழியினுலிறைஞ்சி - எந்தமார்க்கத்தாலும்வணங்கி, அருள்சுரந்திடுவோர்க்கு - கருணைபொழிகின்றஅந்தத்தேசிகருக்கு, ஆவதேசெய்வான்-வேண்டியபணிவிடையேசெய்யக்கடவன், அருமறைமுடிவெலாம்அறையும்பொருளே - உபநிஷதங்களெல்லாம்விளம்புகின்றபொருளே, நேராக - ஒழுங்காக, எனக்கீசன்புகன்றஅப்படியிலே - எனக்குச்சிவபிரான் உபதேசித்தருளியவண்ணமே, உமக்கு- உங்களுக்கு, புகன்றேன் - சொன்னேன். எ-று. (௨௩)

வேறு.

எல்லாமறிவானுயில்லாதில்லானுகியெல்லாந்தான்
வல்லானுகித்தீங்கொன்றுமருவானுகிவடிவருளே

யல்லாதிலனுமிறையுண்மையன்றிச்சொல்லானப்பொருளிற்
சொல்லாதில்லையுங்கட்குச்சொன்னேனெல்லாஞ்சுருக்காக.

இ - ள். எல்லாம்அறிவானும் - சருவக்ஞனும், இல்லாதில்லானுகி - தனக்குக்கிடையாதனஇல்லாதவனும், எல்லாந்தான்வல்லானுகி-சருவவல்லவனும், தீங்கொன்றும்மருவானுகி - ஒருதீங்குமில்லாதவனும், அருளேவடிவுஅல்லாதுஇலனும்-திருவருளேசொருபமன்றிவேறில்லாதவனும் (விளங்குகின்ற), இறை - சிவபெருமான், உண்மையன்றிச்சொல்லான்- சத்தியார்த்தமன்றி (வேறொன்றினையெனக்கு) உபதேசஞ்செய்யமாட்டான், உங்கட்கு அப்பொருளிற்சொல்லாதில்லை - (நான்) உங்களுக்குஅந்தஅருத்தத்திற்சொல்லாததில்லை, சுருக்காக - சங்கிரகமாக, எல்லாம்சொன்னேன் - அனைத்தையும்உபதேசித்தேன். எ - று. (உ௪)

வேறு.

போதம்வடிவாயகண்டபூரணனுஞ்சிவனுக்கு
யாதுமுளங்கைக்கனியாமிவனருளின்படியொழிய
வேதமுடியிற்பொருடாம்வேண்டியவாவிளம்பியிடும்
பாதகர்போயேறவொண்ணுப்பாழ்ங்கிணற்றில்வீழ்வர்களால்.

இ - ள். போதம்வடிவாய் - ஞானமேசொரூபமாகி, அகண்டபூரணனுஞ்சிவனுக்கு - அகண்டபரிபூரணனுகியசிவபிரானுக்கு, யாதும்உளங்கைக்கனியாம் -எல்லாங்கரதலாமலகம்போல்விளங்கும், இவன்அருளின்படியொழிய- இந்தச்சிவபிரானுரைத்தருளியவண்ணமன்றி, வேதமுடியில் - உபநிஷதங்களில், தாம்வேண்டியவா - தாங்கள்கருதியவாறு, பொருள்விளம்பியிடும்பாதகர் - தாற்பரியஞ்சொல்லுகின்றபாவிகள், போய்ஏறவொண்ணு - சென்றுகரையேறமுடியாத, பாழ்ங்கிணற்றில்வீழ்வர்கள் - (பவமாகிய) பாழ்த்ததுரவில்வீழ்வார்கள். எ - று. (உ௫)

வேறு.

ஆதிவேதாந்தப்பொருளேயத் துவிதமாம்படிக்ககிலநாயகனுஞ், சோதிபாதப்போதிரண்டையுந் தொட்டுச்சூழுகேனென்றயன்சொல்லிக், காதலாற்பிறவிக்கவுடதமுக்கட்கடவுளைக் கருத்தில்வைத்தவன்றன், பாதமேபணிந்துபரவியிப்பரிசேபத்தியாற்பரவசனுனுன்.

இ - ள். ஆதிவேதாந்தப்பொருளை - ஆதியாகியவேதாந்தஅருத்தத்தை, அத்துவிதமாம்படிக்கு - அத்துவிதமாக, அகிலநாயகனுஞ்சோதி - சர்வேசனுகியசிவபிரானுடைய, பாதப்போதுஇரண்டையுந்தொட்டு - திருவடித்தாமரைகளிரண்டையும்பிடித்துக்கொண்டு, சூழுகேனென்று-கருதிச்சொல்லுகின்றேனென்று, அயன்சொல்லி - பிரமதேவர்கூறி, காதலால் - பிரேமையால், பிறவிக்கு - ஜன்மமாகியநோய்க்கு, அவுடதமுக்கட்கடவுளை -அவுஷதம்போன்றதிரிநேத்திரங்களையுடையபரமசிவனை, கருத்தில்வைத்து-மனத்தில்த்தியானித்

து, அவன்றன்பாதமேபணிந்துபரவி - அந்தஎம்பிரானதுதிருவடிகளைப்பணிந்துதுதித்து, இப்பரிசே - இவ்வாறே, பத்தியால் - சிவபக்தியினால், பரவசனானான் - பரவசரானார். எ - று.

வேதார்த்தம்பரமாத்துவிதமில்லையாயின் இன்றைக்கேயென்சிரம்வெடித்தற்றுச்சிதறுக. இதற்குமாறுகவேதவாக்கியங்களுக்கருத்தமுண்டென்றுசங்கைகொள்வீராயின் உங்கள்சிரங்களும் அவ்வாறேயாகுக. என்றுவடநூலிற்கூறியபடிஈண்டுக்கூட்டிக்கொள்க. (உசு)

தேவருந்தேவதேவர்க்குந்தேவாந்திரியம்பகன்றனைத்தெண்டனாகப்
பூவிலேவிழுந்துபோற்றியேயுருகிக்கிடந்தவப்பொழுதிலேபுத்தேண்
மூவருமறியாமுதல்வனுமிறைவன்மூர்த்தியாய்முழுந்தியவருளாற்
காவியங்கண்ணிபங்கனாய்வந்துதோன்றினான்கண்ணினாற்காண.

இ - ள். தேவரும் - (அப்பொழுது) தேவர்களெல்லாரும், தேவதேவர்க்குந்தேவாம் - தேவாதிதேவர்களுக்குந்தேவராகிய, திரியம்பகன்றனை - திரிநேத்திரமுடையமகாதேவரை, தெண்டனாகப்பூவிலேவிழுந்துபோற்றி - பூமியின்கண்ணேவணக்கமாகிப்பணிந்துபோற்றி, உருகிக்கிடந்தஅப்பொழுதிலே - மனமுருகியெழுந்திராமற்கிடந்த அக்காலத்தில், புத்தேண்மூவரும்அறியா - திரிமூர்த்திகளாலும்அறியக்கூடாத, முதல்வனும்இறைவன் - அந்தப்பராகியமகாதேவர், முழுந்திய அருளால் - பரிபூரணமாகியதிருவருளால், கண்ணினாற்காண - (அத்தேவர்கள்) நேத்திரங்களால்தெரிசிக்கும்படி, மூர்த்தியாய் - மூர்த்தியாகி, காவியங்கண்ணிபங்கனாய் - நீலோற்பலம்போன்றஅழகியகண்களையுடையஉமையையொருபாகத்திலுடையவராய், வந்துதோன்றினான் - வந்து ஆவிர்ப்பவித்தருளினார். எ - று. (உஎ)

மாலுமவ்விடத்தேதிருவொடுங்கூடமகிழ்தருமனத்தொடும்வந்தா
னாலுதிக்கிலும்பூமாரியாய்ப்பொழியநாமசங்கீர்த்தனநாத, மேலெடுத்தெங்கும்விளங்குமப்பொழுதில் விளங்கியபிரமன்மாலவனுஞ், சாலுமெய்ப்பத்தியோடுமர்ச்சித்தார்சங்கரனம்புயத்தாளில்.

இ - ள். மாலும்அவ்விடத்தே - விஷ்ணுவும்அவ்விடத்தில், திருவொடுங்கூட - திருமகளுடனே, மகிழ்தருமனத்தொடும்வந்தான் - சந்தோஷசித்தனாகிவந்தான், நாலுதிக்கிலும்பூமாரியாய்ப்பொழிய - நான்குதிக்கினும்புஷ்பவருஷமாய்வருஷிக்க, நாமசங்கீர்த்தனநாதம் - சிவநாமசங்கீர்த்தனஞ்செய்கின்றநாதமானது, மேலெடுத்தெங்கும்விளங்குமப்பொழுதில் - அண்டகடாகங்களெங்கும்நிறைந்துவிளங்குகின்றஅக்காலத்தில், விளங்கியபிரமன்மாலவனும் - ஒளிர்கின்றபிரமதேவரும்விஷ்ணுவும், சாலுமெய்ப்பத்தியோடும்-மிகுந்தஉண்மையானபிரேமையோடும், சங்கரன்அம்புயத்தாளில் - சங்கரரதுதிருவடித்தாமரைகளில், அர்ச்சித்தார் - வணங்கிஅருச்சித்தார்கள். எ-று. ()

வேறு.

தெரியில்வடிவேதுமொருபொழுதிலாதசிவனுமருண்மேனிதிகழவே
யரியதனைநாடியறியுமதனுலவ்வதிசயமொடாடியருளினு
னுரியவனுபூதியுடையவிழியாலவ்வுமையுமயனுதியுணரவே
யருள்செய்தனளீசனரியதிருமேனியமரரெதிர்காணவருளினல்.

இ - ள். தெரியில் - பார்க்குங்கால், வடிவேதும்-பிராகிருதமானஒருவடிவும், ஒருபொழுதிலாதசிவனும்-ஒருபொழுதினுமில்லாதமகாதேவரும், அருள்மேனிதிகழவே-அருள்வடிவம்விளங்கும்படி, அரியதனைநாடி-(ஒருவராலும் அறிதற்கு) அரியதன்னைக்கருதி, அறியுமதனுல்- அறியுந்தன்மையினல், அவ்வதிசயமொடு - அந்தவதிசயத்துடனே, ஆடியருளினுன்-திருநடனஞ்செய்தருளினுர், உரியஅனுபூதியுடையவிழியால்- உரிமையாகியசுவானுபூதியையுடையநேத்திரத்தினுல்,அவ்வுமையும்-அந்தப்பார்வதிதேவியும்,ஈசன்அரியதிருமேனி-சிவபிரானதுஅருமையானதிருமேனியை, அருளினுல்- பிரசாதத்தால், அயனுதி - பிரமதேவர்முதலிய, அமரர்எதிர்காண - தேவர்கள்நேரேதரிசிக்கவும், உணர - அறியவும், அருள்செய்தனள் - திருவருள்செய்தாள். எ - று. (உக)

அந்தமறையீறுதந்தபரஞானவங்கணதனுலுமன்றியே
யிந்தவிழியாலுமந்தவிமையோர்களெங்கள்பெருமானையெய்தினுர்
சந்தமறைபாடிநின்றனர்களாதிசம்புதிருநாமமாமெழுத்
தைந்துமுரையாடியன்பினெடுபூசைபங்குநனிமேவியண்டர்தாம்.

இ - ள். அந்தமறையீறுதந்த - அந்தஉபநிஷதங்கள்தந்த, பரஞானஅங்கண்அதனுலும்அன்றி-பிரமஞானமாகியஅழகியவிழியினுற்பார்ப்பதும்அன்றி, இந்தவிழியாலும் - இந்தஊனக்கண்ணினுலும், அந்தஇமையோர்கள் - அந்தத்தேவர்கள், எங்கள்பெருமானையெய்தினுர் - எங்கள்நாயகராகியமகாதேவரைத்தரிசித்துநெருங்கினவர்களாகி, சந்தமறைபாடி - அழகியவேதங்களைச்சொல்லி, ஆதிசம்புதிருநாமமாம் - முதல்வராகியசங்கரருடையதிருநாமமாகிய, எழுத்தைந்துமுரையாடி-பஞ்சாக்ஷரங்களையுஞ்சொல்லித்துதித்து, அன்பினெடு-பக்தியோடு, பூசைஅங்குநனிமேவி-அவ்விடத்தில்மிகவும்பூசனைசெய்துபொருந்தி, அண்டர்தாம் - அத்தேவர்கள், நின்றனர்கள் - நின்றுர்கள். எ. று. ()

வேறு.

அமையாவன்பாய்நின்றோரைப்பார்த்தையம்போய்
நமையேயெய்தப்பெற்றீரேயென்றனனுத
னுமையென்னருளால்வந்ததிதேயென்றுரைசெய்தா
ளிமையோரெல்லாமென்புருகிக்கொண்டின்புற்றுர்.

இ - ள். அமையாவன்பாய்நின்றோரைப்பார்த்து - ஒருநாளும்பொருந்தாதபேரன்போடுநின்றதேவர்களைக்கடாக்ஷித்தருளி, நாதன் - நாயகராகியசம்புவானவர், நமையேயெய்தப்பெற்றீரேயென்றனன் - நம்மையேஅடையப்

பெற்றீர்களென்றுதிருவாய்மலர்ந்தருளினர், உமை - பார்வதிதேவியும், என்னருளால் - நமதுதிருவருளால், வந்ததிதேயென்றுரைசெய்தாள் - இந்தப்பாக்கியம்உங்களுங்குக்கிடைத்ததென்று திருவாய்மலர்ந்தருளினள், இமையோரெல்லாம் - (இந்தவார்த்தையைக்கேட்ட) தேவர்களெல்லாரும், என்புருகிக்கொண்டு-என்பெல்லாம்உருகி, இன்புற்றார்-பேரின்பமடைந்தார்கள். எ-று. ()

வேறு.

தொல்லைவேதமுஞ்சொல்லுதற்கரியவித்தோன்ற
னல்லனுயினனுமக்கெனநாரணனவின்று
னெல்லைதீர்கருணகரனுகியவிறைவன்
சொல்லுவானருள்கீதையின்பலமெலாந்தொகுத்து.

இ - ள். தொல்லைவேதமும் - அனுதியாகியவேதங்களும், சொல்லுதற்கரிய - விளம்பமுடியாத, இத்தோன்றல் - இந்தமகாதேவர், உமக்குநல்லனுயினன்என - உங்களுக்குநல்லவராய்வெளிவந்தருளினரென்று, நாரணனவின்றுன் - மாகாவிஷ்ணுவானவர்சொன்னர், எல்லைதீர்கருணகரனுகியஇறைவன் - அளவில்லாதகிருபாகரராகியமாகாதேவர், அருள்கீதைபலமெலாம் - (தாம்) அருளியபிரமகீதையின்பலமனைத்தையும், தொகுத்துச்சொல்லுவான் - தொகுத்துத்திருவாய்மலர்ந்தருள்செய்வார். எ - று. (௩௨)

வேறு.

பரமமாமிந்தக்கீதைபடிப்பவன்பாரின்மீதே
திருவினன்முகுந்தனுக்குந்தேசினுலிரவியொக்கு
மருவுமாமெனையேவந்துமாசிலாவிஞ்சையாகு
முருவமாமுமையுமென்றுமவனுளத்துறையாநிற்கும்

இ - ள். பரமமாம்இந்தக்கீதைபடிப்பவன்- சிரேஷ்டமாகியஇந்தப்பிரமகீதையைப்படிக்கின்றவன்,பாரின்மீதே-புவியின்கண்ணே, திருவினுல்முகுந்தனுக்கும்- திருவினுல்விஷ்ணுவுக்குச்சமானமாவான், தேசினுல்இரவியொக்கும் - ஒளியினுற்சூரியன்போல்வான், எனையேவந்துமருவுமாம் - (அவன்)என்னைவந்தடைவான், மாசிலாவிஞ்சையாகும் உமையும் - குற்றமில்லாதவித்தியாசொரூபியாகியபார்வதியும், என்றும்அவனுளத்துஉறையாநிற்கும் - எக்காலத்தும்அவனுளத்தின்கண்ணேவிளங்குவாள். எ - று. (௩௩)

வேறு.

பிரமனுனீங்கள்பெற்றவிக்கீதைபேசியகீதைகட்கெல்லாம்
பரமமாய்வேதாகாரமாதலினுற்படிக்கலாமறையவர்தமக்கே
சுருதியாதலினுற்சூத்திராதிகளாற்சொல்லலாகாதெனவருளிப்
புரணமாயெல்லாக்கரணமுங்கடந்தபோதவின்பத்தினுட்புக்கான்.

இ - ள் பிரமனுல்நீங்கள்பெற்றஇக்கீதை - பிரமதேவரால்உமக்குஉபதேசிக்கப்பட்ட இந்தக்கீதையானது, கீதைகட்கெல்லாம்- மற்றுள்ளகீதைகளனை

த்திற்கும், பரமமாய் - உயர்வாயும், வேதாகாரம் ஆதலினல்-வேதசொருபமாயும்இருத்தலால், மறையவர்தமக்கேபடிக்கலாம் - வேதியர்கட்கேவாசிக்கஉபயோகமாகும், சுருதியாதலினல் - வேதமேயிக்கீதையாதலால், சூத்திராதிகளாற்சொல்லலாகாதெனஅருளி-சூத்திரர்முதலானவர்களாற் சொல்லக்கூடாதென்றுதிருவாய்மலர்ந்தருள்செய்து, புரணமாய்- பரிபூரணமாய், எல்லாக்கரணமுங்கடந்த-எல்லாக்கரணங்களையுங்கடந்திருக்கின்ற, போதவின்பத்தினுட்புக்கான் - ஞானனந்தத்துள்ளேதிரோதானஞ்செய்தருளினர். எ-று. (௩௪)

மாலுமாதுடனேவானவர்க்கருளிமகிழ்ந்துவைகுண்டமேயடைந்தான், மேலவானவரைநீத்தயன்பரமன் மேனியேநோக்கிமீண்டிருந்தான், ஞாலமால்விட்டுஞானதற்பரராய் நான்முகன்றன்முனேதண்டம், போலவேபணிந்து வானவர்தாந்தம் பொன்னகர்நோக்கியே போந்தார்.

இ-ள். வானவர்க்கருளி-தேவர்கட்கருள்செய்து, மாலும்-விஷ்ணுவும், மாதுடனே - திருமகளோடு, மகிழ்ந்துவைகுண்டமேயடைந்தான் - மகிழ்வுற்றுவைகுண்டத்துக்கேகினர், மேலவானவரைநீத்து - மேன்மையாகியதேவர்களைவிடுத்து, பரமன்மேனியேநோக்கி - சிவபிரானதுதிருமேனியையேதெவிட்டாமற்பார்த்து, அயன்-பிரமதேவர், மீண்டிருந்தான்-திரும்பியிருந்தார், ஞாலமால்விட்டு - புவிமயக்கத்தைவிட்டு, ஞானதற்பரராய் - ஞானபரராகி, நான்முகன்றன்முனே - பிரமதேவர்முன்பாக, தண்டம்போலவேபணிந்து - தண்டம்போலவேசாஷ்டாங்கமாகவணங்கி, வானவர்தாம் - தேவர்கள், தம்பொன்னகர்நோக்கி - தங்களுடையதேவலோகத்தைப்பார்த்து, போந்தார்-போனர்கள். எ - று. (௩௫)

வேறு.

உத்தமமானகீதையுரைத்தனனுவகையோடும்
பத்தியாற்கேட்பார்க்கென்றும்பகர்ந்திடப்படுமீதென்று
சுத்தவேதியர்க்குச்சொல்லிச்சூதனுஞானக்கண்ணுன்
முத்தியாமுருவேநோக்கிமோனமேயடைந்திருந்தான்.

இ-ள். உத்தமமானகீதை - உயர்வாகியபிரமகீதையை, உவகையோடும் - சந்தோஷத்துடனே, உரைத்தனன் - சொன்னேன், பத்தியாற்கேட்பார்க்கு - அன்புடன்கேட்பவர்களுக்கு, என்றும் - எக்காலத்தும், ஈதுபகர்ந்திடப்படும்என்று - இதுசொல்லக்கூடுமென்று, சுத்தவேதியர்க்குச்சொல்லி - புனிதராகியமுனிவர்கட்கெல்லாம்உபதேசித்து, சூதனும் - சூதமகாமுனிவரும், ஞானக்கண்ணுல் - ஞானநேத்திரத்தினல், முத்தியாம்உருவேநோக்கி - மோக்ஷமாகியசொருபத்தையே அபரோக்ஷமாகப்பார்த்து, மோனமேயடைந்திருந்தான் - மௌனத்தையேயடைந்திருந்தார். எ-று. (௩௬)

இனியனுயெல்லாந்தன்பாலிறைவனின்னருளாற்பெற்ற
முனிவனைமுனிவரெல்லாமுடியுறவணங்கியேத்தி
நனிமிகாநானென்கின்றபதப்பொருணுடிவேருே
ரனியமில்பிரமமாகவறிந்ததிசயித்திருந்தார்.

இ-ள். இறைவன்இன்னருளால்-இனியபரமசிவப்பிரசாதத்தினுல், இனியனுய் - மேன்மையுடையவராகி, எல்லாந்தன்பாற்பெற்ற- அனைத்துந்தன்னிடத்தேபெற்ற, முனிவனை - சூதமுனிவரை, முனிவரெல்லாம் - மாதவரனைவரும், முடியுறவணங்கியேத்தி - தலையாற்பணிந்துதுதித்து, நனிமிகாநான்என்கின்றபதப்பொருள்நாடி - மிகவும்அகமென்னுஞ்சொல்லுக்குலக்ஷியார்த்தமானசிவத்தைக்கருதி, வேறுஓர்அனியமில்பிரமமாக - வேறொருபின்னப்பொருளில்லாதபிரமசொரூபமாகவே, அறிந்து - உணர்ந்து, அதிசயித்திருந்தார் - அதிசயமடைந்திருந்தார்கள். எ - று. (௩எ)

சருவசாஸ்திரார்த்தசங்கிரகமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## பிரமகீதைமுற்றுப்பெற்றது.

ஆ திருவிருத்தம் - ௫௪௧.



325



சிவமயம்.

# அத்தியாயவட்டவணை.

உ

திருச்சிற்றம்பலம்.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௬ | ௯ | அறிவிரு | அறியிரு |
| ௧௬ | ௩௪ | பிரதான | உபாதான |
| " | ௩௬ | பிரதான | உபாதான |
| ௧௭ | ௬ | றொன்றி | றோன்றி |
| ௨௨ | ௫ | தக்கவு | தகவு |
| ௨௫ | ௧௨ | யார்த்ததை | யார்த்தத்தை |
| " | ௨௬ | வார்தை | வார்த்தை |
| ௨௬ | ௧௯ | மோக்ஷதை | மோக்ஷத்தை |
| " | ௨௯ | வெதார்த்தம் | வேதார்த்தம் |
| ௨௭ | ௨௫ | சாக்ஷீயம் | சாக்ஷியம் |
| " | ௨௬ | ஜடமான | அஜடமான |
| ௨௮ | ௧௨ | சாடசி | சாட்சி |
| " | ௧௭ | வற்றில | வற்றில் |
| ௨௯ | ௨ | தாற்பரிமு | தாற்பரியமு |
| ௩௦ | ௨௬ | விருத்தினு | விருத்தியினு |
| ௩௨ | ௭ | பரம்பரா | பரம்பரையாக |
| ௩௬ | ௧௭ | அஞ்ஞான | ஆஞ்ஞா |
| ௪௧ | ௩௭ | மனுடா | மானுடா |
| ௪௪ | ௨௯ | அந்தக்கரணமுமென்ற வாக்கியத்திற்குமேல், சொருபசுகப்பிரகாசாபிவியஞ்சகவிருத்தியாகி யிருவகையாய்ப் பரிணமிக்கின்றது, அவற்றுள், என்றுசேர்த்துக்கொள்க. | |
| " | " | சுகப், என்றுசேர்க்க. | |
| ௪௮ | ௧௦ | தென்பார | தென்பார் |
| " | ௨௬ | பாமில | பரமில |
| ௫௦ | ௩௯ | சாதலும் | சார்தலும் |
| ௫௨ | ௨௫ | செயவ | செய்வ |
| ௫௪ | ௪ | அற்றோற்க்கு | அற்றோற்கு |
| ௫௬ | ௭ | யுசதி | யுத்தி |
| " | ௨௮ | கர்மங்களை | காமங்களை |
| " | ௨௯ | பாகத்தின | பாகத்தின் |
| " | ௩௪ | அடைய | அடை |
| " | ௩௯ | வரைக்கும | வரைக்கும் |

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| எசு | கச | அகர்த்த | அகர்த்தா |
| அஉ | உடு | செயவ | செய்வ |
| அஅ | கக | தானெக் | தானெனக் |
| கூ0 | உ | நியமாக | நியமமாக |
| கூடு | சு | ஏவரறிவராதலினு | ஏவரறிவர்தானுத |
| " | உக | விடத்தில் | விடயத்தில |
| க0எ | கச | கொடுத்திடவெ | கொடுத்திடவே |
| " | உஉ | கொடுக்கவெ | கொடுக்கவே |
| ககஉ | க0 | கூறினுன | கூறினுன் |
| ககரு | உரு | மலரில | மலரில் |
| ககசு | க | ரூபமாகக | ரூபமாகக் |
| ககஎ | உடு | எனறு | என்று |
| " | உஎ | எனற | என்ற |
| கஉ0 | உ0 | அல்லா | அல்ல |
| " | ருஉ | கின்றது | கின்றதென்பது |
| " | ருசு | சத்தியமே | அசத்தியமே |
| கஉரு | கஎ | யாகும | யாகும் |
| " | உஉ | ஸஜதீய | ஸஜாதீய |
| கரு0 | ருச | சொந்து | சேர்ந்து |
| கருசு | கடு | பினபு | பின்பு |
| " | உசு | பிரத்திய | பிரத்தியய |
| கருஎ | உஅ | காரியா | காரிய |
| கச0 | ருஎ | இன்மையிற | இன்மையிற் |
| கசஅ | உஎ | தன்னில் | தென்னில் |
| கசுக | உஎ | இலலா | இல்லா |
| கசுடு | ருக | பொளில் | பொருளில் |
| கஎடு | ருரு | தானெ | தானென |
| கஅச | ருச | அற்பப | அற்பப |
| கஅசு | உஅ | சந்திரன | சந்திரன் |
| ககூ0 | உஉ | மாண | மரண |
| உஉக | ருசு | மாவத்தின் | மாதவத்தின |
| உஉஅ | அ | மேகங்கள் | சலாதாரங்கள் |
| உரு0 | சு | அடைந்தவாகள் | அடைந்தவர்கள் |
| உருஉ | ருடு | மரைவைண | மரையைவண |
| உச0 | கசு | நிருபித்தற | நிருபித்தற் |
| உசஎ | உஅ | பொக | போக |
| உடுச | உச | வல்லபமெ | வல்லபமே |

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| உருசா | ஙo | தகாது | தக்கது |
| உஎச | அ | கினறூர் | கின்றூர் |
| உகரு | உக | நித்தியா | நித்திய |
| உகசா | கக | யெறன்ற | யென்ற |
| உசாரு | ஙரு | வேறவயைின்றி | வேறவையின்றி |
| உஎஎ | உங | மாயவபுன்ல | மாயவன்புல |
| உஅக | உரு | சிந்தைத் | சிந்தை |
| உஅஉ | ககூ | நுபடா | நுட்பர் |
| உஅங | கஉ | தெளிவரார் | தெளிவாரார் |
| உஅ | உஉ | விஷணு | விஷ்ணு |
| ஙoச | கூ | ஆனமாவை | ஆன்மாவை |
| ஙஉஉ | கக | மாகாதேவர் | மகாதேவர் |

